# சிலப்பதிகாரம்

## புகார்க்காண்டம்

உரையாசிரியர் :

சர். ஆர். கே. சண்முகம் செட்டியார், கே. சி. ஐ. இ

புதுமலர் நிலையம்

கோயமுத்தூர்

# முகவுரை

சிலப்பதிகாரத்திற்கு உரை எழுத நேர்ந்தது என்னுடைய வாழ்க்கையில் ஒரு வேடிக்கை என்று நான் கருதுகின்றேன். சிறந்த பழந்தமிழ் நூல்களில் ஒன்றுக்கு உரை எழுதும் படிப்பும் ஆராய்ச்சித் திறமையும் எனக்கு உண்டென்று நண்பர்கள் நினைத்து விடக்கூடாது. நான் பள்ளியிலும் கல்லூரியிலும் படித்த காலத்தில் தாய்மொழிக்கு மதிப்பில்லை. அந்தக் காலத்து மாணவர்களில் பெரும்பான்மையோர்க்குத் தமிழ் உணர்ச்சியுமில்லை. ஆகவே, நான் சர்வகலாசாலைப் பட்டம் பெற்று வெளியேறியபோது, தமிழ்க் கல்வியைப் பொருத்தமட்டில் என் அறிவு, இருள் அடைந்திருந்த தென்றுதான் சொல்ல வேண்டும். தமிழ் நாட்டில், தமிழ்மக்கள் இடையில் குருடனைப்போல் வாழ்ந்து வந்தேன்.

பல ஆண்டுகள் கழிந்தன. மெல்ல, மெல்ல என் அறிவுக் கண்கள் திறந்தன ; இருள்மாறி வெளிச்சமும் உண்டாயிற்று. நான் வாழும் நாடு தமிழ் நாடென்று உணர்ந்தேன். இது இளங்கோவடிகளும், கம்பனும் பிறந்த நாடு ; ஷேக்ஸ்பியரும், மில்டனும் பிறந்த நாடல்ல ! என்று அறிந்தேன். சுற்றிலும் பார்த்தேன். வறண்ட முட்செடிகள் என்று நான் கருதியிருந்த செடிகளில் மலர்ந்த பூக்கள் நிறைந்திருந்தன. எங்கும் நறுமணம் வீசிற்று. இதுதான் ' தமிழின் மறுமலர்ச்சி ; எங்கும் கமழும் தமிழ் மணம் ' என்று உணர்ந்தேன்.

பழந்தமிழ் நூல்களைப் படிக்க வேண்டுமென்ற ஆசை என் உள்ளத்தில் பிறந்துவிட்டது. சிலப்பதிகாரத்தைப் படித்து விடுவது என்று முடிவு செய்தேன். என்ன காரணத்தால் சிலப்பதிகாரத்தைப் பொறுக்கினேன் என்று எனக்கே தெரியாது. மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாத அய்யர் அவர்கள் பதிப்பித்த புத்தகம் ஒன்றை வாங்கி வெகு ஆவலுடன்படிக்க ஆரம்பித்தேன். மனச்சோர்வு உண்டாயிற்று. பொருள் சரியாய் விளங்கவில்லை. பாட்டைச் சரளமாய்ப் படிக்கவும் முடியவில்லை. பதங்களின் சந்தியைப் பிரித்துப் படிக்கப் போதுமான இலக்கண அறிவு எனக்கு இல்லை. அடியார்க்கு

நல்லார் உரையைத் திருப்பினேன். நூலைவிட உரை கடினமாய்த் தோன்றியது. மூன்று தடவை இம்மாதிரியே முயற்சி செய்தேன். ஒன்றும் பயன்பட வில்லை.

தமிழ்ப் பண்டிதர் ஒருவரை வைத்துக்கொண்டு படிப்பதென்று கடைசியாய் முடிவு செய்து, எனது நண்பர் வித்வான் அ. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் என் வீட்டிலேயே வந்து தங்கி, நாள்தோறும் ஒரு மணிநேரம் எனக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்தேன். இவருடன் படிக்கும்போது நூல் வெகு சுலபமாய்த் தோன்றியது. பாட்டைப் பதம் பிரித்துப் படிக்கும்போதே பொருள் ஏறக்குறைய விளங்கி விட்டது. இப்படியாகச் சிலப்பதிகாரம் முழுவதையும் படித்து முடித்தேன்.

நூலைப் படிக்கப் படிக்க என் உள்ளத்தில் மகிழ்ச்சியும் துக்கமும் கலந்து எழுந்தன. உலகில் பல மொழிகளில் தோன்றிய சிறந்த பெருங் காப்பியங்களில் சிலப்பதிகாரமும் ஒன்றல்லவா என்று அறிந்து மகிழ்ந்தேன். நம் தமிழ் முன்னோர் நமக்குத் தந்த இப் பெருஞ் செல்வத்தை இத்தனைகாலம் அறியாமலும் அனுபவிக்காமலும் இருந்து விட்டோமே என்று துக்கப்பட்டேன்.

''வசந்தம்'' ஆசிரியரும், எனது நண்பருமான திருஞானசம்பந்தம் அவர்கள், நான் சிலப்பதிகாரத்தைப் படிக்கும்போது எழுதிவைத்த குறிப்புக்களை ஒரு நாள் பார்வையிட நேர்ந்தது. ''உங்களுடைய உரை மிகவும் எளிய நடையிலிருக்கின்றது. இந்த உரையை ''வசந்த'' த்தில் மாதந்தோறும் வெளியிட்டால், அனேகம் தமிழ் மக்கள் இப்பெருங்காப்பியத்தின் பெருமையை அறிவார்கள்'' என்றார். அவர் சொன்னதை நான் சிந்தித்துப் பார்த்தேன். என்னைப்போலவே எத்தனையோ ஆயிரம் தமிழ் மக்கள் இந்த நூலைப் படித்து அனுபவிக்கும் சக்தி இல்லாதவர்களாய் இருக்கவேண்டும். ஒவ்வொருவரும் ஒரு தமிழ்ப் பண்டிதரை வைத்துக்கொண்டு படிக்க முடியுமா? நான் படித்த விதத்தில் உரை எழுதினால், ஒருவேளை என்னைப்போன்ற மற்றவர்களுக்கும் அது பயன்படும் என்று நினைத்து, மாதா மாதம் 'வசந்த'த்தில் என்னுடைய உரையை எழுதிவந்தேன்.

"உங்களுக்கும்கூடத் தாய் மொழியின் மீது இவ்வளவு ஊக்கம் பிறந்துவிட்டதா ?" என்று பல நண்பர்கள் என்னைப் பாராட்டினார்கள். "உங்களுடைய உரையின் உதவியால் சிலப்பதிகாரத்தை எளிதில் படிக்க முடிந்தது" என்று சில நண்பர்கள் தெரிவித்தார்கள். நான் நினைத்தபடியே, என்னுடைய உரை பலருக்கு உபயோகமாயிருந்தது என்று அறிந்து மகிழ்ந்தேன். புகார்க்காண்டத்தின் உரை முடிந்ததும், நண்பர் திருஞானம் பின்னும் தூண்ட ஆரம்பித்தார். "புத்தகமாகப் பதிப்பித்தால், இது பலருக்கும் பயன்தரும்" என்றார். நண்பரின் தூண்டுதலுடன், செருக்கும் தூண்டவே நான் சம்மதித்தேன். இதுதான் நானும் சிலப்பதிகாரத்தின் "உரை ஆசிரியனாக"த் தோன்றியதின் வரலாறு.

இந்த உரையில் குறிப்பிடத்தக்க விசேஷம் ஒன்றுமில்லை. அதாவது இலக்கணக் குறிப்பு, ஆராய்ச்சிக்குறிப்பு, மேற்கோள் இவை ஒன்றுமில்லை. நூலின் பொருளைத் தெளிவாய் எடுத்துக்காட்டுவதே இதன் நோக்கம். 'சுவரை வைத்துக்கொண்டுதான் சித்திரம் எழுதவேண்டும்' என்னும் பழமொழிபோல், ஒரு காப்பியத்தின் பொருளைத் தெரிந்தபின் தான், ஆராய்ச்சியில் இறங்கவேண்டும். புகார்க் காண்டத்தின் ஒவ்வொரு காதையையும் பல கட்டங்களாகப் பிரித்து, ஒவ்வொரு கட்டத்திற்கும் தலைப்பும், முகவுரையும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. என்ன உரை இருந்தபோதிலும், பாட்டைச் சரளமாய்ப் படித்தால்தான் அதன் சுவையை அநுபவிக்க முடியும். ஆதலால் ஒவ்வொரு கூட்டுப் பதமும் பிரித்துக் காட்டப்பட்டிருக்கிறது. ஒவ்வொருவரும் பாட்டைத் தங்கு தடையில்லாமல் உரக்கப் படித்து அனுபவிக்கலாம்.

தமிழ் மக்கள் உள்ளத்தில் தோன்றியிருக்கும் தாய் மொழிப் பற்று வேரூன்றி நிலைக்கவேண்டுமென்றால், பழந் தமிழ் நூல்களைக் கொஞ்சமாவது ஒவ்வொருவரும் படிக்க வேண்டும். அனேகருக்கு இந்த ஆசை உண்டு. ஆனால் சாதாரண மக்கள் படித்து அனுபவிக்கக் கூடியவிதத்தில் பல நூல்களுக்கு உரை எழுதப்படவில்லை. மகாமகோபாத்தியாய உ. வே. சாமிநாத அய்யர் அவர்களுடைய பெருமுயற்சி இல்லாமலிருந்தால் பல நூல்களின் மூலத்தைக்கூட நாம்

பார்த்திருக்கமுடியாது. அய்யர் அவர்கள் செய்த பணிக்குத் தமிழ் மக்கள் என்றும் அவர்களுக்குக் கடமைப்பட்டிருக்க வேண்டும்.

ஆங்கிலத்திலுள்ள எல்லா இலக்கிய நூல்களும், சாமான்ய ஆங்கில மக்கள் வாங்கிப் படித்து அனுபவிக்கும் விதத்தில், அனேகம் பதிப்புக்களாக வெளியிடப்பட்டிருக்கின்றன. கல்வியில் தேர்ந்தவர்களுக்கென்று உயர்ந்த ஆராய்ச்சி உரைகளுடன் தனிப்பதிப்புக்கள் இருக்கின்றன. பொதுமக்களுக்குப் பயன் படும் விதத்தில், தெளிவான எளிய உரையுடன், குறைந்த விலைக்கும் அழகான ரூபத்திலும் பொதுமக்கள் பதிப்புக்கள் (Popular Editions) ஏராளமாய் அச்சிடப்பட்டிருக்கின்றன. எல்லாப் பழந்தமிழ் இலக்கியங்களும் எளிய உரையுடன், "பொதுமக்கள் பதிப்பாக" ஒன்றுபோன்ற ரூபத்தில் (Uniform Editions) வெளியாக வேண்டுமென்று எனக்கு வெகுநாளாய் ஆசை உண்டு. இந்தப் பணியை நிறைவேற்றத் தமிழ் அறிஞர்களும், பெரியோர்களும் முன்வந்தால், அது தமிழ்மொழிக்குச் சிறந்த தொண்டாகும்.

உலக இலக்கிய சரித்திரத்தில் குறிப்பிடத்தக்க விஷயம் ஒன்று. அதாவது உலகில் தோன்றிய சில சிறந்த இலக்கிய ஆசிரியர்களைப்பற்றி நமக்கு எதுவும் நிச்சயமாய்த் தெரியாது. ஹோமர், வால்மீகி, இளங்கோ அடிகள் — இவர்கள் உன்னத காவியங்களைப் படைத்த சிருஷ்டி கர்த்தாக்கள். ஆனால் இவர்களுடைய பிறப்பு, வளர்ப்பு, காலம் — இவைகளைப்பற்றி நிச்சயமான ஆதாரங்கள் ஒன்றுமே யில்லை. ஷேக்ஸ்பியர் நாடகங்களைப்பற்றிக் கூட, உண்மை ஆசிரியர் யார் என்று பல சந்தேகங்கள் உண்டு. இளங்கோ அடிகளைப்பற்றிச் சரித்திர சம்பந்தமான ஆதாரங்கள் இல்லை. இவர் இன்ன காலத்தில் இருந்தார் என்பதைப் பற்றிக்கூட ஆராய்ச்சியாளருக்குள் அபிப்பிராயபேதம் உண்டு. திரு. வையாபுரிப் பிள்ளை அவர்களின் முன்னுரையிலும், திரு. இராமச்சந்திர தீட்சதர் அவர்களின் மதிப்புரையிலும் இவ் விஷயங்களைப்பற்றி மாறுபட்ட அபிப்பிராயங்களைக் காணலாம். இந்த இரண்டு நண்பர்களைப் போல், பல தமிழ் அறிஞர்கள் இன்னும் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்யவேண்டும். "எங்களுக்கு அழியாத சிலம்புச் செல்வத்தைக் கொடுத்த அடிகளே! நீர் யார்? நீர் யார்?" என்று நாம்

கேட்டுக்கொண்டே யிருக்கிறோம். அவரோ பதில் சொல்லாமல் புன்னகையுடன் "குணவாயில் கோட்டத்தில்" எல்லையில்லாத அமைதியுடன் வீற்றிருக்கிறார். தாங்கள் இன்னார் என்று காட்டிக்கொள்ளாதது சிறந்த கொடை வள்ளல்களின் இயல்புதான்.

இந்தப் பதிப்பை வெளியிடுவதில் எனக்கு உதவியாயிருந்த பல நண்பர்களுக்கு நான் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன். 'வசந்த'த்தில் உரை எழுத ஆரம்பித்த சமயத்தில் திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரின் சிறந்தஉரை வெளியாயிற்று. இப்பெரியாரின் உரை எனக்கு மிகவும் பயன்பட்டது. என்னுடன் இருந்து எனக்கு அன்புடன் பாடம் சொல்லிக் கொடுத்த நண்பர் வித்வான் அ. கிருஷ்ணமூர்த்திக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன். முன்னுரையும், மதிப்புரையும் முறையே எழுதிய என் நண்பர்கள் எஸ். வையாபுரிப் பிள்ளை அவர்களுக்கும், இராமச்சந்திர தீட்சதர் அவர்களுக்கும், என் நன்றியறிதலைச் செலுத்துகிறேன். இந்த உரை எழுதுவதற்குத் தூண்டுகோலா யிருந்ததல்லாமல், புதுமலர் நிலையத்தாரைக் கொண்டு அழகாக அச்சிட்டுப் பதிப்பை வெளியிட்ட என் நண்பர் ஆர். திருஞானசம்பந்தத்திற்கு நன்றி செலுத்த நான் கடமைப்பட்டிருக்கின்றேன். காகிதப் பஞ்சம் மட்டும் இல்லாமலிருந்தால், புதுமலர் நிலையம் இப் பதிப்பை இன்னும் அழகுபடச் செய்திருக்கும்.

பொருட் செல்வத்திற்கும் கல்விச் செல்வத்திற்கும் வித்தியாசம் உண்டு. பொருட் செல்வம் பிறருக்குக் கொடுக்கக் கொடுக்கக் குறைவுபடும்; கைவிட்டுக் கொடுக்க மனம் வருவதும் கடினம். கல்விச் செல்வமோ ஊற்று நீர் போல் அள்ளிக் கொடுக்கக் கொடுக்க மேலும் மேலும் பெருகும்; கொடுப்போனுக்கு இன்பத்தையும் தரும். நாம் பெற்ற கல்விச் செல்வத்தைப் பிறருக்குப் பங்கிட்டுக் கொடுக்கும்போதுதான் நம் இன்பம் பூர்த்தியடைகிறது. இந்த எண்ணத்துடன், நான் அடைந்த "சிலம்புச்" செல்வத்தை எல்லா நண்பர்களுக்கும் பங்கீடு செய்து மகிழ்ச்சி அடைகின்றேன்.

"அவார்டன்"<br>
கோயமுத்தூர்,<br>
15-8-1946.

# முன்னுரை

இப்பொழுது நம் காலத்தவர் சிலரால் சிலப்பதிகாரம் மிகுதியாகப் போற்றப்பட்டு வருகிறது. அதற்கு முக்கிய காரணம் தமிழிசை—இயக்கமே.

தமிழ் நாட்டுச் சங்கீதக் கச்சேரிகளில் தமிழ் இசைப் பாட்டுக்களையே மிகுதியாகப் பாடவேண்டும் என்று ஒரு கிளர்ச்சி பிறந்தது. இசை பற்றியும் நாட்டியம் பற்றியும் பல விஷயங்கள் சிலப்பதிகாரத்திலுள்ளமை பலரும் அறிந்ததே. இக்காவியத்தாலும் இதன் உரையினாலும் முற்காலத்து வழங்கிய இசையையும் நாட்டியத்தையும் மீண்டும் நம் தமிழ் நாட்டில் புத்துயிர் பெற்று நடைபெறச் செய்துவிடலாம் என்ற கருத்தும் ஒருசார் தமிழ் மக்களது உள்ளத்தில் எழுந்தது. இவற்றின் விளைவாகவே தமிழிசை—இயக்கம் நம் நாட்டு அறிஞர்கள் சிலரால் **1942-ல்** தொடங்கப் பெற்றது. இவ் இயக்கத்தின் முன்னணியில் நின்று இதற்கு ஊக்கம் அளித்தவர்களுள் ஒருவர் சர். ஆர். கே. சண்முகம் செட்டியார். இவர்கள் சிலப்பதிகாரத்தின் முதற்காண்டத்தைப் பலர்க்கும் விளங்கும்படியாகத் தாம் இயற்றிய எளிய உரையுடன் இப்போது பதிப்பித்து வெளியிட்டிருப்பது மிகப் பொருத்தம் என்றே கருதுகிறேன்.

இவ் இயக்கத்திற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பாகவே நாட்டியம் நம்மவர்களுடைய கவனத்தைக் கவர்ந்தது என்பது உண்மை. ஆனால், 'தமிழ் நாட்டிய இயக்கம்' என ஒன்று ஏற்படவில்லை; அதனால் சிலப்பதிகாரத்தைத் தமிழ் மக்கள் மிகுதியாகக் கற்க வேண்டும் என்று எண்ணியதும் இல்லை. ஆகவே, **1942**-க்குப் பின்னரே இக் காவியத்திற்கு ஒரு புதிய வாழ்வு உண்டாயிற்று என்று கூறலாம்.

இக் காலத்திற்கு முன்பு, வேறொரு காரணம் பற்றி இப் பெருங் காப்பியம் தமிழறிஞர்களால் மிகுதியும் பரிசீலனை செய்யப்பட்டு வந்தது. நமது தமிழ் நாட்டுச் சரித்திரத்திற்கு முக்கியமாய் அமைந்த ஆதார நூல்களுள் முதன்மை பெற்றதாக இது கருதப்பட்டது. சங்க கால நிர்ணயத்திற்கு இது

சிறந்த சான்று என்றும், அக்காலத்து நாகரிக நிலையை நன்கு விளக்குகிறது என்றும் ஆராய்ச்சியாளர்கள் கருதிவந்தனர். ஆசிரியர் சுந்தரம் பிள்ளை, வி. கனகசபைப் பிள்ளை முதலிய பேரறிஞர்களால் இக் கொள்கையானது நிலையிடப்பட்டது. தமிழ் ஆராய்ச்சி செய்யவேண்டும் என்ற நினைப்புக் கொண்டவர்கள் அனைவரும் சிலப்பதிகாரத்தைக் கற்று வரலாயினர். இவர்களது ஆராய்ச்சி முதன் முதல் தோன்றத் தொடங்கியது சுமார் 1890-ல் என்று சொல்லலாம். அக்காலம் முதல் இன்றுவரை ஆராய்ச்சி நிகழ்ந்து கொண்டேயிருக்கிறது. இன்னும் அது முடிவடைந்து விட்டதாகக் கருதமுடியாது.

இசைப் பொருள்கள் பற்றியும் சரித்திரப் பொருள்கள் பற்றியும் இக்காவியம் தமிழ் மக்களிடையில் பரவி வந்ததேயன்றி, இதன் கலைச்சிறப்பும் கவிதைச் சிறப்பும் பிற இலக்கியச் சுவைகளும் பெரும்பாலும் பொதுப்பட அறியப்படாமலே கழிந்தன. காலஞ் சென்ற டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் என்னிடம் கூறிய ஒரு செய்தி இதனைத் தெளிவுறுத்துகிறது. அவர்கள் ஓர் வித்துவ பரம்பரையினர் இல்லத்தில் ஏட்டுச் சுவடிகள் தேடிப் பெறும் பொருட்டுச் சென்றிருந்தார்கள். அவ் இல்லத்தின் தலைவரும் ஒரு வித்துவானாக விளங்கியவர். அவரிடத்தில் சிலப்பதிகாரம் என்ற சுவடியைப் பற்றி ஐயரவர்கள் கேட்டார்கள். அவர், "'சிலப்பதிகாரம்' என்றால் அதற்குப் பொருளே இல்லையே. அது 'சிறப்பதிகாரம்' என்ற பெயருள்ளதாதல் வேண்டும்" என்று கூறினாராம்! இதனால், சிலப்பதிகாரத்தைப் பற்றி வித்துவான்களிற் பலரும்கூட அறியாதிருந்தமை வெளிப்படை. ஆனால், இக் காவியத்தைக் குறித்துப் பலரும் தெரிந்து கொள்ளாமலிருந்தாலும், இதனுள்ளே பொதிந்த கதை பல நூற்றாண்டுகளாகத் தமிழ் நாட்டிலுள்ள மக்களால் அறிந்து அனுபவிக்கப்பட்ட தொன்றாகவே இருந்தது. இலங்கைத்தீவிலும் கொச்சி முதலிய பிரதேசங்களிலும் இக் கண்ணகி கதை பல வாறாகத் திரிந்து வழங்கி வந்தது. நம் நாட்டிலும், 'கோவலன் கதை' முற்காலத்தே தெருத்திண்ணைகளில் இருந்து பொது மக்கள் கேட்டு இன்புற்று வந்த தொன்றேயாம். சாதாரணக் கல்வியுடைய பலரும், அம்மானை ரூபத்தில் அமைந்த இக் கதையை மனனம் பண்ணி இரவில் மக்கள் பலரும் கேட்கும்படி சொல்லிவந்தனர். அம்மானை நூலாகவன்றி வில்லுப்பாட்டா

கவும் இக்கதை தமிழ் நாட்டில் பரக்க வழங்கிவந்தது. அம்மானை நூல்கள் சுமார் 1850-ல் முதல் முதல் அச்சில் வெளி வரலாயின. ஆனால், அதற்கு முன்பு தொட்டே பரம்பரைக் கேள்வியாகவும் ஏட்டுப் பிரதி ரூபமாயும் இக்கதை வழங்கி வந்த தென்றே நாம் கொள்ளவேண்டும். கோவா நகரத்தி லிருந்த M. Frere என்பவர் 'தக்காணத்துப் பண்டை நாட்கள்' (Old Deccan Days) என்று பொருள்படும் ஆங்கிலக் கதைத் தொகுதியொன்று 1868-ல் வெளியிட்டுள்ளனர். இதிலே 'சந்திரா பழி வாங்கியது' (Chandra's Vengeance) என்ற தலைப்பில் கோவலன் கதை பல வேஷங்களுடன் காட்சியளிக்கிறது. இக் கதையை நான் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளேன்.

இக்கதைபற்றி ஏடுகளிற் காணும் அம்மானையைப் புகழேந் திப் புலவர் இயற்றினர் என்று சொல்லும் பாமரக் கொள்கை இதன் பழமையை ஒருவாறு புலப்படுத்துகிறது. அன்றியும், என்னிடமுள்ள ஒரு கோவலன் சரித்திரப் பிரதி சுமார் 250 ஆண்டுகளுக்கு முன் எழுதப் பெற்றதாகும். அது தமிழ் நன்ருக வழங்காத திருவிதாங்கூர்ப் பிரதேசம் ஒன்றிலிருந்து எனக்குக் கிடைத்தது. ஆகவே, தமிழ் நாட்டிலுள்ள மூலை முடுக்குக்களிலும் இக்கதை சுமார் கி. பி. 1650-ல் வழங்கி வந்த தாகும். இச்சுவடியிலுள்ள 'அரங்கேற்று காதை' முதலிய கதைத் தலைப்புக்களை நோக்கினல் இது சிலப்பதிகாரத்தோடு மிக நெருங்கிய தொடர்புடையது என்பது விளங்கும். ஆகவே, இச் சீரிய காவியத்தின் அடியாகவே கோவலன் கதையானது சாதாரண மக்களுக்குப் பயன்படும் பொருட்டு, சிற்சில வேறு பாடுகளுடன் முதன் முதலில் இயற்றப்பட்டது என்றுதோன்று கிறது. இதன் கதா நாயகியாகிய கண்ணகி காளியின் அம்சம் என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டு கதையை அமைத்திருக்கின்றனர். கொடுங்கோளூரில் கோயில் கொண் டிருக்கும் பகவதி அம்மன் 'ஒற்றைமுலைச்சி' என்ற பெயருடன் விளங்குகிருள். சிலப்பதிகாரத்திலும் இக் கொள்கைக்கு ஆதாரமில்லாமற் போகவில்லை.

**இவளோ, கொங்கச் செல்வி குடமலையாட்டி**
**தென்தமிழ்ப் பாவை செய்த தவக்கொழுந்து**
**ஒருமா மணியா யுலகிற் கோங்கிய**
**திருமா மணியெனத் தெய்வமுற் றுரைப்ப** (XII, 47-50)

என்ற அடிகளும், 'இவள் துர்க்கையாகவே பிறந்தாள்' என்ற அரும்பதவுரையும்,

> அடர்த்துஎழு குருதி அடங்காப் பசுந்துணிப்
> பிடர்த்தலைப் பீடம் ஏறிய மடக்கொடி
> வெற்றிவேல் தடக்கைக் கொற்றவை அல்லள்
> அறுவர்க்கு இளைய நங்கை இறைவனை
> ஆடல் கண்டருளிய அணங்கு சூருடைக்
> கானகம் உகந்த காளி தாருகன்
> பேருரங் கிழித்த பெண்ணும் அல்லள் (XX, 34-40)

என்ற அடிகளும் இதற்குச் சான்று. அன்றியும், தாசியின் தொழில் முறை பற்றிய சரித்திரம் பலருக்கும் இன்பம் ஊட்டும் என்று நினைத்து மாதவியின் சரித்திரத்தில் பல முக்கியமான வேறுபாடுகளையும் செய்தனர். ஆனால், இக் கதை வேறுபாட்டிற்கு ஆதாரம் சிலப்பதிகாரத்தில் சிறிதும் இல்லை. பத்தினிக் கடவுளாகிய கண்ணகிக்கு முற்றிலும் மாறுபட்ட இயல்புடையவளாய் மாதவி இருக்கவேண்டும் என்று கருதி இவ் வேறுபாடுகள் அமைக்கப்பட்டன என்று கொள்ளலாம்.

இது நிற்க. கி. பி. 1650–க்கு முன்பு சிலப்பதிகாரம் தமிழ்க்கல்வியிற் சிறந்தவர்களுக்கு மாத்திரம் தெரிந்த ஒரு காப்பியமாக விளங்கிற்று. 16–ம் நூற்றாண்டினர் என்று கொள்ளத் தகும் நச்சினார்க்கினியர் இந்நூலைத் தமது தொல்காப்பிய உரையில் பல இடங்களில் மேற்கோள் காட்டியுள்ளார். 14–ம் நூற்றாண்டினர் என்று கொள்ளத் தகும் பரிமேலழகரும் (உரைப்பாயிரம்; அன்புடைமை, அவதாரிகை), மயிலைநாதரும் (பக்கம்–95, 184, 189, 213, 254, 306) இக் காவியப் பகுதிகளைப் பல இடங்களிலும் எடுத்தாண்டிருக்கிறார்கள். இந்நூற்றாண்டில் வாழ்ந்த பேராசிரியரும் தமது செய்யுளியலுரையில் (சூ. 149. உரை) இந்நூலை ஆண்டிருக்கின்றார். இக் காலத்திலே ஐம்பெரும் காப்பியம் என்ற வழக்குத் தோன்றிவிட்டது என்பது நன்னூல் (மயிலைநாதர், 387. உரை) உரையால் அறியலாம். 11–ம் நூற்றாண்டிலும் இக்காப்பியம் அறிஞர்களுக்குள்ளே பெருவழக்காய் இருந்ததென்பது யாப்பருங்கல விருத்தியுரையாலும் (பக். 264), இளம்பூரணரின் தொல்காப்பிய உரையாலும் (பொருள். பக். 67, 133, 150,

152, 156, 194, 320, 350, 437, 441, 449) விளங்கும். சிலப்பதிகாரத்தின் பதிகமும் இந்நூற்றுண்டிலே உளதாயிருந்தது. இது

பொலம்பூ வேங்கை நலங்கிளர் கொழுநிழல்
ஒரு முலை இழந்தாளோர் திருமா பத்தினிக்கு
* * *
கட்புலம் காண விட்புலம் போகியது
இறும்பூது போலும் அறிந்தருள் நீயென

(பதிகம், 4-9)

என்ற அடிகளைப் புதுமை என்பதற்கு எடுத்துக்காட்டாக இளம்பூரணர் (மெய்ப்பாடு. 7, பக். 320) தருதலால் அறியத்தகும். இவர் காலத்திற்கும் முன்பாக, சுமார் 10-ம் நூற்றுண்டளவில் எழுதி முற்றிய களவியலுரையும் இக்காவியத்தை மேற்கோள் காட்டியுள்ளது (பவானந்தர் கழகப் பதிப்பு, பக். 63, 66, 84, 100, 177).

இங்ஙனம் அறிஞர்கள் கற்பதற்குரியதாய் அமைந்த பேரிலக்கியமாகிய இக்காவியத்திற்குச் சுமார் 13—ம் நூற்றுண்டிலேயே உரைகள் தோன்றத் தொடங்கின. இசை பற்றிய பகுதிகளும் கூத்துப் பற்றிய பகுதிகளும் உணர்வதற்கு அரியவாய் இருந்தன. இவைகளை அவ்வத் துறைக்குரிய பல நூல்களையும் ஆராய்ந்து விளக்கவேண்டிய அவசியமும் இருந்தது. இங்ஙனம் பல நூல்களையும் ஆராய்ந்து எழுதியது அரும்பத உரையாகும். இது தோன்றியது 12 அல்லது 13—ம் நூற்றுண்டாக இருத்தல் வேண்டும். இது சுருங்கிய உரை என்பது இதன் பெயரிலிருந்தே ஊகிக்கத் தக்கது. இவ்வுரையையும் நோக்கி, இன்னும் பற்பல அரிய நூல்களையும் ஆராய்ந்து, அடியார்க்கு நல்லார் ஓர் சிறந்த உரையை இயற்றினர். இவர் இராமாயணம் உத்தரகாண்டத்தில் வரும்,

மக்கள் இழந்த இடும்பையினும்
மனையாள் இழந்த இடும்பையினும்
மிக்க இடும்பை வேல்வேந்தே
விதவை இடும்பை என விளம்பித்
தக்க வதனால் என்கழுத்தில்
தாலி நீதந் தருளென்று
தொக்க மணிப்பூண் மார்பானைத்
தொழுது பின்னும் இவைசொல்லும்

(இராமாயணம், உத்தர. திக்கு. 138)

என்ற செய்யுளை எடுத்தாளுதலினால் (பதிகம் 38–54, உரை) 14–ம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர் எனல் பொருந்தும். உத்தர காண்டம் கம்பராமாயணத்திற்குப் பின் அதனைத் தழுவி எழுதியது என்பது பிரசித்தம். சிலப்பதிகார உரைப்பாயிரத்தில் இவர் பேராசிரியருரையைத்தழுவியிருத்தலும் இம்முடிபை வலியுறுத்தும். இவரது உரையினால் தமிழ் உணர்ச்சியும் இசை, கூத்து முதலியன பற்றிய உணர்ச்சியும் மிகுந்தன. அணிகளின் இயல்புகளும் இவரால் அங்கங்கே விளக்கப்பட்டன. சிலசில இடங்களில் சொற்களின் நயங்களும் எடுத்துக் காட்டப்பட்டன. இவைகளுக்கு மேலாகவுள்ள இலக்கிய நயம், கவிதை நயம் முதலியன இவரால் சிறிதும் புலப்படுத்தப் படவில்லை. முற்காலத்தே இவ்வகை நயங்களை உரைகாரர்கள் எடுத்துக் காட்டும் வழக்கமும் பெரும்பாலும் இல்லை. இதனால், கவிதை நயம் முதலியன முற்காலத்து நூல்களில் இல்லை எனல் கருத்தன்று. காவியங்களைக் குறித்து,

> பற்றும் இலக்கண நூற்பாவும் நூற்பா வறிந்து
> கற்றோர் வழங்கு பஞ்ச காவியமும் (52)

என்று தமிழ் விடு தூது கூறுகிறது. இதற்கு ஏற்பவே, முற்காலத்தெழுந்த காவியங்களின் நோக்கமும் இருந்ததெனக் கொள்ளலாம். கல்வித் துறைகள் பலவற்றிலும் மக்களது அறிவு நன்கு பெருக வேண்டுமென்பதே அவைகளின் முக்கிய நோக்கமாக அமைந்தது. சிலப்பதிகாரத்தில் ஒவ்வொரு காண்டத்தின் இறுதியிலு முள்ள கட்டுரையும், நூலின் முடிவிலுள்ள நூற் கட்டுரையும் இதனை விளக்கும். சில காவியங்கள் குறிப்பிட்ட சில கொள்கைகளைக் கதைகளால் விளக்குவதற்குத் தோன்றியனவாகவும் உள்ளன. இது,

> அரைசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற் றுவ தூஉம்
> உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்
> ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூஉம்
> சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்
> சிலப்பதி காரம் என்னும் பெயரால்
> நாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யுள் (பதிகம், 55-60)

என்று வருதலால் அறியப்படும். காவியங்கள் இங்ஙனமாக, உரைகளோவெனின், நூலிலுள்ள கொள்கைகளையும், நோக்கங்களையும், நியதிகளையும், இலக்கணங்களையும், அணிகளையும், எடுத்துக் காட்டுதலையே தமது முக்கிய கடமை

யாகக் கொண்டன. இவற்றையே விரும்பி, 11-ம் நூற்றாண்டு முதல் சிலப்பதிகாரத்தைத் தமிழறிஞர்கள் கற்றுவந்தனர். ஆகவே, இசையுணர்ச்சி, சரித்திர உணர்ச்சி, கதை நயம், சொல் நயம், நீதி, சமயதத்துவம் முதலியவற்றுள் ஒரு சிலவற்றின் பொருட்டு ஒவ்வொரு காலத்தில், இக் காவியம், தோன்றியது முதல் இன்றுவரை, பாராட்டப் பட்டு வந்துள்ள தெனக் கூறலாம்.

ஆனால், கவிஞர்கள் இதுபோன்ற கொள்கைகளுக்குள் அமைந்துவிடமாட்டார்கள். உண்மையான கவித்வம் சட்டங் களுக்கும் கொள்கைகளுக்கும் உட்பட்டு நின்று ஒடுங்கிவிட மாட்டாது. இளங்கோவடிகளும் பெருங்கவிஞர்; கவித்வத் திற்கு இன்றியமையாது வேண்டப்படுவதாகிய பாவனைசக்தி நிரம்ப வாய்ந்தவர். ஆதலால், இவர் காவியம் பாவனைசக்தி நிரம்பிய கவித்வத்தையே அடிப்படையாகக் கொண்டது. கற் பவர் உளத்தில் கதை உண்மை நிகழ்ச்சியே என்று தோன்று மாறு செய்திகளை அமைத்தல் பாவனை சக்தியின் ஒரு கூறுகும். இதன் பொருட்டே ஆசிரியர் தம்மைக் கதையோடு தொடர்பு படுத்தியிருக்கிறார். பதிகத்திலும் இறுதியிலுள்ள வரந்தரு காதையிலும் (வரி. 171–183) இத்தொடர்பு குறிக்கப்படு கிறது. ஆனால், உண்மையாகத் தொடர்பு உண்டென்று கருது தல் கூடாது. தொன்று தொட்டு வழங்கி வந்த கதையினையே ஆசிரியர் கையாண்டுள்ளார். அரும்பதவுரைகாரர் 'கதை' என்றே வழங்கினர். நச்சினார்க்கினியர் தமது செய்யுளியலு ரையில் (237) 'தொன்மை' என்பதை 'உரைவிராஅய்ப் பழமை யாகிய கதை பொருளாகச் செய்யப்படுவது' என விளக்கி, அதற்கு உதாரணங்களாகப் பெருந்தேவனார் பாரதம், தகடூர் யாத்திரை, சிலப்பதிகாரம் என்ற மூன்றனையும் தருகின்றனர். இதனால், பழமையாகிய கதையை உட்கொண்டே சிலப்பதி காரம் இயற்றப்பட்டது என்பது விளங்குகிறது. இக் காவி யத்திற்கு முற்பட்ட பண்டைக்காலத்தே இவ்வகை வரலாறு வழங்கியதுண்டோவென வினவலாம். இரண்டு சான்றுகள் இருக்கின்றன. ஒரு சான்று நற்றிணையில் உளது. திரு மாவுண்ணி யென்பவள் தன்மீது அன்பற்றுத் துறந்து தனக்கு அயலான்போ லாகிவிட்ட காதலனைப்பற்றிக் கவலைகொண்டு வருந்தினளெனவும், பின் தனது ஒரு முலையைத் திருகியெறிந்து வேங்கை மரத்தின்கீழ் நின்றாளெனவும் ஒருவரலாறு இச்சங்க நூலில் வருகின்றது.

**எரிமருள் வேங்கைக் கடவுள் காக்கும்**
**குருகார் கழனியின் இதணத் தாங்கண்**
**ஏதிலாளன் கவலை கவற்ற**
**ஒருமுலை யறுத்த திருமாவுண்ணி** (நற். 216)

என்ற அடிகளால் இது வெளியாகின்றது. பெயர் வேறுபாடு முதலியவற்றால் இது கண்ணகியின் சரித்திர மன்று என்பது வெளிப்படை. ஆனால் இதினின்றும் கண்ணகிவரலாறு பிறந்ததாகலாமென எளிதில் ஊகிக்கலாம். பிறிதொருசான்று யாப்பருங்கலவிருத்தியில் உள்ளது. ஒருத்தி தன் கணவன் கொலையுண்டு கிடந்த நிலைகண்டு பாடியதாக ஒரு வெண்பா இவ்விருத்தியிற் காணப்படுகிறது. செய்யுள் வருமாறு:-

**கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க**
**ஒண்செங் குருதியுள் ஓஒ கிடப்பதே-கெண்டிக்**
**கெழுதகைமை யில்லேன் கிடந்தூடப் பன்னாள்**
**அழுத கண்ணீர் துடைத்த கை** (யாப். வி. பக்.351)

இதனைப் 'பத்தினிச் செய்யுள்' என உரைகாரர் கூறினர். பத்தினி யொருத்தியின் வரலாறு பற்றியதென்று இது கொள்ளத் தக்கது. ஊர்சூழ்வரியை (சிலப் XIX, 39-50) நோக்குமிடத்து, இப்பத்தினியாவாள் கண்ணகியே யென்பது புலப்படும். இவள் வரலாறு ஒருபடியாக உருப்பெற்றகாலத்து, அவலச்சுவை மிகுந்த இப்பகுதியுடன் பிற கதைப் பகுதிகளையும் அமைத்து வெண்பாவினால் நூல்ஒன்று ஒரு கவிஞன் செய்திருந்தானென்று கொள்ளலாம்.

**காதலியைக் கொண்டு கவுந்தியொடு கூடி**
**மாதரிக்குக் காட்டி மனையி னகன்றுபோய்க்**
**கோதி லிறைவனது கூடற்கட் கோவலன்சென்**
**றேத முறுதல் வினை**

எனத் தெய்வச் சிலையார் உரையிற் (தொல். சொல். 100) காணும் வெண்பா இந்நூலைச் சார்ந்ததாகலாம். 'ஆரிடப் போலி அல்லது ஆரிடவர்க்கம்' என்று முற்செய்யுள் குறிப்பிடப்படுதலால், இந்நூல் சிலப்பதிகாரத்திற்கு முற்பட்டதாகல் வேண்டும். எனவே, இக்காவியத்திற்கு முன்பே கண்ணகி வரலாறு தோன்றி வளர்ந்துள்ளதெனக்கருதுதல் தகும். இதற்குப் பின்பும், மேன்மேலும் இக் கதை செழித்து வளர்ந்து தமிழகமுழுவதும் பரந்து விளங்கியமை இதன் பூர்வ கதியை நன்கு புலப்படுத்துகிறது.

இங்குக் கூறியவற்ருல், இளங்கோவடிகளது காலத்து நிகழ்ந்த உண்மைச் செய்திகளை அவர் காவியமாக அமைக்க வில்லை என்பது வெளிப்படை. சேரன் செங்குட்டுவனுக்கு இளங்கோ என்ெருரு தம்பி இருந்ததாகவும் புலப்படவில்லை. பதிற்றுப் பத்தில் முற்காலத்துச் சேரர் பரம்பரை விளக்க மாகக் கூறப்படுகிறது. அதன்கண் உள்ள ஐந்தாம் பத்து செங்குட்டுவனைப் பற்றியது. இவனுக்குத் தம்பி ஒருவன் உண்டென்ற வரலாறு அந்நூலில் இல்லை. மணிமேகலையிலும் இது காணவில்லை. இளங்கோவடிகள் சேரர் பரம்பரையில் மிகப் பிற்பட்ட காலத்துத் தோன்றியவராகலாம். தொகை நூல்கள் ஒன்றிலேனும் இவரது செய்யுள் காணப்படாமை இவர் கடைச் சங்கத்துப் புலவர் அல்லர் என்பதைத் தெளி வுறுத்துகிறது. இவரோடு சமகாலத்தவரான மதுரைக் கூல வாணிகன் சாத்தனுர், கடைச் சங்கப் புலவரான சீத்தலைச் சாத்தனுரின் வேருவர். சிலப்பதிகாரத்திலும் மணிமேகலை யிலும் சீத்தலைச் சாத்தன் என்ற பெயர் வழக்குக் காணப் படாமை இம்முடிவினை வலியுறுத்தும். அரும்பதவுரைகார ரும், அடியார்க்குநல்லாரும் சிலப்பதிகாரத்தைக் கேட்டவர் 'சீத்தலைச்சாத்தன்' என்று கூறவில்லை. பேராசிரியருரையில் தான் இருவரும் ஒருவரெனல் காணப்படுவது (தொல்-செய். 240 உரை). இது ஏடெழுதிஞேரது பிழையாகலாம். அன்றி யும் சேரன் செங்குட்டுவனது தந்தையாகிய இமயவரம்பன்- நெடுஞ் சேரலாதனுக்கு உற்ற தோழனுய்க் கோவலன் என் பான் ஒருவன் இருந்தனன் என்றும், அவன் மரபில் ஒன்பது தலைமுறைக்குப் பிற்பட்டுத் தோன்றிய வேெருரு கோவலனே சிலப்பதிகாரத்தின் கதா நாயகன் என்றும் மணிமேகலை 28-ம் காதை (103 முதலிய வரிகள்) கூறுகிறது. ஆகவே, செங் குட்டுவனுக்கு எட்டுத் தலைமுறைகளுக்குப் பிந்தியவர் மணிமே கலை இயற்றிய சாத்தனுர் என்பது எளிதிற் பெறப்படும். மேலும் 'கோவலனும் கண்ணகியும் புத்ததேவன் கபிலவாஸ்து வில் அவதரித்துச் செய்யும் தருமோபதேசத்தைக் கேட்டு வீடு அடைவார்கள்' என்று மாசாத்துவான் கூறியதாகச் சாத்தனுர் மணிமேகலையில் (XXVIII, 141-146) எழுதினர். புத்தர் தோன்றுவதற்கு முற்பட்ட காலத்தேயே கோவலன் முதலி யோர் வாழ்ந்தன ரென்பது இவர் கொண்ட கதை. இது முன் பின் முரண். இச் சாத்தனுர் இவர்களது காலத்தினர் என்று

கொள்ளுவது எத்தனை அசம்பாவிதம்! இவரைச் சங்கப் புலவர் அல்லரெனக் கொள்ளுவதற்கு மேற்காட்டியன தக்க சான்றுகளாகும். இங்ஙனமாக, இளங்கோவடிகளும் கூலவாணிகன் சாத்தனாரும் பிற்பட்ட காலத்தவரேயாவர். எனினும், சிற்சில சரித உண்மைகளை அடிப்படையாகக் கொண்டு இவர்கள் தங்கள் காவியங்களை இயற்றினார்கள் என்று கருதுதல் தகும். அவ்வகைச் சரித உண்மைகளுள் செங்குட்டுவனும் இலங்கைக் கயவாகுவும் சமகாலத்தினர் என்பதும் ஒன்றாகலாம். இவ்வரசர்கள் காலத்து நிகழ்ச்சிகளாக நூற் செய்திகளைக் கூறுதலால், இளங்கோவடிகள் தம் காலத்து வழங்கிய கர்ண பரம்பரை வரலாற்றைச் சங்க காலத்தோடு தொடர்பு படுத்தி அமைத்துள்ளார் என்றே கொள்ள வேண்டும். ஆகவே, பல்லவர் முதலிய பிற்காலத்தரசர்களை நூலிற் குறியாமை சிறிதும் வியப்பன்று.

சிலப்பதிகார நூலில் பரத நாட்டியக் கருத்துக்கள் மிகுதியும் வந்துள்ளன. மயமதம், கரவடநூல் முதலிய வட நூல்களும் ஆளப்படுகின்றன. வடமொழிப் பஞ்ச தந்திரத்தினின்றும் ஒரு * கதையும் ஒரு சுலோகமும் குறிக்கப்பட்டுள்ளன (XV, 58). நான்மணிக் கடிகை (XX, வெண்பா), பழமொழி (XXI, 3–4), ஆசாரக் கோவை (XXI, 54–55) முதலிய கீழ்க் கணக்கு நூல்கள் எடுத்தாளப்படுகின்றன. முன்னிலைப் பன்மையாகிய 'நீர்' என்ற சொல்லும் (XVI, 21, 124), தன்மையொருமையாகிய 'நான்' என்ற சொல்லும் (XXIX, செங்குட்டுவற்குக் கண்ணகி கூற்று; தேவந்தி சொல், காவற்பெண்டு சொல், அடித் தோழி சொல்), 'இந்த' (XXI, 51) என்ற சுட்டுச் சொல்லும், அறிகுவன் (பதிகம் 11), போக்குவன் (XVI, 129), உறுவன் (XIX, 6) என எதிர்காலத்துத் தன்மையொருமையில் வரும் அன் விகுதி முதலிய பிற்காலத்துவழக்குக்களும் வந்துள்ளன. அன் ஈறு தமதுகாலத்து வழக்கென இளம்பூரணர் (தொல். சொல். 200, உரை) குறிப்பிட்டு எழுதினர். வங்க தேசத்தினர்க்குப் பங்களர் என்பது பிற்காலப் பெயர்; இதுவும் இக்காவியத்தில் (XXV, 157) காணப்படுகின்றது. அன்றியும் பக்கம், வாரம், திதி (XXIII, 133–135) முதலியனவும், திரையல், அடைக்காய் (XVI,55, XIV, 128) முதலிய பிற்காலத்துப்

---

* கீரிப்பிள்ளையைக் கொன்ற பிராமணியைக் குறித்தது இக்கதை, இவளுக்குக் கோவலன் பொருளளித்து, தானம் பண்ணுவித்து, இவளைக் கணவனுடன் கூட்டி நல்வழிப்படுத்தினனும்!

புகுந்த நுகர்ச்சிப்பொருள்களும் கூறப்பட்டுள்ளன. இவற்றை யெல்லாம் நோக்கின், சிலப்பதிகாரம் சங்க காலத்துத் தோன்றிய நூல் அன்று என்பது உறுதி.

இந்நூலின்கண் மிகுதியாய் ஆளப்படும் வடமொழிச் சொற்களும் இக் கருத்தையே வலியுறுத்துகின்றன.

> சினவரன் தேவன் சிவகதி நாயகன்
> பரமன் குணவதன் பரத்தி லொளியோன்
> தத்துவன் சாதுவன் சாரணன் காரணன் ...
> சங்கரன் ஈசன் சயம்பு சதுமுகன்
> அங்கம் பயந்தோன் அருகன் அருண்முனி
>
> (சிலப். X, 180-187)

என்று வரும் அடிகளில் வடசொற்களைக் காண்க. சங்க இலக்கியங்களில் இவைபோன்றன வருமென நினைக்கவுங் கூடவில்லை.

கோவலனும் கண்ணகியும் காவிரிப்பூம்பட்டினத்தை விட்டுப் புறப்பட்ட காலம் பற்றியும் (X, 1–3), மதுரை எரியுண்ட காலம்பற்றியும் (XXIII, 133–7) வரும் சோதிடக் குறிப்புக்களுக்கு கி. பி. 756–ஆகிய ஓராண்டே நன்கு பொருந்தும் என்பர் திவான் பகதூர் சுவாமிக்கண்ணுப் பிள்ளை (An Indian Ephemeris, VoL. I, pt 1, app. iii). இதனால் 8-ம் நூற்றாண்டின் இறுதியில் சிலப்பதிகாரம் தோன்றியது என்பது இவர் கருத்து. இது பல வகையாலும் உறுதிப்படுகின்றது.

மேற்கண்ட முடிபிற்கு வேறு சில சான்றுகளும் காட்டலாம். அவற்றுள் ஒன்று தமிழிலக்கிய சரிதம் பற்றியது. சங்க காலத்துச் செய்யுட்கள் தனித்தனியாகத் தோன்றிப் பின்னர்த் தொகை நூல்களாக அமைக்கப்பட்டன. அவற்றில் கூறியுள்ள பொருள்களும் அகம், புறம் என்று இலக்கண நூலார் கூறுவனவேயாகும். தொகை நூல்கள் தோன்றிய பின்னர், தமிழ் நாட்டிலே இருவகையான கிளர்ச்சிகள் இருந்தன என்று தெரிகின்றது. அவை ஜைன சமயமும் வைதிக சமயங்களும் பற்றியன ஆம். ஜைன சமயத்தவர் ஒழுக்கத்தை வற்புறுத்தி அற நூல்கள் இயற்றுவதில் முனைந்து நின்றனர். இதன் விளைவாகவே பதினெண் கீழ்க் கணக்கு நூல்களிற் பெரும்பாலன தோன்றலாயின. வைதிக சமயங்கள் பக்தியை வற்புறுத்தின; தேவாரம், நாலாயிரப் பிரபந்தம் முதலிய பக்தி

நூல்கள் தோன்றுதற்குக் காரணமாய் அமைந்தன. இக் காலத்தே வடமொழியும் தமிழும் மிகுதியாகக் கலந்து உற வாடத் தொடங்கின. வடமொழியில் உள்ள நூலமைப்புக் கள் போன்று தமிழிலும் வரவேண்டு மென்னும் அவா தமிழ் மக்கள் உள்ளத்தில் குடிபுகுந்தது. காளிதாசன் முதலிய பெருங் கவிஞர்களது காவியங்களும் தமிழ் மக்களால் போற் றப்பட்டன. வடமொழியிலுள்ள அணி யிலக்கணங்கள் முதலியனவும் தமிழ் மக்களுக்கு உவப்பாகவே இருந்தன. இவற்றின் பலனாக, 'காவிய காலம்' என்று குறிப்பிடத் தக்க காலப் பகுதி ஒன்று தமிழ் நாட்டில் உளதாயிற்று. உதயணன் பெருங் கதை, மணிமேகலை, சிந்தாமணி முதலியன இக்காலப் பகுதியில் தோன்றியனவே. இம் மூன்றிலும் காப்பியம் என்ற சொல் பயின்று வந்துள்ளது. பொதுப்பட, இலக்கிய சரிதத் தில் ஒரு காலத்திலே எழுந்த நூல்கள் அமைப்பு—நெறியில் ஒரு தன்மையவாய்ப் பெரும்பாலும் இயன்று விடுதல் இயற்கை. இது பலமொழி இலக்கியங்களையும் ஒப்பிட்டுப் பார்ப்பவர்கள் நன்கு அறிந்ததே. ஆகவே, சிலப்பதிகாரமும் இப் பிற்காலப் பகுதியைச் சேர்ந்தது என்று எளிதில் ஊகிக்கலாம்.

பிறிதொன்று தமிழ் நாட்டிற் சமய வரலாறு பற்றியது. ஒழுக்கத்தை வற்புறுத்தி வந்த ஜைன சமயத்தினர் கால-அடைவில் சமயதத்துவங்களை விசேஷமாகப் பாராட்டத் தொடங்கினர். அவற்றுள்ளும் கர்மம் பற்றிய கொள்கைகளை ஆழ்ந்து சிந்தித்து அதன் பல்வேறு நெறிகளைக் குறித்தும் நூல் கள் எழுதலாயினர். வைதிக சமயங்களை நேர்பட எதிர்த்து வாதம் புரிவதற்கு இக் கொள்கைகள் பெரிதும் துணை புரிந் தன. ஆகவே, இக் கர்ம விசாரணைகள் தமிழகத்திற் சம்பந்த ராதியோர் காலத்தை அடுத்து மிகவும் நுட்பமாகச் செய்யப் பட்டன என்று கருதுதல் தகும். முற்பிறவியில் நிகழ்ந்த கர் மங்களின் விளைவே அடுத்த பிறவியின் நிகழ்ச்சிகளாகும் என்ற கொள்கை கடைபோக முற்றும் நம்பப்பட்டது. இதனை எளிதில் உணர்த்துதற்குப் பற்பல சரித்திரங்களையும் பூர்வ வரலாற் றுடன் கையாளலாயினர். வட நாட்டிற் பிறந்த ஜாதகக் கதை கள் முன்மாதிரியாக அமைந்தன. சிலப்பதிகார வரலாறும் இந்நெறியையே பின்பற்றுகிறது. எங்ஙன மெனின், 'ஊழ் வினை உருத்து வந்து ஊட்டும் என்பதூஉம்' எனப் பதிகத்தில் வருதலேயன்றி, நூலினகத்தும் ஆசிரியர்தாமே,

**வினை விளை கால மாதலின் யாவதும்**
**சினையலர் வேம்பன் தேரா னாகி** (XVI, **148-149**)

எனவும்,

**உம்மை வினைவந் துருத்த காலைச்**
**செம்மையி லோர்க்குச் செய்தவம் உதவாது**

(XXIII, **171-172**)

எனவும் பல இடங்களில் வினையின் இயல்பை வற்புறுத்திக் கூறுதல் காணலாம். இதனோடு அமையாது, கோவலன் முதலியவர்களது துன்பநுகர்ச்சிக்குக் காரணமாக, அவர்களது முற்பிறப்பு வரலாறுகளும் விரிவாக இக் காவியத்தில்கூறப்பட்டுள்ளன (XXIII, *138-170*). இவ்வகைப் பிறப்பு வரலாறுகள் சங்க காலத்தில் வழங்கியனவாகத் தெரியவில்லை. இதனை நோக்கு மிடத்தும், இச்சங்க காலத்திற்கு மிகப் பிற்பட்ட காலத்தே இக்காவியம் தோன்றியது என்பது விளங்கும்.

இன்னும், இந்நூல் பத்தினிக் கடவுள் வழிபாடு தமிழ் நாட்டிலும் பிற நாடுகளிலும் ஏற்பட்ட பொழுது அதனை விளக்குதற்கு எழுந்த சரித்திரமாக உள்ளது. முதல் இரண்டு காண்டங்களும் கோவலன் கண்ணகி வரலாற்றை முற்றக் கூறுகின்றன. இறுதியிலுள்ள வஞ்சிக் காண்டம் பத்தினி கோயிற் பிரதிஷ்டையையே தலைமைப் பொருளாகக் கொண்டுள்ளது. இப் பத்தினி வழிபாடு எப்பொழுது தோன்றியது என்பது சரித்திரவாயிலாக நன்கு அறிதற்கு இல்லை. ஆனால், சங்க காலத்தில் இவ்வழிபாடு இருந்ததெனற்குச் சான்று கிடையாது. அங்ஙனமே நாயன்மார், ஆழ்வார் காலத்தும் சான்று காணப்படவில்லை. ஆனால், சக்தி வழிபாடுகளும் அவைபற்றிய நூல்களும் தோன்றிப் பெருகிய காலம் கி. பி. 500 முதல் 900 வரை யென்பர் (An Outline of the Religious Literature of India, O. U. P.). இந்நெறியே நோக்கினும், சிலப்பதிகாரம் சங்க காலத்து நூல் அன்றாம். இலங்கைச் சரித்திரங் கூறுவனவாக மகாவம்சம் முதலிய பல நூல்கள் உள்ளன. அவற்றுள், 16-ம் நூற்றாண்டில் தோன்றிய 'ராஜாவளி'யில் தவிர, வேறொன்றிலும் பத்தினிக் கடவுளைப் பற்றி யாதொரு குறிப்பும் கிடையாது. ராஜாவளியிலும் கஜபாகு சோழ தேசம் சென்று, சோழ அரசனைப் பயமுறுத்தி, 24000 குடிகளையும் பத்தினி தேவியின் காலணிகளையும், நான்கு தெய்வங்களின் ஆயுதங்களையும் தன்னாட்டுக்குக் கொணர்ந்தான்

என்றே யுள்ளது. இது 16-ம் நூற்றுண்டிற்கு முன்பு சோழ தேசத்தில் பத்தினி வழிபாடு இருந்ததெனற்கு ஒரு வேளை சான்றுகலாம். சிலப்பதிகாரக் கதையை ஏதோவொரு வகையிற் கேள்வியுற்ற 'ராஜாவளி'யின் ஆசிரியர் இங்ஙனம் எழுதியிருத்தலுங் கூடும். இதினின்று பத்தினி வழிபாட்டின் காலத்தை வரையறுத்தல் இயலாது. இப்போது அகப்படும் பத்தினிப் படிமங்களாலும் இவ் வழிபாடு தோன்றிய காலம் துணிதற்கில்லை. நிகவேவா விஹாரத்துக் குகையிலுள்ள இரண்டு மரப் படிமங்கள் கண்ணகியும் கோவலனுமாம் எனக் கருதுவர். ஆனுல் இவை 11-ம் நூற்றுண்டினவாமென்பர். இலங்கையிற் கண்டெடுக்கப்பெற்ற ஒரு வெண்கலப் படிமமும் உண்டு. இதனை 1830-ல் பிரிட்டிஷ் காட்சிச் சாலைக்கு அளித்து விட்டனர். பத்தினி தேவி யென்று இதனைக் கொள்ளுதற்குரிய காரணம் புலப்படவில்லை. இதன் காலமும் தெரியமாட்டாது.

நீலகிரிச்சாரலில் 'கண்ணகிமந்து' என்ற ஓர் ஊர் உள்ளது (M.E.R. 1906-7, p 81). இதன் வரலாறு விளங்கவில்லை.

இங்கே வேறோர் உண்மை கவனித்தற்குரியது. மணிமேகலை பௌத்தமதச்சார்பான நூலென்பது நன்குஅறியப்பட்டதே. இதன் சமகாலத்தே தோன்றிய சிலப்பதிகாரத்தில் வைதிகசமயம், பௌத்தசமயம், அருகசமயம் என்ற மூன்றும் ஒருங்கொத்துப் போற்றப்படுகின்றன. இதற்குச்சான்றுகளாகப் பல மேற்கோள்கள் காட்டுதல்கூடும். நாடுகாண் காதையில்,

> **அணிகிளர் அரவின் அறிதுயி லமர்ந்த**
> **மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக் கழிந்து,**
> **பணையைந் தோங்கிய பாசிலைப் போதி**
> **அணிதிகழ் நீழல் அறவோன் திருமொழி**
> **அந்தர சாரிகள் அறைந்தனர் சாற்றும்**
> **இந்திர விகாரம் ஏழுடன் போகி,**
>
> * * *
>
> **ஐவகை நின்ற அருகத் தானத்துச்**
> **சந்தி யைந்தும் தம்முடன் கூடி**
> **வந்து தலைமயங்கிய வான்பெறு மன்றத்துப்**
> **பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழல் ...**
> **உலக நோன்பிகள் ஒருங்குட னிட்ட**
> **இலகொளிச் சிலாதலந் தொழுது வலங்கொண்டு**

**(சிலப். XX, 9-25)**

என வருவதொன்றே மேற்கூறியதனைத் தெளிவுறுத்துதற்குப் போதியது. அழகிய பட்டாடையொன்றில் பலநிறமுள்ள இழைகள் குறுக்கும் நெடுக்குமாய்ச் செல்வதையொத்து, இக்காவியத்தின் உடலிலே இம் முத்திறச் சமயங்களின் தத்துவங்களும், கருத்துக்களும், சங்கேத மொழிகளும், தொடர்களும், ஊடுபாய்ந்து அமைந்து இதன் மேனியை அழகுறுத்துகின்றன. இதனாற் புலப்படும் சமுதாயநிலையில் சமயவுணர்ச்சியும், வழிபாட்டு முறையும், கோயில்களினமைப்பும் மிக மேம்பட்டுக் காணப்படுகின்றன. இச் சமயவுணர்வின் முதிர்ச்சியே மணிமேகலையில் 27-ம் காதையில் வெளியாவது. இந்நூல் 29-ம் காதையில் வரும் தருக்கப் பொருள்கள் 5-ம் நூற்றாண்டினரான திங்நாகரின் நியாயப்பிரவேசத்தைப் பின் பற்றியன. இந்நூலின் பௌராணிக நெறியும் பிற்காலத்ததே. சிலப்பதிகாரத்தில் விளங்கும் நாட்டிய நிலையும், இசையின் நிலையும் கணிகையர் நிலையும் பிறவும் இக்காலத்துச் சமுதாயம் நாகரிகச்சுழல்நீரில் மூழ்கி மகிழ்ச்சியில் திளைத்திருந்தமையைத் தெரிவிக்கின்றன. இவற்றிற்கும், சங்ககாலத்துச் சமுதாயத்திற் புலப்படும் எளிமை, நேர்மை, வீரம், காதல் முதலியவற்றிற்கும் வெகுதூரம். எனவே, இக் காலத்திற்குப் பிற்பட்ட சமயநிலையும் சமுதாயநிலையுமே சிலப்பதிகாரகாவியத்தில் வெளிப்படுகின்றன. இந்நிலைகள் சம்பந்தர் முதலானோரது காலத்தை யடுத்துக் காணப்படுதற்குப் பெரிதும் இயைபு உண்டு.

இதுவரையும் சிலப்பதிகாரம் தோன்றிய காலத்தைப் பற்றிக் கூறியது அதிலுள்ள வரலாறு இளங்கோ வடிகள் காலத்து நிகழ்ந்த உண்மையான நிகழ்ச்சி அன்று என்பதை வற்புறுத்துதற்கே யாகும். அது பூர்வ கதை யொன்றினை அழகுற அமைத்த ஒரு கற்பனைச் சித்திரமேயாம். உண்மையான முடிபு இதுவே என்பதற்கு அதில் கூறப்பட்டுள்ள செய்திகளைக் காட்டினும் சிறந்த சான்றில்லை. இயற்கைக்கு அதீதமான பல செய்திகள் நிகழ்ந்தன என்று இக்காவியம் தெரிவிக்கின்றது. உதாரணமாக, வாளினால் குறுக்காக வெட்டுண்டு இறந்து வீழ்ந்த கோவலன், அவன் உடம்பைக் கண்ணகி தழுவிய அளவில், உயிர்பெற்று எழுந்து அவளுடன் பேசிப் பின் அமரர் குழாத்துட் போயினான் என்ற செய்தி ஒன்று (சிலப், XIX, 60-67). இங்ஙனம் பல. இவைகளெல்லாம் உண்மையில் நிகழ்ந்தன என யாரேனும் கொள்வரா?

தமிழகத்தில் அரும்பிமலர்ந்த இக்கதையை இளங்கோவடிகள் தமது அரிய கவித்வ சக்தியால் அழகிய ஒரு காவியமாக இயற்றினர். இக்காவியத்தின் இலக்கிய நயம் ஒன்றே நாம் அறிந்து நுகர்தற்குரியது. இசைபற்றிய கருத்துக்கள், சரித்திரக் கூறுகள் முதலியன எல்லாம் இலக்கிய நயத்தை நாம் உணர்வதற்குத் தடையாய் அமைந்து விடுகின்றன. இவைகளையெல்லாம் புறம்பே ஒதுக்கினல் அன்றி, சிலப்பதிகாரத்தின் இலக்கிய நயத்தையும், கலை நயத்தையும், கவித்வ நயத்தையும் நாம் உணர்ந்து கொள்ளுதல் முடியாது. இந்நெறியில் நாம் இக் காவியத்தைக் கற்ருல் தான் 'நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்' என்று சுப்பிரமணிய பாரதி கூறியதன் உண்மை விளங்கும். இந்நெறி கையாளப் படுதற்குரிய காலமும் இந்த நூற்ருண்டே யாகும். ஏனெனின், இலக்கியங்களை இப்புதிய நெறியில் கற்று அனுபவிப்பதற்கு இக்காலத்து ஆங்கிலத்தில் உள்ள நூல்-மதிப்பு முறை பெரிதும் உதவவல்லது.

இங்குக் குறித்த நெறியில் சிலப்பதிகார காவியத்தை நாம் கற்க வேண்டுமாயின், அதற்கு மிகத் தெளிவான உரை ஒன்று வேண்டும். அது மிகவும் எளிய நடையிலும் இயன்றிருத்தல் வேண்டும். முன் தோன்றிய உரைகள் இவ்வாறு அமைந்தன அல்ல; அன்றியும் மிகக்கருகலான சங்கேதப் பொருள்கள் பல அவ்வுரைகளில் இடம்பெற்றுக் கற்பவர்க்கு இடையூறு விளைக்கின்றன. இவைகளை நீக்கி, நல்ல முறையில், எளிய நடையில், எனது நண்பர் சர். ஆர். கே. சண்முகம் செட்டியார் எழுதிய உரை மிகவும் பாராட்டத்தக்கதாகும். இன்றுவரை வந்துள்ள பதிப்புக்கள் பல. 1872-ல் திரு. சுப்பராய செட்டியாரும், 1876-ல் திரு. T.E. சீநிவாசராகவாச்சாரியாரும் புகார்க் காண்டத்தை உரையுடன் வெளியிட்டுள்ளார்கள். டாக்டர் உ. வே. சாமிநாதையர் நான்கு முறை (1892, 1920, 1927, 1944) நூல் முழுதும் உரையுடன் பதிப்பித்தனர். திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரது உரையுடன் ஒரு பதிப்பு வெளிவந்துள்ளது. எனினும், இப்போது வெளியாகும் இவ்வுரைப் பதிப்பும் பயனுடையதாகவே காணப்படும்.

திரு. செட்டியார் அவர்கள் தமிழிசை யுணர்ச்சியின் பொருட்டு இச் சிறந்த காவியத்தைக் கற்கப் புகுந்தார் என்று நினைத்தல் தவறு. அவர்கள் கலாசாலை மாணவராக இருக்கும்

பொழுதே தம் தாய்மொழியின் மீது மிகுந்த அன்பு கொண்டவர்கள். அக்காலத்தில் ஒரு முறை கலித் தொகைச் செய்யுள் ஒன்றை அவர்களுடன் படித்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது ' இது போன்ற செய்யுட்கள் நல்ல முறையில் எளிய உரையுடன் அச்சிடப் பெற்று ஆங்கில மொழி பெயர்ப்போடு வெளிவருமாயின் தமிழ் இலக்கியத்தின் புகழ் அயல்நாடுகளில் எங்கும் பரவுதற்கு ஏதுவாகும்; அச்செயலை மேற்கொள்ளுதல் வேண்டும்' என்று 35 ஆண்டுகளுக்கு முன்னர் அவர்கள் ஆர்வத்துடன் கூறியது இன்றும் எனக்கு ஞாபகமிருக்கிறது. பின்னொருமுறை 'கலித்தொகையைச் செவ்விய முறையில் வெளியிட வேண்டும். அதற்குரிய செலவு முழுதையும் நானே ஏற்றுக்கொள்ளுகிறேன்' எனவும் வற்புறுத்தினார்கள். இவ்வகையான விருப்பத்துடன் மட்டும் அவர்கள் தமிழன்பு அமைந்துவிடவில்லை. அவர்கள் தமது மதிநுட்பத்தையும் பேராற்றலையும் இடைவிடாது பயன் படுத்த வேண்டும் அரும் பெருஞ் செயல்களிலே ஈடுபட்டிருப்பவர்கள். எனினும், சமயம் வாய்த்த பொழுதெல்லாம் தமிழ் நூல்களை அவர்கள் கற்று வந்தார்கள். இங்ஙனம் கற்ற நூல்களுள் சிலப்பதிகாரமும் ஒன்று. இவ் வுரை அக்கல்வியின் விளைவேயாகும்.

இதுபோன்ற தமிழ் இலக்கியத் துறையில் திரு. செட்டியார் அவர்கள் ஈடுபட்டு நமது தமிழ் அன்னைக்குத் தொண்டு புரியுமாறு இறைவன் அருள் புரிக.

சென்னைப் பல்கலைக்கழகம்,
1—8—46.

**எஸ். வையாபுரிப் பிள்ளை**
தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர்

## மதிப்புரை

'சிலப்பதிகாரம் என்னுந் தொடர்' சிலம்பு -|- அதிகாரம் என்னும் இருசொற்களால் ஆயது. சிலம்பு காரணமாக விளைந்த கதை (அல்லது சிலம்பால் விளைந்த கதை) என்பது அதன் பொருள். இக்கதையின் தலைவனும் தலைவியுமான கோவலனும் கண்ணகியும் மதுரைக்குச் சென்று சிலம்பினை விற்று, அதனால் வரும் பொருளை வாணிக முதலாக் கொண்டு வாணிகஞ் செய்யலாமெனக்கருதி, அந் நகர்க்கு வழிக் கொண்டனர். மதுரைக் கடைத்தெருவில், அரசவரிசை பெற்ற பொற்கொல்லனைக் கோவலன் கண்டான். அப் பொற்கொல்லன் கோப் பெருந் தேவியின் சிலம் பொன்றனை அண்மையிற் களவு செய்திருந்தானாகலின் அச் சிலம்பு போன்றிருந்த கண்ணகியின் சிலம் பொன்றனைக் கோவலனிடமிருந்து வாங்கி, அவனே தேவியின் சிலம்பைக் களவு செய்தவன் என்று பாண்டியனுக்கு அறிவித்தான்.

அதனைத் தேரா மன்னன் பொற்கொல்லன் பேச்சினை நம்பிக் கோவலனைக் கொல்வித்தான். கணவனையிழந்த கண்ணகி அரசன் முன் சென்று வழக்குரைத்துக் கோவலன் சிலம்பு திருடிய கள்வனல்லன் என்பதைத் தனது மற்றொரு சிலம்பினை உடைத்து, தேவி சிலம்பிற்கும் தன் சிலம்பிற்கு முள்ள உள்ளீடுகளின் இடைத் தெரிவுகளை எடுத்துக் காட்டி மெய்ப்பித்தாள். அரசன் தன் குற்ற முணர்ந்து, தாழ்ந்த குடையன் தளர்ந்த செங் கோலனாய் மனம் நொந்து இறந்தான். கண்ணகி தன் கணவனைக் கொன்ற பழிக்குப் பழியாக மதுரைமா நகரை எரித்தழித்தாள். இறுதியில், பத்தினிக் கடவுள் எனப் பரவப் பெற்றாள். இக் கதை முழுதும் சிலம்புபற்றியே வருதலின் சிலப்பதிகாரம் என்னும் பெயர் பெரிதும் பொருத்தம் உடையதாய்க் காண்கின்றது.

சிலப்பதிகாரம் ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்று. இதனைத் தொடர் நிலைச் செய்யுள் என்று கூறுப. இக் காப்பியத்துள் இயல், இசை, நாடகம் என்னும் மூன்றனையும் காணலாம். இந்நூலுள் இயற்றமிழின் சிறப்பியல்புகள் சுவையொடு

சிறந்து விளங்காத இடமில்லை. இசைக்கும் நாடகத்திற்கும் இக்காப்பியம் ஒரு சிறந்த எடுத்துக் காட்டு. பொருட் செறிவு இந்நூலின் பிறிதோரு சிறப்பியல். இடையிடையே வருகின்ற இசைப்பாட்டுக்கள் எவரையும் மகிழ்விக்கும். கோவலனும் மாதவியும் கடற்கரையிற் பாடிய கானல் வரிப்பாட்டுக்கள் சுவையறி புலவர் உள்ளத்தைப் பிணித்துக் குழைக்குந் தன்மையன. கொற்றவையைப் பாடிய பாட்டுக்களும், ஆய்ச்சியர் குரவைப் பாட்டுக்களும், முருகக் கடவுளைப்பாடிய குறத்தியர் தம் பாட்டும் அழகும் செறிவும் இன்பமும் உடையன; கற்போர் உளத்தை நெகிழ்விக்குந் திறத்தன.

சிலப்பதிகாரத்தில், இயலும் இசையும் சிறந்து விளங்குதலேயன்றி, நாடகக் காப்பியத்திற் கின்றியமையாத உறுப்புக்களெல்லாம் நிறைந்திருக்கின்றன. ஆதலின், இதனை நாடகக் காப்பியம் என்னலாம். அங்ஙனமாயின், இதனைத்துன்ப—இன்ப நாடகம் என்று கூறலாம். இக் காப்பியத்துக்கண் வரும் துன்பியற் செய்திகளோ மிகப்பல. கண்ணகியின் பிரிவும், அவள்தன் தீயகனவும், கோவலன் கண்ட அஞ்சுவரு கனவும், அவ்விருவர்தம் காட்டுவழிச் செலவும், நீதிக்கு முரணுன கோவலன் கொலையும், தேற்ற முடியாக் கண்ணகி துயரும், கோல்கோடிய பாண்டியன் இறுதியும், கண்ணகி தனது இடநகிலைத் திருகி யெறிந்து நகரினை எரித்ததும், கோப்பெருந்தேவியும் பாண்டியனோடு விண்ணகம் புக்கதும், பிறவும் இக்காப்பியத்துக் காணுந் துன்பியற் செய்திகள். இச் செய்திகளனைத்தும் படிப்போர்தம் நெஞ்சினைக் கரைத்துக் கண்ணீர் வடிக்கச் செய்யும். அங்ஙனம் செய்யினும் கதையின் முடிவு இன்பந்தருவதாய் அமைந்துளது. துயருழந்தாரிருவரும் தேவர் புடைசூழ வானவூர்தி யிவர்ந்து துறக்கம் புகுகின்றனர்.

## அமைப்பு

தமிழ்க்காப்பியங்கட்கான அமைப்பு இக்காப்பியத்திற்கு மொக்கும். காவிரி, வையை முதலான யாறுகளும் புகார், உறந்தை, மதுரை, வஞ்சி முதலிய நகரங்களும், குரவைக் கூத்து முதலிய கூத்துக்களும், திருமால் முதலிய தெய்வங்களும், அடர்ந்து வளர்ந்த பெருங்காடுகளும், நன்கு வருணிக்கப்பட்டிருக்கின்றன. தமிழ் மக்களின் வாழ்க்கை இன்னதென அறியுமாறு பல சித்திரங்கள் காணப் பெறுகின்றன. சிலப்பதிகாரப்

பதிகம் 'பாட்டுடைச் செய்யுள்' அல்லது உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என இதனை வழங்குகின்றது. இடையிடையே உரைகளும் வரிப்பாட்டுக்களும் வருகின்றன.

## சிலப்பதிகாரம் சங்ககாலத்து நூல்

சங்கநூல்கள் தோன்றின காலத்தை அறுதியிடுவது எவர்க்கும் எளிதன்று. காலமென்னும் கண்ணுழையாக் காட்டுட் புகுந்து வழிகாண்டல் எங்ஙனம்? சங்கநூல்களின் காலங்கள் பல படியாக ஆராயப்பட்டிருக்கின்றன. கி. மு. ஐந்தாம் நூற்றாண்டு தொடங்கிக் கி. பி. நான்காம் நூற்றாண்டின் இறுதி காறும் சங்க காலமென ஒருவாறு உரைக்கலாம். இக் காலத்திடையேதான் சிலப்பதிகாரந் தோன்றியது. ஆதலின் இது சங்க நூல்களுள் ஒன்றெனத் தட்டில்லை. இக்காப்பியத் தொடுவைத்தெண்ணத்தக்க பிறிதொரு காப்பியம் மணிமேகலை. இவ்விரண்டும் ஐம்பெருங் காப்பியம் என்னும் பகுப்பிற் பட்டன. இவ்விரட்டைப் பெருங்காப்பியங்கள் பழந்தமிழ் நாட்டின் சரிதத்தை நன்கு விளக்குவனவாகும். இவை இராமாயண மாபாரதங்களை ஒருபுடையொத்து நிற்கும்.

சிலப்பதிகாரம் என்னுங் காப்பியம் ஒருதனி ஆராய்ச்சிக்குரியது. இந் நூல் பழமை சான்றது. இறையனார் அகப்பொருள் உரைகாரரும், இளம்பூரணர் முதலிய உரையாசிரியரும் மேற்கோளாக எடுத்துக் காட்டும் பெருமையினைக் கொண்டது. வடித்த சொற்களும் பொருட்செறிவும் உடைமையான் இந்நூலுக்கு இணை இதுவேயாகும். இது தெளிவு சான்ற எளிய இனிய நடையினது; பொருளணி பல பொதிந்து விளங்குவது; தமிழ் வளன்மிக்கது; நூன்முகத்தில் உரைப்பாட்டினைக் கொண்டது; கானல்வரி, வேட்டுவவரி, ஆற்றுவரி, ஊசல்வரி, கண்புகுவரி என்னும் இசைப்பாட்டுக்கள் நிறைந்தது.

சிறந்த இலக்கிய மொன்றனுக்கு எடுத்துக் காட்டலாவதான நூல் சிலப்பதிகாரத்தினும் பிறிதொன்றில்லை. இதன் உரைகளால் அறியப்படுகின்ற இசை நூல்களனைத்தும் மாய்ந் தொழிந்தன. பழங்காலத்து நாடகப்பான்மையை அறியவேண்டுமாயின் இந் நூலைத் துணையாகக்கொண்டுதான் அறிய முடியும்

இது சங்க நூல்களோடொருங்கு வைத்தெண்ணத் தக்க பெருமையோடு தென்னிந்திய சரித்திர ஆசிரியர்க்குப் பெருந் துணையாயும் நிற்பது. இந்நூல் சங்கநூலா அன்று என்பதை இளங்கோவடிகளின் நண்பரான கூல வாணிகன் சீத்தலைச் சாத்தனுர் என்னுஞ் சங்கப்புலவர் இயற்றிய மணிமேகலை என்னும் காப்பியமே உரைத்துவிடும். சாத்தனுர் கூறிய மணி மேகலைச் செய்திகள் யாவும் சிலப்பதிகார நிகழ்ச்சிகட்குப் பின்னர் நிகழ்ந்தன. இவ்விரண்டும் சங்க நூல்கள் அல்ல வென்னும் பொருள்பற்றி நீண்டவொரு பயனில் ஆராய்ச்சியும் எழுந்து அடங்கியது. கபில பரணர்களைப் போலவே சாத்த னுரும் சங்கப்புலவருள் ஒருவராய் இருந்தமையானே, அவ் வாராய்ச்சி வலியிழந்து விட்டதெனலாம். கடைச்சங்க காலத் தில் இவ்விரட்டைக் காப்பியங்கள் பலராலும் சீராட்டிப் பாராட்டப் பெற்றனவாகும். இவையெல்லாம் சிலப்பதிகாரம் சங்கநூல்களுள் ஒன்றென்பதையே வலியுறுத்தும். பல்ல வரைப்பற்றிச் சிலப்பதிகாரம் எதனையும் கூருத காரணத் தினுல் இந்நூல் கி. பி. இரண்டாம் நூற்ருண்டில் எழுந்த தெனத் தடையில்லை. இந்நூலும் மணிமேகலையும் கச்சியைப் பற்றிப் பல்லிடங்களிற் குறித்தாலும் பல்லவ வேந்தருள் ஒரு வரையேனும் ஓர் இடத்திலும் குறிக்கவில்லை. பல்லவர் பிரா கிருத மொழியில் வெளியிட்ட ஆதி ஆணை வெளியீடுகள் மயிட வோலு, ஹீரகடஹள்ளி, பிரிட்டிஷ் பொருட் காட்சிசாலை யென்னும் இம்மூன்றிடங்களிலும் இன்னும் உள. இந்தியக் கல்வெட்டுத் தொகுதியிலும்இவையிடம் பெற்று வெளிவந் துள்ளன. இவ்வாணைகள் எல்லாம் கி. பி. 200–250–ஆண்டில் எழுந்தனவாதல் வேண்டும். பல்லவர்கள் கச்சிப்பதியிற் குடி புகுவதன் முன்னர் அப்பதி சோழர்தம் வடவெல்லைப்பதியாக அமைந்திருந்ததனேடு சோழர்பிரதிநிதிக்குத் தலைநகராயிருந்த தென்பதைச் சங்கநூல்களின் வாயிலாக அறிதல் கூடும். சிலப்பதிகார காலத்திற் கச்சியில் சோழர் பிரதிநிதியாயிருந் தோன் தொண்டைமான் இளந்திரையன் என்போன். இவ் விளந்திரையனே கடியலூர் உருத்திரங் கண்ணனுராற் பெரும் பாணுற்றுப் படையிற் பாராட்டப்பெற்றவன். பல்லவர் குடி யேற்றத்திற்கு முன்னர்க் கச்சிப் பதியில் வதிந்ததிரையர்க்கு இவ்விளந்திரையனே தலைவன். இத்திரையர்கள் கி. பி. இரண் டாம் நூற்ருண்டில் சோழர்க்கடங்கி வாழ்ந்தவராவர்.

கச்சியைக் குறித்த சிலப்பதிகாரம் எந்தவகையிலாவது பல்ல வரைக் குறித்தல் காணேம். திவ்வியப் பிரபந்தம் போன்றவை பல்லவ அரசர் பலரைக் குறித்துச் சொல்லும். இதனுல் சிலப் பதிகாரம் இயற்றப் பெற்ற காலத்திற்குப் பின்னரே பல்லவர் கள் கச்சியிற் குடியேறியிருத்தல் வேண்டுமென்பது வெளிப் படை. முன்னரே அப் பல்லவர் குடியேறினராயின் சங்கநூல் களும் சிலப்பதிகாரமும் அம் மரபினில் வந்த பலரையோ ஒரு வரையோ குறிக்காமலிருக்குமா?

## சேரன் செங்குட்டுவன் காலம்

புறநானூற்றில் ஒரு செய்யுளேயும், அகநானூற்றிற் சில வற்றையும், ஒருங்கு வைத்துச் சிலப்பதிகார நிகழ்ச்சி யொன் றனே ஒப்பிட்டுப்பார்த்தால், சேரவேந்தர்தம் ஆதிசரிதம் மாபா ரத காலத்திற்கு முற்பட்ட தென்னலாம். சேரவேந்தருள் உதியஞ் சேரலாதன் என்பான் பாரதப் போர்வீரர்க்குப் பெருஞ் சோறு கொடுத்ததாக நாம் அறிகின்றேம். பதிற்றுப் பத்தென்னும் நூலே நன்கு ஆராயின், அரசியல் நிகழ்ச்சிகள் நிகழ்ந்த காலங்கள் அந்நூலால் நன்கு தெரிய வருகின்றன. அக்காலங்கள் பொதுவாகத் தமிழ் நாட்டு மூவேந்தர்தம் காலத்தை முறையாக அறிந்துகொள்ள உதவுவதோடு, சிறப் பாகப் பழங்காலத்துச் சேரவேந்தர் வாழ்ந்து வந்த காலங்களே யும் நன்கு நமக்கு விளக்கித் தருகின்றன. பதிற்றுப்பத்துள் முதற்பத்தும் இறுதிப்பத்தும் இதுகாறும் கிடைக்க வில்லே. ஏனைய எட்டுப் பத்துக்களும் சேரவேந்தர்தம் உண்மை வர லாறுகளேத் தம்மகத்துக் கொண்டுள்ளன. அவற்றில் வருஞ் சேரவேந்தர்தம் பெயர்கள் கீழ் வருவன.

1. **இமய வரம்பன் நெடுஞ் சேரலாதன்**
   **(குடவர் கோமான், குடக்கோ)**
2. **பல்யானேச் செல்கெழு குட்டுவன்**
3. **களங்காய்க் கண்ணி நார் முடிச் சேரலாதன்**
4. **கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன்**
5. **ஆடு கோட்பாட்டுச் சேரலாதன்**
6. **செல்வக் கடுங்கோ வாழியாதன்**
7. **பெருஞ் சேரலிரும் பொறை**
8. **இளஞ் சேரலிரும் பொறை**

மேற்காட்டிய வேந்தர்தம் உறவின் முறையை இப்போது கிடைக்கும் பதிற்றுப்பத்தில் உள்ள இறுதிப்பதிகங்களிலிருந்து நாம் அறியலாம். இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன், உதியஞ் சேரலுக்கும் வெளியன் வேண்மாள் நல்லினிக்கும் பிறந்த மகன். பல்யானைச் செல்கெழு குட்டுவன் இமயவரம்பனின் இளையதம்பி நார் முடிச்சேரலாதற்கும் வேளாவிக் கோமான் பதுமன் தேவிக்கும் பிறந்த மகன். செங்குட்டுவன் குடவர் கோமான் நெடுஞ் சேரலாதற்கும் சோழன்மணக்கிள்ளி யீன்ற மகளான நற்சோணைக்கும் பிறந்த மகன் என்ப. ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் குடக்கோ நெடுஞ்சேரலாதற்கும் வேளாவிக்கோமான் தேவிக்கும் பிறந்தவன். செல்வக் கடுங்கோ அந்துவற்கும் ஒருதந்தை மகளான பொறையன் பெருந்தேவிக்கும் பிறந்த மகன் என்ப. பெருஞ்சேரல் செல்வக்கடுங் கோவுக்கும் வேளாவிக்கோமான் பதுமன் தேவிக்கும் பிறந்த மகன். இளஞ்சேரலக்குட்டுவன் பெருஞ்சேரலிரும் பொறைக்கும், மையூர் கிழாஅன் மகளான வேண்மாள் அந்துவஞ் செள்ளைக்கும் பிறந்த காள்முளையென்ப.

மேற்கூறியாங்குப் பதிற்றுப்பத்துப் பதிகங்களிற் கண்ட வங்கிசவரலாறுகளை இவ்வாறு கொள்ளாமல் திரு. சோம சுந்தர பாரதியார், பழைய சேரவேந்தர் அனைவரும் மருமக்கட்டாயத்தைப் பின்பற்றியவர் என்றும் இப்போது மலையாளத்துள்ள மருமக்கட்டாயம் அப்பழைய வழக்கத்தை ஒட்டிவந்ததென்றும் முடிவு செய்தார்.

இம்முடிபிற்கு மாறாக பண்டித மு. இராகவய்யங்காரவர்கள் பதிகச் செய்திகளிலிருந்து மருமக்கட்டாயமே அக்காலத்துச் சேரர் வழக்கமெனல் பொருந்தா தெனவும், தந்தைக்குப் பின்னர் மகனே ஏனை நாட்டிற் போலத் தாயம் பெறற்குரியான் எனவும் பலசான்றுகள் காட்டி வாதித்துச் சாதித்து விட்டனர். சேரன் செங்குட்டுவன் மனைவி வேண்மாள் எனச் சிலப்பதிகாரங் குறிப்பிடுகின்றது. அவள்தன் முழுப்பெயர் இளங்கோ வேண்மாளெனக் கொள்வது பொருத்தம். பதிற்றுப்பத்து ஐந்தாம் பத்தில் உள்ள பதிகத்தாற் செங்குட்டுவற்குக் குட்டுவன் சேரல் எனப் பெயரிய மகனொருவன் இருந்தானெனவும் அம்மகன் சங்கப்புலவருள் ஒருவரான பரணர்க்குப் பிறபரிசில்களோடு ஒரு பரிசிலாகக்

கொடுக்கப்பட்டான் எனவும் அறியலாகும். இங்ஙனம் வருகின்ற செய்திகள் அனைத்தையும் ஒருங்கு வைத்து ஆராய்ந்தால், பழைய சேரவேந்தர்களைப் பற்றிய வரலாற்று வழியை ஒருவாறு நாம் அறிந்து கொள்ளலாம். படிப்போர்க்கு உதவியாக, அவ்வேந்தர்தம் வரலாறுகள் கீழே தரப்படுகின்றன.

— செங்குட்டுவன் தந்தை வழி —

உதியஞ் சேரல்

- இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன் —நற்சோணை (சோழன் மணக்கிள்ளி மகள்)
  - செங்குட்டுவன்—இளங்கோவேண்மாள்
    - குட்டுவஞ்சேரல்
- பல்யானைச் செல்கெழு குட்டுவன்

செங்குட்டுவன் தாய் வழி

சோழன் மணக்கிள்ளி

- நற்சோணை (மகள்) — இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்
  - செங்குட்டுவன்
    - குட்டுவஞ் சேரல்
  - இளங்கோவடிகள்

பிற சேரரின் தாய்வழி

வேளாவிக் கோமான்

- முதல் மகன் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன்
  - நார்முடிச் சேரல்
  - ஆடுகோட்பாட்டுச் சேரலாதன்
- இரண்டாம் மகன் செல்வக் கடுங்கோ வாழியாதன்
  - பெருஞ்சேரலிரும்பொறை அல்லது குட்டுவன் இரும்பொறை —வேண்மாள் அந்துவஞ் செள்ளை
    - இளஞ்சேர லிரும்பொறை

செங்குட்டுவன் காலத்தை மேற்கூறிய வழிகளிலிருந்து நாம் ஒருவாறு அறுதியிடல் கூடும். பெருஞ்சேரலாதன் வெண்ணிப் போரிற் கரிகாலனால் தோல்வியுற்று மார்பிலே புண்ணேற்றான் என்பதை நாமறிவோம். இத்தோல்வி அவனுக்குப் பேரிழிவைத் தந்தது. அதனால் அச்சேரன் அரசு துறந்து வடக்கிருந்தான். இச்செய்தி அகநானூற்றிலும் வருகின்றது. இதனால் கரிகாலனும் இமயவரம்பனும் சமகாலத்திருந்த முடிவேந்தர் என்பது முடிந்த முடிபாகும். செங்குட்டுவற்குக் கரிகாலன் சமகாலத்தனாய் இருந்திருத்தல் முடியாது. அவ்விருவரும் சமகாலத்தவர் என்னுஞ் செய்திக்குச் சான்றுகள் மிகச் சில. இமயவரம்பன் கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் இறந்திருக்க வேண்டும். இமயவரம்பனும் செங்குட்டுவனும் முறையே ஐம்பத்தெட்டாண்டுகளும் ஐம்பது ஆண்டுகளும் அரசுபுரிந்தனர் என்பதைப் பதிற்றுப் பத்தினால் நாம் அறிகின்றோம். இமயவரம்பற்கு இருதேவியரும் நான்கு பிள்ளைகளும் இருந்தனர். அப்புதல்வருள் ஒருவனான செங்குட்டுவனே இமயவரம்பற்குப் பின் அரசு கட்டிலேறியவன். செங்குட்டுவனின் உடன் பிறந்தவரான இளங்கோவடிகள் துறவு பூண்டார். எஞ்சிய இருபுதல்வருள் ஒருவனான நார்முடிச் சேரலாதன் நன்றாக்குன்றத்தின் அருகில் உள்ள கொங்கு நாட்டு வடபகுதியை ஆண்டுவந்தான் எனத் தெரிகின்றது. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் குட்டநாட்டுக்கு அரசனாயினன். இவ்விரு அரசிளங்குமரரும் வஞ்சியைத் தலைநகராக்கொண்ட சேரன் செங்குட்டுவன் ஆணைவழி ஆட்சி புரிந்தனர்.

சிலப்பதிகாரகாலத்தை அறுதியிடவேண்டுமாயின், சேரர் தலைநகருள் பத்தினிக்கடவுட்குக் கோயில் எடுக்கக் கால்கோள் கொண்ட கி. பி. 172 அல்லது 173-ஆம் ஆண்டிலிருந்து தொடங்கவேண்டும். இலங்கைவேந்தன் கயவாகு, பத்தினிக் கடவுள் பிரதிட்டிக்கப்பட்ட காலத்து, வஞ்சியில் இருந்தானென்பது சிலப்பதிகாரங் கூறுஞ்செய்தி. அக்கயவாகு கி. பி. 171-ஆம் ஆண்டில் பட்டத்திற்குவந்தவன். அவ்வேந்தன் அரசுகட்டில் ஏறியபின்னரே இலங்கைவிட்டுத் தமிழ்நாடு வந்திருக்கவேண்டும்.

சிலப்பதிகாரப் பதிப்பாசிரியர் பதினொரு கையெழுத்துப் பிரதிகளோடு மூலத்தை ஒப்பிட்டுப் பார்த்தவர்; பதினான்கு உரைப்பிரதிகளை உடன்வைத்து ஆய்ந்தவர். அவர்தம் கல்வியும் நுண்புலமும், நடுவுநிலைமையும், 'இதுவன்று, பாடம் இதுவே' எனத்துணியும் நேர்மையும் அறிஞர்தம் மதிப்பினுக்குரியன வாகும். அப்பெரியார் கயவாகு என்னும் பாடமே திருந்திய பாடமெனக் கைக்கொண்டுள்ளார். கொண்டதுமன்றி, ஆயிரம் ஆண்டுகள் இடையீடுபட்டவராக மகாவமிசத்தில் கூறியுள்ள இரண்டு கயவாகுக்களுள் முதற் கயவாகுவே வரந்தரு காதையிற் கூறிய இலங்கை வேந்தன் எனவும், அவ்வேந்தனே செங்குட்டுவனுற் பத்தினிக் கடவுட்காக எடுக்கப்பெற்ற விழ விற் கலந்துகொண்டவன் எனவும் ஐயமற எடுத்துக்காட்டி யுள்ளார்.

வங்க நாசிக திஸ்ஸர் இறந்தபின்னர், அவர்தம் மகன் கஜ பாஹுகமணி இருபத்திரண்டு ஆண்டுகள் அரசுபுரிந்தான் என்று மகாவமிசங்கூறும். அவன் பல விஹாரங்களையும் தூபங்களையும் கட்டியவன். மஹாவமிசத்தை மொழி பெயர்த்த டாக்டர், வில்ஹெம்கெய்கர் என்னும் அறிஞர் அந்நூலின் முகவுரையில் இலங்கை வேந்தர் அடுத்தடுத் தாண்ட காலங்களையும் அவர்தம் பெயர்களையும் புத்தராண் டிலும் கிறித்தவ ஆண்டிலும் குறித்துள்ளார். அவர் காட்டிய இலங்கைத் தொல்வேந்தருள் கி. பி. 171-173-ஆம் ஆண்டு வரையில் ஆட்சிபுரிந்த நாற்பத்தாறும் வேந்தன் என்று இவனைக் குறித்துள்ளார். இவனே சிலப்பதிகாரம் கூறிய கயவாகு எனப் பெயரிய இலங்கை வேந்தன்.

கயவாகு போன்ற புத்தவேந்தனொருவன் பத்தினிக் கடவுள் வணக்கத்தை எங்ஙனம் மேற்கொண்டானென்பது ஒரு சுவைமிகு கேள்விதான். இக்கேள்விக்கு விடை பெரிதும் எளிது. அக்காலத்து வேந்தரால் தழுவப் பெற்ற மதங்கள் மிகப்பரந்த நோக்குடையன; குறுகியவையல்ல. மக்கட்குக் கடவுள் ஒருவர்தாம். அவர்தமை எந்த உருவத்தினும் மனத் தானினைக்கலாம்; வாயார வாழ்த்தலாம்; என்பதே யாகும்.

அக்காலத்தில் நாட்டில் அடிப்பட்ட மதங்கட்கும், வேறு பட்ட கொள்கையினரான ஜைன பௌத்தர்க்கும், மதச் சார்பிலே இடைத்தெரிவுகள் மிகச்சிலவாம். அக்காரணத்தால்

கயவாகு வேந்தன் பத்தினிக்கடவுட்கு ஒரு கோயில் எடுப்பித்ததில் வியப்பொன்று மில்லை. இலங்கையில் பலரும் தொழுங் கடவுள் பலவேனும், பத்தினிக் கடவுளே மகளிர் கற்பினுக்கு எடுத்துக் காட்டாய் முன்னணியில் நிற்கின்ற நல்லுருவம். நிக்காவேவா மடத்துக்குகையில் மரத்தானியன்ற கோவலன் கண்ணகியரின் இரண்டு படிமங்கள் கி. பி. 11-ஆம் நூற்றாண்டில் கண்டெடுக்கப்பட்டன. அந்நாட்டில் உள்ளபத்தினிக் கடவுளரின் படிமங்களுள் வெண்கலத்தானியன்றதும், நான்கடி ஒன்றரை அங்குலம் உயர முள்ளதும், பிரிட்டிஷ் பொருட்காட்சி சாலைக்கு 1830-ஆம் ஆண்டில் நன்கொடையாக அளிக்கப்பட்டதுமான படிமமே சிறந்தது; நல்லது; அழகிது; கலையே உருவெடுத்து நின்றாலனையது.

சிலப்பதிகாரங் கூறிய கயவாகு இரண்டாங்கயவாகு அல்லன் என்றற்குச் சான்றுகள் பல. இவ்விரண்டாங் கயவாகு முதற் கயவாகு வாழ்ந்திருந்த காலத்திற்குப் பத்து நூற்றாண்டுகள் பிற்பட்டவன். இதனால் சேரன் செங்குட்டுவனுக்குச் சம காலத்தவன் முதலாங் கயவாகுவே என்பது தெளியலாம். சிலப்பதிகார காலம் நன்கு ஆராயப் பெற்று முடிவு கூறப்பட்டிருக்கின்றது. அதனைப்பற்றி இனியோர் ஆராய்ச்சி வேண்டா. அதன் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி யென்பது முடிந்த முடிபாகும்.

கி. பி. 172-ஆம் ஆண்டில் சேரன்செங்குட்டுவற்கு வயது ஐம்பத்திரண்டு. அவன் தனது நாற்பத்தேழாம் ஆண்டில் வடநாடு சென்றிருத்தல் வேண்டும். அங்கே அவன் கழித்த ஆண்டுகள் ஒருமூன்று. செங்குட்டுவன் ஐம்பது ஆண்டுகள் அரசு புரிந்தானெனப் பதிற்றுப்பத்துக்கூறும். ஆதலின் அவனது இருபதாம் ஆண்டில் அரசுகட்டிலேறினான் என்பதும் கி. பி. 192-ஆண்டில் வானவர்க்கு விருந்தாயினான் என்பதும் நாம் மாறுபாடின்றி மனத்திற்கொள்ள வேண்டிய செய்திகள். அவனது வடநாட்டியாத்திரை கி. பி. 168-ஆம் ஆண்டினில் நிகழ்ந்திருக்கலாமென ஒருவாற்றாற் கூறலாம். ஆனால் இம் முடிபு இன்னும் ஆய்தற்குரியது.

வடநாட்டுயாத்திரையிற் செங்குட்டுவற்கு ஒருமூன்றுயாண்டுகள் கழிந்தனவென்பது முன்னர்க்கூறப்பட்டது. அந்நாட்டில் இருந்தபோது ஒருநாள் மாடலமறையோன் வேந்தர்

பெருமானைக் காணவிழைந்தான். அம் மறையோனும் மன்னனும் அளவளாவுங்கால், அர்சுன் பெருங்கணி ஆண்டுப்போந்து, "மன்னர் பெரும! வஞ்சிநீங்கி இன்றோடு முப்பத்திரண்டு திங்கள்கழிந்தன" என்று அறிவுறுத்தான். அதன்மேலுஞ் செங்குட்டுவற்கு இரண்டாண்டுகள் கழிந்தன. எப்படியாயினும் இம்முடிபுகட்குப் பிறசான்றுகள் வேண்டா. இமயவரம்பன் கி. பி. 80-140-ஆம் ஆண்டுவரையில் அரசுபுரிந்தான் என்பதும், செங்குட்டுவன் கி. பி. 140-192-ஆம் ஆண்டுவரையில் செங்கோலோச்சினன் என்பதும் நாம் அறியவேண்டிய முடிபுகளாகும்.

## சேரன் செங்குட்டுவன் ஆற்றிய அருஞ்செயல்கள்

பதிற்றுப்பத்துள் ஐந்தாம்பத்துச் சேரன் செங்குட்டுவனைப்பற்றிப் பரணர் பாடியது. செங்குட்டுவன் சேரவேந்தருள் இணையிலாப் பெருமையுடையவன். ஐந்தாம் பத்தின் பதிகத்திலிருந்து அவன் செய்த அருஞ்செயல்கள் நன்கு விளங்குகின்றன. அச்செயல்களனைத்தும் அவன் பெருமையினை நன்கு விளக்கும்.

1. பத்தினிக்கடவுட்குப் படிமஞ்சமைக்கக் கல்வேண்டி இமயஞ் சென்ற காலை இடைப்பட்ட வடவேந்தரை வென்றது.

2. இடும்பிற்கானத்துள்ள ஆனிரை கவர்ந்தது.

3. வேளிர்தலைவனான நன்னன் வேண்மானை வென்று அவன் தலைநகரான வியலூரைத் தன்னடிப்படுத்தது.

4. கிழறுக்கமுயன்ற ஒன்பது சோழரை உறந்தைக்குத் தெற்கிலுள்ள நேரிவாயிலில் வென்றது.

5. ஏழு வேந்தர்களை வென்று, வென்றவெற்றிக்கும் வீரத்திற்கும் அறிகுறியாக, அவர்தம் ஏழுமாலைகளைத் தன் மார்பின்மாலையாக அணிந்தது.

6. கங்கர்களெனவும் 'கொங்குதேசத்து அரசர்கள்' எனவும் வழங்கப்பெறும் கொங்கர்களை வென்றது (இப்போரில் கொடுகூர் வறுந்தரை யாயிற்றெனப் பதிற்றுப்பத்துக் கூறும்.)

7. பழையனது வேம்பினையழித்து வென்றது. கடற்போர்களில் வெற்றியன்றிப் பிறிதொன்றையுங்காணாத காரணத்தால், கடல்பிறக்கோட்டிய வேல்கெழுகுட்டுவன் எனும் பட்டப் பெயர் இவற்குப் பெரிதும் பொருந்துவதாயிற்று. இச்செய்தியைச் சிலப்பதிகாரம் பலவிடங்களிற்கூறும்.

மேற்கூறிய முதல் ஆறு செய்திகள் மாடல மறையோனாற் சிலப்பதிகாரத்துக் கூறப்படுகின்றன. பரணர் அச்செய்திகளுள் ஓரைந்தினையே கூறுவர். பத்தினிக்கடவுட்காகக் கல்கொள்ளச் சேரன் செங்குட்டுவன் இமயஞ்சென்றதும், நேரிவாயில் வெற்றியும் பரணராற் கூறப்பெறவில்லை. இச்செய்திகள் நிகழ்ந்த காலத்தை முறைப்படி வைத்து ஆராய்ந்தால், இறுதிச் செய்திகள் இரண்டும் செங்குட்டுவன் ஆட்சிக்காலமுடிவில் நிகழ்ந்திருக்கவேண்டு மென்பது போதரும். செங்குட்டுவனின் இமயச்செலவே இறுதிச்செயல். பரணர் ஐந்தாம் பத்தைப் பாடிய காலத்துச் செங்குட்டுவன் செய்யாத செயல்களைத் தம் செய்யுளில் எங்ஙனம் கூறமுடியும்? பாடிமுடித்தபின்னர் அவர் சொல்லாமல் விடுத்த நிகழ்ச்சிகள் நிகழ்ந்திருத்தல் வேண்டும்.

## செங்குட்டுவனின் ஒழுக்கம்

செங்குட்டுவன் அஞ்சாஆண்மையும் ஆற்றலுமுடையவன். இமயம்வரைக்கும் படையெடுத்துச் சென்று தன் தந்தையைப் போலவே 'இமயவரம்பன்' என்னும் புகழ்மொழிக் கிலக்கானன். தந்தை இமயம்வரையிற் படையெடுத்துச் சென்றதால் 'இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன்' என்னும் பெயரினைப் பெற்றானென்பது நாமறிந்த செய்தி. இவ் வெற்றிகளிலிருந்து செங்குட்டுவனைத் தென்னாட்டுள் ஒரு பெரிய சக்கிரவர்த்தியெனலாம்.

பிறரிடத்தில்லாத நற்பண்புகள் செங்குட்டுவனிடத்திருந்தன வென்பது உண்மையே யெனினும் சில தீய பண்புகளும் அவனிடத்திருந்தனவாகச் சிலர் கூறுவர். பழையனது வேம்பினைச் செங்குட்டுவன் தடிந்த காலத்து அவன்றன் மகளிர் தலைமயிரான் முறுக்கிய கயிற்றானே அம்மரத்தினை இழுக்கச்

செய்தனன் என்பது உளம் பொருச் செய்தியாயினும், கவிகள் உயர்வு நவிற்சியாற் படைக்கும் படைப்புக்களைக் கருதுவோர் செங்குட்டுவனிடத்துத் தீமை காணார். பத்தினிக்கடவுளைப் பிரதிட்டிக்கக் கொண்டு வந்த இமயக்கல்லை வட நாட்டு வேந் தர்தம் முடித்தலை நெரிய ஏற்றிக் கொணர்ந்தனன் என்னும் செய்தியில் ஒருண்மை தெரியலாம். தமிழ் நாட்டு முடி மன்னரை அவ்வடவர் இகழ்ந்தாரென்பதற்கும், தனக்குத் தோற்ற பகைவரைப் பிணித்துக் கொணர்தற்குமாக வன்றோ செங்குட்டுவன் இச்செயல்களைச் செய்தான்? இவற்றால் தீங்கு செய்த பகைவரிடத்து இரக்கங் காட்டாமல் இருந்தான் என் பதே போதரும். இந்நிகழ்ச்சிகள் கௌடில்யர் தம் அருத்த சாத்திரத்துச் சிறக்கக் கூறியுள்ள அவுணத் தன்மைகளின் விளைவுகளே யன்றி வேறல்ல.

மேற்கூறிய நிகழ்ச்சிகள் நீங்கலாகச் சேரன் செங்குட்டு வன் கடவுட் கொள்கையுடையனும்,தான் கொண்ட மதச்சார் புடையனும் இருந்தான் என நாம் அறிகின்றோம். சோதிட, வான நூல்களில் உறுதியான நம்பிக்கை வைத்திருந்தான். நல்ல முழுத்தம் பார்த்து வடநாடு செல்ல எழுந்தமையும், படை யுடன் புறப்படுமுன் அரியையும், அரனையும் வணங்கினமை யும் மேற்கூறிவற்றுக்குத்தக்க சான்றுகளாகும். இக்காலத்துச் சிலர் கொள்கையின்படி இவற்றினை மூட நம்பிக்கை யென்றும் கூறிவிடலாம்.

செங்குட்டுவன் கலைகளைப் போற்றிவளர்த்தான். ஓய்வு நேரத்தை ஆடல்பாடல்களைக் காண்டலிலும் கேட்டலிலும் போக்கினான். அவனோடு வடநாடு சென்ற கூத்தர் அளப்பிலர். சத்துருக்னன்! படையொடு கூத்தரும் நடிகரும் அளப்பிலர் சென்றனரென இராமாயணங் கூறுவதனால் தொன்று தொட்டு வந்த வழக்குக்களுள் இதுவுமொன்றென நாம் அறியலாம்.

புலவர்க்குப் பொன்னையும் மணியையும் அள்ளிக் கொடுத் தான். மாடலமறையோனும் புலவர் பரணரும் இவனிட மிருந்து அரும்பெரும் பரிசில் பெற்றவர். பத்தினிக்கடவுட்குப் படிமஞ்சமைக்க இமயக்கல்லே சிறந்ததென எண்ணி ஆங் குச் சென்று கற்கொண்டு மீண்டமையின் அவன்தன் முற்றிய கலையறிவு இனிதுவிளங்கும். அரசமரபில் வந்த செங்குட்டுவன்

பத்தினிக் கடவுட்குக் கோயில் எடுப்பித்துப் படிமப் பிரதிட்டை செய்தபின்னர் வேதவேள்விகள் பலவற்றைவேட்பித்தான். இக்காலந்தொட்டு அவன் ஆட்சியின் இறுதிகாறும் நாட்டில் வாழ்க்கையானது எளிதாயும் அமைதியாயும் இருந்தமை குறிப்பிடத்தக்கதொன்று. அறத்தை அடிப்படையாக் கொண்டு ஆட்சிபுரிந்தது மன்றி அறச்செயல்கள் பலவற்றை விரும்பியாற்றினன்.

செங்குட்டுவன் வீரருள் வீரன். முன்னின்று போர்புரியும் ஆற்றல் வாய்ந்தவன். அவன் படைவலிமையையும் அஞ்சா ஆற்றலையும் அவன் காலத்திருந்த சோழ பாண்டியரும் அவன் வழிநின்ற ஏனைச்சிற்றரசரும் பிறரும் நன்கறிந்திருந்தனர். உறை நீத்த வாளுடனும், உலம் பொருதோளுடனும், கங்கை வரைக்குஞ் சென்று, தன் வீரத்தை நிறுவி, இந்திய நாடு முழுவதையும் தன்னடிப்படுத்தினன். பிரதாபருத்திரனின் அமைச்சருள் ஒருவர் போர்முறைகளைப் பற்றித் தாமெழுதிய 'ஹரிஹர சதுரங்கம்' என்னும் நூலுள், 'கவந்தமாடல் அல்லது குறைத்தலையாடல்' என்பது பேயாடலெனவும், ஆயிரம் வீரர்கள் போர்க்களத்துப் பட்ட ஞான்றுதல், ஒருவீரன் தானே தனிநின்று ஆயிரம் பரிகளைக் கொன்ற ஞான்றுதல், நிகழுமெனவும் குறித்துள்ளார். செங்குட்டுவன்போர்க்களத்தில் கவந்தங்கள் மகிழ்ச்சியால் ஆடித், தமக்கும் தம்மைச் சார்ந்தார்க்கும் நல்லுணவீந்த செங்குட்டுவனை வாயார வாழ்த்திய செயலிலிருந்து அவனை ஒரு சூரனாகவும் வீரனாகவும் வைத்தெண்ணத் தடையில்லை. உடலாற்றலும் உளவாற்றலும் மிக்கு, அரசியல் அறிவு நிறைந்து விளங்கிய செங்குட்டுவன், இங்ஙனம் பரந்து விரிந்த நிலப்பரப்பை ஐம்பது ஆண்டுகள் செவ்விதின் ஆண்டான் என்பதில் வியப்பொன்றுமில்லை. அவன் பெருமைக்கு மேற் கூறிய நிகழ்ச்சிகளே சாலும். பழந்தமிழ் வேந்தருள் செங்குட்டுவன் இறவாத புகழுடையனாய் விளங்குகின்றான் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

## சிலப்பதிகாரத்திற் சோழன் கரிகாலன்

செங்குட்டுவனையடுத்து இளங்கோவடிகள் கூறியுள்ள பெருவேந்தன் சோழன் கரிகாலனாவான். உருவப்பஃறேர் இளஞ்சேட்சென்னியின் மகனே கரிகாலன்என்று பெரும்பாணாற்றுப்படை கூறும். அவன் இளமைப்பருவத்திலேயே அரசு

கட்டிலேறியவன்; வெண்ணிப்போரில் இமயவரம்பனைப் புண்படச்செய்து வென்றவன். அரசியலே உருவெடுத்தனையவன். காவிரிக்குக் கரைகள்கட்டி, நீர்ப்பாசன வசதிகளைச்செப்பஞ் செய்து, பயிர்த்தொழிலை ஓங்கச்செய்தானென 'லெய்டன் சாசனம்'கூறும். ஆயிரக்கணக்கினரான இலங்கைப்பணியாளர் கரைகட்டுந் தொழிலில் இவனால் நியமிக்கப்பெற்றனர்.

சிலப்பதிகாரம் ஒருமூன்றிடங்களில் சோழன் கரிகாலனைப் பற்றிக் குறித்துச்செல்கின்றது. அக்குறிப்புக்களுள் முதற் செய்தி கரிகாலன் படைவலிமையைப் பற்றியது. அவ்விடத்து அடிகள் அவனைத் திருமாவளவன் என்பர். பட்டினப்பாலை பாடிப் பதினாறு நூறாயிரம்பொன்பெற்ற கடியலூர் உருத்திரங்கண்ணனாரும் சோழன் கரிகாலனைத் திருமாவளவன் என்பர். இவ்விரு அகச்சான்றுகளும் அரசனும் புலவரும் சமகாலத்தவர் என்னும் உண்மையினைத் தெரிப்பதோடு கரிகாலன் காலத்தை அறுதியிட நல்ல சான்றுகளாகவும் விளங்குகின்றன. கரிகாலனைப்பற்றிய இரண்டாவதுகுறிப்பு அவனைக் கரிகால்வளவன் எனச்சொல்லும். புறநானூற்று அறுபத்தாறுவது செய்யுளும் அங்ஙனமே குறிக்கும். மூன்றாவது குறிப்பில் கரிகாலன்மகள் வஞ்சிக்கோனான தன்கணவனைக் கடல் வெள்ளம் கொண்டு போகத் தானும் அவ்வெள்ளத்துளாழ்ந்து தன்கற்பின் மிகுதியால் கணவனை மீட்டுவந்தாள். இந்நிகழ்ச்சியைப்பற்றிய விளக்கமான குறிப்புக்கள் இல்லை. கரிகாலன் மகள்பெயரும் அவள்தன் கணவன்பெயரும் விளங்கவில்லை.

இமயஞ்சென்று, எதிர்ந்த வேந்தரை வென்று தன்வெற்றிக் கறிகுறியாக இமயக்கல்லில் புலியின் உருவத்தைப் பொறித்தான் என்பது அவன்றன் படைவலிமையை எடுத்துக்காட்டுவதாகும். தென்னிந்தியாவில் வடவேந்தர் சிறிது சிறிதாக வர முயன்றமையே இப்படையெழுச்சிக்கும் காரணமாயிருந்திருக்கலாம். செங்குட்டுவன் அவந்தி வேந்தற்கும் வச்சிரநாட்டரசற்கும் மகதமன்னர்க்கும் நண்பனாயிருந்தனனெனச் சிலப்பதிகாரங்கூறும். நந்தர்களும், மௌரியர்களும், ஆட்சிபுரிந்த போது அத்தகைய படையெழுச்சிகள் நிகழ்ந்தனவாகக் கூறும் இலக்கியச்சான்றுகளும் கல்வெட்டுச்சான்றுகளும் இருக்கின்றன. தென்னாட்டு முடிவேந்தர்களான கரிகாற்சோழனும், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும், வடதிசை நோக்கிச் சென்று பெருவெற்றியை அடைந்த பின்னரே வடநாட்டுப்

படையெழுச்சி மெள்ளமெள்ள அடங்குவதாயிற்று. சமுத்திர குப்தன் தென்னாட்டிற் படையெடுத்து வந்தானென்பதை நாம் அறிவோம். சிலப்பதிகாரஉரைகள் கரிகாலனைச் செங் குட்டுவற்குச் சமகாலத்தவன் எனக்கூறும் இக்கூற்றுக்கள் சிலப்பதிகார மூலத்தொடு மாறுபட்டனவாய்க் காண்கின்றன. புறநானூறு, அகநானூறு முதலானதொகை நூல்கள், கரிகாலன் ஒரு பழைய சோழவேந்தன் எனக்கூறும். அவனே சிலப்பதிகாரத்திற் கூறப்பெற்ற கரிகாலன் என்பது நன்கு விளங்கும்.

கரிகாலன் இமயஞ் சென்றதையும், காவிரிப்புதுநீர் ஆடியதையும், 'அந்நாள்' என்னும் சொல்லாலே முன்னிகழ்ந்த நிகழ்ச்சிகளாக இளங்கோவடிகள் குறிப்பர். இச்செய்தியால் சிலப்பதிகாரம் தோன்றிய காலத்திற்கு முன்னரே கரிகாலன் இருந்தமைதெரியலாம். ஆனால், காப்பியம் தோன்றிய காலத்திற்கும், கரிகாலன் இருந்தகாலத்திற்கும் இடையீடு மிகச் சிறிது. இக்கரிகாலன் யாவன்? அவற்குச்சேரன் செங்குட்டுவனோடு என்னதொடர்பு? என்னும் கேள்விகளும் எழுகின்றன. சிலப்பதிகாரப்பதிகச் செய்யுள்ளில் செங்குட்டுவன்தாய் சோழன்மகள் எனச்சொல்லப்பட்டுளது. அவள்பெயர் நற்சோணை. பதிற்றுப்பத்து நாலாம்பத்தில் ஒரு சோழன்மணக்கிள்ளி குறிக்கப்பெறுகின்றான். அவன் மகளான நற்சோணையென்பவளே செங்குட்டுவன் தாயாதல்வேண்டும். இம்மணக்கிள்ளி, கரிகாலன் மகனாயிருந்திருத்தல் வேண்டும். மேற்கூறிய உறவினால் கரிகாலன் தாய்வழிமுற்பாட்டனாக இருத்தல் வேண்டு மேயன்றிச் சிலர் கூறுவதுபோல் அவன் பாட்டனாகச் சொல்வதற்கில்லை. பின்கூறிய உறவை ஒப்பினால் மணக்கிள்ளி அம்பலமாகி வமிசாவளியில் சிறிதுகூட இடம் பெறாமற்போவான். ஆதலால், கரிகாலன் செங்குட்டுவனுக்கு ஒருதலைமுறை முன்னேயே வாழ்ந்திருந்தான் எனக்கொள்வது பொருந்திய கொள்கை. அவனுக்குச் சமகாலத்தன் எனல் பொருந்தாது.

சிலப்பதிகாரத்திலும், தொகைநூல்களிலும், குறிக்கப்பெற்ற கரிகாலனுக்கும், திரிலோசனபல்லவனுக்கும் கி. பி. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்த சாளுக்கிய விஜயாதித்யனுக்கும் சமகாலத்தவனாயிருந்த கரிகாலனுக்கும், எத்தகைய தொடர்புமில்லையென்பது ஈண்டு அறியத்தக்கது. இத் திரிலோசனன்

யாவனென்றும், எங்கு வாழ்ந்தவனென்றும், இன்னும் முடிவு செய்யப் பெறவில்லை. இவற்றை அறுதியிடத் தக்கசான்று களும் இல்லை. சான்றுகள் கிடைத்தாலும் பிற்பட்ட நூற்றுண்டுகளிலே பிறிதொரு கரிகாலன் புகார் நகரிலே சீரும் சிறப்புமாக வாழ்ந்து வந்தானென்று கொள்வதில் இழுக்கு என்? அகநானூற்றிற்கண்ட குறிப்புப் பயன்படவேண்டு மாயின், இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனும், சோழன் கரிகாலனும் சமகாலத்தவர் எனக்கொள்ளல் வேண்டும். கரிகாலனது வாழ்க்கையைத் திட்டமாக வரையறைப்படுத்தல் முடியாதாயினும், கி.பி. இரண்டாம் நூற்றுண்டின் தொடக்கத்தில் வாழ்ந்தானுதல் வேண்டுமென்று கொள்ளுதல் கூடும். கி. பி. 140-ஆம் ஆண்டில் சேரன் செங்குட்டுவன் அரசுகட்டில் ஏறியதும் கரிகாலன் இறந்துபட்டான் என்பதைத் துணிந்து கொள்ள வேண்டும். அக்கரிகாலற்குப் பின்னர்ப்பட்டத்திற்கு வந்தவன் அவன்மகன் மணக்கிள்ளியேயாவன். அரசுகட்டிற்குரியார் எவர் என்னும் பொருள்பற்றி ஓர் ஆராய்ச்சி சோழர்க்குள் ஏற்பட்டதாகவும் சேரன் செங்குட்டுவன் இவ்வாராய்ச்சிக்கண் தலைப்பட்டுத் தீர்த்து வைத்தானெனவும், சிலப்பதிகாரங் கூறுவதை மணக்கிள்ளியின் மகன் இறந்தபின்னர் நிகழ்ந்ததாகக் கொள்ளுதல் பொருந்துவதன்று. கரிகாலன் ஆட்சிக்காலத்திற்கும் மணக்கிள்ளியின் ஆட்சிக் காலத்திற்கும் இடையீடு மிகப் பெரிதெனக் கொள்வதற்கில்லை. பெருங்கிள்ளி அல்லது பெருநற்கிள்ளி மணக்கிள்ளிக்குப்பின் பட்டத்திற்கு வந்தவனென உரைபெறு கட்டுரையால் நாம் அறிகின்றேம். ஒருகால் பத்தினிக்கடவுள் பிரதிட்டிக்கப்பட்டபோது உறையூரை ஆண்டிருந்த நெடுங்கிள்ளியாக அவன் இருப்பினு மிருக்கலாம். மேற் காட்டிய சான்றுகளால் கி. பி. முதல் நூற்றுண்டிலும் இரண்டாம் நூற்றுண்டிலும் இருந்த பழஞ்சோழரின் வமிசாவளி கீழேதரப்படுகின்றது.



## வட இந்தியாவின் அரசியல் நிலை

கி. பி. முதல் மூன்று நூற்றுண்டுகளில் வட நாட்டு அரசியல் நிலை எங்ஙனம் இருந்ததெனச் சிலப்பதிகாரங் கூறுகின்றது. வட இந்தியாவைப் பொறுத்தமட்டில் இப்பகுதி பெரிதும் இருள் நிறைந்ததாகும். கி. பி. 150–350–ஆம் ஆண்டின் இந்தியர் சரிதத்தை அண்மையில் ஆராய்ந் தெழுதிய டாக்டர். K. P. ஜயஸ்வால் என்னும் அறிஞர் தம் அறிவுச்சுடரை இவ்விருட் பகுதியிலே புகுத்திப் பெரிதும் விளக்கமுறச் செய்துள்ளார். குப்தர்கள் ஆட்சிக் காலத்தில் வட இந்தியா தன் பழம் பெருமையை மீளப்பெற்றுச் சிறப்படைந்தது. அப்பகுதி–இரண்டு நூற்றுண்டுகளின் அளவினதாயினும், செங்குட்டுவனைப் போரில் எதிர்ப்பதற்கு வலிமையும் படையுங்கொண்ட எவரும் இருந்ததாகத் தெரியவில்லை. அவரெல்லாம் தம்மடிப்பட்ட நிலப்பரப்பைப் பலகூறுகள் செய்து, ஒவ்வொரு கூற்றினுக்கும் தனித்தனித்தலைவனொருவனை நியமித்தனர். ஆயிரத்திற்கு மேலே யிருந்த இத் தலைவர்களைச் சேரன் செங்குட்டுவன் தன்னந்தனியனாய் எதிர்த்தான் என மொழிப. இவ்வாயிரம் என்னும் தொகை ஒருகால் உயர்வு நவிற்சியாயிருப்பினும், கணக்கில்லாத உரிமை பெற்ற தனி நாடுகள் செங்குட்டுவன் காலத்தே வட நாட்டில் இருந்தன வெனக் கொள்ளலாம். மேற்கூறிய தலைவர்கள் தனியரசு புரிந்தனர் என்பது வெளிப்படை. சிலப்பதிகாரம்–அவந்திவச்சிரம், மகதம், மாளவம், முதலிய நாடுகளை முதன்மையாகக் கூறும். பொன்னையும் மணியையும் அந் நாட்டரும்பொருள்களையும் முற்கூறிய முதல் மூன்று நாட்டின் அரசர்கள் கரிகாலற்குக் காணிக்கை கொடுத்து அவனடி பணிந்தனர். மாளவவேந்தன் சேரன் செங்குட்டுவற்கு நண்பனாயினன். அவருட்சிலர் இவ்வேந்தர் படையெடுத்து வருதலைக் கண்டு நறுமொறுப்புக் கொண்டனர். செங்குட்டுவனைப் போன்ற தென்னுட்டரசன் படையெடுத்து வருகின்றான் எனக் கேள்வியுற்ற வட நாட்டு முதன்மைச் சிற்றரசர்களுட் சிலரான உத்தரன் விசித்திரன், சிங்கன், தனுத்தரன், உருத்திரன், பயிரவன், சித்திரன், சுவேதன் என்பார் கனகவிசயர்கள் தலைமையில் ஒன்றாய்ச் சேர்ந்து கங்கையின் வடக்கே படையிறுத்திருந்த சேரன் செங்குட்டுவனோடு போர்புரியச் சென்றனர். இப்போர் நிகழ்ந்த இடமே குயிலாலுவம் என்பது.

தென்னுட்டு வெற்றி வேந்தர்க்கு அக் காலத்திய வடநாட்டு நிலை மிக்க எளிதாயிருந்தது. தெலுங்கர் நண்பராயினர். அடல் வேந்தன் கனிஷ்கனும் விண்புகுந்தான். சேரன் செங்குட்டுவன் படையை எதிர்த்து நிற்க அக்காலத்து வட நாட்டுக் குறு நில மன்னர்க்குப் போதிய ஆற்றல் இல்லை. வடவர் அனைவரும் இறுதியில் தோல்வி யுற்றனர். சிலர் உயிரிழந்தனர். பலர் போர்க்களத்தினின்றும் பல்வேறு வேடத்தராய் ஓடி உயிர்தப்பினர். எஞ்சிய முதற் குறுநிலமன்னரனைவரும் தென்னுட்டிற்குக் கொணரப் பட்டுச் சிறைக்கண் செறிக்கப் பெற்றனர்.

யவன நாட்டையும், மாளவ நாட்டையும் பற்றிச், சிலப்பதிகாரம் குறிக்கின்றது. பதிற்றுப்பத்தின் இரண்டாம் பத்தின் பதிகத்தில் இமயவரம்பன் யவனர் தலையில் நெய்பெய்து நாணுமாறு செய்தான் என்னுஞ் செய்தி காணப்படுகின்றது. சிலப்பதிகாரத்தைப் போலவே ஏனைத் தமிழ் நூல்களும் யவனரைப்பற்றிக் கூறுகின்றன. யவனர் அயல் நாட்டுவணிகர். நம் நாடுவந்த அவ் யவனருடன் பழந்தமிழர் வாணிகத்தாற் கலந்தினிதிருந்தனர். செங்குட்டுவன் காலத்தேதான் அவர் இந்தியாவிற் குடியேறி யிருத்தல் வேண்டும். அவர் குடியேறிய நாடு இன்ன பெயரினையுடைய தெனச் சிலப்பதிகாரம் கூற வில்லை. இந்நாடு ஒருகால் சிந்து நதியை அடுத்துள்ளதாயிருக்கலாம். அவ் யவனவாணிகர் வைரமணி விற்றுப் பெருஞ்செல்வராயினர். தம்மிடத்துள்ள வைரமணிகளையே அரசிறையாகவும் இறுத்தனர். இறுத்தது மன்றிச் செங்குட்டுவனைக் கும்பிட்டு நின்று அவனையே தமக்குப் பேரரசனுகவும் கொண்டனர்.

நூற்றுவர் கன்னர் செங்குட்டுவற்குத் துணைபுரிந்ததாகச் சிலப்பதிகாரங் கூறும். காலஞ்சென்ற அறிஞர் வி. கனக சபைப் பிள்ளை அவர்தமைச் 'சாதகர்ணி'யென்றனர். சிலப்பதிகாரமோ கங்கையாற்றினைச் சார்ந்து வதிந்த குழுவினர் என்னும் துணை புரிந்தது ஒருவனுமல்லன்; ஒரு கூட்டத்தரெனல் வேண்டும். அத்தொடர் சாதகர்ணியைக் குறித்தால் கி. பி. 163–170–ஆம் ஆண்டிலிருந்த சிவஸ்ரீ புலுமாயியா யிருத்தல் வேண்டும். ஒரு சாதகர்ணி வடநாட்டில் வல்லரசனுயிருந்தான் எனச் சொல்லப்படுவதனுல், அவன் யக்ஞஸ்ரீ சாதகர்ணியாகவோ, புலுமாயியாகவோ இருக்க இடமுண்டு. யக்ஞஸ்ரீ என்பானுக்குப்பின் பட்டத்திற்கு வந்தவன் விஜயன் என மச்ச

புராணங்கூறும். நூற்செய்தியை நாம் நம்பினல், இந்த விஜயனே தாலமியாசிரியர் குறித்துள்ள பாலகுமாரன் மகனுதல் வேண்டும். மேற்கூறிய வரலாறுகள் அனைத்தும் சேரன் செங்குட்டுவனது காலம் கி. பி. இரண்டாம் நூற்ருண்டின் இடைப் பகுதியே எனக் கொள்ளற்குத் துணை செய்கின்றன.

## தென்னுட்டு அரசியல் நிலை

மேற்குறித்த செய்திகளானே கிறித்தவ ஆண்டின் தொடக்கத்தில் தென்னுட்டு நிலை எங்ஙன மிருந்ததென ஒருவாறு தெரியலாம். சேர, சோழ, பாண்டியர்களே அக் காலத்தில் ஆற்றல் மிக்க முடிவேந்தர். தமிழ் மண்டலங்கள் மூன்றும் ஒன்றுக் கொன்று போர்புரிவதில் முனைந்து நின்றன. எவையேனும் இரண்டு நாடுகள் தம்முட்கூடிப் பிறிதொரு நாட்டினைத் தாக்குவது வழக்கம்.

## சேர ராஜ்யம்

சேர ராஜ்யம் பல நாடுகளைத் தன்னகத்துக் கொண்டது. அவர் நாடுகள், மலைநாடெனவும், கடல் மலைநாடெனவும் இரு வகைப்படும். தற்காலத்துச் சேலம், கோயம்புத்தூர் ஜில்லாக்கள் அடங்கிய நிலப்பகுதி கொங்கு நாடெனப் பெயர் பெறும். **இங்குத்தான் சேரர்தலை நகராய வஞ்சிமா நகர் இருக்கின்றது.** இந் நிலத்தேதான் கொல்லிமலையும் ஆனைமலைத் தொடரும் இருக்கின்றன. மலையாளம் எனப்படும் பகுதி கடல்மலை விரிவிய நிலப்பரப்பினைக் குறிக்கும். இப்பரப்பில் குட்ட நாடு, குடநாடு, பூழி நாடு என்பனமிகச் சிறந்தவைகளாம். ‘குட்டம்’ என்னும் சொல் பள்ளம் என்னும் பொருளைக் கொண்டது. மலையாளத்துள்ள கடற்கழிகள் மிக்க நாட்டினைக் குட்ட நாடென்பர். கொடுங்கோளூரிலிருந்து திருவனந்தபுரம் வரைக்கும் இதன் பகுதியெனலாம். பாலக்காட்டு வாயில் தொடங்கித் தென்கன்னடம், குடகு வரையிலுமுள்ள பகுதி குட நாடெனப்படும். பாலக்காட்டுக்கும் கொங்கு நாட்டுக்கு மிடைப் பட்ட பகுதி ‘பொறை நாடு’ எனப்படும்.

மேற்குத் திரைக்குத் தலைவனுதல் பற்றிச் சேர வேந்தன் ‘குடவர் கோமான்’ எனப்பெற்ருன். குட்டுவன், கொங்கன்,

பூழியன், பொறையன் முதலியன அவனுக்குப் பட்டப் பெயர்கள். இங்ஙனம் விரிந்து பரந்த சேரசாம்ராஜ்யம் உயர்ந்தோங்கியகுன்றுகள் பலவற்றை யிடையிட்டுக் கிடந்ததால், ஒரே அரசாங்கத்தால் ஆளமுடிய வில்லை. மேற்கூறிய பல நாடுகளும் பகுப்புக்களும் வஞ்சியைத் தலை நகராகக் கொண்ட சேர மன்னரால் நியமனம் பெற்ற தனித்தனியான பல பிரதி நிதிகளால் ஆளப்பட்டிருத்தல் வேண்டும். நமக்குக் கிடைக்குஞ் சான்றுகளால், இந் நாடுகள் எக்காலத்து, எவரால், யாரிடமிருந்து, வென்று கொள்ளப்பட்டனவெனக் கூறுதற்கில்லை. சிலப்பதிகாரம் தோன்றிய காலத்திலோ, அதன் முன்னரோ, சேர நாட்டின் பகுதிகளாக இந் நாடுகள் அமைந்து கிடந்தமை தெரியலாம். நாளடைவில் சேரசாம் ராஜ்யம் விரிவடைந்த போது 'இமயவரம்பன்' முதலான பட்டப் பெயர்கள் மன்னற்கு வந்திருத்தல் வேண்டும். உள் நாட்டிலும் வெளி நாட்டிலும் அமைந்துள்ள அரசாங்கங்களோடு சேர மன்னர்க்குத் தொடர்பிருந்தது. பகையரசர் வெல்லப்பட்டு, அவர் தம் நாடுகள் சேர நாட்டொடு இணைக்கப்பெற்றன. தோற்ற வேந்தர் சில விதிகளுக்குள்ளாகி, மீட்டும் அரசராயினர். இங்ஙனம் வரம்பில் ஆற்றலும், எல்லையில் செல்வமும் பெற்று, தமிழ் அரசுகளுக்குள் முதன்மை சான்று, புலவர்பாடும் புகழ்க்கிலக்காகி, சேர நன்னாடு விளங்கியது.

## சோழ ராஜ்யம்

சிலப்பதிகாரக்கதை தொடங்குங் காலத்துச் சோழராஜ்யத்திற்கு உறையூரும் புகாரும் தலைநகர்களாயிருந்தன. அப்போது உறையூரை ஆண்டு வந்த அரசன் மணக்கிள்ளியாகவோ, அல்லது அவன்மகன் நெடுங்கிள்ளியாகவோ இருத்தல் வேண்டும். புகாரை ஆண்டவன் மாவண்கிள்ளி அல்லது கிள்ளி வளவன் என மணிமேகலை கூறும், அவன் தம்பியே இளங்கிள்ளி அல்லது நலங்கிள்ளி என்பவன். உறையூர்க் கிள்ளிகட்கும் புகார்க்கிள்ளிகட்கும் அடிக்கடி உள்நாட்டுப் போர்கள் நடந்து வந்தன. அவற்றுள் முதன்மையானது காரியாற்றுப் போர். அப்போரிலேதான் இளங்கிள்ளி நெடுங்கிள்ளியாற் கொல்லப்பட்டான். இந் நெடுங்கிள்ளியே சேரன் செங்குட்டுவற்கு மாமன். அவனுக்குப் பெருங்கிள்ளி அல்லது பெருநற்கிள்ளி எனப் பெயரிய மகனொருவன் இருந்தான். பட்டத்

திற்குரியார் எவர் என்பதுபற்றி வழக்குத் தொடங்கிற்று. இவ்வழக்கிற் செங்குட்டுவன் குறுக்கிட வேண்டியிருந்தது. கீழறுத்தல் வல்ல ஒன்பான் சோழர்கள் கொண்ட குழுவொன்றனை வலிகுலைத்துத் தன்மாமன் மகன் பெருங்கிள்ளியை அரசு கட்டில் ஏற்றிவைத்தான். இவ்விரு தலைநகர்கள் நீங்கலாகச் சோழராஜ்யத்தில் ஒருவாறு உரிமை பெற்ற சில சிறு தனிநாடுகள், சிற்சில முதலிகளால் ஆளப்பட்டு வந்தன. ஆனால் அவரனைவரும் சோழராணைக் கடங்கியவர்கள்தாம். இங்ஙனம் சோழசாம்ராஜ்யம் கரிகாலன் காலத்தில் காஞ்சீபுரம் வரையில் பரவியிருந்த செய்தி நினைவிற்குரியது.

புகாரின் மேன்மை நெடுநாள் நிலைத்திருக்கவில்லை. புகார் விரைவில் அழியுமென்பது பற்றி இந்திரனிடமிருந்து முசுகுந்த சோழனாற் கொணரப்பெற்ற பூதசதுக்கத்துப் பூதமானது சேரனால் வஞ்சிக்குக் கொண்டு போகப்பட்டது. மணிமேகலை மணிபல்லவம் முதலான இடங்கட்குச் செல்லப் புகாரினின்றும் புறம்போந்தாள். இக்காலத்தேதான் கடல் பொங்கியெழுந்து புகார்நகரை அழித்திருத்தல் வேண்டும். இந்நிகழ்ச்சி கி. பி. 170-ஆம் ஆண்டில் நிகழ்ந்திருக்கலாம். கடலால் அழிவுண்டான விடத்தும், சிறப்பும் அழகும் குன்றிய காலத்தும் அந்நகர் சோழர் தலைநகராகவே இருந்தது. உறையூர் சிறிது சிறிதாகச் சீரும் சிறப்பும் பெற்றுச் சோழவேந்தர்க் குறைவிடமாகி முன்னணியில் நின்றது. வஞ்சியில் கண்ணகிக்குக் கோயில் எடுப்பித்தகாலையில் உறையூரையாண்ட பெருநற்கிள்ளியெனுஞ் சோழவேந்தன் தன்தலை நகரில் கண்ணகிக்குக் கோயிலொன்றைக் கட்டுவித்தான்.

## பாண்டிய ராஜ்யம்

அக்காலத்துப் பாண்டிய நாட்டின் தலைநகர் மதுரை. ஆரியப் படைதந்த நெடுஞ்செழியனே அதன் அரசன். அவன் காலத்தில் உள்நாட்டு வாணிகமும் அயல்நாட்டு வாணிகமும் அளவின்றி நாடோறும் பெருகிய வண்ணமாய் நடந்து வந்தது. அக்காலந்தான் கோவலகண்ணகியரின் மனத்தை மதுரைமாநகர் கவர்ந்திருத்தல் வேண்டும். ஆனால் அந்நகர் நெடுங்காலம் அச்சிறப்பில் நிலைக்கவில்லை. நெடுஞ்செழியன் கோல் கோடிக்

குற்றமிலாக் கோவலனைக் கொல்வித்ததன் பயனாக உயிர்விட்டான். பாண்டியர்க்குக் கடற்கரையை அடுத்த பிறிதொரு தலைநகர் கொற்கை. செங்குட்டுவன் வடநாட்டிலிருந்த போது வெற்றிவேற் செழியன் என்னும் பாண்டியன் கொற்கையை ஆண்டு கொண்டிருந்தானெனச் சிலப்பதிகாரத்து உரைபெறு கட்டுரை கூறும். இவ் விளஞ்செழியனே ஆரியப்படைதந்த நெடுஞ்செழியன் அல்லது நெடுஞ்செழியன் என்பவனுக்குத் தம்பியாதல் வேண்டும். இளைய வேந்தற்குக் கொற்கையே உறைப்பதி. நெடுஞ்செழியன் துஞ்சியபின் வெற்றிவேற் செழியன் கோமுடி சூடினன். அப்போது நாடெல்லாம் பொல்லா வற்கடம். எங்கும் பசியும் பிணியும் மிக்கன. அவ் வற்கடந் தீரும் பொருட்டுப் பத்தினிக்கடவுளின் கோயிலின் முன்னே ஓராயிரவர் பொற்கொல்லரை அவிப்பலியாக ஈந்தான். அங்ஙனம் ஈந்தவன் வெற்றி வேற் செழியன் என்று அறிய வருகின்றது. அவன் அரசுகட்டி லேறியபின் 'நன்மாறன்' எனப் பட்டமும் பெற்றான். இந்த நன்மாறற்குத் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மகனாதல் வேண்டும். அவனே உக்கிரப் பெருவழுதியின் பெயரன். இங்குக் கூறிய உக்கிரப்பெருவழுதியே கானப்பேர் தந்த உக்கிரப் பெருவழுதி யென்பவன். இவ்வழுதியே இராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளிக்கும், சேரமான் மாரிவெண் கோவுக்குஞ் சமகாலத்தவன்.

## எஞ்சிய ராஜ்யங்கள்

பொதுவாகச் சங்கத் தொகைநூல்களையும், சிறப்பாக அகநானூறு புறநானூறு என்பவை பற்றியும் ஆராயின், முதல் மூன்று பேரரசுகளைத் தவிர, இன்னும் எத்தனையோ சிறு சிறு ராஜ்யங்கள், பல சிற்றரசர்களால் ஆளப்பெற்று வந்தன வென்பதை நாம் அறியலாம். அவருள் கொங்கிளங் கோசர் அல்லது கோசர் என்பார் துளுநாட்டை ஆண்டாராதல் வேண்டும். அக்கோசரே அசோகர் கல்வெட்டுக்களிற் கண்ட சத்திய புத்ரர்கள். சேரராஜ்யத்தில் ஒரு கொங்கு நாடும் துளுநாடும், கங்கர் கட்டியர் நாடும் இருந்தனவாக இலக்கியங்கள் கூறும். செங்குட்டுவற்குக் கலிங்கர், கருநாடர், பங்களர், கங்கர், கட்டியர் என்போர் பகைவராயிருந்தனர்.

கலிங்க நாட்டு மக்கள் கலிங்கர். இவர்தம் வரலாறுகளை வேத இதிகாச காலத்திற்குப் பிற்பட்ட காலங்களிலிருந்து நன்கு அறியலாகும். நந்த-மௌரியர் காலத்தில் கலிங்கம் பேராற்றல் வாய்ந்த பெருநாடாயிருந்தது. கலிங்கநாட்டுச் சரிதத்தின் ஒருசிறு பகுதியைச் சிலப்பதிகாரங் கொண்டு நாம் அறியலாம். அந்நூலுள் வசு என்போனும் குமரன் என் போனும் ஆளப்பெற்ற சிங்கபுரம் கபிலபுரம் என்னும் இரு நகரங்கள் கூறப்படுகின்றன. இவ்வரசர் நெருங்கிய உறவினரேனும், ஒருவர்க் கொருவர் கலாய்த்த காரணத்தான் இடைவிடாத பல உள்நாட்டுப் போர்கள் நிகழ்ந்து வந்தன.

கருநாடர் என்போர் கன்னடமக்கள், வன்னெஞ்சும் தறு கண்மையும் உடையர். கருநாடென்பதற்கு உயர்நாடு என்பர். கடல் மட்டத்திற்குமேல் மிகஉயர்ந்த நாட்டின்கண் வதிந்து வந்தமையின் அவர்க்கு அப்பெயர் வந்திருக்கலாம். இப்போ துள்ள மைசூர் ராஜ்யமும் அத்தன்மையதே. கன்னடமக்களை ஒருவாறு ஒத்துள்ள மக்களை வடுகரெனச் சங்க இலக்கியங்கள் கூறும். வடநாட்டிலுள்ளா ராதலானும், தமிழகத்திற்கு வடக்கின்கண் இருந்தமையானும், அவர் அப்பெயர் பெற்றனர் போலும். பங்களர் எவரெனத் துணிந்து கூறற்கில்லையேனும் அவர் வங்கநாட்டினரின் வேறல்லர் என்று கூறலாம். கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் விஜயன் இந்நாட்டில் அடியிட்ட பின்னர், வங்கநாட்டிற்கும் இலங்கைக்கும் கடல் வாயிலான தொடர்பொன்றிருந்த தெனப் பௌத்த நூல்கள் கூறும். அவ் வழிதான் சோழமண்டலக் கரையூடிருந்திருத்தல் வேண்டு மென எண்ணுவது பெரிதும் பொருந்துவதேயாம். தலைக் காட்டைத் தலைநகராய்க் கொண்டு ஆண்டவரே கங்கர் எனப் படுவர். கட்டியரைப்பற்றிச் சங்கநூல்கள் பல்விடத்திற் கூறுகின்றன. அவர் வடநாட்டின் தென் பகுதியிற் குடியேறி வதிந்தாராகல் வேண்டும். மேற்கூறியோ ரெல்லாம் முழு உரிமை பெற்ற தனிச் சிறு நாடுகளை யாண்ட சிறு முதலிக ளாவர்.

### இலங்கை

இலங்கை வேந்தன் கயவாகு பத்தினிக் கடவுளைப் பிரதிட் டிக்குங்கால் உடனிருந்தான் எனச் சிலப்பதிகாரங் கூறுஞ் செய்தியால் பல உண்மைகள் வெளியாகின்றன. இச் செய்தி

இலங்கைக்கும் தமிழ் நாட்டுக்குமுள்ள பழைய தொடர்பினைக் காட்டுகின்றது. தமிழ்மன்னர் அடிக்கடி இலங்கையின் மீது படையெடுத்தன ரெனவும், அதனால் அவ்விலங்கை மக்கள் அவ்வேந்தர்மீது வெறுப்புக் கொண்டனரெனவும் மகாவமிசம் கூறும். இலங்கை முதியாளொருத்தி ஒருநாள் கயவாகு முன்னர்ப்போந்து, "சோழன் கரிகாலன் காவிரிக்குக் கரை கட்டப் பன்னீராயிரவரை வலிதில் அழைத்துச் சென்றான். அவ்விளையரோடு எனக் குறுதுணையான ஒரே மகனுஞ் சென்று விட்டான்" என்று குறை கூறினமையான் அச்செய்தி இனிது விளங்குவதாம். இஃதிங்ஙனமாக, சேரன் செங்குட்டுவனோடு இலங்கை மன்னர் உளம் பொருந்திய தொடர்பினைக் கொண்டிருந்தனர் என்பது பாராட்டுக் குரியதாகின்றது. செங்குட்டுவற்கு இலங்கைக் கயவாகு மன்னன் நண்பனாதலின் அவன் வட நாட்டுச் செலவின் பயனாய்ப் போந்த வெற்றி விழவின் கண் தானும் ஒருவனாய் உடனிருந்தான். 'தென்னிந்தியாவும் தொல்லிலங்கையும்' என்னும் பொருள் பற்றி ஆராய்வதனால் தென்னிந்திய சரிதத்தில் ஈடுபாடு மிகவுடையார்க்குக் கிட்டும் பயன்கள் தவப் பலவாம். இப்பொருள்பற்றி இடையீடின்றி ஆராய்ச்சி நிகழ்வதாகுக.

## ஆட்சியிற் சில சிறப்பியல்கள்

பல ஆண்டுகளாகக் குன்றா ஊக்கத்துடனும் சலியா உழைப்புடனும் இந்திய நாட்டுத் தொல் லரசாட்சியையும் மக்கட்டொகுதியையும் அறிஞர் ஆராய்ந்து வந்ததின் பயனாக, "தொல்வேந்த ரெல்லாரும் தம்மனம் போன போக்கில் அரசாளும் தனியரசுகள்" என நினைத்துவந்த பிழைபட்ட கருத்துக்கள் ஒழிந்து போயின. தொல்வேந்தர் தம்மனம் போனபடி தனியாட்சி புரிந்தோரல்லர்; அடிப்பட்ட நல்வழக்குக்களைப் பின் பற்றியும், நாட்டுச் சட்ட திட்டங்கட் குட்பட்டும் அரசாட்சி புரிந்தவர் என்னுங்கருத்து இக்காலத்தறிஞர்க் கெல்லாம் ஒப்ப முடிந்ததே யாம்.

தென்னாட்டு வேந்தர்தம் ஆட்சிமுறைகளைத் தனியே ஆராய்ச்சி செய்வார்க்கு அரசன் மக்கட்குயிரென இருந்தானென்பதும், குடிமக்களின் ஆக்கத்தையே தன்னாக்கமாய்க் கருதினான் என்பதும், இனிது விளங்கும். சோழன் கரிகாலன் காடுகெடுத்து நாடாக்கிக், குளந்தொட்டு வளம் பெருக்கிக்,

கால் பல கண்டு பாசனவசதிகள் பெருக்கி, நாட்டின் செல்வத்தைப் பல்வகையானும் பெருக்கிவந்தன னென்பதை நாமறிவோம். அவன் முறைசெய்யும் ஆற்றலைப் பற்றிய நிகழ்ச்சிகளும் இலக்கியங்களிற் பலவாகின்றன. கோவலனைக் கொல்வித்த பாண்டியன் பிழைகண்டு உயிர்விட்டான். இச் செய்திகளே பழந்தமிழ் வேந்தர் தங்நல விழைவின ரல்லர் என்பதைப் புலப்படுத்தும்.

### ஆட்சிக் குழூஉக்கள்

அரசாட்சியை மேற்கொண்ட அரசற்கு அமைச்சன், புரோஹிதன், படைத்தலைவன், தூதன், ஒற்றன் என்னும் ஐவரும், கணக்கதிகாரி, நிறைவேற்றுதலைவன், பொருளறைத் தலைவன், கஞ்சுகிமாக்கள், பிரதிநிதிகள், படைத்தலைவன், யானைப்படைத்தலைவன், குதிரைப்படைத்தலைவன் என்னும் எண்மரும் இன்றியமையாதவர். இவர்தம் துணைக் கொண்டே அரசாங்கம் இனிதியங்கும். இவரே 'ஐம்பெருங்குழு, எண்பேராயம்' எனப்படுவோராவர்.

மேற்கூறிய முறைகளோடு சேரன் செங்குட்டுவன் அரசாட்சியை நன்கு ஒப்பிடலாம். செங்குட்டுவனின் குதிரைப் படைத்தலைவனாகிய வில்லவன்கோதையும், கணக்கதிகாரியான அழும்பில்வேளும் ஆட்சித் துணையாயினர். சஞ்சயனும் நளனும் தூதர்தலைவர். சஞ்சயன் கஞ்சுக மக்கட்குந் தலைவனாயிருந்தான். அரசன் ஆணையால் ஒற்றர்கள் வேற்று நாடுகட்கு உருமாறிச் சென்றனர். அதுபோலவே வேற்று வேந்தர்தம் ஒற்றரும் வஞ்சி வந்து கரந்துறைந்தனர். வினை தொடங்குமுன் அரசன்தன் அதிகாரிகளைக் கலத்தல் வழக்கம். கோப்பெருந்தேவியும் இக்கூட்டத்தின்கண் இடம் பெற்றாளென்பது பத்தினிக்கடவுட்குக் கோயில் எடுக்க அரசன் தன்னதிகாரிகளுடன் சூழ்ந்தபோது, இளங்கோவேண்மாள் அங்கிருந்தமையான் இனிது விளங்கும். மகளிரை மதித்துப் போற்றும் வழக்கு நம்நாட்டில் தொன்று தொட்டு உண்டென் பதையறியாது கண்டவாறு கிளக்கும் அயல்நாட்டறிஞர் கூற்றைக் கண்டிப்பதற்கு இச் செய்தி நல்லதொரு சான்றாய் விளங்கும். அரசியல் வினைகளில் நெடுநேரம் ஈடுபட்ட உடலுறுப்புக்கள் தளர்ந்தபோதாதல்,வெறுத்த போதாதல் கூத்துட்படுவோனைத் தலைவனாக்கொண்ட 'சாக்கையர்' ஆங்கு ஆடலும் பாடலும் நிகழ்த்துவர்.

அரச பதவி வழி வழியாக வருவதே நம் நாட்டில் அடிப் பட்ட வழக்கு. அரசன், நாட்டு நல்லோர் மக்களின் நன்மை நாடிவகுத்த சட்ட திட்டங்கட்குட்பட்டு ஆட்சி புரிந்தான் சேர வேந்தர் மருமக்கட்டாய வழங்கினர் என்பதைச் சிலப்பதி காரம் கூறவேயில்லை. சிலப்பதிகாரங் கூறுஞ் செய்தி களனைத்தும், "சேரர் மருமக்கட்டாய வழங்கினர்" என்பதை வலியுறுத்துமென வாதித்துச் சாதிப்பார் கொள்கைக்கு மாருக இருத்தலைச் சிலப்பதிகார வாயிலாய் அறிஞர் அறிவர். கொடுங் கோல் ஆட்சியின் தீமைகளை நன்குணர்ந்திருந்தமையின், செங் குட்டுவன் செங்கோலாட்சியையே மேற்கொண்டு கண்ணுங் கருத்துமாய்ச் செய்து வந்தான்.

### கொடி முதலியன

தமிழ் நாட்டில் சேர பாண்டிய சோழராகிய மூவரும் முறையே வில், மீன், புலியென்னும் மூன்றனையுங் கொடியாகக் கொண்டனர். அவர் தம் தார் முறையே பனையும், வேம்பும், ஆத்தியும் ஆம். இந்திய நாடு பல பிரிவுகளாக இருந்தமையா னும், ஒவ்வொரு பிரிவும் ஒவ்வொரு தனிக் கொடியைக் கொண் டிருந்தமையானும், பொதுவாக ஒரே கொடி யொன்றைத் தேடிக் கொள்வது பயனில் முயற்சியாகின்றது.

### அரச குமரர்

நீதியொடு முரணின புதல்வர் நன்கு ஒறுக்கப்பட்டனர். இச் செய்திக்கு மனு நீதி கண்ட சோழனும், கிள்ளிவளவனும் தக்க சான்ருவர். உரிமையால் தாய மெய்த வேண்டியவன் அதனை முட்டின்றிப் பெறுதற்காகப் பிறிதொருவன் துறவினை மேற்கொண்டு அவ் வுரிமை பிழையாவண்ணமும், முறைமை தப்பாவாறும் காத்தலு முண்டு. சேரன் செங்குட்டுவனின் உடன் பிறந்தாரான இளங்கோவடிகளின் செயலே இதற் கோர் எடுத்துக்காட்டு.

### ஆட்சி இல் காலம்

ஓர் அரசன் இறந்துபட்டால், அவற்குப்பின் வேருேர் அரசன் அரசு கட்டில் ஏறுவதில் காலம் நீளும். கண்ணகியால் நெடுஞ் செழியன் இறக்க, அங்கோர் இடையீடு நிகழ்ந்ததனை

எவரும் அறிவர். கொற்கை வேந்தனை இளஞ் செழியன் அல்லது வெற்றிவேற் செழியன் மதுரை போந்து அரசுகட்டில் ஏறுந்துணையும், அரசாட்சி ஆயத்தார் வயமிருந்த தென்பதை நாம் இங்கு மனத்துக் கொள்ளல் வேண்டும்.

### பொழுது போக்கு

ஆடலும் பாடலும் பொழுது போக்கினுக்காக அவற்றுள் வல்லவரான் நிகழ்த்தப்பட்டன. செங்குட்டுவன் அடிக்கடி இலவந்திகைப்பள்ளி சென்று கோப்பெருந் தேவி இளங்கோ வேண்மாளொடு பொழுது போக்கியதை இங்கு நாம் நினைவிற் கொள்ளலாம்.

### சிறை வீடு செய்தல்

அரசன் பிறந்த நாளிலே பெருவிழாச் செய்தல் வழக்கம். அவ்விழா பெருநாளெனவும், பெருமங்கல மெனவும் வழங்கப் பெறும். அப்போது குற்றவாளிகள் அனைவரும் சிறைவீடு பெறுவர். வேறு காலங்களிலும் இச்சிறை வீடு நிகழ்தல் உண்டு. பத்தினிக் கடவுட்குக் கோயிலெடுப்பித்து விழாக் கொண்டாடிய நாளில் குற்றவாளிகள் அனைவரும் சிறைவீடு பெற்றமை இதற் கொரு சான்று.

### துலாபாரதானம்

அரசர் கொண்டாடும் விழாப் பலவற்றுள் துலாபார தானம் குறிப்பிடற்பாலது. இத்தானம் செய்கின்றவர் தம் எடையளவு பொன்னைக் கேள்வியாற் சிறப்பெய்திய மறையோனுக்கு அல்லது சுரோத்திரிய மறையோனுக்குக் கொடுப்பர். மச்சபுராணமும் இலிங்க புராணமும் ஈரெட்டுத்தானங்கள் சிறந்தன வென்னும். அவற்றுள் இத்துலாபார தானமொன்று. பத்தினிக் கடவுட்குப் படிமஞ்சமைக்கச் சேரன் செங்குட்டுவன் இமயத்திற் கற்கொண்டு, கொண்ட கல்லைக் கங்கையில் நீர்ப் படை செய்த போது, அவ்யாற்றின் கரையிலே மாடலமறை யோற்குத் துலாபாரதானஞ் செய்தானெனச் சொல்லப் பட்டுளது.

### அரசாங்கப் பொருட் பகுதி

பொருட் பகுதி காவிதி மாக்கள் என்னும் கூட்டத்தாரால் ஈட்டியும், வகுத்தும், காத்தும், மேற்பார்க்கப் பெற்று வந்தது.

இறுக்கும் இறையினை உரிய காலத்தே மக்களிட மிருந்து தொகுத்தல் இவற்குக் கடன் எனத் தெரிகின்றது. பொருளாக்கம் பற்றிய ஆராய்ச்சி நிகழும் போதெல்லாம் அரசன் பொருளமைச்சனது சூழ்ச்சித் திறனையே நாடி நிற்பான். கண்ணகியின் கோயில் கட்டிய ஞான்று 'வரிதவிர்க்க' என்ற வேந்தன் ஆணையை நிறைவேற்றிய ஆயக்கணக்கர் இப் பொருளமைச்சன் கீழுள்ள அதிகாரிகளாவர்.

## வாணிகம் பொருள்வரு துறைகளுள் ஒன்று

உழவினையடுத்து நிற்கும் பொருள்வரு துறை வாணிகமாம். செங்குட்டுவன் காலத்தே தரைவாணிகமும் கடல் வாணிகமும் முட்டின்றியும் இடையீடின்றியும் நடந்து வந்தன. பொதி மூடைகளும், அம் மூடைகளேறிய சாகாடுகளும், எண்ணப் பெற்றுக், குறியிடவும் பெற்றன. இக் குறியீட்டினைக் கண்ணெழுத்தென்ப. வாணிகரே நாட்டிலுள்ள பெருஞ் செல்வர். அரசன் அவர் தம்மோடு நட்புக் கொண்டு அளவளாவி, உரியவர்கட்குப் பட்டமளித்துச் சிறப்புச் செய்தான். அப் பட்டங்களுள் 'எட்டி'யென்பது ஒன்று. எட்டிசாயலன் எனப் பெயரிய வாணிகனொருவனைப் பற்றிச் சிலப்பதிகாரங் கூறும்.

## புதைபொருட் கலன்

பொதுவாகப் புதை பொருளனைத்தும் அரசாங்கத்தைச் சார்ந்தனவே. பாண்டியர் ஆட்சிக்காலத்தே ஒருகால் நெடுஞ்செழியன் புதைபொருளெல்லாம் கண்டெடுத்தோர்க் குரியவென ஓர் ஆணை பிறப்பித்ததாக நாம் அறிகின்றோம்.

## போர்

பழந் தமிழரின் போர்ப்படைகள் தேர், கரி, பரி, காலாள் என நாற் பகுப்பினைக் கொண்டது. மிளையாலுங் கிடங்காலும் காப்பமைந்த அரண்களின் மேலிருந்து பகைவர் உட்புகாவண்ணம் காத்துப் போர் புரிவர். மதிற்றலைகளில் கணக்கில் மாந்தரைக் கடிதிற் காய்வனவான வியப்புடை வெல்பொறிகள் பல நிறுவப் பெற்றிருக்கும். அவை, கருவிரலூகம், கல்லுமிழ் கவண், தூண்டில், தொடக்கு, சென்றெறி சிரல், ஆண்டலையடுப்பு, கவைக்கோல், புதை, புழை, ஐயவித்துலாம், கைபெய

ஞூசி,பன்றி, பணை, கணையம், சதக்கினி, தள்ளி வெட்டி, களிற்றுப் பொறி, விழுங்குபாம்பு, கழுகுப்பொறி, புலிப்பொறி, குடப் பாம்பு, சகடப்பொறி, தகர்ப்பொறி, அரிநூற்பொறி, எனப் பலவாம்.

அரசன் தலை நகர் விட்டுப் புறப்படுங்கால் படைஞர்க்குப் பெருஞ்சோறு நல்குவான்; வாளினையும் குடையினையும் நன் முழுத்தத்தில் யானையின் பிடர்த்தலையேற்றி முற்செல விடு வான். தலை நகரிலுள்ள தனிக் கடவுளரையும், வேள்விச் சாலைக் கண்ணுள்ள முத்தீயையும் நகர் நீங்கு முன் வணங்கு தல் வழக்கம். முகத்திலும், மார்பிலும் விழுப்புண்களை யேற்று, வீரத்தோடு முன்னின்று, பொருதுபட்ட வீரர்க்கு, அவர் தம் பீடும் பெயரும் எழுதிய நடு கற்களை நிறுவி, பூவும் புகையும் காட்டி, சிறப்புச் செய்தல் வழக்கம். அக் காலத்து நிறுவப் பெற்றுப் பின் மண்ணிற் புதையுண்ட வீரக்கற்கள் இக் காலத்துக் கல்வெட்டாராய்ச்சியாளரின் மண் வெட்டிக் கிலக்காகி, வெளிப்போந்து, நம்மிடையே நிலவுகின்றன. போர் தொடங்கு முன் பகையரசர்க்கு "உய்தல் அரிது; அடிபணிந் துய்ம்மின்; போரான் வருவன பொறுத்தற்கரிய" என அரசர் அறத்தாறு பற்றி எடுத்தியம்புவர்.

போர்க்களத்துப் பல்வகைத் தூரியங்கள் முழங்கும். அவை கொடும்பறை, நெடுவயிர், முரசம், பாண்டில் முதலாகப் பல்வகைய. தோற்ற வேந்தர் சிறை செறிக்கப் பெறுவர். வணங்கிய மன்னர் சிறை வீடு பெறுவர். போரின் கொடுமை பொறுத்தற் கரிதாயின், எதிர்த்த படை வீரர் படை யெறிந்து துறவியராகவும், இசைவலோராகவும், கூத்தராகவும் அந்தண ராகவும் உருமாறித் தப்புவர். இதனால் அக்காலத்துப் போர் வீரர் பின் பற்றி வந்த போர் நீதிகளின் இயல்புகள் புலனாம்.

### முறை செய்தல்

குறை வேண்டுநர்க்கு முறை செய்யும் இடம் அறக்களம் எனப் பெயர் பெறும். இக் களத்தின்கண் முதல் நீதிபதி களோடு, கல்வியும், கேள்வியும், ஒழுக்கமும், அறநூலறிவும், வல்ல அந்தணருங் கலந்து முறை செய்வர்.

சிற்சில அமையத்து அரசர் ஆய்வின்றி, விரைந்து, கோல் கோடி, முறை செய்தலும் உண்டென்பது கோவலன் வழக்கா லறியலாம். களவு போன்ற குற்றங் கட்குத் தலைத்தண்டம்

விதிப்பது வழக்கமில்லை. பொய்க் கரிபுகுவோர், தவமறைந் தொழுகுவோர், கற்பில் மகளிர், கீழறையமைச்சர், புறங்கூறுவோர், பிறர்மனைநயப்போர் என்னுமிவ் வறுவரும் நாட்டுச் சட்ட திட்டங்களின்படி முதற் குற்றவாளிகளாவர்.

## கிராம ஆட்சி

தமிழ்ச் சாம்ராஜ்யங்கள் நாடுகளாகவும், நாடுகள் கூற்றங்களாகவும், பிரிக்கப்பட்டிருந்தன. கிராமங்கள் தனித்தனியாக ஆளப்பட்டன. ஒவ்வொரு கிராமத்திலும் ஓர் ஆட்சிச் சபையுண்டு. அச்சபை மன்ற மெனவும் படும். சான்றோர் அம்மன்றங்களிலிருந்து கிராம நிகழ்ச்சிகளை மேற்பார்த்து வந்தனர். காடுகளிலும் மலைகளிலும் சில தனிக்குடிகள் இருந்தன. எயினர் குடியென்பதே இதற்குச் சான்று. இத்தனிக் குடிகள் நீங்கலாக, ஏனைமக்கட்டொகுதி பிற தொகுதிகளினின்றும் தனியே பிரித்துவைத் தெண்ணப் பெரு. கிராமத்திற்கும் கிராமத்திற்கும், கிராமத்திற்கும் நகரத்திற்கும் அரசியல்பற்றியாதல், வாணிகம் பற்றியாதல் நீங்காத் தொடர்பு இருந்தது. காடுகள் நிறைந்த தனிவழிகளிலும், வழிப்போவார்க்கு எத்தகைய இன்னல்களுமில்லை. கிராமங்களின் நலங்களையே நாடும் சில அதிகாரிகளும் அரசரால் நியமிக்கப் பெற்றிருந்தனர். இதனால் கிராமங்களில் அமைதியும் ஊறின்மையும் நிலைபெற்றன. அவ்வதிகாரிகளோடு ஒன்றிய உளத்தினராய்க் கிராம சபையினர் பெருந்துணை புரிந்து நன்மை விளைத்தனர்.

## தரை நூற் சான்றுகள்

சிறந்த உரையாசிரியர்களுள் ஒருவரான நச்சினார்க்கினியர் தமிழகத்தை மலைமண்டலம், சோழமண்டலம், பாண்டிமண்டலம், தொண்டைமண்டலமென நான்காகப்பகுப்பர். சிலப்பதிகாரத்தில் தொண்டை மண்டலம் என்னும் பகுப்பே யில்லை. அப்போது ஒரு மூன்று பகுப்புக்களே யிருந்தன. மலைமண்டலமென்பது சேர நாட்டின் ஒரு பகுதியே யன்றிப் பிறிதில்லை. ஒரு நாட்டையோ, சாம் ராஜ்யத்தையோ குறிக்கும் மண்டலமென்னுஞ் சொல் சங்க நூல்களிற் காணப்பெறவில்லை. பழங்காலத்துச் சேர நாட்டுள் இக்காலத்துச் சேலம், கோயம்புத்தூர், நீலகிரி, மலையாளம், திருவாங்கூரின் ஒரு பகுதியாகிய

வேள் நாடு என்பன அடங்கும். செந் தமிழ் நாடு பன்னிரண்டெனப் பகுத்த பகுப்பினுள், சேர நாட்டுள் ஓரைந்து பகுப்புக்கள் அடங்கி விட்டன. அவை முறையே குட்ட நாடு, குடநாடு, கொங்கு நாடு, பூழி நாடு, மலாடு என்பனவாம். குட்டுவன், பூழியன் என வரும் சேர வேந்தரின் பட்டப் பெயர்கள் மேற் கூறிய நாட்டின் பெயரா னமைந்தனவாகும். பழங்கொங்கு நாடென்பது இக் காலத்துச் சேலம் கோயம்புத்தூராகும். சேர நாட்டிலுள்ள தலைமைமிக்க யாறுகள் ஆன்பொருநை அல்லது அமராவதி, குடவனுறு, காஞ்சி அல்லது நொய்யில், காரியாறு, சுள்ளியாறு, பேரியாறு அல்லது பொன்னுனி பவானி அல்லது வானி என்பனவாம். மைசூர் ராஜ்யத்தின் தென் பகுதியிலுள்ள கொடுகூரைச் சேரன் செங்குட்டுவன் வென்று தன் நாட்டோடிணைத்துக் கொண்டனன். சேர நாட்டுத்தலைநகர் வஞ்சி. தொண்டியும் முசிறியும் துறை முகப்பட்டினங்கள். கொல்லி, அயிரை, ஆனைமலைத் தொடர் முதலியன முக்கியமான மலைகள். அயிரைமலை (ஐவர்மலை) சேரர் குலதெய்வமான கொற்றவை வாழுமிடம். சேர வேந்தர்க்கு அம்மலை ஒரு தூய தொழுந்தலம்.

## பாண்டிய ராஜ்யம்

கிறித்தவ ஆண்டு தொடங்கு முன்னரே தென் பகுதியிலுள்ள பஃறுளியாறு வரையிலும் பரவியிருந்த பாண்டிய சாம்ராஜ்யத்தைக் கடல் கொண்டது. இந்த அழிவினுக்காகப் பாண்டியன் நெடுஞ்செழியன், முத்தூர்க் கூற்றத்தையும் மிழலைக் கூற்றத்தையும், சேரர்க்குரிய குண்டூர்க் கூற்றத்தையும் வென்று, தன் நாட்டோடிணைத்துக் கொண்டனன். இதனைப் பற்றி உறுதியாகக் கூறத்தக்க சான்றுகள் இல்லை. முச்சங்கங்களைப் பற்றி வழங்கும் கன்ன பரம்பரைச் செய்திகளை நோக்கின் பாண்டியப் பழந் தலைநகரையும் கடல் கொண்டிருத்தல் வேண்டுமென எண்ண இடமிருக்கின்றது. வட நூல்களிற் கூறப்பெற்ற கபாடபுரமெனுங் கொற்கை நகரைப் பாண்டியர் தலைநகராக ஒருகால் கொள்ளப் பெற்றிருப்பினு மிருக்கலாம். இங்கிருந்த சில ஆண்டுகட்குப் பின்னர் மதுரையை அவர் தலைநகராய்க் கொண்டிருத்தல் வேண்டும். இக்காலத்தேதான் பிளினி என்னும் ஆசிரியர் இந்தியாவுக்கு வந்தார். அவரும் இச்செய்தியைத் தம் குறிப்பிற் குறித்துச்

செல்கின்றார். இந்தச் சாம்ராஜ்யத்துள்ள முக்கியமான மலை அகத்தியரின் உறைவிடமான பொதியில். தலைமை சான்ற யாறு வைகை.

பாண்டி நாடு, இக்காலத்து மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி என்னும் மூன்று ஜில்லாக்கள் அடங்கியது. புதுக்கோட்டைச் சீமையில் ஓடும் வெள்ளாறே அதன் வட வெல்லையாம்.

சோழநாடு தற்காலத்துத் திரிசிராப்பள்ளியின் ஒரு பகுதியையும் தஞ்சையையும் செங்கற்பட்டு,தென்னார்க்காடுஜில்லாக்களையும் தன்னகத்துக் கொண்டதாகும். பல்லவர்காலத்து முதன்மை பெற்ற தொண்டை மண்டலம் சோழ மண்டலத்தின் ஒரு பகுதியேயாம். அம்மண்டலம் பல நாடுகளாகவும், கூற்றங்களாகவும் பிரிக்கப் பெற்றிருந்தது. பாண்டி மண்டலத்தைப் போலவே சோழ மண்டலமும் - உள்நாட்டுத் தலை நகரான உறையூரையும், கடற்கரையை யடுத்துள்ள காவிரிப் பூம்பட்டினத்தையும் தலை நகர்களாகக் கொண்டிருந்தது. கரிகாலன் காலத்தில் காவிரிப்பூம்பட்டினம் பெரிதும் சிறப்புற்று விளங்கியது. இங்ஙனம் இரு தலைமுறை கழிந்த பின்னர்க் கடலால் அழிவுண்டது. அக்காலந்தொட்டு தலை நகர் என்னுஞ் சிறப்பையும் பெருமையையும் அப்பட்டினம் இழந்திருத்தல் வேண்டும்.

உறையூரில் முத்து வாணிகமும், துகில் வாணிகமும் மிகுதியாக நடைபெற்றன வென்று பெரிப்புளூஸ் ஆசிரியர் கூறுவர். தாலமி யென்னும் யவனாசிரியரும் உறையூறையே சோழர் தலை நகரெனக் கூறினார். சோழ நாட்டின் தலைமை சான்ற யாறு காவிரி.

திருச்சினாப்பள்ளி ஜில்லாவிலுள்ள குளித்தலை யென்னும் ஊருக்கு மேற்கே, பன்னிரண்டுகல் தொலைவில் அமராவதி யென்னும் யாறு காவிரியோடு கலக்குமிடத்திற்கு மூன்று கல்லின் முன்னே, காவிரிக் கரையிலே, செல்லாண்டியம்மன் கோயிலென வொன்றிருக்கின்றது. அதுவே வழி வழியாகத் தமிழ் மண்டலம் மூன்றும் சந்திக்குமிடம். முக்குலத்தினரான மூவேந்தரும் அக்கோயிலுக்கு வந்து அன்னையை வணங்குவர்.

அங்கிருந்து யாற்றின் தெற்கே காணப்பெறும் கரையே சோழ பாண்டிய மண்டலங்களின் எல்லையாகும். யாற்றினுக்கு மறு கரையினருகோடும் கரை போட்டாறுறே சோழ சேர மண்ட லங்களின் எல்லையாகும். இச்செய்தி திருச்சி ஜில்லா கெஜட்டி யரால் தெரியவருகின்றது.

### சமயச் சான்றுகள்

மனிதன் சமயச் சார்புடையவன். அவன் இன்பப் பேற்றி னுக்கும் துன்பப் போக்கினுக்கும் தன்னினும் வலியதொரு துணையை நாடுகின்றான். இப்பேறு கருதி வேத வழிப்பட்ட கரணங்கள் பலவற்றை இயற்றுகின்றான். உண்ணு நோன் பினை நோற்கின்றான்; பெருஞ் சோறளித்து மகிழ்கின்றான். ஆடிப் பாடிக் களிக்கின்றான்; இவனால் வழிபடப் பெற்ற தெய்வம் இவற்றினுக்காக மகிழ்ந்து தான் விரும்பிய பேறுகளை விரும்பி யாங்கு அளிக்குமென நம்புகின்றான். பழந் தமிழர், சேயோன், மாயோன், சிவபெருமான், கொற்றவை, வாலி யோன், வருணன், இந்திரன் என்னும் தெய்வங்களை வழிபட் டனர். மேற் கூறிய தெய்வங்கள் சில நிலங்கட்கே உரியவை என்பது அவர்தம் கொள்கை. இத்தெய்வங்களனைத்தும் வேத புராணங்களாற் கூறப்பெற்றவைதாம். இவ்வொற்று மையைக் கருதுமிடத்து அந்நாள்தொட்டு நந்தமிழ் நாட்டில் வடகலை தென்கலையும் வேற்றுமை யுற்றில வென்பதும், இரண் டும் கலந்தே வாழ்ந்தன வென்பதும் இனிது விளங்கும். தொல் காப்பியனாரும் இக்கருத்துடையர் தாம். சிலப்பதிகாரத்தும் இக்கருத்துக்கள் இங்கொன்றும் அங் கொன்றுமாகக் காணப் படினும், இரட்டைப் பெருங் காப்பியங்கள் ஜைன பௌத்தக் கருத்துக்களை வெளியிட வந்தன வென்பதை நாம் மறுக்க முடியாது.

நாட்டில் அடிப்பட்ட வைதிக மதங்கள் நாடோறும் குறை வின்றிப் பெருகிவர, பௌத்தம், ஜைனம், ஆசீவகம் போன்ற புற மதங்களும் தலையெடுத்தன. ஆனால் அடிப்பட்ட மதங் கட்கும் புறமதங்கட்கும் உயர்ந்த முறையில் எத்தகைய வேறு பாடுகளும் இல்லை. மதங்களின் அடிப்படையான கொள் கைகள் ஒன்றாயினும், வேறுபாடுகள் தவச்சிறிய; நொய்ய சிலர்க்கு அறிவு நூற்பயிற்சி பெறுதல் கூடாதிருந்தமையின் அது கருதிச் சில வேறுபாடுகள் தோன்றினும், மக்கள் அவற் றைப் பொருட்படுத்தித் தம்மைத் துன்புறுத்திக் கொள்ள

வில்லை. மதவாதங்கள் அனைத்தும் அறிவுநூல் வல்ல பெரியார்க்கிடையே நிகழ்வனவாயினும் கருத்து வேறுபாட்டினுக்காகப் பகை பாராட்டாமல் ஒருவருக் கொருவர் மதிப்புடனும் நேர்மையுடனும் நடந்துகொண்டனர். சைவ, வைணவ மதங்களை நாட்டில் அடிப்பட்ட மதங்களாகக் கூறலாம். சைவ வைணவர்கள் ஒருவர்க்கொருவர் மனக்காழ்ப்புக் கொண்டமை இந்துமத மென்னுந் தருவில் பிற்பட்ட நூற்றுண்டுகளிலே கனிந்த கைப்புக் கனியாம். சிலப்பதிகாரத்தில் இம்மத மாறுபாட்டினை நாம் காண முடியாது. அக்காலத்தில் ஒருவன் இன்னொருவனைக் கண்ட மாத்திரத்தானே அவன் சைவனென்ருதல், வைணவனென்ருதல், கூறிவிட எளிதில் இயல்வதில்லை. ஆதலின் மதவெறி மருந்துக்கும் கிட்டாத அரும்பொருளாயிற்று. ஆதலால், ஒவ்வொருவனும் வைணவனுகவும் சைவனுகவும் அக்காலத்தில் இருந்திருத்தல் கூடும். மாதரி யென்னும் இடைக்குல முதுமகள் கண்ணனை வழிபடும் வைணவியேனும் இயக்கிக்குப் பான்மடை கொடுத்து மீளும் ஏல்வையில் கவுந்தியடிகளைக் கண்ணிற் கண்டு அவர் தமை வணங்கிய செயலை எவரறியார்?

இனிச் சிலப்பதிகாரங் கூறிய சேரன் செங்குட்டுவன் எத்தகையன் எனக் கூறுவதும் ஈண்டுப் பொருந்துவதேயாம். அவன் வடநாட்டுச் செலவின் முன்னதாக அங்கிச் சாலையிற் செய்த வேண்டற் பாட்டுடன் நில்லாது, சிவபெருமான் கோட்டம் புக்கு அவர்தம் அடிகளைத் தன் முடிமிசைச் சூடினுன். அவ்வமயத்தே ஆடகமாடத் தறிதுயிலமர்ந்த பெம்மான் பணிபுரிகுநராய சிலர் மாலையும் மலருங் கொணர்ந்து வாழ்த்தியளிக்க, அவற்றினைச் செங்குட்டுவன் தன் தோளின் மிசை யணிந்தான். சிலப்பதிகார உரையாசிரியர் இவ்வாடக மாடத்தைப் பற்பநாபப் பெருமாள் திருக்கோயில் கொண்டுள்ள திருவனந்தைப் பதியாக எண்ணினுர். மேலும் சிலப்பதிகாரம், அலைவாய் முருகன் கோட்டத்தையும், திருச் செங்கோட்டினையும், ஏரகத்தையும், வெண் குன்றினையும் கூறும்.

கொடு கொட்டி, பாண்டரங்க மென்னும் கூத்துக்கள் சிவபெருமாற்குச் சிறந்தன போலவே துடிக் கூத்தும் குடைக் கூத்தும் முருகக் கடவுட்குச் சிறந்தனவாம். வெற்றி கருதித்

தேவியை அல்லது கொற்றவையை வணங்கும் வணக்கமும், மணிமேகலா தெய்வம், கடற்றெய்வ மென்பதும் இரட்டைக் காப்பியங்களிற் காணப் பெறுஞ் செய்திகள். திருமகளும் கலை மகளும் மலைமகளும் சக்தியின் வெவ்வேறு அம்சங்களென்னுங் கருத்து "மாமகளு நாமகளு மாமயிடற் செற்றுகந்த, கோமகளும் தாம்படைத்த கொற்றத்தாள்" என்னும் வெண் பாவால் இனிது விளங்கும். பிரமாண்ட புராணத்துள்ள லலிதோபாக்கியானத்துள் கச்சிப்பதியில் முன்னிருந்த திருமகளே பிற்காலத்துக் காமாட்சி அல்லது காமக்கண்ணி யாயினள் என வருஞ் செய்தி நினைத்தற் குரிய தாகும். கொற்றவைக்காக ஆடப்பெறும் வேட்டுவ வரி மறவர் போன்ற மலைவாணரால் அடிக்கடி நிகழ்த்தப் பெற்றது. சிலப்பதி காரத்துப் பன்னிரண்டாங் காதையான வேட்டுவவரி முழுதும் இக்கூத்து நன்கு விளக்கப் பெற்றிருக்கின்றது. குருதிப்பலி கொடுத்தல் பெரும்பான்மை வழக்கெனக் கொள்வதில் குற்ற மில்லை. இங்குத் தேவி அல்லது கொற்றவை மயிடாசுரனைச் செற்றவளாகத் துதிக்கப் பெறுகின்றனள்.

திருமாலைக் குறித்து ஆடப்பெறுங் கூத்துக் குரவைக் கூத்தாகும். வடமொழி வாணர் 'ராஸக்ரீடை' எனப் போற்றுவதுமிதுவே. இடைக்குல மகளிர் இக்கூத்தினை நிகழ்த்தல் பெரும்பான்மை. வள்ளியை மணந்த முருகற்குக் கூத்தெடுக்குமாப் போலே பின்னைப் பிராட்டியை மணந்த திருமாற்கும் இக்கூத்தெடுக்கப் பெறுமென்பது அடிப்பட்ட செய்தியாம். கோவலன் பாண்டியனாற் கொல்லப் பெற்ற போது மதுரைமா நகர்க்கு வரப்போகும் தீங்கினை யுணர்த்த ஆங்குப் பல துன்னிமித்தங்கள் நிகழ்ந்தன. அந்நாளிலே, மக்கள் தமக்கு வரும் தீங்குகளைத் தெய்வங்கட்குச் சாந்தி யெடுத்தலாற் போக்கிக் கொள்ளலாமென நம்பி வந்தனர். இக் கருத்துப் பற்றியே இடைக்குல நல்லாள் மாதரியும், அவள் மகள் ஐயையும், கண்ணகிக் கெதிரில் இக்கூத்தினை எடுப்பித் தனர். கண்ணகி தன் பேராப் பெருஞ்சினத்தால் மதுரையை நகில் திருகியெறிந் தழித்தொழித்துக் கொங்கின் கண்ணுள்ள நெடுவேள் குன்றத்து ஒரு வேங்கை மர நிழலில் நின்ருளாக, ஆங்கும் குன்றக் குறத்தியர் கண்ணகிக்காகக் குரவைக் கூத் தொன்றை ஆடினர். பின்னர்த் திப்பியத் தெய்வமானத்தின் மிசையேறி வானஞ்சென்றமை எவருமறிந்த செய்தி.

திருமால் வணக்க மொருபுற மிருப்ப, அம்மாலின் முன்னோனான வாலியோன் வணக்கமும் பெருவரவிற்றாய்க் காண்கின்றோம். அத்துடன் அவற்குக் கோட்டமொன்று உண்மையையும் அறிகின்றோம். ஆசிரியர் பதஞ்சலியார் காலத்திலிருந்து இப் பலராம வணக்கம் காணப்பெறுகின்றதெனவும், எக் காலத்து எது குறித்து இவ்வணக்கம் புலனெறி வழக்கிற்பட்டதெனத் துணிந்து கூறுவதற்கில்லை யெனவும் அறிஞர் R. G. பண்டார்கார் கருதுவர். சிலப்பதிகாரத்தில் தென்னாட்டிலே வலராம வணக்கம் பெரு வழக்கிற்றெென நாம் அறியலாம்.

பரிதி, மதி, கற்பதரு, அயிராவதம், சாத்தன் பாசண்டச் சாத்தன் முதலிய கடவுளர்க்கும், பிறர்க்கும், தனித் தனிக் கோயில் உண்மையைச் சிலப்பதிகாரத்திலிருந்து நாம் அறியலாம். நகரங்களில், இக்காப்புத் தெய்வங்கட்குக் கோயில்கள் இருந்தன. இச் செய்தியை ஆராயின், கோயிலெடுக்கும் வழக்கம் மிகமிகப் பிற் காலத்தது என்பார் கூற்று வலியிலதாயொழிந்து, இவ் வழக்குத் தொன்று தொட்டதென்பது வலியுறும். சிந்து நதிப்பள்ளத்தாக்கில் அடையல்களாக நமக்குக் கிடைத்த பொருள் கொண்டு ஆராய்ந்து பார்ப்பின், இந்தியாவில் கி. மு. நான்காம் நூற்றாண்டு தொடங்கிக் கடவுளர்க்குக் கோயில் எடுக்கும் வழக்குண்மை தெரியலாம். மேலும் பூதசதுக்கத்துப் பூதங்கள் நாற்பாற்பட்ட வருணங்களின் பெயரானே வழங்கப் பெற்றமையும், அவைகள் துதிக்கப் பெறுதலையுங் காணலாம். வேதங்களிற்காணும் இந்திரன், வருணன், அங்கி, முதலான கடவுளர் இங்கும் துதிக்கப் பெறுகின்றனர். மறை கரை கண்ட பார்ப்பாரைப் பற்றியும், அவர்தம் அங்கியொழுக்கினைப்பற்றியும், மறையோது தலையும் பல விடங்களில் இளங்கோவடிகள் கூறியிருத்தலை அறியாதார் எவர்? அந்தணன் வேந்தர் தம் மதிப்பிற் கிலக்காகிப் பொன்னையும் கறவைகளையும் பரிசிலாகப் பெற்றான். புரோஹிதன் அரசாங்க அதிகாரிகளில் ஒருவனாதலையும், நாட்டு நலங்கருதிச் செயலாராய்ச்சி நிகழ்வுழி அவன் கலக்கப் பெறுதலையும் உற்று நோக்கின் அவற்கு அரசன் காட்டிய பெருமதிப்பு வெளியாகும். இன்னோரன்ன செய்திகளானே தமிழ் வேந்தர் க்ஷத்திரியர் எனக்கூறுவதில் குற்றமில்லை. பரிதி குலத்தினர், மதிவழியினர்,

அங்கிமரபினர் எனத் தமிழ் வேந்தரைத் தமிழ் இலக்கியங்கள் கூறுவன வெல்லாம் மேற் காட்டிய கொள்கையினை வலியுறுத்து வனவாகும்.

மறைவழிப் படாததும், ஆன்றோர்வழிவாராததுமான பாசண்டத் தெய்வங்கள் தொண்ணூற்றாறு வகையென்றும் அவருள் இச்சாத்தன் முதன்மையானவன் என்றும் திவாகரங் கூறும். இன்றும் இப்பழஞ் சாத்தன் கோயில்கள், கிராமங் களின் எல்லைக்கண் ணிருத்தலையும், மக்கள், தம் துன்பம் போக்க இத் தெய்வத்தை வேண்டுதலையும் காணலாம். சாத் தன் கோயில் தென்னிந்தியாவில் மிகப்பழமை சான்றது. தமிழ் நாட்டில் அக் கோயில்கள் பலவாயிருத்தல் குறிக்கத்தக்கது. சிலப்பதிகார காலத்தில் வட நாட்டுக் கலைகள் கலந்து விட்ட மையால் இச் சாத்தன் வணக்கம் சான்றோரால் எண்ணப் படாததாய்ப் புறமாயிற்று.

ஜைன பௌத்த ஆசீவகங்களைப்பற்றி இங்கு விரித்துக் கூறல் கருத்தில்லை. புத்தரைப்பற்றி நூல்கள் கூறினவேனும், புகாரிலுள்ள இந்திர விஹாரம் பற்றியும், மகாபோதி பற்றி யும், போதிய சான்றுகள் சிலப்பதிகாரத்திற் கிடைத்தில. ஒருகால் ' மணிமேகலை ' அவற்றை விரித்துக் கூறுவதென்று அடிகள் கூறாது விடுத்தனர் போலும். சமண மதத்தைப் பற்றிச் சிலப்பதிகாரத்திற் சில சான்றுகள் உள. ஆசீவகம் இன்னதென அறிய ' மணிமேகலை 'யை நோக்க வேண்டியதாயி ருக்கின்றது. இம்மதங்களெல்லாம் மௌரியப் பெருவேந் தனை அசோகனால் நன்கு வளர்க்கப் பெற்று விளங்கினவை யாகும். ஜைன மதத்தாரின் பழக்க வழக்கங்களைப் பற்றிச் சிலப்பதிகாரம் விரித்துக் கூறும். கோவலனும் கண்ணகியும் நீராடல், உண்ணல், உடுத்தல், பேச்சு முதலியவற்றால் ஜைன மதத்தவர் என்றும் முடிவுக்கு வருமாறு அடைக்கலக் காதைச் செய்திகளும் பிறகாதைச் செய்திகளும் இருக்கின்றன. மேற் கூறிய நீராடன் முதலிய செயல்கள் மாதரியின் இல்லின் கண் நிகழ்த்தப் பெற்று அவை மாதரி ஐயை முதலியவர்களால் காணவும் பெற்றன. மணிமேகலை கூறுஞ் செய்திகளால் ஒருகால் அவர் புத்த மதத்தினரோவென எண்ண வேண்டி யிருக்கின்றது. வைதிக மதங்கட்கும் பிற மதங்கட்கும் அவ்வளவாக வேற்றுமையில்லை யென்றும், இருந்தால் அவை

அக்காலத்திலே எவராலும் குறிக்கும் அளவிற்குப் பாராட்டப் பெறவில்லையென்றும் நாம் முடிவு செய்யலாம். சேரன் செங்குட்டுவன் வைதிக மதத்தினன். அவனுடன் பிறந்த இளங்கோவடிகள் ஜைனச் சார்புடையவர். இவ்விருவர்க்கும் கெழுதகை நண்பரான கூலவாணிகன் சாத்தனூர் பௌத்தர். இவ்வழக்கம் தென்னாட்டிற்குப் புதிதன்று. வடநாட்டு ஹர்ஷ வேந்தன் குடும்பத்தினர் தம் விருப்பப்படி மதங்களைத் தழுவினரென வரலாறுகளால் நாம் அறிகின்றோம். ஹர்ஷ மன்னன் தந்தையாரான பிரபாகரவர்த்தனன் பரிதியை வணங்கினன். அவன் மகன் ராஜ்யவர்த்தனன் புத்தமதத்தினன். ஹர்ஷனோ சூரியன், புத்தன், சிவன் இம் மூவரையும் வணங்கினன். இங்ஙனமிருந்தும் அவர்தமக்குள் எத்தகைய மதக் குழப்பமும் மாறுபாடும் இருந்தனவாகத் தெரியவில்லை.

கோவலன் பெற்றோர் புத்த மதத்தினர். கண்ணகி ஆசீவக மதத்தினள். ஒருகுலத்துப் பிறந்தார் அவரவர் விழைந்தாங்கு மதச்சார்புடையராகலா மென்பது அக்கால வழக்கு. இதன் சார்பில் நாம் இரண்டு காரணங்கள் கூறலாம். எவரும் மத வேற்றுமைகளை நுட்பமாய்ப் பாராட்டவில்லையென்பதொன்று. ஒரு மதத்திற்கும் இன்னொரு மதத்திற்கும் அடிப்படையான வேற்றுமைகள் இல்லையென்பது மற்றொன்று. அவர்தமுள் ஒவ்வொருவர்க்கும் வினையே உயிர். நல்வினை தீவினைக்குத் தக்கபடி நன்மையுந் தீமையும் அவற்றைச் செய்தானை நாடியடையுமென்பது அவர்தம் உறுதியான நம்பிக்கை. இப்பிறப்பில் ஒருவன் துன்புற்றால் இம்மையிற் செய்த வினைகள் காரணமாகா. இன்மைத் துன்பத்தினுக்குப் பழவினையே காரணம். மனிதன் விடுதலையடைய விரும்பினால் அவன் நற்கருமங்களைச் செய்தற்பாலன். அக்காலத்தில் பலர் இவ்வுண்மையினை நம்பியும், கடைப்பிடித்தும், பிறர்க்குச் சொல்லியும், தாமும் ஒழுகியும் வந்தனர்.

வேதங்களிற் கூறிய கடவுளர் பலரேனும், அவருள் இந்திர வணக்கத்தையும் விழவினையும் பற்றிச் சிலப்பதிகாரஞ் சிறக்கக் கூறுகின்றது. சிலப்பதிகாரத்தின் ஐந்தாங் காதையான இந்திர விழவூரெடுத்த காதை முழுதும் இவ்விழாவின்கண் நிகழும் நிகழ்ச்சிகளின் வருணனைகளே. இந்திர விழாத்

தோன்றிய நாட்டொட்டு அதன் இறுதிகாறும் அவ்விழா இனிது நடைபெற அரசன் முழுமுதற்றலைவனாய் நிற்பன். வடநாட்டிலிருந்தும் பலர் தத்தம் மகளிருடன் விழாக் காண வருவர். தேவர் வானத்திலிருந்து விழாவினைக் கண்டு மகிழ்வர். ஒவ்வோர் ஆண்டிலும் சித்திரைத் திங்கள் முழுமதி நாட்டொடங்கி இருபத்தெட்டு நாட்கள் தொடர்ச்சியாய் இவ் விழா நடைபெறும். புகாரைத் தலைநகராய்க்கொண்டு ஆட்சி புரிந்த முசுகுந்த சோழற்குத் துணைசெய்ய இந்திரனால் அனுப்பப் பெற்ற காப்புத் தெய்வத்திற்கு முதற்கண் வணக்கம் நிகழும். புகார் நகரிலுள்ள ஐவகை மன்றங்களிலும் பலியிடப்பெறும். யானையின் பிடர்த்தலையில் முரசேற்றி வச்சிரக் கோட்டத்தின்கண் ணிருந்து ஐராவதக் கோட்டஞ் சென்று அம்முரசினை இறக்கி வைத்து விழாவின் முதலும் இறுதியுஞ் சாற்றுவர். அரசன் கொற்றங் கொள்வானாகென்று காவிரி நீரைப் பொற்குடத் தேந்தி இந்திரனை நீராட்டுவர். வட நூல் களிற் கூறிய 'இந்திரத்வஜ விழா' வோடு தமிழ் நூல்களிற் கூறியுள்ள இந்திர விழாவை ஒப்பிடலாம். பழந்தமிழர்கள் இவ்விந்திர வணக்கத்தை எங்ஙனம் தழீஇக் கொண்டனர் என்பது இன்னும் விளங்காத ஒரு செய்தியாகவே இருக் கின்றது.

## மக்கட்டொகுதி: நகரமும் நகரவாழ்க்கையும்

மணிமேகலையை ஒரு மத நூலாகவும், வேதாந்த நூலாகவுங் கொண்டால் சிலப்பதிகாரத்தை அரசியல் நிலை, மக்கட் டொகுதிநிலை முதலியவற்றை உரைக்கும் நூலாகக் கொள்ள லாம். இந்நூல்களிலே தமிழ் நாட்டு மூன்று பெருந் தலைநகரங் களைப் பற்றியும், அந்நகரங்களின் கலைப் பெருக்கு, நாகரிக முதிர்ச்சி முதலியவைகளைப் பற்றியும், விரிவான பல செய்தி களைக் காணலாம். இடையீடின்றி வாணிகம் நடக்கும் பெரு மறுகுகளிலே வேற்று நாட்டினர் பலர் வந்து ஒருங்கிருந்து அளவளாவி மகிழ்வர். நகராண்மைக் கழகங்களின் ஆட்சி வியத்தகு நிலையில் அமைந்திருந்தது. பெருவழிகளும் மறுகு களும் என்றுந் தூய்மையுடன் வைத்துப் பாதுகாக்கப் பெற்று வந்தன. அங்கங்கே இருள் போக்கும் ஒளி விளக்குகள் அமைக்கப் பெற்றிருந்தன. வீடுகள் அனைத்தும் சுடு மண்ணா லும் கோட்டு நூற்றாலுங் கட்டப்பெற்று, வளியுலவும் சாள

ரங்கள் பலவற்றை யுடையவையாயிருந்தன. எழுநிலை மாடங்கள் எண்ணிலவாய் விளங்கியமையின் தென்னாட்டுச் சிற்பநிலை உச்சநிலை யடைந்து விளங்கியதாகும். மறை யோதுதலாலும், கேள்வியாலும், வேள்வியாலும், ஒழுக்கத்தாலும், தனக்கென வாழாத் தியாகத்தாலும், அங்கிச் சடங்குகளை முட்டின்றி ஆற்றலாலும், அந்தணர் பிறபாலாரின் நன்மதிப்பினுக்குரியராகிப், பெரும் பொருளையும் அருவிலைப் பண்டங்களையும், பரிசிலாகப் பெற்றனர். போர்க் கொடுமைகள் அந்தணனை அணுகா. சேரன் செங்குட்டுவன் கங்கைக் கரையிலிருந்துழி அவன் மாட்டு அந்தணன் பெற்ற பேற்றினை எவர் அறியார்? வணிகர் பெருஞ் செல்வராய் விளங்கினர். அவர்தமக்குவேந்தன் மதிப்புக் கறிகுறியாகப் பல பட்டங்களை யீந்து பெருமை செய்தான்.

நகர வாழ்க்கை எளிதாய் இன்பம் நிறைந்ததாய் இருந்தது. மாந்தர் பொழுது போக்கினுக்காக, சைகைகளானியன்ற ஊமைக் கூத்துக்கள் வல்லோரால் நடத்தப்பெறும். அதனை யடுத்து ஆடலும், பாடலும், அவிநயமும் நிகழும். பாடல் கருவியானும் கண்டத்தானும் இயலும். இந்நிகழ்ச்சிக்கண் மகளிர் கலத்தல் உண்டு. அம்மகளிர் ஆலயந் தொழுவர், பொதுக்கூத்தில் கலப்பர். அள்ளிக் கொள்ளும் பேரழகு வாய்ந்த அம்மகளிர் விலை வரம்பில்லா ஆடைகளையும் அணி கலன்களையும் உடுத்து, அணிந்து உலவுவர். அவர்தம் ஆடைகள் பட்டானும், பருத்தியானும், கம்பளத்தாலும், எலி மயிரானும் இயன்றவை. உடம்பினை மாசுகழீஇ, சந்தந் திமிர்ந்து, சுண்ணந்தூவி, மாலையணிந்து ஆடவர்தம் கண்ணையும் மனத்தையும் கவரும் நல்லோவியங்களாய் விளங்குவர்.

நகர மகளிர் இருதிறத்தினர். இல்லறம் நடாத்தும் மறுவில் கற்பினர் ஒருதிறத்தர். தனிமறுகுகளில் வதிந்து, விலை மகளிரென்னும் பொதுமகளிர் இன்னொருதிறத்தர். மண முடித்த ஆடவரும் மனைவியரை அலமர விட்டு, இவ்விலை மாதர் வலைப்பட்டுக் கைப்பொருளிழந்து கரைந்து நின்றுரும் பலருண்டு. அந்தோ! கோவலன் செயலை அறியாதாரெவர்? நகரையடுத்துள்ள புறஞ்சேரிகளிலே துறவிகள், தவசிகள், வைதிகர் முதலான பலரும் வதிந்து வாழ்வர்.

நகர வாழ்க்கையைப் போலவே கிராம வாழ்க்கையும் மன வமைதி தருவதாயிருந்தது. கிராமத்தினர் பலரும் உழுதொழிலரும் இடையருமாயிருந்தனர். எளிய வாழ்வும், நிறைந்த மனமும், உலையாவமைதியும் உடையராய், வழி வழி வந்த தத்தம் தொழில்களை முட்டின்றி ஆற்றி வந்தனர். கிராமத்தினர்க்கும் நகர மாந்தர்க்கும் போதிய தொடர்பிருந்தது. இக்காலத்துப் போலக் கிராமம் நகரமென இரு தொகுதிகளாய்ப் பிரிந்திருந்ததில்லை. நீரிலும் நிலத்திலுஞ் செல்லச் சகடங்களையும் அம்பிகளையும் ஊர்தியாக் கொண்டனர். கிராமங்கட்கும் நகரங்கட்கு மிடையிடையே வனங்கள், நென் மணிவிளை புலங்கள், ஓடைகள், நீரூற்றுக்கள், கனிமரங்கள், பிறதருக்கள், மலர்ச் சோலைகள் முதலியன நிறைந்திருந்தன. இருள் படப் பொதுளிய காடுகள் பலவும் உண்டு. புகார் தொடங்கி மதுரை காறும் உள்ள வழிவளங்களை இளங்கோவடிகள் வாக்கால் நன்கறியலாம்.

கிராம மக்களின் பொழுது போக்கினுக்காகப் பல நிகழ்ச்சிகள் நிகழ்ந்த வண்ணமாயிருக்கும். ஒவ்வொரு கிராமத்திற்கும் பொதுவாக ஆடற்களமொன்றுண்டு. கிராம மகளிருட் சிலர் துணங்கை முதலான கூத்துக்களை நிகழ்த்துவர். உண்ண உணவும், உடுக்க உடையும், பருக நன்னீரும் நறுந் தேறலும் குறைவின்றி மக்கட்குக் கிடைத்து வந்தமையின் அவர் தம் வாழ்க்கையில் அமைதியே குடி கொண்டிருந்தது. அரசர் அல்லன செய்யாராய், அவல நீக்கி, அமைதி நிலவினர். காட்டிலும், பாலை நிலத்தும் வதிந்த மறவர் அல்லது எயினர் ஆறலை கள்வராயிருந்தனர். இவர்தமைத் தமிழ்நாட்டு மூவேந்தர் போர் நிகழுங் காலத்துப் படை வீரராய் நியமித்தலு முண்டு. ஆறலைத்தலும், சூறை கோடலும், நிரைகவர்தலும், அவர் தமக்குப் பொழுது போக்கு. அவ் வெயினர் காட்டுப் பன்றியையும், எய்ப்பன்றியையும், மானையும் வேட்டையாடிக் கொன்று, அவற்றின் இறைச்சியைத் தின்று, தோலினை உடுத்து, புலிப் பற்களையும் நகங்களையும் அணிகலன்களா யணிந்து, அனைவரும் ஒன்றுய்க் கூடித் தெளிதேறலை விடாய்த்தவரெனப் பருகி, ஆடிப் பாடிப் பேசி மகிழ்வர்.

சமூக வாழ்க்கையில் திருமணம் ஒரு தலையாய நிகழ்ச்சி. தமிழகத்திற் களவு கற்பென இருவகை மணங்கள் நிகழ்ந்து

வந்தனவாக அக நூல்கள் கூறும். இக் களவு மணத்தை வட நூலார் கூறும் காந்தர்வத்தோடு ஒருவாறு ஒப்பிடலாம். சிலப்பதிகாரத்துக் கானல்வரி களவின் பகுதிகளைக் கூறுவ தொன்றும். இம் மணங்கள் எல்லாமக்களாலும் பின் பற்றிச் செய்யப் பெற்றன வென்பதற்கில்லை. நாகரிகம் முற்றியோர் அறநூல்களாலும் கிருஹ்ய சூத்திரங்களாலும்விதிக்கப்பெற்ற விதிகளின்படி மண நிகழ்ச்சிகளை நடத்தினர். புரோகிதன் மறையோதிச் சடங்கு ஆற்றுதலும், மணமக்கள் தீவலம் வரு தலும் பிறவுமாகிய வேத நாற்கரணங்கள் தமிழரிடை உண்டு. தமிழர் வட நாட்டு விதிகளை மேற் கொண்டது போலவே தென் னாட்டுறைந்த வடவரும் தமிழ் மண முறைகளிற் சிலவற்றை மேற் கொள்ளலாயினர். தாலி கட்டுதல் வட நாட்டு வழக் கன்று; வேதம் விதித்தது மன்று. கூறைப்புடைவை யுடுத்தல் கூடத் தென்னாட்டு வழக்கெனலாம். இதனால் இவ்விரு கலைகளும் மனமொத்துக் கலந்தமை நன்கு விளங்கும்.

## ஆடலும் பாடலும்

ஆடலையும் பாடலையும் பாராட்டிக் கூறாத பழந்தமிழரிலர். இவையும் சடங்கின் வழிய. கடவுள் வணக்கம் ஆடலின்றி நிரம்பாதென்பது தமிழர் கொள்கை. கிறித்தவ மதத் தொடக் கத்தில் அம்மதத்தலைவர்கள் இறை வணக்கமியற்றுங்கால் மண்டபக் கோயில்களிலே ஆட்டம் நிகழ்த்தினராம். இறந் தார்தம் கல்லறையின் முன்னின்றும் அவ்வாடல் புரிவாராம். மெக்ஸிகோ இந்தியர்களும் இவ்வாடலை இறை வணக்கத்திற் கின்றியமையாத தெனக் கொண்டு அதனை நிகழ்த்தி வந்தனராம்.

இறைவன் அருள் கருதி நிகழ்த்தும் ஆடலும், இறைவணக் கத்திற்கு நேரான இலக்கியங்கள் கூறும். ஊமைக்கூத்துக் களும் பலவேனும் அவை நிகழ்ந்தனவாகக் கூற நூற்சான்று கள் இல்லை.

சிலப்பதிகாரம் ஆடலியல்பை விரித்துக் கூறும். ஆடன் மகளிர் தலைக்கோல் பெறுவர். போர்க் கடவுளாகிய முருகனும், இன்பக் கடவுளாகிய மாயோனும் இவ்வாடற்கண் வணங்கப் பெறுவர். சிவபெருமான், துர்க்கை, இந்திராணி, முதலியோரின்

பெயரால் பல ஆடல்கள் அமைந்துள்ளன. கஞ்சனையும் வாணனையும் வென்று, அநிருத்தனைச் சிறை மீட்ட பின்னர்க், கண்ணன் பத்துவகைக் கூத்துக்கள் நிகழ்த்தியதாக, அடியார்க்கு நல்லார் கூறுவர். இளங்கோவடிகள் திரிபுர மெரித்த விரி சடைக்கடவுள் தம் வெற்றிக் கறிகுறியாகத் தன் தேர்வலவனுகிய நான்முகன் முன்னே கொடு கொட்டி, பாண்டரங்கம் என்னும் கூத்துக்களை ஆடினதாகக் கூறுவர். முருகன் சுரா சுரர்களின் வஞ்சம் பெயர்த்துத் துடியென்னும் ஆடலை நிகழ்த்தினன். பேடிக்கூத்துக் காமனல் நிகழ்த்தப் பெற்றது. அசுரர்களை வென்ற துர்க்கை மரக்காலாடல் ஆடினள். அவுணரை வென்ற திருமகள் பாவைக் கூத்தாடினள். வாணனை வென்ற பின் இந்திராணி கடையம் என்னும் கூத்தினை நிகழ்த்தினள். வட நூல்களில் இக் கூத்துக்களுக்கு மேற்கோள்கள் எவையும் காணப்பட்டில. ஆடல் பன்னொன்றும் நிலை நின்றாடல், பதம் வீழ்ந்தாடலென இருவகைப்படும். அல்லியம் முதலிய அறு வகை யாடலும் முற்பகுப்பின; துடி முதலிய வைந்தும் பிற் பகுப்பின.

மேற் கூறிய கூத்துக்களைப் போலவே, குரவைக் கூத்தும் ஒன்று. இக் கூத்து இடைச்சியரானும், பிற மகளிரானும் நிகழ்த்தப் பெறும். மறவர் தமக்கு வெற்றி கருதிக் கொற்றவையின் முன் ஆடுதலும் கூத்தெனப் பெயர் பெறும். இவ்வாடற்பகுதிகள் எத்துணைச் சீரும் செப்பமும் உடையன வென்பதைச் சிலப்பதிகாரங் கூறும். இறை வணக்கத்திலிருந்து இன்ப வணக்கம் வரையில் இவ்வாடல் அமைந்துள்ள பரிணாம நிலை பெரிதும் வியக்கத்தக்கது. பரத நாட்டிய சாத்திரம் போன்ற நூல்களாலும் இப்பரிணாமம் நிகழ்ந்திருத்தல் கூடும். அரங்கேற்று காதையிற் கூறப்பட்டுள்ள தேசிக் கூத்தொன்றே பழந் தமிழ்க் கூத்தினுக்குத்தக்க சான்றுவதோடு, பிறவாடல்களுக்கு இஃது முற்றிலும் மாறுபட்ட தனித் தமிழ்க் கூத்தென்பதையும் உணர்த்தும். கூத்துள் வந்துள்ள பல்வகைத் தொடர்களுக்குப் பொருள் காண வந்த உரையாசிரியர், செயிற்றியனர், மதிவாணர், பரத சேனபதியார், குண நூலுடையார், சயந்த நூலுடையார் முதலான ஆசிரியர்களை மேற்கோளாகக் காட்டுவர்.

இக் கூத்து வேத்தியல், பொதுவியல் என இருவகைப்படும். சாந்திக் கூத்து, விநோதக் கூத்தெனப் பிறிதொரு பகுப்பினை வேண்டுவாரு முளர். சிலப்பதிகாரம் இசைத் தமிழ் நூலெனற்கு, அரங்கேற்றுகாதை, கானல்வரி, வேனிற்காதை, ஆய்ச்சியர் குரவை, குன்றக் குரவை, வேட்டுவவரி, எனவரும் ஆறு காதைகளும் போதிய சான்றுகளாம்.

தென்னாட்டு இசை கருநாடக இசையெனப் பெயர் பெறு மேனும் வட நாட்டிசையியலைப் பெரிதும் பின்பற்றி நிகழ்வ தொன்றாம். நூற்றாண்டுகள் பல கழிந்தாலும் இன்றைக்கும் எத்தனையோ வழிகளில் வேறுபட்டுத் தனித் தன்மையை விடாது பாதுகாத்து வருகின்றது. பழைய பாடன் முறைகளி லிருந்து பல்துறைகளில் திருத்தமும் செம்மையும் அடைந்துளது.

சிலப்பதிகாரத்திற் கண்ட தமிழர் வாழ்க்கை ஆரியர் கொள்கைகளோடும் அவர்தம் மதக் கருத்துக்களோடும் பெரி தும் ஒற்றுமையுடையனவாய்க் காண்கின்றன. தொல்காப் பியம் போன்ற இலக்கண நூலிலும், சங்க காலத்தெழுந்த நற்றிணை, அக நானூறு, புற நானூறு போன்ற தொகை நூல் களிலும், ஆரியக்கருத்துக்கள் பலவாகக் காண்கின்றன. தமிழ்க் கருத்து ஆரியக்கருத்தோடொன்றியே பழங்காலந்தொட்டு வழங்கி வருகின்ற தென்பதை இதனால் நாம் அறியலாம். சங்க காலத்திற்றோன்றிய தமிழ்க்கலையானது வடகலையை மேற் கொண்டு வளர்ந்து வருகின்றதென ஐயமின்றித் துணியலாம். சிலப்பதிகார நூலாசிரியர் வட மொழியினெழுந்த நாடகம், இசை, புராணேதிகாசங்கள் முதலிய வற்றுள் முற்றிய அறி வினைப் பெற்றிருத்தல் வேண்டும். கீழ்வருவன தென்னாட்டு இலக்கியங்களிலுள்ள வடகலைக் கலப்புக்கள் பலவுள் சில வாகும்.

1. நூலின் தொடக்கத்துப் பரிதி, மதி, இந்திரன் முத லான மறைக் கடவுளர்க்கு வாழ்த்தெடுத்தல்.

2. கோவலன் கண்ணகி திருமண நிகழ்ச்சிக் கண்ணே மறையோன் சடங்கு காட்டல். கிருஹ்ய சூத்திரத் துக் கூறியாங்கு வணிகர் பெருமகன் கோவலன் கண்ணகியோடு தீவலம் வருதல். பழந் தமிழ் வேந் தர்கள் வேத வேள்வியைக் கேள்வி மறையோன்

துணையால் வேட்பித்த நாட்டொடங்கித்தமிழ் நாட்டில் அங்கி வணக்கம் நிலைபெற்றமை. வேட்பித்த காரணத்தான் அவ்வவ் வேள்வியின் பெயரைத்தம் பட்டப் பெயராகத்தம் பெயர் முன்னே கொண்ட சோழன் இராஜ சூயம் வேட்ட பெரு நற்கிள்ளி, சேரமான் பல்யானைச் செல்கெழு குட்டுவன், பாண்டியன் பல் யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி என்னும் வேந்தர் மேற்குறித்த செய்திக்குத் தக்க சான்றுவர்.

3. வட நூல்களிற் குறித்த உத்தர குரு போக பூமியென்பது. பதிற்றுப்பத்து, பாலைக் கௌதமனுர் பல் யானைச் செல்கெழு குட்டுவன் என்னும் சேர வேந்தன் துணையால் உடம்பொடு துறக்கம் புக்கான் என்று கூறல்.

4. ஆடல் பாடலைப்பற்றிய பொதுவர்ணனை, சோழன் அவைக்கண் ணுடிய மாதவியின் ஆடல். யாழ் தனித் தமிழிசைக் கருவியேனும் ஆடற்கலை வட கலையிற் கடன் கொண்டமை.

5. அரசர் மனைக்கண் உழையராகச் சூதர் மாகதர் இவரை நியமனம் செய்தல்.

6. சிவபெருமான், பலதேவன், முருகன்,விஷ்ணு இந்திரன் முதலிய கடவுளரையும் அவர்தம் வணக்கத்தையும் பல்லிடங்களிற் கூறல்.

கல்வி வல்ல அந்தணர் நாட்டின் ஒரு மூலையிலிருந்து இன்னெரு மூலைவரைக்கும் அறிவொளியைப் பரப்புதலே பெரு நோக்கமாகக் கொண்டு திரிந்து வந்தமையின் ஆரியக்கலைக் கருத்துக்கள் தென்னுட்டில் நிலை பெற்றன போலும்! திற வோருரைக்குஞ் செயலாகச் சான்றோரோற் பேசப்பெறும் புராண விரிவுரை புறஞ் சேரியைத் தமக்கிடமாகக் கொண்டு தவம்புரியும் தவசிகள் செய்திருக்க வேண்டும்.

மேற் காட்டிய சான்றுகளிலிருந்து கலைகளைப் பொறுத்த மட்டில் எட்டுத் தொகை, பத்துப் பாட்டு, தொல் காப்பியம் முதலான நூல்களினின்றும் சிலப்பதிகாரம் சிறிதளவேனும் மாறுபட்டதன்றெனக் கூறுதல் பொருந்தும். அங்ஙனம் கூறுதற்கு விளக்கமான கலைக்கருத்துக்கள் இல்லையெனக் கூறுவார்

உளராயின், காலத்தே இன்னின்ன நியதிக்குட்பட்டு இங்ஙனம் பாடவேண்டு மென்னுங் கட்டுப்பாடும் அடிப்பட்ட வழக்குமே அவர்தமை அங்ஙனம் செய்யவிடாது தடுத்திருக்கலாம் எனக் கூறுவதே நேரிய விடையாம். புற நானூறு அக நானூறு போன்ற நூல்களிலிருந்து மதச் சான்றுகள் நிறையக் கிடைக்க வில்லையென்றால், அவை மூவேந்தர்களையும், வள்ளல்களையும், சிற்றரசர்களையும் புலவர் பெருமக்கள் புகழ்ந்தும், இன்பத்தைச் சிறப்பித்தும் பாடப்பட்ட செய்யுட்களே யாகலின், அவற்றில் நமக்கு வேண்டிய அளவுக்குக் கிடைக்கவில்லை. நல்லந்துவனார், தாம் கடவுளைக் குறித்துப் பாடிய பரிபாடலில் வேதபுராணங்களில் தமக்கிருக்கும் பேரறிவு புலப்படுமாறு பல்லிடங்களிலும் பற்பல நுண்கருத்துக்களை யமைத்திருப்பது காண்க.

## ஆசிரியர் இளங்கோவடிகள்

இளங்கோ சேரலாதனின் இளையமகன். சேரன் செங்குட்டுவன் மூத்தோன். ‘இளங்கோ’ என்னும் தொடரே இளைய வேந்தன் என்னும் பொருளைத் தருகின்றது. அஃதொருகால் அரச குமரர்க்குப் பட்டமாகினு மாகலாம். இளங்கோவின் பிள்ளைப்பெயர் யாதெனத் துணிந்து கூறுதற்கில்லை. வரம்பில் செல்வம் நிரம்பப் பெற்ற அரச மரபிற் பிறந்து, கலைகளைக் கசடறக்கற்று, புலவர் பெருமக்களுள் முன்னணியில் வைத்தெண்ணும் தலைமை பெற்ற இளங்கோ அரச செல்வத்தைத் துறந்து, தியாகமேற்கொண்டு துறவியாய் வாழ்ந்தது வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந்த செய்திகளுள் ஒன்றாகின்றது.

ஒரு நாள் சேரலாதன் நாளோலக்கத்தில் சிங்கஞ்சுமந்த மணியணைமிசைச் சிறக்க வீற்றிருந்தனன். அக்காலை அங்கொரு பெருங்கணி அரசனை நோக்கி, “வேந்தர்பெரும! நீ அண்மையில் வானவர்க்கு விருந்தாகுவை, நின் இளைய மகன் (இளங்கோ) அந்தமிலின்பத்து அரசாவான்” என்றான். அதனைக்கேட்ட செங்குட்டுவன் துணுக்குற்றான், ‘என்னே முறைமை பிறழ்ந்தவாறு!’ என்றான். அவன் முகத்தினை முன்னத்தின் உணர்ந்த இளங்கோ தன் அண்ணனே அரசு கட்டிற்குரியோன் என்னும் முறைபற்றி இம்மியுந்தாழாது துறவியா

யினன். செங்குட்டுவன் கவற்சி நீங்கிக் களிகொண்டான். துறவியர் அகநகரில் வதியாராகலின், இளங்கோவடிகள் அரண்மனை நீத்து நகர்ப்புறத்துள்ள குணவாயிற் கோட்டத்தில் தங்கியிருந்தார்.

## இளங்கோ வரலாற்றுசிரியர்

இளங்கோ துறவுமேற்கொண்டு தனியே வாழ்ந்தார். அக்காலை சில புலவர்கள் அவரை அடைந்து கண்டனர். சங்கப் புலவரும், மணிமேகலை யாசிரியருமான கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனுர் அடிகட்கு நெருங்கிய நண்பர். பதிற்றுப் பத்து, அகநானூறு புறநானூறு முதலான தொகை நூல்களின் வாயிலாக இவ்விரு நூலாசிரியர்க்குஞ் சமகாலத்திருந்த புலவர் பெருமக்களையும் சான்ருேர்களையும் ஒருவாறு நாம் அறியலாம். பதிற்றுப்பத்துள் ஐந்தாம் பத்தின் ஆசிரியரான பரணர் இளங்கோவடிகட்குச் சமகாலத்தினர். கபிலரும் ஏனைப்புலவருட் சிலரும் சமகாலத்தவர்தாம். ஒருகாலத்தில் உடனிருந்து ஆட்சிபுரிந்த தமிழ்நாட்டு மூவேந்தரின் குல வரலாறுகளைத் துலைநாவன்ன நடுவுநிலைமையில் நின்று ஒருகாப்பியமியற்ற, அரசவங்கிசத்திற் பிறந்து, கலைக்கடலை நிலைகண்டுணர்ந்து, கருவிலே வாய்த்த திருவுடையராயிருந்தும் முறைமை முரணைப்பாதுகாக்கத் துறவுகொண்டு வாழ்க்கைத் தொல்லைகள் சிறிது மில்லாத இளங்கோவடிகளினும் தகுதியுடையாரெவர்? மணிமேகலையை அவரே பாடி முடிப்பான் அடிகோலியும் வைத்திருந்தனராம். தம்மைப்போன்ற புலவர் பெருமானுகிய சாத்தனுர் மணிமேகலைக் காப்பியத்தைப் பாடி முடித்துவிட்டமை கேட்டு அம்முயற்சியிற்றீர்ந்து மனவமைதி கொண்டனராம். ஏனைப்பரிசில் வாழ்க்கைப் புலவர் போலக் குன்றும் மலையுங்கடந்து, பழுமரந்தேறும் பறவை போல அரசர் தம் அவைக்களஞ் சென்று, பாடித்திரிந்தவரல்லர். அடிகளின் கருத்துத் தமிழ்வேந்தர் தம் உண்மையான வரலாறுகளை நயம்பட, சுவைகெழும, எழுதி முடிக்கவேண்டு மென்பதேயாகும். பிறவேந்தர்களை வருணிக்கும் போது அவர்தம்மை இழித்துரைத்தும் தம் தம்முனைப் பற்றிக் கூறும்போது ஓரம்போகி உயர்வுநவிற்சியாற் புகழ்ந்தும் கூருத நடுவுநிலை, அடிகட்கே கைவந்த அருங் குணங்களுள் ஒன்ருகும். இத்தகைய பெருந்தொண்டினைச் செய்த அடிகளை வாழ்த்தி அவர்தம் கூற்றுக்கள் வாயிலாகவே அக்கால வரலாறுகளை நாம் இயன்ருங்கறிகிறோம்.

## அடிகளின் மதம்

இளங்கோவடிகள் எக்காலத்தினர் என்னும் வாதத்திற்கு நாம் போதல் வேண்டுதலில்லை. சேரன் செங்குட்டுவன் காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதி யென்று அறுதியிடப் பெற்ற பின் இளங்கோவடிகளின் காலத்தைப் பற்றி ஆராய வேண்டுவது ஏன்? இதனினும் இவர்தம் மதச்சார்புகளை அறிதல் பெரிதும் இன்றியமையாதன. குணவாயிற் கோட்ட மென்னுந் தொடர்க்கு 'அருகன் கோயில்' என்று அடியார்க்கு நல்லார் பொருள் கண்டார். ஜைனக் கோயில்களனைத்தும் அப்பெயராலேயே வழங்குதல் பெற்றன. 'அடிகள்' என்னுஞ் சொல் அவர்தம் பெயரைச் சார்ந்துள்ளமையின் காலஞ் சென்ற அறிஞர் கனக சபைப்பிள்ளை, இளங்கோ வடிகள் 'நிர்க்கிரந்தர்' என்னும் பகுப்பினைச் சார்ந்த ஜைனத்துறவியாவர் என்னுங் கருத்துக் கொண்டார்.

சேரன் செங்குட்டுவன் பின் பற்றி வந்த மதச்சார்பு பற்றி, இளங்கோவடிகளும் அம்மதத்தினரே என்பாரும் உளர். அவர் "'அடிகள்' என்னுஞ் சொல் ஒருவர்தம் பெருமையினை உணர்த்துவதாயுளது. இக்காலத்தும் துறவியர் அங்ஙனம் வழங்கப் பெறுதலை வழக்கிற் காணலாம். மெய்யுணர்வில் ஈடுபட்ட சான்றோர் எம்மதச் சார்புடையரேனும் 'அடிகள்' என்னும் பெயரைப் பெறுவர். 'கோட்டம்' என்னும் சொல் கோயில் கட்கெல்லாம் பொது. அஃது ஜைனக் கோயில் ஒன்றனையே உணர்த்துமெனல் பொருந்தாது" என்பர். இச் செய்தியாலும் பத்தினிக் கடவுளைப் பிரதிட்டித்த காலையில் அடிகள் உடனிருந்தமையாலும், பத்தினிக் கடவுளை வணங்கச் சென்றதனாலும் இவர் செங்குட்டுவனைப் போலவே வைதிக மதத்தினர் என்றல் பொருந்துவதேயாகும். செங்குட்டுவன் வைதிக மதத்தினன் என்பது முன்னர்க் கூறப்பட்ட செய்தி. அன்றியும் சிவபெருமான் அருளாற் செங்குட்டுவன் பிறந்தான் என்று அடிகளே கூறியுள்ளார். ஆனால், அவன் வெறி கொண்ட வீரசைவனல்லன். அரியும் அரனும் செங்குட்டுவற்கு ஒருவர் தாம். பிற மதங்களை மறந்தும் இகழாதவன். பத்தினி வணக்கத்தை முதன் முதலில் தென்னாட்டில் தோற்றுவித்தவன் இச் சேரன் செங்குட்டுவனேயாவன். அவன் கருத்து

முற்றுப் பெறுமாறு உடனிருந் துதவியவர் இளங்கோவடிகள். அடிகள் கூற்றுக்களிலிருந்து அவர்தம் சமயக் கொள்கை நுட்பமாய் அளந்தறிந்து கூறுவதற்கில்லை. சிலப்பதிகாரப் பதிப்பாசிரியரான டாக்டர். உ. வே. சாமிநாதய்யர் இளங்கோவடிகளைச் சைவரென்றே கருதினர். அக்காலத்தில் சைவ, வைணவ மதங்கள் குறுகிய நோக்கோடும் கட்டுப்பாடுகளோடும் இருக்கவில்லை யென்றே கூறவேண்டியிருக்கின்றது. நாட்டில் நிறுவப் பெற்ற வைதிக மதமொன்றனையே இளங்கோவடிகள் பின்பற்றினர் எனக் கூறுவது எல்லாப்படியானும் நன்கு பொருந்துஞ் செய்தியாகும்.

வி. ஆர். ஆர். தீட்சிதர்.

## பதிப்புரை

'தமிழுக்கு இப்போது யோகம் பிறந்திருக்கிறது' என்று ஒரு தமிழ் அறிஞர் சொன்னார். ஆம், உண்மைதான். சர். ஆர். கே. எஸ். போன்ற அறிஞர்கள் தமிழில் எழுதத் தொடங்கி இருப்பதே யோகந்தானே?

சிலப்பதிகாரம் ஒப்புயர்வற்ற அற்புதக் காவியம். இந்த 'நெஞ்சை அள்ளும் சிலப்பதிகார'த்தின் இனிமையையும், மணத்தையும் எல்லோரும் அனுபவிக்க வேண்டும் என்பது சர். ஆர். கே. எஸ். அவர்களின் விருப்பம். "யாமறிந்த புலவரிலே இளங்கோவைப்போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை, உண்மை வெறும் புகழ்ச்சியில்லை" என்று பாரதியார் பெருமிதத்தோடு முழக்கிய, இளங்கோவடிகளின் கவிதைக் கடலுள் தாம் தேங்கித்திளைத்து இன்புற்ற ஆனந்தத்தை ஆர். கே. எஸ். அவர்கள் மற்றவர்களுக்கும் பங்கீடு செய்து மகிழ்ச்சி அடைகின்றார்கள். இதே போன்று சிலப்பதிகாரத்தின் மற்ற காண்டங்களின் இன்பத்தையும் அவர்கள் வழங்குவார்கள். அவர்கள் பெற்ற இன்பத்தை எல்லோரும் பெற வேண்டும் என்பதே நமது ஆசை.

இந்தப் பதிப்பை வெளியிடுவதில் கண்ணும் கருத்துமாகக் கூடவேயிருந்து அச்சுத்தாள்களைத் திருத்தி உதவிய இளம் பண்டிதர் நண்பர், கே. சி. எஸ். அருணசலம் அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகின்றது.

கோவை
7–9–'46

**புதுமலர் நிலையத்தார்**

## பொருள் அடக்கம்

# சிலப்பதிகாரம்-புகார்க்காண்டம்:

## மூலம்

### பதிகம்

குணவாயிற் கோட்டத் தரசுதுறந் திருந்த
குடக்கோச் சேர லிளங்கோ வடிகட்குக்
குன்றக் குறவ ரொருங்குடன் கூடிப்
"பொலம்பூ வேங்கை நலங்கிளர் கொழுநிழ
லொருமுலை யிழந்தாளோர் திருமா பத்தினிக்
கமரர்க் கரசன் றமர்வந் தீண்டியவள்
காதற் கொழுநனைக் காட்டி யவளொடெங்
கட்புலங் காண விட்புலம் போய
இறும்பூது போலுமஃ தறிந்தரு ணீ"யென,
வவனுழை யிருந்த தண்டமிழ்ச் சாத்தன்,
"யானறி குவனது பட்டதென்" றுரைப்போ;
"ஆரங் கண்ணிச் சோழன் மூதூர்ப்
பேராச் சிறப்பிற் புகார்நக ரத்துக்
கோவல னென்பானோர் வாணிக னவ்வூர்
நாடக மேத்து நாடகக் கணிகையொ
டாடிய கொள்கையி னரும்பொருள் கேடுறக்
கண்ணகி யென்பாண் மனைவி யவள்காற்
பண்ணமை சிலம்பு பகர்தல் வேண்டிப்
பாடல்சால் சிறப்பிற் பாண்டியன் பெருஞ்சீர்
மாட மதுரை புகுந்தன னதுகொண்டு
மன்பெரும் பீடிகை மறுகிற் செல்வோன்
பொன்செய் கொல்லன் றன்கைக் காட்டக்
கோப்பெருந் தேவிக் கல்லதை யிச்சிலம்
பியாப்புற வில்லையீங் கிருக்கென் றேகிப்
பண்டுதான் கொண்ட சில்லரிச் சிலம்பினைக்
கண்டனன் பிறனோர் கள்வன் கையென,

வினைவிளை கால மாதலின் யாவதுஞ்
சினையலர் வேம்பன் றேரா னாகிக்
கன்றிய காவலர்க் கூயக் ' கள்வனைக்
கொன்றச் சிலம்பு கொணர்க வீங்'கெனக்
கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி,
நிலைக்களங் காணா ணெடுங்கணீ ருகுத்துப்
பத்தினி யாகலிற் பாண்டியன் கேடுற
முத்தார மார்பின் முலைமுகந் திருகி
நிலைகெழு கூட னீளெரி யூட்டிய
பலர்புகழ் பத்தினி யாகு மிவளென;"
'வினைவிளை கால மென்றீ ரியாதவர்
வினைவிளை' யென்ன, விறலோய்! கேட்டி:
"யதிராச் சிறப்பின் மதுரை மூதூர்க்
கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியிலில்
வெள்ளியம் பலத்து நள்ளிருட் கிடந்தே;
ஆரஞ ருற்ற வீரபத் தினிமுன்
மதுரமா தெய்வம் வந்து தோன்றிக்
கொதியழற் சீற்றங் கொங்கையின் விளைத்தோய்!
முதிர்வினை நுங்கட்கு முடிந்த தாகலின்,
முந்தைப் பிறப்பிற் பைந்தொடி; கணவனொடு
சிங்கா வண்புகழ்ச் சிங்க புரத்துச்
சங்கம னென்னும் வாணிகன் மனைவி
யிட்ட சாபங் கட்டிய தாகலின்,
வாரொலி கூந்தனின் மணமகன் றன்னை
யீரேழ் நாளகத் தெல்லை நீங்கி
வானோர் தங்கள் வடிவி னல்லதை
யீனோர் வடிவிற் காண்ட லில்லெனக்
கோட்டமில் கட்டுரை கேட்டனன் யா"னென,
"வரைசியல் பிழைத்தோர்க் கறங்கூற் றாவதூஉம்,
முரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்,
மூழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉஞ்,
சூழ்வினைச் சிலம்பு காரண மாகச்
சிலப்பதி கார மென்னும் பெயரா
னாட்டுதும் யாமோர் பாட்டுடைச் செய்யு"ளென

'முடிகெழு வேந்தர் மூவர்க்கு முரிய
தடிக ணீரே யருளுகெ"ன் றார்க்கவர்
மங்கல வாழ்த்துப் பாடலுங், குரவர்
மனையறம் படுத்த காதையு நடநவின்
மங்கை மாதவி யரங்கேற்று காதையு,
மந்தி மாலைச் சிறப்புச்செய் காதையு,
மிந்திர விழவூ ரெடுத்த காதையுங்,
கடலாடு காதையும்,
மடலவிழ், கானல் வரியும், வேனில்வந் திறுத்தென
மாதவி யிரங்கிய காதையுந், தீதுடைக்
கனாத்திற முரைத்த காதையும், வினாத்திறத்து
நாடுகாண் காதையுங், காடுகாண் காதையும்,
வேட்டுவ வரியுந், தோட்டலர் கோதையொடு
புறஞ்சேரி யிறுத்த காதையுங், கறங்கிசை
யூர்காண் காதையுஞ், சீர்சா னங்கை
யடைக்கலக் காதையுங், கொலைக்களக் காதையு,
மாய்ச்சியர் குரவையுந், தீத்திறங் கேட்ட
துன்ப மாலையு, நண்பக னடுங்கிய
வூர்சூழ் வரியுஞ், சீர்சால் வேந்தனொடு
வழக்குரை காதையும், வஞ்சின மாலையு,
மழற்படு காதையு, மருந்தெய்வந் தோன்றிக்
கட்டுரை காதையு, மட்டலர் கோதையர்
குன்றக் குரவையு, மென்றிவை யனைத்துடன்,
காட்சி கால்கோ, ணீர்ப்படை, நடுகல்,
வாழ்த்து, வரந்தரு காதையொ,
டிவ்வா றைந்து,
முரையிடை யிட்ட பாட்டுடைச் செய்யு
ளுரைசா லடிக ளருள, மதுரைக்
கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்;
இது,
பால்வகை தெரிந்த பதிகத்தின் மரபென்.

# உரைபெறு கட்டுரை

1 அன்றுதொட்டுப் பாண்டியனாடு மழைவறங் கூர்ந்து, வறுமையெய்தி, வெப்புநோயுங் குருவுந் தொடரக், கொற்கையிலிருந்த வெற்றிவேற்செழியன், நங்கைக்குப் பொற்கொல்லர் ஆயிரவரைக் கொன்று, களவேள்வியால் விழவொடு சாந்தி செய்ய, நாடுமலிய மழைபெய்து, நோயுந் துன்பமும் நீங்கியது.

2 அதுகேட்டுக் கொங்கிளங்கோசர், தங்கள் நாட்டகத்து, நங்கைக்கு விழவொடு சாந்தி செய்ய, மழை தொழிலென்றும் மாறாதாயிற்று.

3 அதுகேட்டுக் கடல்சூழிலங்கைக் கயவாகுவென்பான், நங்கைக்கு நாட்பலி பீடிகைக் கோட்டமுந் துறுத்தாங்கு அரந்தைகெடுத்து வரந்தருமிவளென, ஆடித்திங்க ளகவையின், ஆங்கோர் பாடிவிழாக்கோள் பன்முறை யெடுப்ப, மழைவீற்றிருந்து வளம்பல பெருகிப், பிழையாவிளையுள் நாடாயிற்று.

4 அதுகேட்டுச் சோழன்பெருங்கிள்ளி, கோழியகத்து எத்திறத்தானும் வரந்தருமிவளோர் பத்தினிக்கடவுளாகுமென, நங்கைக்குப் பத்தினிக் கோட்டமுஞ் சமைத்து, நித்தல்விழாவணி நிகழ்வித்தோனே.

உரைபெறு கட்டுரை முற்றிற்று

# புகார்க்காண்டம்

## மங்கலவாழ்த்துப் பாடல்

திங்களைப் போற்றுதும்! திங்களைப் போற்றுதும்!
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடை
வங்க ணுலகளித்த லான்; [போன்றிவ்,
ஞாயிறு போற்றுதும்! ஞாயிறு போற்றுதும்!
காவிரி நாடன் றிகிரிபோற் பொற்கோட்டு
மேரு வலந்திரித லான்;
மாமழை போற்றுதும்! மாமழை போற்றுதும்!
நாமநீர் வேலி யுலகிற் கவனளிபோன்
மேனின்று தான்சுரத்த லான்;
பூம்புகார் போற்றுதும்! பூம்புகார் போற்றுதும்!
வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோ
டோங்கிப் பரந்தொழுக லான்;
ஆங்கு,
பொதியி லாயினு, மிமய மாயினும்,
பதியெழு வறியாப் பழங்குடி கெழீஇய
பொதுவறு சிறப்பிற் புகாரே யாயினு,
நடுக்கின்றி நிலைஇய வென்பத லல்லதை,
யொடுக்கங் கூறா ருயர்ந்தோ ருண்மையின்,
முடித்த கேள்வி முழுதுணர்ந் தோரே;
அதனால்,
நாகநீ ணகரொடு, நாகநா டதனொடு,
போகநீள் புகழ்மன்னும் புகார்நக ரதுதன்னில்,
மாகவா னிகர்வண்கை மாநாய்கன் குலக்கொம்ப,
ரீகைவான் கொடியன்னா ளீராறாண் டகவையாள்
அவளுந்தான்,
போதிலார் திருவினாள் புகழுடை வடிவென்றுந்,
தீதிலா வடமீனின் றிறமிவ டிறமென்று,
மாதரார் தொழுதேத்த வயங்கிய பெருங்குணத்துக்

காதலாள், பெயர்மன்னுங் கண்ணகியென் பாண்
ஆங்கு, [மன்னோ;
பெருநில முழுதாளும் பெருமகன் றலைவைத்த
ஒருதனிக் குடிகளோ டுயர்ந்தோங்கு செல்வத்தான்
வருநிதி பிறர்க்கார்த்து மாசாத்து வானென்பா,
னிருநிதிக் கிழவன்மக னீரெட்டாண் டகவையான்;
அவனுந்தான்,
மண்டேய்த்த புகழினன், மதிமுக மடவார்தம்
பண்டேய்த்த மொழியினு ராயத்துப் பாராட்டிக்
கண்டேத்துஞ் செவ்வேளென் றிசைபோக்கிக் காத
கொண்டேத்துங் கிழமையான், கோவல [லாற்
அவரை, [னென்பான்மன்னோ;
இருபெருங் குரவரு மொருபெரு நாளான்
மணவணி காண மகிழ்ந்தனர்; மகிழ்ந்துழி,
யானை யெருத்தத் தணியிழையார் மேலிரீஇ,
மாநகர்க் கீந்தார் மணம்;
அவ்வழி,
முரசியம்பின; முருடதிர்ந்தன; முறையெழுந்தன
யரசெழுந்த தொர் [பணிலம்; வெண்குடை
[படியெழுந்தன; வகலுண்மங்கல வணியெழுந்தது;
மாலைதாழ் சென்னி வயிரமணித் தூணகத்து,
நீல விதானத்து, நித்திலப்பூம் பந்தர்க்கீழ்,
வானூர் மதியஞ் சகடணைய, வானத்துச்
சாலி யொருமீன் றகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலஞ் செய்வது காண்பார்க ணோன்பென்னை!
விரையினர், மலரினர், விளங்கு மேனிய,
ருரையினர், பாட்டின, ரொசிந்த நோக்கினர்;
சாந்தினர், புகையினர், தயங்கு கோதைய,
ரேந்திள முலையின, ரிடித்த சுண்ணத்தர்;
விளக்கினர், கலத்தினர், விரிந்த பாலிகை
முளைக்குட நிரையினர், முகிழ்த்த மூரலர்;
போதொடு விரிகூந்தற் பொலனறுங் கொடியன்னார்
காதலற் பிரியாமற், கவவுக்கை ஞெகிழாமற்,

றீதறு கெனவேத்திச், சின்மலர் கொடுதூவி,
யங்க ணுலகி னருந்ததி யன்னாளை
மங்கல நல்லமளி யேற்றினார்; தங்கிய
விப்பா லிமயத் திருத்திய வாள்வேங்கை
யுப்பாலைப் பொற்கோட் டுழையதா; வெப்பாலுஞ்
செருமிகு சினவேற் செம்பிய
னொருதனி யாழி யுருட்டுவோ னெனவே.

# மனையறம்படுத்த காதை

உரைசால் சிறப்பி னரைசுவிழை திருவிற்
பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்,
முழங்குகடன் ஞால முழுவதும் வரினும்
வழங்கத் தவாஅ வளத்த தாகி,
யரும்பொரு டரூஉம் விருந்திற் றேஎ
மொருங்குதொக் கன்ன உடைப்பெரும் பண்டங்
கலத்தினுங் காலினுந் தருவன ரீட்டக்,
குலத்திற் குன்றாக் கொழுங்குடிச் செல்வ
ரத்தகு திருவி னருந்தவ முடித்தோ
ருத்தர குருவி னொப்பத் தோன்றிய
கயமலர்க் கண்ணியுங், காதற் கொழுநனு
மயன்விதித் தன்ன மணிக்கா லமளிமிசை
நெடுநிலை மாடத் திடைநிலத் திருந்துழிக்,
கழுநீ ராம்பன், முழுநெறிக் குவளை
யரும்புபொதி யவிழ்ந்த சுரும்பிமிர் தாமரை,
வயற்பூ வாச மளைஇ, யயற்பூ
மேதகு தாழை விரியல்வெண் டோட்டுக்
கோதை மாதவி சண்பகப் பொதும்பர்த்
தாதுதேர்ந் துண்டு, மாதர்வாண் முகத்துப்
புரிகுழ லளகத்துப் புகலேக் கற்றுத்
திரிதரு சுரும்பொடு, செவ்வி பார்த்து,
மாலைத் தாமத்து மணிநிரைத்து வகுத்த
கோலச் சாளரக் குறுங்க ணுழைந்து,
வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்
கண்டுமகிழ் வெய்திக் காதலிற் சிறந்து,
விரைமலர் வாளியொடு வேனில்வீற் றிருக்கு
நிரைநிலை மாடத் தரமிய மேறிச்,
சுரும்புணக் கிடந்த நறும்பூஞ் சேக்கைக்
கரும்பும் வல்லியும் பெருந்தோ ளெழுதி,
முதிர்கடன் ஞால முழுவதும் விளக்குங்

கதிரொருங் கிருந்த காட்சி போல,
வண்டுவாய் திறப்ப நெடுநிலா விரிந்த
வெண்டோட்டு மல்லிகை விரியன் மாலையொடு,
கழுநீர்ப் பிணையன் முழுநெறி பிறழத்
தாரு மாலையு மயங்கிக் கையற்றுத்
தீராக் காதலிற் றிருமுக நோக்கிக்
கோவலன் கூறுமோர் குறியாக் கட்டுரை;
"குழவித் திங்க ளிமையவ ரேத்த
வழகொடு முடித்த வருமைத் தாயினு,
முரிதி னின்னோ டுடன்பிறப் புண்மையிற்,
பெரியோன் றருக திருநுத லாகென;
வடையார் முனையகத் தமர்மேம் படுநர்க்குப்
படைவழங் குவதோர் பண்புண் டாகலி,
னுருவி லாள னொருபெருங் கருப்புவி
லிருகரும் புருவ மாக வீக்க;
மூவா மருந்தின் முன்னர்த் தோன்றலிற்,
றேவர் கோமான், றெய்வக் காவற்
படைநினக் களிக்கவத னிடைநினக் கிடையென
வறுமுக வொருவனோர் பெறுமுறை யின்றியு,
மிறுமுறை காணு மியல்பினி னன்றே
யஞ்சுடர் நெடுவே லொன்றுநின் முகத்துச்
செங்கடை மழைக்க ணிரண்டா வீத்தது;
மாயிரும் பீலி மணிநிற மஞ்ஞை,நின்
சாயற் கிடைந்து தண்கா னடையவு;
மன்ன, நன்னுதன்! மென்னடைக் கழிந்து
நன்னீர்ப் பண்ணை நளிமலர்ச் செறியவு,
மளிய தாமே! சிறுபசுங் கிளியே,
குழலும் யாழு மமிழ்துங் குழைத்தநின்
மழலைக் கிளவிக்கு வருந்தின வாகியு,
மடநடை மாது!நின் மலர்க்கையி னீங்கா,
துடனுறைவு மரீஇ, யொருவா வாயின;
நறுமலர்க் கோதை!நின் நலம்பா ராட்டுநர்,
மறுவின் மங்கல வணியே யன்றியும்,
பிறிதணி யணியப் பெற்றதை யெவன்கொல்?

பல்லிருங் கூந்தற் சின்மல ரன்றியு,
மெல்லவிழ் மாலையொ டென்னுற் றனர்கொ?
ஞன நல்லகி னறும்புகை யன்றியு,
மான்மதச் சாந்தொடு வந்ததை யெவன்கொ?
றிருமுலைத் தடத்திடைத் தொய்யி லன்றியு,
மொருகாழ் முத்தமொ டுற்றதை யெவன்கொ?
றிங்கண்மூத் தரும்பவுஞ், சிறுகிடை வருந்தவு
மிங்கிவை யணிந்தன, ரென்னுற் றனர்கொன்?
மாசறு பொன்னே! வலம்புரி முத்தே!
காசறு விரையே! கரும்பே! தேனே!
யரும்பெறற் பாவா! யாருயிர் மருந்தே!
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே!
மலையிடைப் பிறவா மணியே யென்கோ?
வலையிடைப் பிறவா வமிழ்தே யென்கோ?
யாழிடைப் பிறவா விசையே யென்கோ?
தாழிருங் கூந்தற் றையா! னின்னை”யென்,
றுலவாக் கட்டுரை பலபா ராட்டித்,
தயங்கிணர்க் கோதை தன்னொடு தருக்கி,
வயங்கிணர்த் தாரோன் மகிழ்ந்துசெல் வுழிநாள்,
வாரொலி கூந்தலைப் பேரியற் கிழத்தி
மறப்பருங் கேண்மையோ டறப்பரி சாரமும்,
விருந்து புறந்தரூஉம் பெருந்தண் வாழ்க்கையும்
வேறுபடு திருவின் வீறுபெறக் காண,
உரிமைச் சுற்றமோ டொருதனி புணர்க்க,
யாண்டுசில கழிந்தன; விற்பெருங் கிழமையிற்
காண்டகு சிறப்பிற் கண்ணகி தனக்கென்.

(வெண்பா)

தூமப் பணிகளொன்றித் தோய்ந்தா லென
காமர் மனைவியெனக் கைகலந்து-நாமம் [வொருவார்
தொலையாத வின்பமெலாந் துன்னிஞர் மண்மே
னிலையாமை கண்டவர்போ னின்று.

# அரங்கேற்று காதை

தெய்வ மால்வரைத் திருமுனி யருள
வெய்திய சாபத் திந்திர சிறுவனொடு,
தலைக்கோற் றானத்துச் சாப நீங்கிய
மலைப்பருஞ் சிறப்பின் வானவர் மகளிர்
சிறப்பிற் குன்றாச் செய்கையொடு பொருந்திய
பிறப்பிற் குன்றாப் பெருந்தோண் மடந்தை
தாதவிழ் புரிகுழன் மாதவி தன்னை
யாடலும் பாடலு மழகு மென்றிக்
கூறிய மூன்றி னொன்றுகுறை படாம,
லேழாண் டியற்றியோ ரீரா றாண்டிற்,
சூழ்கழன் மன்னற்குக் காட்டல் வேண்டி,
யிருவகைக் கூத்தி னிலக்கண மறிந்து,
பலவகைக் கூத்தும் விலக்கினிற் புணர்த்துப்
பதினோ ராடலும் பாட்டுங் கொட்டும்
விதிமாண் கொள்கையின் விளங்க வறிந்தாங்
காடலும் பாடலும் பாணியுந் தூக்குங்
கூடிய நெறியின கொளுத்துங் காலைப்
பிண்டியும்,பிணையலு,மெழிற்கையுந்,தொழிற்கையுங்
கொண்ட வகையறிந்து, கூத்துவரு காலைக்
கூடை செய்தகை வாரத்துக் களைதலும்,
வாரஞ் செய்தகை கூடையிற் களைதலும்,
பிண்டி செய்தகை யாடலிற் களைதலு,
மாடல் செய்தகை பிண்டியிற் களைதலுங்,
குரவையும் வரியும் விரவல செலுத்தி,
யாடற் கமைந்த வாசான் றன்னொடும்;
யாழுங் குழலுஞ் சீரு மிடறுந்
தாழ்குரற் றண்ணுமை யாடலொ, டிவற்றி
னிசைந்த பாட லிசையுடன் படுத்து,
வரிக்கு மாடற்கு முரிப்பொரு ளியக்கித்
தேசிகத் திருவி னோசை கடைப்பிடித்துத்

தேசிகத் திருவி னோசை யெல்லா
மாசின் றுணர்ந்த வறிவின னாகிக்
கவியது குறிப்பு, மாடற் றொகுதியும்,
பகுதிப் பாடலுங் கொளுத்துங் காலை,
வசையறு கேள்வி வகுத்தனன் விரிக்கு
மசையா மரபி னிசையோன் றானும்;
மிமிழ்கடல் வரைப்பிற் றமிழக மறியத்
தமிழ்முழு தறிந்த தன்மைய னாகி,
வேத்தியல் பொதுவிய லென்றிரு திறத்தி
னாட்டிய நன்னூ னன்கு கடைப்பிடித்,
திசையோன் வக்கிரித் திட்டதை யுணர்ந்தாங்
கசையா மரபி னதுபட வைத்து,
மாற்றோர் செய்த வசைமொழி யறிந்து,
நாத்தொலை வில்லா நன்னூற் புலவனும்;
மாடல் பாட லிசையே தமிழே
பண்ணே பாணி தூக்கே முடமே
தேசிக மென்றிவை யாசி னுணர்ந்து,
கூடை நிலத்தைக் குறைவின்று மிகுத்தாங்கு,
வார நிலத்தை வாங்குபு வாங்கி,
வாங்கிய வாரத் தியாழுங் குழலு
மேங்கிய மிடறு மிசைவன கேட்பக்
கூருகிர்க் கரணங் குறியறிந்து சேர்த்தி,
யாக்கலு மடக்கலு மீத்திறம் படாமைச்
சித்திரக் கரணஞ் சிதைவின்று செலுத்து
மத்தகு தண்ணுமை யருந்தொழின் முதல்வனுஞ்,
சொல்லிய வியல்பினிற் சித்திர வஞ்சனை
புல்லிய வறிந்து புணர்ப்போன் பண்பின்,
வர்த்தனை நான்கு மயலறப் பெய்தாங்,
கேற்றிய குரலிளி யென்றிரு நரம்பி
னொப்பக் கேட்கு முணர்வின னாகிப்
பண்ணமை முழவின் கண்ணெறி யறிந்து
தண்ணுமை முதல்வன் றன்னொடும் பொருந்தி,
வண்ணப் பட்டடை யாழ்மேல் வைத்தாங்,
கிசையோன் பாடிய விசையி னியற்கை

வந்தது வளர்த்து, வருவ தொற்றி,
யின்புற வியக்கி, யிசைபட வைத்து,
வார நிலத்தைக் கேடின்று வளர்த்தாங்,
கீர நிலத்தி னெழுத்தெழுத் தாக
வழுவின் றிசைக்குங் குழலோன் றானு,
மீரேழ் தொடுத்த செம்முறைக் கேள்வியி,
னோரேழ் பாலை நிறுத்தல் வேண்டி
வன்மையிற் கிடந்த தார பாகமு,
மென்மையிற் கிடந்த குரலின் பாகமு,
மெய்க்கிளை நரம்பிற் கைக்கிளை கொள்ளக்
கைக்கிளை யொழிந்த பாகமும், பொற்புடைத்
தளராத் தாரம் விளரிக் கீத்துக்
கிளைவழிப் பட்டன ளாங்கே; கிளையுந்
தன்கிளை யழிவுகண் டவள்வயிற் சேர,
வேனை மகளிருங் கிளைவழிச் சேர,
மேல துழைஇளி, கீழது கைக்கிளை,
வம்புறு மரபிற் செம்பாலை யாய;
திறுதி யாதி யாக, வாங்கவை
பெறுமுறை வந்த பெற்றியி னீங்காது,
படுமலை, செவ்வழி, பகரும் பாலையெனக்
குரல்குர லாகத் தற்கிழமை திரிந்தபின்,
முன்னதன் வகையே முறைமையிற் றிரிந்தாங்,
கிளிமுத லாகிய வெதிர்படு கிழமையுங்,
கோடி, விளரி, மேற்செம் பாலையென
நீடிக் கிடந்த கேள்விக் கிடக்கையி,
னிணைநரம் புடையன வணைவுறக் கொண்டாங்,
கியாழ்மேற் பாலை யிடமுறை மெலியக்
குழன்மேற் கோடி வலமுறை மெலிய
வலிவு மெலிவுஞ் சமனு மெல்லாம்
பொலியக் கோத்த புலமை யோனுட;
னெண்ணிய நூலோ ரியல்பினின் வழாஅது
மண்ணக மொருவழி வகுத்தனர் கொண்டு,
புண்ணிய நெடுவரைப் போகிய நெடுங்கழைக்
கண்ணிடை யொருசாண் வளர்ந்தது கொண்டு,

நூனெறி மரபி னரங்க மளக்குங்
கோலள விருபத்து நால்விர லாக,
வெழுகோ லகலத், தெண்கோ னீளத்,
தொருகோ லுயரத் துறுப்பின தாகி
யுத்தரப் பலகையோ டரங்கின் பலகை
வைத்த விடைநில நாற்கோ லாக,
வேற்ற வாயி லிரண்டுடன் பொலியத்
தோற்றிய வரங்கிற் றொழுதன ரேத்தப்
பூதரை யெழுதி மேனிலை வைத்துத்
தூண்நிழற் புறப்பட மாண்விளக் கெடுத்தாங்,
கொருமுக வெழினியும், பொருமுக வெழினியுங்
கரந்துவர லெழினியும் புரிந்துடன் வகுத்தாங்,
கோவிய விதானத் துரைபெறு நித்திலத்து
மாலைத் தாமம் வளையுட னாற்றி,
விருந்துபடக் கிடந்த வருந்தொழி லரங்கத்துப்
பேரிசை மன்னர் பெயர்புறத் தெடுத்த
சீரியல் வெண்குடைக் காம்புநனி கொண்டு,
கண்ணிடை நவமணி யொழுக்கி, மண்ணிய
நாவலம் பொலந்தகட் டிடைநிலம் போக்கிக்
காவல் வெண்குடை மன்னவன் கோயி
லிந்திர சிறுவன் சயந்த னாகென,
வந்தனை செய்து வழிபடு தலைக்கோல்
புண்ணிய நன்னீர் பொற்குடத் தேந்தி
மண்ணிய பின்னர், மாலை யணிந்து,
நலந்தரு நாளாற் பொலம்பூ ணோடை
யரசுவாத் தடக்கையிற் பரசினர் கொண்டு,
முரசெழுந் தியம்பப் பல்லிய மார்ப்ப,
வரைசொடு பட்ட வைம்பெருங் குழுவுந்,
தேர்வலஞ் செய்து கவிகைக் கொடுப்ப,
வூர்வலஞ் செய்து புகுந்துமுன் வைத்தாங்,
கியல்பினின் வழாஅ விருக்கை முறைமையிற்
குயிலுவ மாக்க ணெறிப்பட நிற்ப,
வலக்கான் முன்மிதித் தேறி, யரங்கத்து
வலத்தூண் சேர்தல் வழக்கெனப் பொருந்தி,

யின்நெறி வகையா லிடத்தூண் சேர்ந்த
தொன்னெறி யியற்கைத் தோரிய மகளிருஞ்,
சீரியல் பொலிய, நீரல நீங்க
வார மிரண்டும் வரிசையிற் பாடப்
பாடிய வாரத் தீற்றினின் றிசைக்குங்
கூடிய குயிலுவக் கருவிக ளெல்லாங்:
குழல்வழி நின்ற தியாழே, யாழ்வழித்
தண்ணுமை நின்றது தகவே, தண்ணுமைப்
பின்வழி நின்றது முழவே, முழவொடு
கூடிநின் றிசைத்த தாமந் திரிகை;
யாமந் திரிகையோ டந்தர மின்றிக்
கொட்டிரண் டுடையதோர் மண்டில மாகக்
கட்டிய மண்டிலம் பதினொன்று போக்கி,
வந்த முறையின் வழிமுறை வழாம,
லந்தரக் கொட்டுட னடங்கிய பின்னர்,
மீத்திறம் படாமை வக்காணம் வகுத்துப்
பாற்பட நின்ற பாலைப் பண்மே
னான்கி னொரீஇய நன்கன மறிந்து
மூன்றளந், தொன்று கொட்டி, யதனை
யைதுமண் டிலத்தாற் கூடை போக்கி,
வந்த வாரம்வழி மயங்கிய பின்றை,
யாறு நாலு மம்முறை போக்கிக்
கூறிய வைந்தின் கொள்கை போலப்
பின்னையு மம்முறை பேரிய பின்றைப்
பொன்னியல் பூங்கொடி புரிந்துடன் வகுத்தென,
நாட்டிய நன்னூ னன்கு கடைப்பிடித்துக்
காட்டின ளாதலிற், காவல் வேந்த
னிலைப்பூங் கோதை யியல்பினின் வழாமைத்
தலைக்கோ லெய்தித் தலையரங் கேறி,
விதிமுறைக் கொள்கையி னாயிரத் தெண்கழஞ்
சொருமுறை யாகப் பெற்றன; ளதுவே
நூறுபத் தடுக்கி எட்டுக் கடைநிறுத்த
வீறுயர் பசும்பொன் பெறுவதிம் மாலை;
மாலை வாங்குநர் சாலுநங் கொடிக்கென,

மானமர் நோக்கியோர் கூனிகைக் கொடுத்து,
நகர நம்பியர் திரிதரு மறுகிற்
பகர்வனர் போல்வதோர் பான்மையி னிறுத்த;
மாமலர் நெடுங்கண் மாதவி மாலை
கோவலன் வாங்கிக் கூனி தன்னொடு
மணமனை புக்கு, மாதவி தன்னோ
டணைவுறு வைகலி னயர்ந்தனன் மயங்கி
விடுத லறியா விருப்பின னாயினன்;
வடுநீங்கு சிறப்பிற்றன் மனையக மறந்தென்.

(வெண்பா)

எண்ணு மெழுத்து மியலைந்தும் பண்ணான்கும்
பண்ணின்ற கூத்துப் பதினொன்று-மண்ணின்மேற்
போக்கினாள் பூம்புகார்ப் பொற்றொடி மாதவிதன்
வாக்கினா லாடரங்கின் வந்து.

# அந்திமாலைச் சிறப்புச்செய் காதை

விரிகதிர் பரப்பி யுலகமுழு தாண்ட
வொருதனித் திகிரி யுரவோற் காணே;
னங்கண் வானத் தணிநிலா விரிக்குந்
திங்களஞ் செல்வன் யாண்டுளன் கொல்லெனத்,
திசைமுகம் பசந்து, செம்மலர்க் கண்கண்
முழுநீர் வார, முழுமெயும் பனித்துத்
திரைநீ ராடை யிருநில மடந்தை
யரைசுகெடுத் தலம்வரு மல்லற் காலை,
கறைகெழு குடிகள் கைதலை வைப்ப,
வறைபோகு குடிகளொ டொருதிறம் பற்றி,
வலம்படு தானை மன்ன ரில்வழிப்
புலம்பட விறுத்த விருந்தின் மன்னரிற்,
றாழ்துணை துறந்தோர் தனித்துய ரெய்தக்,
காதலர்ப் புணர்ந்தோர் களிமகிழ் வெய்தக்,
குழல்வளர் முல்லையிற் கோவலர் தம்மொடு,
மழலைத் தும்பி வாய்வைத் தூத,
வறுகாற் குறும்பெறிந் தரும்புபொதி வாசஞ்
சிறுகாற் செல்வன் மறுகிற் றூற்ற,
வெல்வளை மகளிர் மணிவிளக் கெடுப்ப,
மல்லன் மூதூர் மாலைவந் திறுத்தென,
விளைய ராயினும் பகையரசு கடியுஞ்
செறுமாண் தென்னர் குலமுத லாகலி,
னந்தி வானத்து வெண்பிறை தோன்றிப்
புன்கண் மாலைக் குறும்பெறிந் தோட்டிப்
பான்மையிற் றிரியாது பாற்கதிர் பரப்பி,
மீனர சாண்ட வெள்ளி விளக்கத்
தில்வளர் முல்லையொடு மல்லிகை யவிழ்ந்த
பல்பூஞ் சேக்கைப் பள்ளியுட் பொலிந்து
செந்துகிர்க் கோவை சென்றேந் தல்கு
லந்துகின் மேகலை யசைந்தன வருந்த,
நிலவுப்பயன் கொள்ளு நெடுநிலா முற்றத்துக்

கலவியும் புலவியுங் காதலற் களித்தாங்
கார்வ நெஞ்சமொடு கோவலற் கெதிரிக்
கோலங் கொண்ட மாதவி யன்றியுங்,
குடதிசை மருங்கின் வெள்ளயிர் தன்னொடு
குணதிசை மருங்கிற் காரகி றுறந்து,
வடமலைப் பிறந்த வான்கேழ் வட்டத்துத்
தென்மலைப் பிறந்த சந்தன மறுகத்
தாமரைக் கொழுமுறித் தாதுபடு செழுமலர்க்
காமரு குவளைக் கழுநீர் மாமலர்ப்,
பைந்தளிர்ப் படலை, பரூஉக்கா ழாரஞ்,
சுந்தரச் சுண்ணத் துகளொடு மளைஇச்
சிந்துபு பரிந்த செழும்பூஞ் சேக்கை
மந்தமா ருதத்து மயங்கினர் மலிந்தாங்,
காவியங் கொழுந ரகலத் தொடுங்கிக்,
காவியங் கண்ணார் களித்துயி லெய்த;
வஞ்செஞ் சீறடி யணிசிலம் பொழிய,
மென்றுகி லல்குன் மேகலை நீங்கக்,
கொங்கை முன்றிற் குங்கும மெழுதாண்;
மங்கல வணியிற் பிறிதணி மகிழாள்;
கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதின;
டிங்கள் வாண்முகஞ் சிறுவியர்ப் பிரியச்
செங்கய நெடுங்க ணஞ்சன மறப்பப்,
பவள வாணுத றிலக மிழப்பத்,
தவள வாணகை கோவல னிழப்ப,
மையிருங் கூந்த னெய்யணி மறப்பக்,
கையறு நெஞ்சத்துக் கண்ணகி யன்றியுங்;
காதலர்ப் பிரிந்த மாதர் நோதக,
வூதுலைக் குருகி னுயிர்த்தன ரொடுங்கி,
வேனிற் பள்ளி மேவாது கழிந்து,
கூதிர்ப் பள்ளிக் குறுங்க ணடைத்து,
மலயத் தாரமு, மணிமுத் தாரமு,
மலர்முலை யாகத் தடையாது வருந்தத்;
தாழிக் குவளையொடு தண்செங் கழுநீர்
வீழ்பூஞ் சேக்கை மேவாது கழியத்,

துணைபுண ரன்னத் தூவியிற் செறித்த
விணையணை மேம்படத் திருந்துதுயில் பெறாஅ
துடைப்பெருங் கொழுநரொ டூடற் காலத்
திடைக்குமி ழெறிந்து கடைக்குழை யோட்டிக்
கலங்கா வுள்ளங் கலங்கக் கடைசிவந்து
விலங்கிநிமிர் நெடுங்கண் புலம்புமுத் துறைப்ப
வன்ன மென்னடை நன்னீர்ப் பொய்கை,
யாம்ப னாறுந் தேம்பொதி நறுவிரைத்,
தாமரைச் செவ்வாய்த், தண்ணறற் கூந்தற்,
பாண்வாய் வண்டு நோதிறம் பாடக்,
காண்வரு குவளைக் கண்மலர் விழிப்பப்,
புள்வாய் முரசமொடு பொறிமயிர் வாரணத்து
முள்வாய்ச் சங்க முறைமுறை யார்ப்ப,
வுரவுநீர்ப் பரப்பி னூர்துயி லெடுப்பி,
யிரவுத் தலைப்பெயரும் வைகறை காறு,
மரையிருள் யாமத்தும், பகலுந் துஞ்சார்,
விரைமலர் வாளியொடு கருப்புவில் லேந்தி,
மகர வெல்கொடி மைந்தன் றிரிதர,
நகரங் காவல் நனிசிறந் ததுவென்

(வெண்பா)

கூடினார் பானிழலாய்க் கூடார்பால் வெய்யதாய்க்
காவலன் வெண்குடைபோற் காட்டிற்றே—கூடிய
மாதவிக்குங் கண்ணகிக்கும் வானூர் மதிவிரிந்து
போதவிழ்க்குங் கங்குற் பொழுது.

# இந்திர விழவூரெடுத்த காதை

அலைநீ ராடை, மலைமுலை யாகத்,
தாரப் பேரியாற்று, மாரிக் கூந்தற்,
கண்ணகன் பரப்பின், மண்ணக மடந்தை,
புதையிருட் படாஅம் போக நீக்கி,
யுதைய மால்வரை யுச்சித் தோன்றி,
யுலகுவிளங் கவிரொளி மலர்கதிர் பரப்பி;
வேயா மாடமும், வியன்கல விருக்கையு,
மான்கட் காலதர் மாளிகை யிடங்களுங்;
கயவாய் மருங்கிற் காண்போர்த் தடுக்கும்
பயனற வறியா யவன ரிருக்கையுங்;
கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
கலந்திருந் துறையு மிலங்குநீர் வரைப்பும்,
வண்ணமுஞ் சுண்ணமுந் தண்ணறுஞ் சாந்தமும்
பூவும் புகையு மேவிய விரையும்
பகர்வனர் திரிதரு நகர வீதியும்;
பட்டினும் மயிரினும் பருத்தி நூலினுங்
கட்டு நுண்வினைக் காருக ரிருக்கையுந்;
தூசுந் துகிரு மாரமு மகிலு
மாசறு முத்து மணியும் பொன்னு
மருங்கல வெறுக்கையோ டளந்துகடை யறியா
வளந்தலை மயங்கிய நனந்தலை மறுகும்;
பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு
கூலங் குவித்த கூல வீதியுங்;
காழியர், கூவியர், கண்ணொடை யாட்டியர்
மீன்விலைப் பரதவர், வெள்ளுப்புப் பகருநர்
பாசவர், வாசவர், மைந்நிண விலைஞரோ
டோசுநர் செறிந்த வூன்மலி யிருக்கையுங்;
கஞ்ச காரருஞ், செம்புசெய் குநரும்,
மரங்கொஃ றச்சருங் கருங்கைக் கொல்லருங்,
கண்ணுள் வினைஞரு மண்ணீட் டாளரும்,
பொன்செய் கொல்லரு, நன்கலந் தருநருந்,

துன்ன காரருந், தோலின் றுன்னருங்,
கிழியினுங் கிடையினுந் தொழில் பல பெருக்கிப்
பழுதில் செய்வினைப் பால்கெழு மாக்களுங்,
குழலினும் யாழினுங் குரன்முத லேழும்
வழுவின் றிசைத்து வழித்திறங் காட்டு
மரும்பெறன் மரபிற் பெரும்பா ணிருக்கையுஞ்;
சிறுகுறுங் கைவினைப் பிறர்வினை யாளரொடு
மறுவின்றி விளங்கு மருவூர்ப் பாக்கமுங்;
கோவியன் வீதியுங், கொடித்தேர் வீதியும்
பீடிகைத் தெருவும், பெருங்குடி வாணிகர்
மாட மறுகு மறையோ ரிருக்கையும்;
வீழ்குடி யுழவரொடு விளங்கிய கொள்கை
யாயுள் வேதருங், காலக் கணிதரும்,
பால்வகை தெரிந்த பன்முறை யிருக்கையுந்;
திருமணி குயிற்றுநர், சிறந்த கொள்கையொ
டணிவளை போழுந ரகன்பெரு வீதியுஞ்;
சூதர், மாகதர், வேதா ளிகரொடு
நாழிகைக் கணக்கர், நலம்பெறு கண்ணுளர்,
காவற் கணிகைய ராடற் கூத்தியர்
பூவிலை மடந்தைய ரேவற் சிலதியர்,
பயிறொழிற் குயிலுவர், பன்முறைக் கருவியர்,
நகைவே ழம்பரொடு வகைதெரி யிருக்கையுங்;
கடும்பரி கடவுநர், களிற்றின் பாகர்,
நெடுந்தே ரூருநர், கடுங்கண் மறவ
ரிருந்துபுறஞ் சுற்றிய பெரும்பா யிருக்கையும்;
பீடுகெழு சிறப்பிற் பெரியோர் மல்கிய
பாடல்சால் சிறப்பிற் பட்டினப் பாக்கமு;
மிருபெரு வேந்தர் முனையிடம் போல,
விருபாற் பகுதியி னிடைநில மாகிய,
கடைகால் யாத்த மிடைமரச் சோலைக்
கொடுப்போ ரோதையுங், கொள்வோ ரோதையு,
நடுக்கின்றி நிலைஇய நாளங் காடியிற்,
சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென,
வெற்றிவேல் மன்னற் குற்றதை யொழிக்கெனத்

தேவர் கோமா னேவலிற் போந்த
காவற் பூதத்துக் கடைகெழு பீடிகைப்,
புழுக்கலு நோலையும், விழுக்குடை மடையும்,
பூவும், புகையும், பொங்கலுஞ் சொரிந்து,
துணங்கையர், குரவைய, ரணங்கெழுந் தாடிப்
"பெருநில மன்ன னிருநில மடங்கலும்
பசியும் பிணியும் பகையு நீங்கி,
வசியும் வளனுஞ் சுரக்கென" வாழ்த்தி,
மாதர்க் கோலத்து வலவையி னுரைக்கு
மூதிற் பெண்டி ரோதையிற் பெயர ;
மருவூர் மருங்கின் மறங்கொள் வீரரும்,
பட்டின மருங்கிற் படைகெழு மாக்களு,
முந்தச் சென்று முழுப்பலி பீடிகை
"வெந்திறன் மன்னற் குற்றதை யொழிக்"கென
பலிக்கொடை புரிந்தோர் வலிக்குவரம் பாகெனக்
கல்லுமிழ் கவணினர், கழிப்பிணிக் கறைத்தோற்
பல்வேற் பரப்பினர், மெய்யுறத் தீண்டி,
யார்த்துக் களங்கொண் டோ ராரம ரழுவத்துச்
சூர்த்துக் கடைசிவந்த சுடுநோக்குக் கருந்தலை,
"வெற்றி வேந்தன் கொற்றங் கொள்"கென
நற்பலி பீடிகை நலங்கொள வைத்தாங்,
குயிர்ப்பலி யுண்ணு முருமுக்குரன் முழக்கத்து
மயிர்க்கண் முரசொடு வான்பலி யூட்டி ;
யிருநில மருங்கிற் பொருநரைப் பெறாஅச்
செருவெங் காதலிற் றிருமா வளவன்,
வாளுங் குடையு மயிர்க்கண் முரசு
நாளொடு பெயர்த்து, நண்ணார்ப் பெருகவிம்
மண்ணக மருங்கினென் வலிகெழு தோளெனப்
புண்ணிய திசைமுகம் போகிய வந்நா
ளசைவி லூக்கத்து நசைபிறக் கொழியப்
பகைவிலக் கியதிப் பயங்கெழு மலையென,
விமையவ ருறையுஞ் சிமையப் பிடர்த்தலைக்
கொடுவரி யொற்றிக் கொள்கையிற் பெயர்வோற்கு;
மாநீர் வேலி வச்சிர நன்னாட்டுக்

கோனிறை கொடுத்த கொற்றப் பந்தரு
மகதநன் னாட்டு வாள்வாய் வேந்தன்,
பகைபுறத்துக் கொடுத்த பட்டிமண் டபமு;
மவந்தி வேந்த னுவந்தனன் கொடுத்த
நிவந்தோங்கு மரபிற் றோரண வாயிலும்;
பொன்னினு மணியினும் புனைந்தன வாயினு,
நுண்வினைக் கம்மியர் காணா மரபின ;
துயர்நீங்கு சிறப்பினவர் தொல்லோ ருதவிக்கு
மயன்விதித்துக் கொடுத்த மரபின விவைதா,
மொருங்குடன் புணர்ந்தாங் குயர்ந்தோ ரேத்து
மரும்பெறன் மரபின் மண்டப மன்றியும்,
வம்ப மாக்க டம்பெயர் பொறித்த
கண்ணெழுத்துப் படுத்த வெண்ணுப் பல்பொதிக்
கடைமுக வாயிலுங், கருந்தாழ்க் காவலு,
முடையோர் காவலு மொரீஇய வாகிக்,
கட்போ ருளரெனிற் கடுப்பத் தலையேற்றிக்
கொட்பி னல்லது, கொடுத்த லீயா,
துள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமுங்
கூனுங் குறளு, மூமுஞ் செவிடு,
மழுகுமெய் யாளரு முழுகின ராடிப்
பழுதில் காட்சி நன்னிறம் பெற்று,
வலஞ்செயாக் கழியு மிலஞ்சி மன்றமும்;
நஞ்ச முண்டு நடுங்குதுய ருற்றோ,
ரழல்வாய் நாகத் தாரெயி றழுந்தினர்,
கழல்கட் கூளிக் கடுநவைப் பட்டோர்
சுழல வந்து தொழத்துயர் நீங்கு
நிழல்கா னெடுங்க னின்ற மன்றமுந்
தவமறைந் தொழுகுந் தன்மை யிலாள,
ரவமறைந் தொழுகு மலவற் பெண்டி
ரறைபோ கமைச்சர், பிறர்மனை நயப்போர்,
பொய்க்கரி யாளர், புறங்கூற் றாளரென்
கைக்கொள் பாசத்துக் கைப்படு வோரெனக்
காத நான்குங் கடுங்குர லெடுப்பிப்
பூதம் புடைத்துணும் பூத சதுக்கமு

மரைசுகோல் கோடினு மறங்கூ றவையத்
துரைநூல் கோடி யொருதிறம் பற்றினு,
நாவொடு நவிலாது, நவைநீ ருகுத்துப்
பாவை நின்றழூஉம் பாவை மன்றமு;
மெய்வகை யுணர்ந்த விழுமியோ ரேத்து
மைவகை மன்றத்து மரும்பலி யுறீஇ;
வச்சிரக் கோட்டத்து மணங்கெழு முரசங்,
கச்சை யானைப் பிடர்த்தலை யேற்றி,
வால்வெண் களிற்றரசு வயங்கிய கோட்டத்துக்
கால்கோள் விழவின் கடைநிலை சாற்றித்,
தங்கிய கொள்கைத் தருநிலைக் கோட்டத்து
மங்கல நெடுங்கொடி வானுற வெடுத்து,
மரகத மணியொடு, வயிரங் குயிற்றிப்
பவளத் திரள்காற் பைம்பொன் வேதிகை
நெடுநிலை மாளிகைக் கடைமுகத் தியாங்கணுங்,
கிம்புரிப் பகுவாய்க் கிளர்முத் தொழுக்கத்து,
மங்கலம் பொறித்த மகர வாசிகைத்
தோரண நிலைஇய, தோமறு பசும்பொற்
பூரண கும்பத்துப் பொலிந்த பாலிகை,
பாவை விளக்குப் பசும்பொற் படாகை
தூமயிர்க் கவரி, சுந்தரச் சுண்ணத்து,
மேவிய கொள்கை வீதியிற், செறிந்தாங்
கைம்பெருங் குழூவு மெண்பே ராயமு,
மரச குமரரும் பரத குமரருங்
கவர்பரிப் புரவியர், களிற்றின் றொகுதிய
ரிவர்பரித் தேரின ரியைந்தொருங் கீண்டி
யரைசுமேம் படீஇய வகநிலை மருங்கி,
லுரைசான் மன்னன் கொற்றங் கொள்கென,
மாயிரு ஞாலத்து மன்னுயிர் காக்கு
மாயிரத் தோரெட் டரசுதலைக் கொண்ட
தண்ணறுங் காவிரித் தாதுமலி பெருந்துறைப்
புண்ணிய நன்னீர் பொற்குடத் தேந்தி
மண்ணக மருள, வானகம் வியப்ப
விண்ணவர் தலைவனை விழுநீ ராட்டிப்

பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலு,
மறுமுகச் செவ்வே ளணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலு,
நீல மேனி நெடியோன் கோயிலு,
மாலை வெண்குடை மன்னவன் கோயிலு
மாமுது முதல்வன் வாய்மையின் வழாஅ
நான்மறை மறபிற் றீமுறை யொருபா ;
னால்வகைத் தேவரு மூவறு கணங்களும்
பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து
வேறுவேறு கடவுளர் சாறுசிறந் தொருபா ;
லறவோர் பள்ளியு மறனோம் படையும்,
புறநிலைக் கோட்டத்துப் புண்ணியத் தானமும்,
திறவோ ருரைக்குஞ் செயல்சிறந் தொருபாற்
கொடித்தேர் வேந்தனொடு கூடா மன்ன
ரடித்தளை நீக்க வருள்சிறந் தொருபாற்
கண்ணு ளாளர், கருவிக் குயிலுவர்,
பண்ணியாழ்ப் புலவர் பாடற் பாணரொ
டெண்ணருஞ் சிறப்பி னிசைசிறந் தொருபான்
முழவுக்கண் துயிலாது, முடுக்கரும் வீதியும்
விழவுக்களி சிறந்த வியலு ளாங்கட்
காதற் கொழுநனைப் பிரிந்தல ரெய்தா
மாதர்க் கொடுங்குழை மாதவி தன்னொ,
டில்வளர் முல்லை, மல்லிகை, மயிலை,
தாழிக் குவளை, சூழ்செங் கழுநீர்
பயில்பூங் கோதைப் பிணையலிற் பொலிந்து,
காமக் களிமகிழ் வெய்திக் காமர்
பூம்பொதி நறுவிரைப் பொழிலாட் டமர்ந்து,
நாண்மகி ழிருக்கை நாளங் காடியிற்
பூமலி கானத்துப் புதுமணம் புக்குப்,
புகையுஞ் சாந்தும் புலரா துசிறந்து,
நகையா டாயத்து நன்மொழி திளைத்துக்
குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு
திரிதரு மரபிற் கோவலன் போல,
விளிவாய் வண்டினொ டின்னிள வேனிலொடு

மலய மாருதந் திரிதரு மறுகிற்
கருமுகில் சுமந்து, குறுமுய லொழித்தாங்
கிருகருங் கயலோ டிடைக்குமி ழெழுதி,
யங்கண் வானத் தரவுப்பகை யஞ்சித்
திங்களு மீண்டுத் திரிதலு முண்டுகொ?
னீர்வாய் திங்க ணீணிலத் தமுதின்
சீர்வாய் துவலைத் திருநீர் மாந்தி,
மீனேற்றுக் கொடியோன் மெய்பெற வளர்த்த
வான வல்லி வருதலு முண்டுகொ?
லிருநில மன்னற்குப் பெருவளங் காட்டத்
திருமகள் புகுந்ததிச் செழும்பதி யாமென
வெரிநிறத் திலவமு முல்லையு மன்றியுங்
கருநெடுங் குவளையுங் குமிழும் பூத்தாங்
குவரிக் கோலத் துறுதுணை தேடிக்
கள்ளக் கமலந் திரிதலு முண்டுகொன்?
மன்னவன் செங்கோன் மறுத்த லஞ்சிப்
பல்லுயிர் பருகும் பகுவாய்க் கூற்ற
மாண்மையிற் றிரிந்துத, னருந்தொழி றிரியாது,
நாணுடைக் கோலத்து நகைமுகங் கோட்டிப்,
பண்மொழி நரம்பிற் றிவவியாழ் மிழற்றிப்,
பெண்மையிற் றிரியும் பெற்றியு முண்டென,
வுருவி லாள னொருபெருஞ் சேனை
யிகலம ராட்டி யெதிர்நின்று விலக்கியவ
ரெழுதுவரி கோல முழுமெயு முறீஇ,
விருந்தொடு புக்க பெருந்தோட் கணவரொ
டுடனுறைவு மரீஇ, யொழுக்கொடு புணர்ந்த
வடமீன் கற்பின் மனையுறை மகளிர்,
மாதர்வாண் முகத்து மணித்தோட்டுக் குவளைப்
போதுபுறங் கொடுத்துப் போகிய செங்கடை
விருந்திற் றீர்ந்தில தாயின், யாவது
மருந்துந் தருங்கொலிம் மாநில வரைப்பெனக்
கையற்று நடுங்கு நல்வினை நடுநா,
ளுள்ளக நறுந்தா துறைப்ப, மீதழிந்து,

கள்ளுக நடுங்குங் கழுநீர் போலக்,
கண்ணகி கருங்கணு, மாதவி செங்கணு,
முண்ணிறை கரந்தகத் தொளித்துநீ ருகுத்தன,
வெண்ணுமுறை யிடத்தினும் வலத்தினுந் துடித்தன,
விண்ணவர் கோமான் விழவுநா ளகத்தென்.

# கடலாடு காதை

வெள்ளி மால்வரை வியன்பெருஞ் சேடிக்
கள்ளவிழ் பூம்பொழிற் காமக் கடவுட்குக்
கருங்கய னெடுங்கட் காதலி தன்னொடு
விருந்தாட் டயருமோர் விஞ்சை வீரன்
றென்றிசை மருங்கினோர் செழும்பதி தன்னு
ளிந்திர விழவுகொண் டெடுக்குநா ளிதுவெனக்
கடுவிசை யவுணர் கணங்கொண் டண்டிக்
கொடுவரி யூக்கத்துக் கோநகர் காத்த
தொடுகழன் மன்னற்குத் தொலைந்தன ராகி
நெஞ்சிருள் கூர நிகர்த்துமேல் விட்ட
வஞ்சம் பெயர்த்த மாபெரும் பூதந்
திருந்துவே லண்ணற்குத் தேவ னேவ
விருந்துபலி யுண்ணு மிடனுங் காண்கு
மமரா பதிகாத் தமரனிற் பெற்றுத்
தமரிற் றந்து தகைசால் சிறப்பிற்
பொய்வகை யின்றிப் பூமியிற் புணர்த்த
வைவகை மன்றத் தமைதியுங் காண்குது
நாரதன் வீணை நயந்தெரி பாடலுந்
தோரிய மடந்தை வாரம் பாடலு
மாயிரங் கண்ணோன் செவியக நிறைய
நாடக முருப்பசி நல்கா ளாகி,
மங்கல மிழப்ப வீணை மண்மிசைத்
தங்குக விவளெனச் சாபம் பெற்ற
மங்கை மாதவி வழிமுதற் றோன்றிய
வங்கர வல்கு லாடலுங் காண்குதுந்
துவரிதழ்ச் செவ்வாய்த் துடியிடை யோயே!
யமரர் தலைவனை வணங்குதும் யாமெனச்
சிமையத் திமையமுஞ் செழுநீர்க் கங்கையு
முஞ்சையம் பதியும், விஞ்சத் தடவியும்,
வேங்கட மலையுந் தாங்கா விளையுட்
காவிரி நாடுங் காட்டிப் பின்னர்ப்

பூவிரி படப்பைப் புகார்மருங் கெய்திச்
சொல்லிய முறைமையிற் றொழுதனன் காட்டி
மல்லன் மூதூர் மகிழ்விழாக் காண்போன்
மாயோன் பாணியும், வருணப் பூதர்
நால்வகைப் பாணியு நலம்பெறு கொள்கை
வானூர் மதியமும் பாடிப் பின்னர்ச்
சீரியல் பொலிய நீரல நீங்கப்
பாரதி யாடிய பாரதி யரங்கத்துத்
திரிபுர மெரியத் தேவர் வேண்ட
வெரிமுகப் பேரம் பேவல் கேட்ப
வுமையவ ளொருதிற னாக வோங்கிய
விமையவ னாடிய கொடுகொட்டி யாடலுந்,
தேர்மு னின்ற திசைமுகன் காணப்
பாரதி யாடிய வியன்பாண் டரங்கமுங்,
கஞ்சன் வஞ்சங் கடத்தற் காக
வஞ்சன வண்ண னாடிய வாடலு,
ளல்லியத் தொகுதியு மவுணற் கடந்த
மல்லி னாடலு மாக்கட னடுவ
ணீர்த்திரை யரங்கத்து நிகர்த்துமுன் னின்ற
சூர்த்திறங் கடந்தோ னாடிய துடியும்,
படைவீழ்த் தவுணர் பையு ளெய்தக்
குடைவீழ்த் தவர்மு னாடிய குடையும்,
வாணன் பேரூர் மறுகிடை நடந்து
நீணில மளந்தோ னாடிய குடமு
மாண்மை திரிந்த பெண்மைக் கோலத்துக்
காம னாடிய பேடி யாடலுங்
காய்சின வவுணர் கடுந்தொழில் பொறாஅள்
மாயவ ளாடிய மரக்கா லாடலுஞ்
செருவெங் கோல மவுணர் நீங்கத்
திருவின் செய்யோ ளாடிய பாவையும்
வயலுழை நின்று வடக்கு வாயிலு
ளயிராணி மடந்தை யாடிய கடையமு
மவரவ ரணியுட னவரவர் கொள்கையி
னிலையும் படிதமு நீங்கா மரபிற்

பதினோ ராடலும், பாட்டின் பகுதியும்
விதிமாண் கொள்கையின் விளங்கக் காணாய்!
தாதவிழ் பூம்பொழி லிருந்தியான் கூறிய
மாதவி மரபின் மாதவி யிவளெனக்
காதலிக் குரைத்துக் கண்டுமகிழ் வெய்திய
மேதகு சிறப்பின் விஞ்சைய னன்றியு
மந்தரத் துள்ளோ ரறியா மரபின்
வந்து காண்குறூஉம் வானவன் விழவு
மாடலுங் கோலமு மணியுங் கடைக்கொள
வூடற் கோலமோ டிருந்தோ னுவப்பப்
பத்துத் துவரினு மைந்து விரையினு
முப்பத் திருவகை யோமா லிகையினு
மூறின நன்னீ ருரைத்தநெய் வாச
நாறிருங் கூந்த னலம்பெற வாட்டிப்
புகையிற் புலர்த்திய பூமென் கூந்தலை
வகைதொறு மான்மதக் கொழுஞ்சே றூட்டி
யலத்தக மூட்டிய வஞ்செஞ் சீறடி
நலத்தகு மெல்விர னல்லணி செறீஇப்
பரியக நூபுரம், பாடகஞ் சதங்கை,
யரியகங் காலுக் கமைவுற வணிந்து
குறங்கு செறிதிரள் குறங்கினிற் செறித்துப்
பிறங்கிய முத்தரை முப்பத் திருகாழ்
நிறங்கிளர் பூந்துகி னீர்மையி னுடீஇக்
காமர் கண்டிகை தன்னொடு பின்னிய
தூமணித் தோள்வளை தோளுக் கணிந்து
மத்தக மணியொடு வயிரங் கட்டிய
சித்திரச் சூடகஞ் செம்பொற் கைவளை,
பரியகம், வால்வளை, பவழப் பல்வளை
யரிமயிர் முன்கைக் கமைவுற வணிந்து
வாளைப் பகுவாய் வணக்குறு மோதிரங்
கேள்கிளர் செங்கேழ் கிளர்மணி மோதிரம்,
வாங்குவில் வயிரத்து மரகதத் தாள்செறி
காந்தண் மெல்விரல் கரப்ப வணிந்து
சங்கிலி, நுண்டொடர் பூண்ஞாண் புனைவினை

யங்கழுத் தகவயி னரமோ டணிந்து
கயிற்கடை யொழுகிய காமர் தூமணி
செயத்தகு கோவையிற் சிறுபுற மறைத்தாங்
கிந்திர நீலத் திடையிடை திரண்ட
சந்திர பாணி தகைபெறு கடிப்பிணை
யங்கா தகவயி னழகுற வணிந்து
தெய்வ வுத்தியொடு செழுநீர் வலம்புரி
தொய்யகம் புல்லகந் தொடர்ந்த தலைக்கணி
மையீ ரோதிக்கு மாண்புற வணிந்து
கூடலு மூடலுங் கோவலற் களித்துப்
பாடமை சேக்கைப் பள்ளியு ளிருந்தோ
ளுருகெழு மூதூ ருவவுத்தலை வந்தெனப்
பெருநீர் போகு மிரியன் மாக்களொடு
மடலவிழ் கானற் கடல்விளை யாட்டுக்
காண்டல் விருப்பொடு வேண்டின ளாகிப்
பொய்கைத் தாமரைப் புள்வாய் புலம்ப
வைகறை யாமம் வாரணங் காட்ட
வெள்ளி விளக்க நள்ளிருள் கடியத்
தாரணி மார்பனொடு பேரணி யணிந்து
வான வண்கைய னத்திரி யேற
மானமர் நோக்கியும் வைய மேறிக்
கோடிபல வடுக்கிய கொழுநிதிக் குப்பை
மாடமலி மறுகிற் பீடிகைத் தெருவின்
மலரணி விளக்கத்து மணிவிளக் கெடுத்தாங்
கலர்கொடி யறுகு நெல்லும் வீசி
மங்கலத் தாசியர் தங்கல னொலிப்ப
விருப்புடை மருங்கினுந் திரிவனர் பெயருந்
திருமக ளிருக்கை செவ்வன கழிந்து
மகர வாரி வளந்தந் தோங்கிய
நகர வீதி நடுவட் போகிக்
கலந்தரு திருவிற் புலம்பெயர் மாக்கள்
வேலை வாலுகத்து விரிதிரைப் பரப்பிற்
கூல மறுகிற் கொடி யெடுத்து நுவலு
மாலைச் சேரி மருங்குசென் றெய்தி

வண்ணமுஞ் சாந்து மலருஞ் சுண்ணமும்
பண்ணியப் பகுதியும், பகர்வோர் விளக்கமுஞ்
செய்வினைக் கம்மியர் கைவினை விளக்கமுங்
காழியர் மோதகத் தூழுறு விளக்கமுங்,
கூவியர் காரகற் குடக்கால் விளக்கமும்
நொடைநவின் மகடூஉக் கடைகெழு விளக்கமு
மிடையிடை மீன்விலை பகர்வோர் விளக்கமு
மிலங்குநீர் வரைப்பிற் கலங்கரை விளக்கமும்,
விலங்குவலைப் பரதவர் மீன்றிமில் விளக்கமு
மொழிபெயர் தேத்தோ ரொழியா விளக்கமுங்
கழிபெரும் பண்டங் காவலர் விளக்கமு
மெண்ணுவரம் பறியா வியைந்தொருங் கீண்டி
யிடிக்கலப் பன்ன வீரயிர் மருங்கிற்
கடிப்பகை காணுங் காட்சிய தாகிய
விரைமலர்த் தாமரை வீங்குநீர்ப் பரப்பின்
மருத வேலியின் மாண்புறத் தோன்றுங்
கைதை வேலி நெய்தலங் கானற்
பொய்த லாயமொடு பூங்கொடி பொருந்தி
நிரைநிரை யெடுத்த புரைநீர் காட்சிய
மலைப்பஃ றாரமுங் கடற்பஃ றாரமும்
வளந்தலை மயங்கிய துளங்குகல விருக்கை
யரசிளங் குமரரு முரிமைச் சுற்றமும்,
பரத குமரரும், பல்வே றாயமு
மாடுகள மகளிரும், பாடுகள் மகளிருந்
தோடுகொள் மருங்கிற் சூழ்தர லெழினியும்
விண்பொரு பெரும்புகழ்க் கரிகால் வளவன்
றண்பதம் கொள்ளுந் தலைநாட் போல
வேறுவேறு கோலத்து வேறுவேறு கம்பலை
சாறயர் களத்து வீறுபெறத் தோன்றிக்
கடற்கரை மெலிக்குங் காவிரிப் பேரியாற்
றிடங்கெட வீண்டிய நால்வகை வருணத்
தடங்காக் கம்பலை யுடங்கியைந் தொலிப்பக்
கடற்புலவு கடிந்த மடற்பூந் தாழைச்
சிறைசெய் வேலி யகவயி னாங்கோர்

புன்னை நீழற் புதுமணற் பரப்பி
ஓவிய வெழினி சூழவுடன் போக்கி
விதானித்துப் படுத்த வெண்கா லமளிமிசை
வருந்துபு நின்ற வசந்த மாலைகைத்
திருந்துகோ னல்லியாழ் செவ்வனம் வாங்கிக்
கோவலன் றன்னொடுங் கொள்கையி னிருந்தனண்
மாமலர் நெடுங்கண் மாதவி தானென்.

(வெண்பா)

வேலை மடற்றாழை யுட்பொதிந்த வெண்டோட்டு
மாலைத் துயின்ற மணிவண்டு—காலைக்
களிநறவந் தாதூதத் தோன்றிற்றே காமர்
தெளிநிற வெங்கதிரோன் றேர்.

# கானல் வரி

## கட்டுரை

1 சித்திரப் படத்துட் புக்குச் செழுங்கோட்டின் மலர்புனைந்து
மைத்தடங்கண் மணமகளிர் கோலம்போல் வனப்பெய்திப்
பத்தருங் கோடு மாணியு நரம்புமென்
றித்திறத்துக் குற்றநீங்கிய யாழ்கையிற் றொழுது வாங்கிப்
பண்ணல், பரிவட்டணை, யாராய்த லைவரல்,
கண்ணிய செலவு, விளையாட்டுக், கையூழ்
நண்ணிய குறும்போக் கென்று நாட்டிய
வெண்வகையா லிசையெழீஇப்
பண்வகையாற் பரிவுதீர்ந்து
மரகதமணித் தாள்செறிந்த மணிக்காந்தண் மெல்விரல்கள்
பயிர்வண்டின் கிளைபோலப் பன்னரம்பின் மிசைப்படர
வார்தல், வடித்த லுந்த லுறழ்தல்
சீருட னுருட்ட றெருட்ட லள்ள
லேருடைப் பட்டடையென விசையோர் வகுத்த
வெட்டு வகையி னிசைக்கர ணத்துப்
பட்டவகைதன் செவியினோர்த்
தேவலன்பின் பாணியாதெனக்
கோவலன் கையாழ் நீட்ட, வவனுங்
காவிரியை நோக்கினவுங் கடற்கானல் வரிப்பாணியு
மாதவிதன் மனமகிழ வாசித்த றொடங்குமன்

### வேறு

2 திங்கண் மாலை வெண்குடையான் சென்னி செங்கோ லதுவோச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி
கங்கை தன்னைப் புணர்ந்தாலும் புலவா தொழிதல் கயற்கண்ணாய்
மங்கை மாதர் பெருங்கற்பென் றறிந்தேன் வாழி காவேரி
3 மன்னு மாலை வெண்குடையான் வளையாச் செங்கோ லதுவோச்சிக்
கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவாய் வாழி காவேரி
கன்னி தன்னைப் புணர்ந்தாலும் புலவா தொழிதல் கயற்கண்ணாய்
மன்னு மாதர் பெருங்கற்பென் றறிந்தேன் வாழி காவேரி

4 உழவ ரோதை மதகோதை யுடைநீ ரோதை தண்பதங்கொள்
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்தாய் வாழி காவேரி
விழவ ரோதை சிறந்தார்ப்ப நடந்த வெல்லாம் வாய்காவா
மழவ ரோதை வளவன்றன் வளனே வாழி காவேரி

### வேறு

5 கரியமலர் நெடுங்கட் காரிகைமுன் கடற்றெய்வங் காட்டிக் காட்டி
யரியசூள் பொய்த்தா ரறனிலரென் றேழையம்யாங் கறிகோ மைய
விரிகதிர் வெண்மதியு மீன்கணமு மாமென்றே விளங்கும் வெள்ளைப்
புரிவளையு முத்துங்கண் டாம்பல் பொதியவிழ்க்கும் புகாரே யெம்மூர்
6 காதல ராகிக் கழிக்கானற் கையுறைகொண் டெம்பின் வந்தா
ரேதிலர் தாமாகி யாமிரப்ப நிற்பதையாங் கறிகோ மைய
மாதரார் கண்ணு மதிநிழனீ ரிணைகொண்டு மலர்ந்த நீலப்
போது மறியாது வண்டூச லாடும் புகாரே யெம்மூர்
7 மோதுமுதுதிரையான் மொத்துண்டு போந்தசைந்த முரல்வாய்ச் சங்க
மாதர் வரிமணன்மேல் வண்ட லுழுதழிப்ப மாழ்கி யைய
கோதை பரிந்தசைய மெல்விரலாற் கொண்டோச்சுங் குவளை மாலைப்
போது சிறங்கணிப்பப் போவார்கண் போகாப் புகாரே யெம்மூர்

### வேறு

8 துறைமேய் வலம்புரி தோய்ந்து மணலுழுத தோற்ற மாய்வான்
பொறைமலி பூம்புன்னைப் பூவுதிர்ந்து நுண்டாது போர்க்குங் கான
னிறைமதி வாண்முகத்து நேர்கயற்கண் செய்த
வுறைமலி யுய்யாநோ யூர்சுணங்கு மென்முலையே தீர்க்கும் போலும்
9 நிணங்கொள் புலாலுணங்க னின்றுபுள் ளோப்புத லைக்கீ டாகக்
கணங்கொள்வண் டார்த்துலாங் கன்னி நறுஞாழற் கையி லேந்தி
மணங்கமழ் பூங்கானன் மன்னிமற் றுண்டோ
ரணங்குறையு மென்ப தறியே னறிவேனே லடையேன் மன்னோ
10 வலைவாழ்நர் சேரி வலையுணங்கு முன்றின் மலர்கை யேந்தி
விலைமீ னுணங்கற் பொருட்டாக வேண்டுருவங் கொண்டு வேறோர்
கொலைவே னெடுங்கட் கொடுங்கூற்றம் வாழ்வ
தலைநீர்த்தண் கான லறியே னறிவேனே லடையேன் மன்னோ.

### வேறு

11 கயலெழுதி வில்லெழுதிக் காரெழுதிக் காமன்
செயலெழுதித் தீர்ந்தமுகந் திங்களோ காணீர்

திங்களோ காணீர் திமில்வாழ்நர் சீறூர்க்கே
யங்கணேர் வானத் தரவஞ்சி வாழ்வதுவே.

12 எறிவளைக ளார்ப்ப விருமருங்கு மோடுங்
கறைகெழுவேற் கண்ணோ கடுங்கூற்றங் காணீர்
கடுங்கூற்றங் காணீர் கடல்வாழ்நர் சீறூர்க்கே
மடங்கெழுமென் சாயன் மகளா யதுவே.

13 புலவுமீன் வெள்ளுணங்கற் புள்ளோப்பிக் கண்டார்
கலவநோய் செய்யு மணங்கிதுவோ காணீ
ரணங் கிதுவோ காணீ ரடும்பமர்தண் கானற்
பிணங்குநே ரைம்பாலோர் பெண்கொண் டதுவே.

## வேறு

14 பொழிறரு நறுமலரே புதுமணம் விரிமணலே
பழுதறு திருமொழியே பணையிள வனமுலையே,
முழுமதி புரைமுகமே முரிபுரு வில்லிணையே
யெழுதரு மின்னிடையே யெனையிடர் செய்தவையே.

15 திரைவிரி தருதுறையே திருமணல் விரியிடமே
விரைவிரி நறுமலரே மிடைதரு பொழிலிடமே
மருவிரி புரிகுழலே மதிபுரை திருமுகமே
யிருகய லிணைவிழியே யெனையிடர் செய்தவையே.

16 வளைவள்ர் தருதுறையே மணம்விரி தருபொழிலே
தளையவிழ் நறுமல்ரே தனியவ டிரியிடமே
முளைவள ரிளநகையே முழுமதி புரைமுகமே
யிளையவ ளிணைமுலையே யெனையிடர் செய்தவையே.

## வேறு

17 கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின் னைய
ருடல்புக் குயிர்கொன்று வாழ்வைமன் னீயு
மிடல்புக் கடங்காத வெம்முலையோ பார
மிடர்புக் கிடுகு மிடையிழவல் கண்டாய்.

18 கொடுங்கண் வலையா லுயிர்கொல்வா னுந்தை
நெடுங்கண் வலையா லுயிர்கொல்வை மன்னீயும்
வடங்கொண் முலையான் மழைமின்னுப் போல
நுடங்கி யுகுமென் னுசுப்பிழவல் கண்டாய்.

19 ஓடுந் திமில்கொண் டுயிர்கொல்வர் நின்னையர்
கோடும் புருவத் துயிர்கொல்வை மன்னீயும்
பீடும் பிறரெவ்வம் பாராய் முலைசுமந்து
வாடுஞ் சிறுமென் மருங்கிழவல் கண்டாய்.

## வேறு

20 பவள வுலக்கை கையாற் பற்றித்
தவள முத்தங் குறுவாள் செங்கண்
தவள முத்தங் குறுவாள் செங்கண்
குவளை யல்ல கொடிய கொடிய.

21 புன்னை நீழற் புலவுத் திரைவா
யன்ன நடப்ப நடப்பாள் செங்க
ணன்ன நடப்ப நடப்பாள் செங்கண்
கொன்னே வெய்ய கூற்றங் கூற்றம்.

22 கள்வாய் நீலங் கையி லேந்திப்
புள்வா யுணங்கல் கடிவாள் செங்கண்
புள்வா யுணங்கல் கடிவாள் செங்கண்
வெள்வே லல்ல வெய்ய வெய்ய.

## வேறு

23 சேரன் மடவன்னஞ் சேர னடையொவ்வாய்
சேரன் மடவன்னஞ் சேர னடையொவ்வா
யூர்திரைநீர் வேலி யுழக்கித் திரிவாள்பின்
சேரன் மடவன்னஞ் சேர னடை யொவ்வாய்.

## கட்டுரை

24 ஆங்குக் கானல்வரிப் பாடல்கேட்ட மானெடுங்கண் மாதவியு
மன்னுமோர் குறிப்புண்டிவன் றன்னிலை மயங்கினனெனக்
கலவியான் மகிழ்ந்தாள்போற் புலவியால் யாழ்வாங்கித்
தானுமோர் குறிப்பினள்போற் கானல்வரிப் பாடற்பாணி
நிலத்தெய்வம் வியப்பெய்த நீணிலத்தோர் மனம்மகிழக்
கலத்தொடு புணர்ந்தமைந்த கண்டத்தாற் பாடத்தொடங்குமன்.

## வேறு

25 மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப்பூ வாடை யதுபோர்த்துக்
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்தாய் வாழி காவேரி
கருங்க யற்கண் விழித்தொல்கி நடந்த வெல்லா நின்கணவன்
றிருந்து செங்கோல் வளையாமை யறிந்தேன் வாழி காவேரி

26 பூவர் சோலை மயிலாலப் புரிந்து குயில்க ளிசை பாடக்
காமர் மாலை யருகசைய நடந்தாய் வாழி காவேரி
காமர் மாலை யருகசைய நடந்த வெல்லா நின்கணவன்
நாம வேலின் றிறங்கண்டே யறிந்தேன் வாழி காவேரி
27 வாழி யவன்றன் வளநாடு மகவாய் வளர்க்குந் தாயாகி
யூழி யுய்க்கும் பேருதவி யொழியாய் வாழி காவேரி
யூழி யுய்க்கும் பேருதவி யொழியா தொழுக லுயிரோம்பு
மாழி யாள்வான் பகல் வெய்யோ னருளே வாழி காவேரி.

வேறு

28 தீங்கதிர் வாண்முகத்தாள் செவ்வாய் மணிமுறுவ லொவ்வா வேனும்
வாங்குநீர் முத்தென்று வைகலு மான்மகன்போல் வருதி ரைய
வீங்கோதந் தந்து விளங்கொளிய வெண்முத்தம் விரைசூழ் கானற்
பூங்கோதை கொண்டு விலைஞர்போன் மீளும் புகாரே யெம்மூர்.
29 மறையின் மணந்தாரை வன்பரதர் பாக்கத்து மடவார் செங்கை
யிறைவளைக ளூற்றுவதை யேழைய மெங்ஙனம்யாங் கறிகோ மைய
நிறைமதியு மீனு மெனவன்ன நீள்புன்னை யரும்பிப் பூத்த
பொறைமலிபூங் கொம்பேற வண்டாம்பலூதும்புகாரே யெம்மூர்.
30 உண்டாரை வென்னறாவுணாவியாப்பாக்கத்துளூறையொன்றின்றித்
தண்டாநோய் மாதர் தலைத்தருதி யென்பதுயாங் கறிகோ மைய
வண்டா றிரையழிப்பக் கையான் மணன்முகந்து மதிமே னீண்ட
புண்டோய்வே னீர்மல்க மாதர் கடறூர்க்கும் புகாரே யெம்மூர்.

வேறு

31 புணர்துணையோ டாடும் பொறியலவ னோக்கி
யிணர்ததையும் பூங்கான லென்னையு நோக்கி
யுணர்வொழியப் போன வொலிதிரைநீர்ச் சேர்ப்பன்
வணர்சுரி யைம்பாலோய் வண்ண முணரேனால்.
32 தம்முடைய தண்ணளியுந் தாமுந்தம் மான்றேரு
மெம்மை நினையாது விட்டாரோ விட்டகல்க
வம்மெ னிணர வடும்புகா ளன்னங்கா
ணம்மை மறந்தாரை நாமறக்க மாட்டேமால்.
33 புன்கண்கூர் மாலைப் புலம்புமென் கண்ணேபோற்
றுன்ப முழவாய் துயிலப் பெறுதியா

லின்கள்வாய் நெய்தானீ யெய்துங் கனவினுள்
வன்கணார் கானல் வரக்கண் டறிதியோ.

34 புள்ளியன்மான் றேராழி போன வழியெல்லாந்
தெள்ளுநீ ரோதஞ் சிதைத்தாய்மற் றென்செய்கோ
தெள்ளுநீ ரோதஞ் சிதைத்தாய்மற் றெம்மோடீங்
குள்ளாரோ டுள்ளா யுணராய்மற் றென் செய்கோ.

35 நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டே
ரூர்ந்த வழிசிதைய வூர்கின்ற வோதமே
பூந்தண் பொழிலே புணர்ந்தாடு மன்னமே
யீர்ந்தண் டுறையே யிதுதகா தென்னீரே.

36 நேர்ந்தநங் காதலர் நேமி நெடுந்திண்டே
ரூர்ந்த வழிசிதைய வூர்ந்தாய்வாழி கடலோத
மூர்ந்த வழிசிதைய வூர்ந்தாய்மற் றெம்மொடு
தீர்ந்தாய்போற் றீர்ந்திலையால் வாழி கடலோதம்.

வேறு

37 நன்னித் திலத்தின் பூணணிந்து நலஞ்சார் பவளக் கலையுடுத்துச்
செந்நெற் பழனக் கழனிதொறுந் திரையு லாவு கடற்சேர்ப்ப
புன்னைப் பொதும்பர் மகரத்திண் கொடியோ னெய்த புதுப்புண்க
ளென்னைக் காணு வகைமறைத்தா லன்னை காணி னென்செய்கோ.

38 வாரித் தரள நகைசெய்து வண்செம் பவள வாய்மலர்ந்து
சேரிப்பரதர் வலைமுன்றிற் றிரையுலாவு கடற்சேர்ப்ப
மாரிப் பீரத் தலர்வண்ண மடவாள் கொள்ளக் கடவுள்வரைந்
தாரிக்கொடுமை செய்தாரென் றன்னையறியி னென்செய்கோ.

39 புலவுற் றிரங்கி யதுநீங்கப் பொழிற்றண் டலையிற் புகுந்துதிர்ந்த
கலவைச் செம்மன் மணங்கமழத் திரையு லாவு கடற்சேர்ப்ப
பலவுற் றொருநோய் துணியாத படர்நோய் மடவா டனியுழப்ப
வலவுற் றிரங்கி யறியாநோ யன்னை யறியி னென்செய்கோ.

வேறு

40 இளையிருள் பரந்ததுவே யெற்செய்வான் மறைந்தனனே
களைவரும் புலம்புநீர் கண்பொழீஇ யுகுத்தனவே
தளையவிழ் மலர்க்குழலாய்! தணந்தார்நாட் டுளதாங்கொல்!
வளைநெகிழ வெரிசிந்தி வந்தவிம் மருண்மாலை.

41 கதிரவன் மறைந்தனனே காரிருள் பரந்ததுவே
யெதிர்மலர் புரையுண்க ணெவ்வநீ ருகுத்தனவே
புதுமதி புரைமுகத்தாய்! போனார்நாட் டுளதாங்கொன்!
மதியுமிழ்ந்து கதிர்விழுங்கி வந்தவிம் மருண்மாலை.

42 பறவைபாட் டடங்கினவே பகல்செய்வான் மறைந்தனனே
நிறைநிலா நோய்கூர நெடுங்கணீ ருகுத்தனவே
துறுமல ரவிழ்குழலாய் துறந்தார்நாட் டுளதாங்கொன்
மறவையா யென்னுயிர்மேல் வந்தவிம் மருண்மாலை.

வேறு

43 கைதை வேலிக் கழிவாய் வந்தெம்
பொய்த லழித்துப் போனா ரொருவர்
பொய்த லழித்துப் போனா ரவர்நம்
மையன் மனம்விட் டகல்வா ரல்லர்

44 கானல் வேலிக் கழிவாய் வந்து
நீநல் கென்றே நின்றா ரொருவர்
நீநல் கென்றே நின்றா ரவர்நம்
மானேர் நோக்க மறப்பா ரல்லர்.

45 அன்னந் துணையோ டாடக் கண்டு
நென்ன னோக்கி நின்றா ரொருவர்
நென்ன னோக்கி நின்றா ரவர்நம்
பொன்னேர் சுணங்கிற் போவா ரல்லர்.

வேறு

46 அடையல் குருகே யடையலெங் கான
லடையல் குருகே யடையலெங் கான
லுடைதிரைநீர்ச் சேர்ப்பற் குறுநோ யுரையா
யடையல் குருகே யடையலெங் கானல்.

வேறு

47 ஆங்கனம் பாடிய வாயிழை பின்னருங்
காந்தண் மெல்விரற் கைக்கிளை சேர்குரற்
றீந்தொடைச் செவ்வழிப் பாலை யிசையெழீஇப்
பாங்கினிற் பாடியோர் பண்ணுப் பெயர்த்தாள்.

வேறு

48 நுளையர் விளரி நொடிதருந்தீம் பாலை
யிளிகிளையிற் கொள்ள விறுத்தாயான் மாலை
யிளிகிளையிற் கொள்ள யிறுத்தாய்மன் னீயேற்
கொளைவல்லா யென்னுவி கொள்வாழி மாலை.

49 பிரிந்தார் பரிந்துரைத்த பேரருளி னீழ
லிருந்தேங்கி வாழ்வா ருயிர்ப்புறத்தாய் மாலை
யுயிர்ப்புறத்தாய் நீயாகி லுள்ளாற்று வேந்த
னெயிற்புறத்து வேந்தனோ டென்னாதி மாலை.

50 பையுணோய் கூரப் பகல்செய்வான் போய்வீழ
வையமோ கண்புதைப்ப வந்தாய் மருண்மாலை
மாலைநீ யாயின் மணந்தா ரவராயின்
ஞாலமோ நல்கூர்ந் ததுவாழி மாலை.

வேறு

51 தீத்துழைஇ வந்தவிச் செல்லன் மருண்மாலை
தூக்காது துணிந்தவித் துயரெஞ்சு கிளவியாற்
பூக்கமழ் கானலிற் பொய்ச்சூள் பொறுக்கென்று
மாக்கடற் றெய்வநின் மலரடி வணங்குதும்.

எனக் கேட்டு,

கானல்வரி யான்பாடத் தானொன்றின்மேல் மனம்வைத்து
மாயப்பொய் பலகூட்டு மாயத்தாள் பாடினளென
யாழிசைமேல் வைத்துத்த னூழ்வினைவந் துருத்த தாகலி
னுவவுற்ற திங்கண்முகத்தாளைக் கவவுக்கை ஞெகிழ்ந்தனனாய்ப்
பொழுதீங்குக் கழிந்ததாகலி னெழுதுமென் றுடனெழா
தேவலாள ருடன்சூழ்தரக் கோவலன்றான் போனபின்னர்த்
தாதவிழ் மலர்ச்சோலை யோதையாயத் தொலியவித்துக்
கையற்ற நெஞ்சினளாய் வையத்தி னுள்புக்குக்
காதலனுட னன்றியே மாதவிதன் மனைபுக்காள்

ஆங்கு,

மாயிரு ஞாலத் தரசு தலைவணக்குஞ்
சூழி யானைச் சுடர்வாட் செம்பியன்
மாலை வெண்குடை கவிப்ப
வாழி மால்வரை யகவையா வெனவே.

# வேனிற் காதை

நெடியோன் குன்றமுந் தொடியோள் பௌவமுந்
தமிழ்வரம் பறுத்த தண்புன னன்னாட்டு
மாட மதுரையும், பீடா ருறந்தையுங்
கலிகெழு வஞ்சியு மொலிபுனற் புகாரு
மரைசுவீற் றிருந்த வுரைசால் சிறப்பின்
மன்னன் மாரன் மகிழ்துணை யாகிய
வின்னிள வேனில் வந்தன னிவணென
வளங்கெழு பொதியின் மாமுனி பயந்த
விளங்காற் றூத னிசைத்தன னாதலின்;
மகர வெல்கொடி மைந்தன் சேனை
புகரறு கோலங் கொள்ளுமென் பதுபோற்
கொடிமிடை சோலைக் குயிலோ னென்னும்
படையுட் படுவோன் பணிமொழி கூற
மடலவிழ் கானற் கடல்விளை யாட்டினுட்
கோவல னூடக் கூடா தேகிய
மாமலர் நெடுங்கண் மாதவி விரும்பி
வானுற நிவந்த மேனிலை மருங்கின்
வேனிற் பள்ளி யேறி மாணிழை
தென்கடன் முத்துந் தென்மலைச் சந்துந்
தன்கட னிறுக்குந் தன்மைய வாதலிற்
கொங்கை முன்றிற் குங்கும வளாகத்து
மையறு சிறப்பிற் கையுறை யேந்தி
யதிரா மரபின் யாழ்கை வாங்கி
மதுர கீதம் பாடினள் மயங்கி
யொன்பான் விருத்தியுட் டலைக்கண் விருத்தி
நன்பா லமைந்த விருக்கைய ளாகி
வலக்கைப் பதாகை கோட்டொடு சேர்த்தி
யிடக்கை நால்விரன் மாடகந் தழீஇச்
செம்பகை, யார்ப்பே, கூடம், மதிர்வே
வெம்பகை நீக்கும் விரகுளி யறிந்து
பிழையா மரபி னீரேழ் கோவையை

யுழைமுதற் கைக்கிளை யிறுவாய் கட்டி
யிணைகிளை, பகைநட் பென்றிந் நான்கி
னிசைபுணர் குறிநிலை யெய்த நோக்கிக்
குரல்வா யிளிவாய்க் கேட்டன ளன்றியும்,
வரன்முறை மருங்கி னைந்தினு மேழினு
முழைமுத லாகவு முழையீ றாகவுங்
குரன்முத லாகவுங் குரலீ றாகவு
மகநிலை மருதமும், புறநிலை மருதமு
மருகியன் மருதமும், பெருகியன் மருதமு
நால்வகைச் சாதியு நலம்பெற நோக்கி
மூவகை யியக்கமு முறையுளிக் கழிப்பித்
திறத்து வழிப்படூஉந் தெள்ளிசைக் கரணத்துப்
புறத்தொரு பாணியிற் பூங்கொடி மயங்கிச்
சண்பக, மாதவி தமாலங் கருமுகை,
வெண்பூ மல்லிகை வேரொடு மிடைந்த
வஞ்செங் கழுநீ ராயிதழ்க் கத்திகை,
யெதிர்பூஞ் செவ்வி யிடைநிலத் தியாத்த
முதிர்பூந் தாழை முடங்கல்வெண் டோட்டு
விரைமலர் வாளியின் வியனில மாண்ட
வொருத்தனிச் செங்கோ லொருமக னாணையி
னொருமுக மன்றி யுலகுதொழு திறைஞ்சுந்
திருமுகம் போக்குஞ் செவ்விய ளாகி
யலத்தகக் கொழுஞ்சே றளைஇ, யயலது
பித்திகைக் கொழுமுகை யாணி கைக்கொண்டு
மன்னுயி ரெல்லா மகிழ்துணை புணர்க்கு
மின்னிள வேனி லிளவர சாள
னந்திப் போதகத் தரும்பிடர்த் தோன்றிய
திங்கட் செல்வனுஞ் செவ்விய னல்லன்
புணர்ந்த மாக்கள் பொழுதிடைப் படுப்பினுந்
தணந்த மாக்க டந்துணை மறப்பினு
நறும்பூ வாளியி னல்லுயிர் கோட
லிறும்பூ தன்றிஃ தறிந்தீ மின்னென
வெண்ணெண் கலையு மிசைந்துடன் போகப்
பண்ணுந் திறனும் புறங்கூறு நாவிற்

றளைவா யவிழ்ந்த தனிப்படு காமத்து
விளையா மழலையின் விரித்துரை யெழுதிப்
பசந்த மேனியள் படருறு மாலையின்
வசந்த மாலையை வருகெனக் கூஉய்த்
தூமலர் மாலையிற் றுணிபொரு ளெல்லாங்
கோவலற் களித்துக் கொணர்க வீங்கென
மாலை வாங்கிய வேலரி நெடுங்கண்
கூல மறுகிற் கோவலற் களிப்பத்
திலகமு மளகமுஞ் சிறுகருஞ் சிலையுங்
குவளையுங் குமிழுங் கொவ்வையுங் கொண்ட
மாதர் வாண்முகத்து மதைஇய நோக்கமொடு
காதலிற் றோன்றிய கண்கூடு வரியும்
புயல்சுமந்து வருந்திப் பொழிகதிர் மதியத்துக்
கயலுலாய்த் திரிதருங் காமர் செவ்வியிற்
பாகுபொதி பவளந் திறந்துநிலா வுதவிய
நாகிள முத்தி னகைநலங் காட்டி
வருகென வந்து போகெனப் போகிய
கருநெடுங் கண்ணி காண்வரிக் கோலமு
மந்தி மாலை வந்ததற் கிரங்கிச்
சிந்தைநோய் கூருமென் சிறுமை நோக்கிக்
கிளிபுரை கிளவியு மடவன நடையுங்
களிமயிற் சாயலுங் கரந்தன ளாகிச்
செருவே னெடுங்கட் சிலதியர் கோலத்
தொருதனி வந்த வுள்வரி யாடலுஞ்
சிலம்புவாய் புலம்பவு மேகலை யார்ப்பவுங்
கலம்பெறா நுசுப்பினள் காத னோக்கமொடு
திறத்துவே றாயவென் சிறுமை நோக்கியும்
புறத்துநின் றாடிய புன்புற வரியுங்
கோதையுங் குழலுந் தாதுசே ரளகமு
மொருகாழ் முத்தமுந் திருமுலைத் தடமு
மின்னிடை வருத்த நன்னுத றோன்றிச்
சிறுகுறுந் தொழிலியர் மறுமொழி யுய்ப்பப்
புணர்ச்சியுட் பொதிந்த கலாந்தரு கிளவியி
னிருபுற மொழிப்பொருள் கேட்டன ளாகித்

தளர்ந்த சாயற் றகைமென் கூந்தல்
கிளர்ந்துவே றாகிய கிளர்வரிக் கோலமும்
பிரிந்துறை காலத்துப் பரிந்தன ளாகி
யென்னுறு கிளைகட்குத் தன்னுறு துயரந்
தேர்ந்துதேர்ந் துரைத்த தேர்ச்சிவரி யன்றியும்
வண்டலர் கோதை மாலையுண் மயங்கிக்
கண்டவர்க் குரைத்த காட்சி வரியு
மடுத்தடுத் தவர்முன் மயங்கிய மயக்க
மெடுத்தவர் தீர்த்த வெடுத்துக்கோள் வரியு
மாடன்மகளே யாதலி னாயிழை
பாடுபெற் றனவப் பைந்தொடி தனக்கென
வணித்தோட்டுத் திருமுகத் தாயிழை யெழுதிய
மணித்தோட்டுத் திருமுக மறுத்ததற் கிரங்கி
வாடிய வுள்ளத்து வசந்த மாலை
தோடலர் கோதைக்குத் துனைந்துசென் றுரைப்ப
மாலை வாரா ராயினும், மாணிழை
காலைகாண் குவமெனக் கையறு நெஞ்சமொடு
பூமல ரமளிமிசைப் பொருந்தாது வதிந்தனண்
மாமலர் நெடுங்கண் மாதவி தானென்

(வெண்பா)

1 செந்தா மரைவிரியத் தேமாங் கொழுந்தொழுக
மைந்தா ரசோக மடலவிழக்—கொந்தா
ரிளவேனல் வந்ததா லென்னுங்கொ லின்று
வளவேனற் கண்ணி மனம்

2 ஊடினீ ரெல்லா முருவிலான் றன்னாணை
கூடுமி னென்று குயில்சாற்ற—நீடிய
வேனற்பா ணிக்கலந்தாண் மென்பூந்திருமுகத்தைக்
கானற்பா ணிக்கலந்தாய் காண்

# கனாத்திறமுரைத்த காதை

அகனக ரெல்லா மரும்பவிழ் முல்லை
நிகர்மலர் நெல்லொடு தூஉய்ப் பகன்மாய்ந்த
மாலை மணிவிளக்கங் காட்டி யிரவிற்கோர்
கோலங் கொடியிடையார் தாங்கொள்ள மேலோர்
மாலதி மாற்றாண் மகவுக்குப் பாலளிக்கப் [நாண்
பால்விக்கிப் பாலகன் றான்சோர மாலதியும்
பார்ப்பா னொடுமனையா ளென்மேற் படாதனவிட்
டேற்பன கூறாரென் றேங்கி மகக்கொண்
டமரர் தருக்கோட்டம் வெள்யானைக் கோட்டம்
புகர்வெள்ளை நாகர்தங் கோட்டம் பகல்வாயி
லுச்சிக் கிழான்கோட்ட மூர்க்கோட்டம் வேற்கோட்டம்
வச்சிரக் கோட்டம் புறம்பணையான் வாழ்கோட்ட
நிக்கந்தக் கோட்ட நிலாக்கோட்டம் புக்கெங்குந்
தேவிர்கா ளெம்முறுநோய் தீர்மென்று மேவியோர்
பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாளுக்
கேசும் படியோ ரிளங்கொடியா யாசிலாய்!
செய்தவ மில்லோர்க்குத் தேவர் வரங்கொடார்
பொய்யுரையே யன்று பொருளுரையே கையிற்
படுபிணந்தா வென்று பறித்தவள்கைக் கொண்டு
சுடுகாட்டுக் கோட்டத்துத் தூங்கிருளிற் சென்றாங்
கிடுபிணந் தின்னு மிடாகினிப்பேய் வாங்கி
மடியகத் திட்டாண் மகவை யிடியுண்ட
மஞ்ஞைபோ லேங்கி யழுதாளுக் கச்சாத்த
னஞ்ஞைநீ யேங்கி யழலென்று முன்னை
யுயிர்க்குழவி காணாயென் றக்குழவி யாயோர்
குயிற்பொதும்பர் நீழற் குறுக வயிர்ப்பின்றி
மாயக் குழவி யெடுத்து மடித்திரைத்துத்
தாய்கைக் கொடுத்தாளத் தையலா டூய
மறையோன்பின் மாணியாய் வான்பொருட் கேள்
துறைபோ யவர்முடிந்த பின்ன ரிறையோனுந் [வித்

தாயத்தா ரோடும் வழக்குரைத்துத் தந்தைக்குந்
தாயர்க்கும் வேண்டுங் கடன்கழித்து மேயநாட்
டேவந்தி யென்பாண் மனைவி யவளுக்குப்
பூவந்த வுண்கண் பொறுக்கென்று மேவித்தன்
மூவா விளநலங் காட்டியெங் கோட்டத்து
நீவா வெனவுரைத்து நீங்குதலுந் தூமொழி
யார்த்த கணவ னகன்றனன் போயெங்குந்
தீர்த்தத் துறைபடிவே னென்றவனைப் பேர்த்திங்ஙன்
மீட்டுத் தருவா யெனவொன்றன் மேலிட்டுக்
கோட்டம் வழிபாடு கொண்டிருப்பாள் வாட்டருஞ்
கண்ணகி நல்லாளுக் குற்ற குறையுண்டென் [சீர்க்
றெண்ணிய நெஞ்சத் தினையளாய் நண்ணி
யறுகு சிறுபூளை நெல்லொடுதூஉய்ச் சென்று
பெறுக கணவனோ டென்றாள் பெறுகேன்
கடுக்குமென் னெஞ்சங் கனவினா லென்கை
பிடித்தனன் போயோர் பெரும்பதியுட் பட்டேம்
பட்ட பதியிற் படாத தொருவார்த்தை
யிட்டன ரூரா ரிடுதேளிட் டென்றன்மேற்
கோவலற் குற்றதோர் தீங்கென் றதுகேட்டுக்
காவலன் முன்னர்யான் கட்டுரைத்தேன் காவலனோ
டூர்க்குற்ற தீங்குமொன் றுண்டா லுறையாடேன்
தீக்குற்றம் போலுஞ் செறிதொடீஇ தீக்குற்ற
முற்றேனோ டுற்ற வுறுவனோ டியானுற்ற
நற்றிறங் கேட்கி னகையாகும் பொற்றொடீஇ
கைத்தாயு மல்லை கணவற் கொருநோன்பு
பொய்த்தாய் பழம்பிறப்பிற் போய்க்கெடுக வுய்த்துக்
கடலொடு காவிரி சென்றலைக்கு முன்றின்
மடலவிழ் நெய்தலங் கானற் றடமுள
சோமகுண்டஞ் சூரிய குண்டந் துறைமூழ்கிக்
காமவேள் கோட்டந் தொழுதார் கணவரொடு
தாமின் புறுவ ருலகத்துத் தையலார்
போகஞ்செய் பூமியினும் போய்ப்பிறப்பர் யாமொரு
ளாடுது மென்ற வணியிழைக்கவ் வாயிழையாள் [நா
பீடன் றெனவிருந்த பின்னரே நீடிய

காவலன் போலுங் கடைத்தலையான் வந்துநங்
கோவல னென்றாளோர் குற்றிளையாள் கோவலனும்
பாடமை சேக்கையுட் புக்குத்தன் பைந்தொடி
வாடிய மேனி வருத்தங்கண் டியாவுஞ்
சலம்புணர் கொள்கைச் சலதியொ டாடிக்
குலந்தரு வான்பொருட் குன்றந் தொலைந்த
விலம்பாடு நாணுத் தருமெனக் கென்ன
நலங்கேழ் முறுவ னகைமுகங் காட்டிச்
சிலம்புள கொண்மெனச் சேயிழை! கேளிச்
சிலம்பு முதலாகச் சென்ற கலனோ
டுலந்தபொரு ளீட்டுத லுற்றேன் மலர்ந்தசீர்
மாட மதுரை யகத்துச்சென் றென்னோடிங்
கேடலர் கோதா யெழுகென்று நீடி
வினைகடைக் கூட்ட வியன்கொண்டான் கங்குற்
கனைசுடர் கால்சீயா முன்.

(வெண்பா)

காதலி கண்ட கனவு கருநெடுங்கண்
மாதவிதன் சொல்லை வறிதாக்க—மூதை
வினைகடைக் கூட்ட வியங்கொண்டான் கங்குற்
கனைசுடர் கால்சீயா முன்.

# நாடுகாண் காதை

வான்கண் விழியா வைகறை யாமத்து
மீன்றிகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்
காரிரு ளின்ற கடைநாட் கங்கு
லூழ்வினை கடைஇ யுள்ளந் துரப்ப
வேழகத் தகரு மெகினக் கவரியுந்
தூமயி ரன்னமுந் துணையெனத் திரியுந்
தாளொடு குயின்ற தகைசால் சிறப்பி
னீணெடு வாயி னெடுங்கடை கழிந்தாங்
கணிகிள ரரவி னறிதுயி லமர்ந்த
மணிவண்ணன் கோட்டம் வலஞ்செயாக் கழிந்து
பணையைந் தோங்கிய பாசிலைப் போதி
யணிதிகழ் நீழ லறவோன் றிருமொழி
யந்தர சாரிக ளறைந்தனர் சாற்று
மிந்திர விகார மேழுடன் போகிப்
புலவூண் டுறந்து பொய்யா விரதத்
தவல நீத்தறிந் தடக்கிய கொள்கை
மெய்வகை யுணர்ந்த விழுமியோர் குழீஇய
வைவகை நின்ற வருகத் தானத்துச்
சந்தி யைந்துந் தம்முடன் கூடி
வந்து தலைமயங்கிய வான்பெரு மன்றத்துப்
பொலம்பூம் பிண்டி நலங்கிளர் கொழுநிழ
னீரணி விழவினு நெடுந்தேர் விழவினுஞ்
சாரணர் வரூஉந் தகுதியுண் டாமென
வுலக நோன்பிக ளொருங்குட னிட்ட
விலகொளிச் சிலாதலந் தொழுது வலங்கொண்டு
மலைதலைக் கொண்ட பேர்யாறு போலு
முலக விடைகழி யொருங்குட னீங்கிக்
கலையி லாளன் காமர் வேனிலொடு
மலய மாருத மன்னவற் கிறுக்கும்
பன்மல ரடுக்கிய நன்மரப் பந்த

ரிலவந் திகையி னெயிற்புறம் போகித்
தாழ்பொழி லுடுத்த தண்பதப் பெருவழிக்
காவிரி வாயிற் கடைமுகங் கழிந்து
குடதிசைக் கொண்டு கொழும்புனற் காவிரி
வடபெருங் கோட்டு மலர்ப்பொழி லுழைந்து
காவதங் கடந்து கவுந்திப் பள்ளிப்
பூமரப் பொதும்பர்ப் பொருந்தி யாங்க
ணிறுங்கொடி நுசுப்போ டினைந்தடி வருந்தி
நறும்பல் கூந்தல் குறும்பல வுயிர்த்து
முதிராக் கிளவியின் முள்ளெயி, றிலங்க
மதுரை மூதூர் யாதென வினவ
வாறைங் காதநம் மகனாட் டும்பர்
நாறைங் கூந்த! லணித்தென நக்குத்
தேமொழி தன்னொடுஞ் சிறையகத் திருந்த
காவுந்தி யையையைக் கண்டடி தொழலு
முருவுங் குலனு முயர்பே ரொழுக்கமும்
பெருமகன் றிருமொழி பிறழா நோன்பு
முடையீ ரென்னோ வுறுக ணாளிற்
கடைகழிந் திங்ஙனங் கருதிய, வாறென
வுரையாட் டில்லை யுறுதவத் தீர்! யான்
மதுரை மூதூர் வரைபொருள் வேட்கையேன்
பாடகச் சீறடி பரற்பகை யுழவா
காடிடை யிட்ட நாடுநீர் கழிதற்
கரிதிவள் செவ்வி யறிகுநர் யாரோ
வுரிய தன்றீங் கொழிகென வொழியீர்
மறவுரை நீத்த மாசறு கேள்விய
ரறவுரை கேட்டாங் கறிவனை யேத்தத்
தென்றமிழ் நன்னாட்டுத் தீதுதீர் மதுரைக்
கொன்றிய வுள்ள முடையே னாகலிற்
போதுவல் யானும் போதுமி னென்ற
காவுந்தி யையையைக் கைதொழு தேத்தி
யடிக! ணீரே யருளுதி ராயினித்
தொடிவளைத் தோளி துயர்தீர்த் தேனெனக்
கோவலன்! காணாய் கொண்ட விந்நெறிக்

கேதந் தருவன யாங்கும்பல கேண்மோ
வெயினிறம் பொரூஅ மெல்லியற் கொண்டு
பயில்பூந் தண்டலைப் படர்குவ மெனினே
மண்பக வீழ்ந்த கிழங்ககழ் குழியைச்
சண்பக நிறைத்த தாதுசோர் பொங்கர்
பொய்யறைப் படுத்துப் போற்றா மாக்கட்குக்
கையறு துன்பங் காட்டினுங் காட்டு
முதிர்பூஞ் செம்மலி னொதுங்கினர் கழிவோர்
முதிர்தேம் பழம்பகை முட்டினு முட்டு
மஞ்சளு மிஞ்சியு மயங்கரில் வலயத்துச்
செஞ்சுளைப் பலவின் பரற்பகை யுறுக்குங்
கயனெடுங் கண்ணி காதற் கேள்வ!
வயலுழைப் படர்குவ மெனினே யாங்குப்
பூநா ரிலஞ்சிற் பொருகய லோட்டி
நீர்நாய் கௌவிய நெடும்புற வாளை
மலங்குமிளிர் செறுவின் விலங்கப் பாயிற்
கலங்கலு முண்டிக் காரிகை யாங்கட்
கரும்பிற் றொடுத்த பெருந்தேன் சிதைந்து
சுரும்புசூழ் பொய்கைத் தூநீர் கலக்கு
மடங்கா வேட்கையி னறிவஞ ரெய்திக்
குடங்கையி னெண்டு கொள்ளவுங் கூடுங்
குறுநரிட்ட குவளையம் போதொடு
பொறிவரி வண்டினம் பொருந்திய கிடக்கை
நெறிசெல் வருத்தத்து நீரஞ ரெய்தி
யறியா தடியாங் கிடுதலுங் கூடு
மெறிநீ ரடைகரை யியக்கந் தன்னிற்
பொறிமா ணலவனு நந்தும் போற்றா
தூழடி யொதுக்கத் துறுநோய் காணிற்
றாழ்தரு துன்பந் தாங்கவு மொண்ணா
வயலுஞ் சோலையு மல்ல தியாங்கணு
மயல்படக் கிடந்த நெறியாங் கில்லை
நெறியிருங் குஞ்சி நீவெய் யோளொடு
குறியறிந் தவையவை குறுகா தோம்பெனத்
தோமறு கடிஞையுஞ் சுவன்மே லறுவையுங்

காவுந்தி யையைகைப் பீலியுங் கொண்டு
மொழிப்பொருட் டெய்வம் வழித்துணை யாகெனப்
பழிப்பருஞ் சிறப்பின் வழிப்படர் புரிந்தோர்
கரியவன் புகையினும் புகைக்கொடி தோன்றினும்
விரிகதிர் வெள்ளி தென்புலம் படரினுங்
கால்பொரு நிவப்பிற் கடுங்குர லேற்றொடுஞ்
சூன்முதிர் கொண்மூப் பெயல்வளஞ் சுரப்பக்
குடமலைப் பிறந்த கொழும்பஃ றாரமொடு
கடல்வள னெதிரக் கயவாய் நெறிக்குங்
காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை
யோவிறந் தொலிக்கு மொலியே யல்ல
தாம்பியுங் கிழாரும் வீங்கிசை யேத்தமு
மோங்குநீர்ப் பிழாவு மொலித்தல் செல்லாக்
கழனிச் செந்நெற் கரும்புசூழ் மருங்கிற்
பழனத் தாமரைப் பைம்பூங் கானத்துக்
கம்புட் கோழியுங் கனைகுர னாரையுஞ்
செங்கா லன்னமும் பைங்காற் கொக்குங்
கானக் கோழியு நீர்நிறக் காக்கையு
முள்ளு மூரலும் புள்ளும் புதாவும்
வெல்போர் வேந்தர் முனையிடம் போலப்
பல்வேறு குழூஉக்குரல் பரந்த வோதையு
முழாஅ நுண்டொளி யுள்புக் கழுந்திய
கழாஅமயிர் யாக்கைச் செங்கட் காரான்
சொறிபுற முரிஞ்சப் புரிஞெகிழ் புற்ற
குமரிக் கூட்டிற் கொழும்பல் லுணவு
கவரிச் செந்நெற் காய்த்தலைச் சொரியக்
கருங்கை வினைஞருங் களமருங் கூடி
யொருங்குநின் றார்க்கு மொலியே யன்றியுங்
கடிமலர் களைந்து முடிநா றழுத்தித்
தொடிவளைத் தோளு மாகமுந் தோய்ந்து
சேறாடு கோலமொடு வீறுபெறத் தோன்றிச்
செங்கய னெடுங்கட் சின்மொழிக் கடைசியர்
வெங்கட் டொலைச்சிய விருந்திற் பாணியுங்
கொழுங்கொடி யறுகையுங் குவளையுங் கலந்து

விளங்குகதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்
பாருடைப் பனர்போற் பழிச்சினர் கைதொழ
வேரொடு நின்றோ ரேர்மங் கலமு
மரிந்துகால் குவித்தோ ரரிகடா வுறுத்த
பெறுஞ்செய்ந் நெல்லின் முகவைப் பாட்டுந்
தெண்கிணைப் பொருநர் செருக்குட னெடுத்த
மண்கணை முழவின் மகிழிசை யோதையும்
பேர்யாற் றடைகரை நீரிற் கேட்டாங்
கார்வ நெஞ்சமோ டவலங் கொள்ளா
ருழைப்புலிக் கொடித்தே ருரவோன் கொற்றமொடு
மழைக்கரு வுயிர்க்கு மழற்றிக ழட்டின்
மறையோ ராக்கிய வாவுதி நறும்புகை
யிறையுயர் மாட மெங்கணும் போர்த்து
மஞ்சுசூழ் மலையின் மாணத் தோன்று
மங்கல மறையோ ரிருக்கை யன்றியும்
பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வ
ரிரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமு
முழவிடை விளைப்போர் பழவிற லூர்களும்
பொங்கழி யாலைப் புகையொடும் பரந்து
மங்குல் வானத்து மலையிற் றோன்று
மூரிடை யிட்ட நாடுடன் கண்டு
காவத மல்லது கடவா ராகிப்
பன்னாட் டங்கிச் சென்னா ளொருநா
ளாற்றுவீ யரங்கத்து வீற்றுவீற் றாகிக்
குரங்கமை யுடுத்த மரம்பயி லடுக்கத்து
வானவ ருறையும் பூநா றொருசிறைப்
பட்டினப் பாக்கம் விட்டனர் நீங்காப்
பெரும்பெய ரைய ரொருங்குட னிட்ட
விலங்கொளிச் சிலாதல மேலிருந் தருளிப்
பெருமக னதிசயம் பிறழா வாய்மைத்
தருமஞ் சாற்றுஞ் சாரணர் தோன்றப்
பண்டைத் தொல்வினை பாறுக வென்றே
கண்டறி கவுந்தியொடு காலுற வீழ்ந்தோர்
வந்த காரணம் வயங்கிய கொள்கைச்

சிந்தை விளக்கிற் றெரிந்தோ னாயினு
மார்வமுஞ் செற்றமு மகல நீக்கிய
வீர னாகலின் விழுமங் கொள்ளான்
கழிபெருஞ் சிறப்பிற் கவுந்தி! காணா
யொழிகென வொழியா தூட்டும் வல்வினை
யிட்ட வித்தி னெதிர்ந்துவந் தெய்தி
யொட்டுங் காலை யொழிக்கவு மொண்ணா
கடுங்கா னெடுவெளி யிடுஞ்சுட ரென்ன
வொருங்குட னில்லா வுடம்பிடை யுயிர்க
ளறிவ னறவோ னறிவுவரம் பிகந்தோன்
செறிவன் சினேந்திரன் சித்தன் பகவன்
றரும முதல்வன் றலைவன் றருமன்
பொருளன் புனிதன் புராணன் புலவன்
சினவரன் றேவன் சிவகதி நாயகன்
பரமன் குணவதன் பரத்தி லொளியோன்
றத்துவன் சாதுவன் சாரணன் காரணன்
சித்தன் பெரியவன் செம்ம றிகழொளி
யிறைவன் குரவ னியல்குண னெங்கோன்
குறைவில் புகழோன் குணப்பெருங் கோமான்
சங்கர னீசன் சயம்பு சதுமுக
னங்கம் பயந்தோ னருக னருண்முனி
பண்ணவ னெண்குணன் பாத்தில் பழம்பொருள்
விண்ணவன் வேத முதல்வன் விளங்கொளி
யோதிய வேதத் தொழியுறி னல்லது
போதார் பிறவிப் பொதியறை யோரெனச்
சாரணர் வாய்மொழி கேட்டுத் தவமுதற்
காவுந்தி கைதன் கைதலை மேற்கொண்
டொருமூன் றவித்தோ னோதிய ஞானத்
திருமொழிக் கல்லதென் செவியகந் திறவா
காமனை வென்றோ னாயிரத் தெட்டு
நாம மல்லது நவிலா தென்னா
வைவரை வென்றோ னடியிணை யல்லது
கைவரைக் காணினுங் காணா வென்க
ணருளறம் பூண்டோன் றிருமெய்க் கல்லதென்

பொருளில் யாக்கை பூமியிற் பொருந்தா
தருக ரறவ னறிவோற் கல்லதெ
னிருகையுங் கூடி யொருவழிக் குவியா
மலர்மிசை நடந்தோன் மலரடி யல்லதென்
றலைமிசை யுச்சி தானணிப் பொறாஅ
திறுதியி லின்பத் திறைமொழிக் கல்லது
மறுதர வோதியென் மனம்புடை பெயரா
தென்றவ னிசைமொழி யேத்தக் கேட்டதற்
கொன்றிய மாதவ ருயர்மிசை யோங்கி
நிவந்தாங் கொருமுழ நீணில நீங்கிப்
பவந்தரு பாசங் கவுந்தி கெடுகென்
றந்தர மாறாப் படர்வோர்த் தொழுது
பந்த மறுகெனப் பணிந்தனர் போந்து
காரணி பூம்பொழிற் காவிரிப் பேர்யாற்று
நீரணி மாடத்து நெடுந்துறை போகி
மாதருங் கணவனு மாதவத் தாட்டியுந்
தீதுதீர் நியமத் தென்கரை யெய்திப்
போதுசூழ் கிடக்கையோர் பூம்பொழி லிருந்துழி
வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு
கொங்கலர் பூம்பொழிற் குறுகினர் சென்றோர்
காமனுந் தேவியும் போலு மீங்கிவ
ராரெனக் கேட்டிங் கறிகுவ மென்றே
நோற்றுணல் யாக்கை நொசிதவத் தீருட
னாற்றுவழிப் பட்டோ ராரென வினவவென்
மக்கள் காணீர் மானிட யாக்கையர்
பக்க நீங்குமின் பரிபுலம் பினரென
வுடன்வயிற் றோர்க ளொருங்குடன் வாழ்க்கை
கடவது முண்டோ கற்றறிந் தீரெனத்
தீமொழி கேட்டுச் செவியகம் புதைத்துக்
காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க
வெள்ளுநர் போலுமிவ ரென்பூங் கோதையை
முள்ளுடைக் காட்டின் முதுநரி யாகெனக்
கவுந்தி யிட்டது தவந்தரு சாபங்
கட்டிய தாதலிற் பட்டதை யறியார்

குறுநரி நெடுங்குரற் கூவிளி கேட்டு
நறுமலர்க் கோதையு நம்பியு நடுங்கி
நெறியி னீங்கியோர் நீரல கூறினு
மறியா மையென் றறியல் வேண்டுஞ்
செய்தவத் தீர்நுந் திருமுன் பிழைத்தோர்க்
குய்திக் கால முரையி ரோவென
வறியா மையினின் றிழிபிறப் புற்றோ
ருறையூர் நொச்சி யொருபுடை யொதுங்கிப்
பன்னிரு மதியம் படர்நோ யுழந்தபின்
முன்னை யுருவம் பெறுகவீங் கிவரெனச்
சாபவிடை செய்து தவப்பெருஞ் சிறப்பிற்
காவுந்தி யையையுந் தேவியுங் கணவனு
முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய
புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்தென்

## கட்டுரை

முடியுடை வேந்தர் மூவ ருள்ளுந்
தொடிவிளங்கு தடக்கைச் சோழர்குலத் துதித்தோ
ரறனு மறனு மாற்றலு மவர்தம்
பழவிறன் மூதூர்ப் பண்புமேம் படுதலும்
விழவுமலி சிறப்பும் விண்ணவர் வரவு
மொடியா வின்பத் தவருறை நாட்டுக்
குடியுங் கூழின் பெருக்கமு மவர்தந்
தெய்வக் காவிரித் தீதுதீர் சிறப்பும்
பொய்யா வானம் புதுப்புனல் பொழிதலு
மரங்கு மாடலுந் தூக்கும் வரியும்
பரந்திசை யெய்திய பாரதி விருத்தியுந்
திணைநிலை வரியு மிணைநிலை வரியு
மணைவுறக் கிடந்த யாழின் றொகுதியு
மீரேழ் சகோடமு மிடைநிலைப் பாலையுந்
தாரத் தாக்கமுந் தான்றெரி பண்ணு
மூரகத் தேரு மொளியுடைப் பாணியு

மென்றிவை யனைத்தும் பிறபொருள் வைப்போ
டொன்றித் தோன்றுந் தனிக்கோ ணிலைமையு
மொருபரிசா நோக்கிக் கிடந்த
புகார்க்காண்டம் முற்றிற்று.

(வெண்பா)

காலை யரும்பி மலருங் கதிரவனு
மாலை மதியமும்போல் வாழியரோ—வேலை
யகழா லமைந்த வவனிக்கு மாலைப்
புகழா லமைந்த புகார்.

(புகார்க்காண்டம் மூலம் முற்றிற்று)

# சிலப்பதிகாரம்

## புகார்க்காண்டம்

சர். ஆர். கே. சண்முகம் செட்டியார்
கே. சி. ஐ. இ

எழுதிய உரை.

# சிலப்பதிகாரம்

## பதிகம்

'பதிகம்' என்பது முகவுரை; நூலில் சொல்லப்பட்ட கதை இதில் சுருக்கிச் சொல்லப்பட்டிருக்கிறது.

### (1-11)

சேர நாட்டு அரசனாகிய செங்குட்டுவனுடைய தம்பி இளங்கோ அடிகள் துறவறம் பூண்டு திருக்குணவாயில் என்ற ஊரில் இருந்தார். ஒரு நாள் அவரிடம் மலைவாசிகளாகிய குறவர் வந்து பின் வரும் செய்தியைச் சொன்னார்கள். "வேங்கை மரத்தின் நிழலில், ஒரு முலையை இழந்த பத்தினியாகிய கண்ணகி நின்றுகொண்டிருந்தாள். அப்போது இந்திரனைச் சேர்ந்த தேவர்கள் வந்து அவள் கணவனாகிய கோவலனை அவளுக்குக் காட்டி, அவர்கள் இருவரையும் விண்ணுலகத்துக்குக் கூட்டிக்கொண்டு போனார்கள். இந்த ஆச்சரியமான காட்சியை நாங்கள் கண்ணாரக் கண்டோம்.'' குறவர்கள் இந்தச் செய்தியை அடிகட்குச் சொல்லும் போது, அவருடன் தமிழ்ப் புலவரான கூல வாணிகன் சாத்தன் இருந்தார். அவர், "இந்தக் கதை நடந்த செய்திகளை நான் நன்றாய் அறிவேன்'' என்று அதன் விவரத்தைச் சொல்லத் தொடங்கினார்.

**குணவாயில் கோட்டத்து அரசு துறந்திருந்த**
**குடக்கோச் சேரல் இளங்கோ அடிகட்குக்,**
**குன்றக் குறவர் ஒருங்கு உடன் கூடிப்,**
**"பொலம் பூ வேங்கை நலம் கிளர் கொழு நிழல்**
**ஒரு முலை இழந்தாள் ஓர் திருமா பத்தினிக்கு,**
**அமரர்க்கு அரசன் தமர் வந்து ஈண்டி, அவள்**
**காதல் கொழுநனைக் காட்டி, அவளொடு எம்**
**கண்புலம் காண விண்புலம் போயது**
**இறும்பூது போலும்; அஃது அறிந்தருள் நீ'' என,**
**அவன் உழை இருந்த தண் தமிழ்ச் சாத்தன்,**
**"யான் அறிகுவன் அது பட்டது'' என்று உரைப்போன்;**

[குணவாயில் கோட்டத்து–திருக்குணவாயில் என்னும் ஊரி லுள்ள கோவிலில்; அரசு துறந்து இருந்த-அரச இன்பத்தை நீக்கி வசித்து வந்த; குடக்கோச்சேரல்-மேல்நாட்டு அரசனாகிய சேரன் செங் குட்டுவனுடைய; இளங்கோ அடிகட்கு-இளையவரான இளங்கோ அடிகள் என்பவருக்கு; குன்றக் குறவர்-மலையில் வாழும் குறவர்கள்; ஒருங்கு உடன் கூடி-எல்லோரும் ஒன்றாய்க் கூடிப் போய்; பொலம்பூ வேங்கை-பொன்னைப் போன்ற பூக்களை உடைய வேங்கை மரத்தின்; நலம்கிளர்-குளிர்ச்சி நிறைந்த; கொழு நிழல்-செழிப்பான நிழலில்; ஒரு முலை இழந்தாள்-தன்னுடைய ஒரு முலை இழந்தவளாகிய; ஓர் திருமா பத்தினிக்கு-ஒரு அழகிய வீரபத்தினிக்கு; அவள் காதல் கொழுநனை-அவளுடைய காதற் கணவனை; காட்டி-கண்ணெதிரில் கொண்டு வந்து காட்டி; அமரர்க்கு அரசன் தமர்–தேவர்களுக்கு அரசனாகிய இந்திர னுடைய சுற்றத்தார்; அவளொடு எம் கண்புலம் காண-அவளோடு எங்கள் கண்கள் காணும்படியாக; விண்புலம் போயது-விண்ணுலகம் சென்றது; இறும்பூது போலும்-மிக்க வியப்பாக இருந்தது; அஃது நீ அறிந்தருள் என-அதனை நீர் அறிந்தருள்வீராக என்று கூற; அவன் உழை இருந்த-அப்போது அவன் பக்கத்தில் இருந்த; தண் தமிழ்ச் சாத்தன்-இனிய தமிழ்ப் புலவனான மதுரைக் கூல வாணிகன் சீத் தலைச் சாத்தனார்; அது பட்டது-அந்தச் செய்தி விளைந்தது; யான் அறிகுவன்-நான் அறிவேன்; என்று உரைப்போன்-என்று சொல்லத் தொடங்கியவர்.]

(12-20)

சாத்தனார் கண்ணகியின் வரலாற்றைச் சுருக்கமாக இளங் கோ அடிகட்குச் சொல்லுகின்றார். அத்தி மாலையை அணிந்த சோழனுடைய தலைமைப் பட்டினம் நீங்காத சிறப்பை உடைய புகார் என்று வழங்கும் காவிரிப்பூம் பட்டினம். அந்த ஊரில் வணிக குலத்தைச் சேர்ந்த கோவலன் என்று ஒருவன் இருந் தான். அவன், பெயரும், கீர்த்தியும் பெற்ற மாதவி என்னும் ஒரு நாட்டியக் கன்னிகையுடன் சிற்றின்பத்தில் கூடி ஆடித் தன் செல்வம் முழுவதும் இழந்துவிட்டான்.

கோவலனுடைய மனைவி உத்தம பத்தினியாகிய கண்ணகி என்பவள். அவளிடம் விலை உயர்ந்த கால் சிலம்பு இருந்தது. செல்வத்தை இழந்து ஏழையானபின், தன் சொந்த ஊரிலி ருக்க மனமில்லாதவனாய்த் தன் மனைவியின் கால் சிலம்பை விற்றுத் தன் பிழைப்பிற்கு வழி தேடலாம் என்று யோசித்து அச்சிலம்பை விற்பதற்கு மனைவியுடன், பாண்டியன் தலைநக ராகிய பேர்பெற்ற மதுரையிற் கோவலன் புகுந்தான்.

**ஆர்அம் கண்ணிச் சோழன் மூதூர்,**
**பேராச் சிறப்பின் புகார் நகரத்துக்,**
**கோவலன் என்பான் ஓர் வாணிகன்; அவ்வூர்**
**நாடகம் ஏத்தும் நாடகக் கணிகையொடு**
**ஆடிய கொள்கையின் அரும் பொருள் கேடு உற,**
**கண்ணகி என்பாள் மனைவி; அவள் கால்**
**பண் அமை சிலம்பு பகர்தல் வேண்டிப்,**
**பாடல் சால் சிறப்பின் பாண்டியன் பெரும் சீர்**
**மாட மதுரை புகுந்தனன்;**

*[ஆர்அம்கண்ணி-அத்தியாலான அழகிய மாலையை அணிந்த; சோழன் மூதூர்-சோழ மன்னனின் பழைய பட்டினமாகிய; பேராச் சிறப்பின்-நீங்காத சிறப்பையுடைய; புகார் நகரத்து-புகார் என்னும் காவிரிப் பூம்பட்டினத்தில்; கோவலன் என்பான் ஓர் வாணிகன்-கோவலன் என்னும் பெயரையுடைய, வாணிக குலத்தைச் சேர்ந்த ஒருவன்; அவ்வூர்-அந்தப் பட்டினத்தில்; நாடகம் ஏத்தும்-நாடகத்தை ஆடிச் சிறப்பிக்கும்; நாடகக் கணிகையொடு-ஒரு நாட்டியக்காரியுடன்; ஆடிய கொள்கையின்-தான் சேர்ந்து ஒழுகிய ஒழுக்கத்தால்; அரும் பொருள் கேடு உற-தேடிய பெரும் செல்வம் எல்லாம் அழிந்து போக; கண்ணகி என்பாள் மனைவி-கண்ணகி என்ற அவன் மனைவி; அவள் கால் பண் அமை சிலம்பு-இனிய ஓசை அமைந்த அவள் கால் சிலம்பை; பகர்தல் வேண்டி-விற்பதற்காக; பாடல் சால் சிறப்பின்-புலவர்களால் பாடப்பட்டுச் சிறப்பை அடைந்த; பாண்டியன் பெருஞ் சீர்-பாண்டியனின் மிக்க புகழை உடைய; மாட மதுரை புகுந்தனன்-மாளிகைகளையுடைய மதுரை நகரிற் புகுந்தான்.]*

*(20-30)*

*மதுரையிற் புகுந்த கோவலன் அந்தச் சிலம்பைத் தன் கையில் எடுத்துக் கொண்டு அந்நகரத்திலுள்ள கடைத் தெருவின் வழியே போகும் போது, பொன் வேலை செய்கின்ற ஒரு தட்டானை அங்கே கண்டு, அவனிடம் தன் கையிலிருந்த சிலம்பைக் காட்டினான். இந்தத் தட்டான் கொஞ்ச நாட்களுக்கு முன் அரண்மனையிலிருந்து அரசன் தேவியினுடைய சிலம்பில் ஒன்றைத் திருடினவன். கோவலன் கையிலிருந்த சிலம்பைக் கண்டதும், தான் தப்பித்துக் கொள்ள நல்ல வழி கிடைத்தது என்று நினைத்து, "இந்த விலை உயர்ந்த சிலம்பை அரசன் மனைவியாகிய கோப்பெருந் தேவியல்லாமல் மற்ற எவரும் அணிவது பொருத்தமில்லை. அரண்மனைக்கு நான் போய் இந்தச்*

சிலம்பைப் பற்றித் தெரிவித்து வருகிறேன். அது வரையில் நீ இவ்விடத்திலேயே இரு'' என்று கோவலனுக்குச் சொல்லி விட்டு அரண்மனையை நோக்கிப் போனான்.

அங்கே அரசனாகிய பாண்டியன் நெடுஞ்செழியனைக் கண்டு "அரண்மனையிலே களவுபோன சிலம்பைப் பிறர் நாட்டு ஒரு திருடன் கையில் கண்டேன்'' என்று சொன்னான். தட்டான் இந்தச் செய்தியைச் சொல்லும்போது அரசன் தன் தேவியின் ஊடலைத் தீர்க்கக் காமவெறியுடன் அந்தப்புரம் போய்க் கொண்டிருந்தான். காமவெறியாயிருந்ததாலும் தனக்குப் பழைய வினைப் பயன் விளையவேண்டிய காலம் வந்துவிட்டதாலும், தட்டான் சொன்ன விஷயத்தை அரசன் நன்றாய் ஆராயாமல், தன் காவலாளரில் நன்கு பழகியவர்கள் சிலரைக் கூப்பிட்டு, "அந்தத் திருடனைக் கொன்று சிலம்பை இங்கே கொண்டு வாருங்கள்'' என்று கட்டளை இட்டான்.

**அது கொண்டு**
**மன் பெரும் பீடிகை மறுகில் செல்வோன்,**
**பொன் செய் கொல்லன் தன்கைக் காட்ட;**
**'கோப் பெருந் தேவிக்கு அல்லதை, இச்சிலம்பு**
**யாப்புறவு இல்லை; ஈங்கு இருக்க' என்று ஏகி,**
**பண்டு தான் கொண்ட சில் அரிச் சிலம்பினைக்**
**'கண்டனன் பிறன் ஓர் கள்வன் கை' என;**
**வினை விளை காலம் ஆதலின், யாவதும்**
**சினை அலர் வேம்பன் தேரான் ஆகிக்**
**கன்றிய காவலர்க் கூஉய், "அக்கள்வனைக்**
**கொன்று அச்சிலம்பு கொணர்க ஈங்கு'' என;**

[அது கொண்டு-அச்சிலம்பைக் கையிற் கொண்டு; மன் பெரும்-மிக்க சிறப்பினை உடைய; பீடிகை மறுகில்-வணிகர் தெருவில்; செல்வோன்-போகின்றவன்; பொன் செய் கொல்லன்-பொன் ஆபரணங்களைச் செய்கின்ற தட்டான் ஒருவனிடம்; தன் கை காட்ட-தன் கையிலிருந்த சிலம்பைக் காட்ட; கோப்பெருந்தேவிக்கு அல்லதை-அரசனுடைய மனைவிக்கு அல்லாமல்; இச்சிலம்பு யாப்புறவு இல்லை-மற்ற எவருக்கும் இச்சிலம்பு பொருத்தமில்லை; ஈங்கு இருக்க என்று ஏகி-இவ்விடத்திலேயே நீ இருப்பாயாக என்று அவனை இருத்தித் தான் மட்டும் போய்; பண்டு தான் கொண்ட-முன்பு தான் திருடிக் கொண்ட; சில் அரிச் சிலம்பினை-மெல்லிய பூவேலை செய்யப்பட்ட சிலம்பை; கண்டனன் பிறன் ஓர் கள்வன் கை என-வேறு ஒரு திருடன்

கையில் நான் பார்த்தேன் என்று சொல்ல; வினைவிளை காலம் ஆதலின்-தனக்குப் பழைய வினைப்-பயன் விளைய வேண்டிய காலம் வந்துவிட்டபடியால்; யாவதும்-சிறிதும்; சினை அலர் வேம்பன்-கொம்புகளில் அலர்ந்த வேப்ப மாலையை அணிந்த பாண்டியன்; தேரான் ஆகி-ஆராயாதவன் ஆகி; கன்றிய காவலர்க் கூஉய்-பழகிய காவலாளிகளிற் சிலரைக் கூப்பிட்டு; அக்கள்வனைக் கொன்று-; அச் சிலம்பு கொணர்க ஈங்கு என-அந்தச் சிலம்பை இங்கே கொண்டு வாருங்கள் என்று சொல்ல]

(31-36)

அரசனுடைய உத்திரவின்படி காவலர் கோவலனைக் கொன்றுவிட்டார்கள். கொல்லப்பட்ட கோவலனுடைய மனைவியாகிய கண்ணகி கணவனை இழந்ததினால் பற்றுக்கோல் இல்லாமல் நிலை தடுமாறிக் கதறி அழுது, தன் கற்பின் வல்லமையால் பாண்டியன் அழிந்து போகும்படி செய்து, தன் அழகிய மார்பிலுள்ள ஒரு முலையைத் திருகி எறிந்து, நிலை பெற்ற, சிறப்பை உடைய மதுரை நகரைப் பெரிய நெருப்பானது உண்ணும்படிச் செய்தாள். அப்படி செய்த பத்தினிப் பெண் தான், இந்தக் குறவர்கள் சொல்லிய பெண்மணியாகும்'' என்று, கூல வாணிகன் சாத்தனார், இளங்கோ அடிகட்குக் கண்ணகியின் வரலாற்றைச் சொன்னார்.

**''கொலைக் களப்பட்ட கோவலன் மனைவி,**
**நிலைக்களம் காணாள்; நெடும் கண்ணீர் உகுத்துப்,**
**பத்தினி ஆகலின், பாண்டியன் கேடு உற**
**முத்து ஆர மார்பின் முலை முகம் திருகி,**
**நிலை கெழு கூடல் நீள் எரி ஊட்டிய**
**பலர் புகழ் பத்தினி ஆகும் இவள்'' என;**

[கொலைக் களப் பட்ட-கொலைக் களத்திலே வெட்டுண்ட; கோவலன் மனைவி-; நிலைக்களம் காணாள்-தனக்கு நிலையான ஓரிடத்தையும் அறியாதவளாய் (அதாவது கணவனை இழந்தபடியால் நிலைதடுமாறி) நெடும் கண் நீர் உகுத்து-தன் நீண்ட கண்களிலிருந்து நீரைச் சிந்தி (அழுது); பத்தினி ஆகலின்-; பாண்டியன் கேடு உற-பாண்டிய மன்னன் அழிந்து போகும்படி; முத்து ஆர மார்பின்-முத்து மாலை புரளுகின்ற தன் மார்பிலுள்ள; முலை முகம் திருகி-ஒரு முலையைத் திருகி (எறிந்து); நிலை கெழு கூடல்-நிலை பெற்ற சிறப்பை உடைய மதுரைமா நகரத்தை; நீள் எரி ஊட்டிய-பெரிய நெருப்பானது

உண்ணும்படிச் செய்த; பலர் புகழ் பத்தினி ஆகும் இவள் என-பலராலும் புகழப்பட்ட பத்தினி இக்குறவர் கூறிய இப் பெண்மணி யாகும் என்று சொல்ல]

(37-54)

"பழைய வினைப் பயன் வருகின்ற காலமானதால் இந்தச் சம்பவம் நடந்தது என்று சொன்னீரே, அவர் செய்த பழைய வினை என்ன?" என்று அரசன் கேட்க, சாத்தனூர் சொல்லு கிறார்: "பகைவர்களுக்கு அஞ்சி நடுங்காத சிறப்பை யுடைய மதுரையாகிய பழைய நகரத்தில், கொன்றை மாலையை அணிந்த அழகிய சடைமுடியை உடைய சிவபெருமானின் கோயில் மன்றங்களுள் ஒன்றாகிய வெள்ளி அம்பலத்தில், ஒரு நாள் நல்ல இருட்டில் நான் உறங்கிக் கொண்டிருந்தேன். அப்படி நான் உறங்கிய போது பெரும் துன்பத்தை அடைந்த வீர பத்தினி யாகிய கண்ணகியின்முன் மதுரையைக் காவல் காக்கும்தெய்வம் வந்து தோன்றி, 'உன் கோபத்தால் கொதிக்கின்ற தீயை முலை யில் உண்டாக்கின பத்தினியே! உனக்கும் உன் கணவனுக்கும் உங்களுடைய பழைய வினை முடிந்தது. பசிய வளையலை அணிந் தவளே! உங்களுடைய முன் பிறப்பில் அழகிய சிங்கபுரம் என்னும் ஊரிலிருந்த சங்கமன் என்னும் ஒரு வணிகனின்மனைவி உங்களுக்குக் கொடுத்த சாபம் இந்தப் பிறப்பில் வந்து சேர்ந்து முடிவு பெற்றது. ஆகையால் நீண்ட கூந்தலையுடைய கண்ணகி யே! பதினான்கு நாட்கள் கழிந்த பின் நீ உன் கணவனைப் பார்ப்பாய். ஆனால் இந்த உலக மக்கள் வடிவத்தில் நீ அவனைப் பார்க்க முடியாது. தேவர் உருவத்தில்தான் அவனை நீ காண் பாய்' என்று மதுரைமா தெய்வம் கண்ணகிக்குச் சொன்ன வார்த்தைகளை நான் காதினாற் கேட்டேன்" இவ்விதம் மதுரை யில் நடந்த வரலாற்றைச் சாத்தனார் எடுத்துச் சொன்னார்.

**"வினை விளை காலம் என்றீர்; யாது அவர்**
**வினை விளைவு" என்ன, "விறலோய்! கேட்டி;**
**அதிராச் சிறப்பின் மதுரை மூதூர்க்**
**கொன்றை அம் சடைமுடி மன்றப் பொதியிலில்,**
**வெள்ளி அம்பலத்து நள் இருள் கிடந்தேன்,**
**ஆர் அஞர் உற்ற வீரபத்தினி முன்**
**மதுரை மாதெய்வம் வந்து தோன்றி,**
**'கொதி அழல் சீற்றம் கொங்கையின் விளைத்தோய்!**

முதிர் வினை நுங்கட்கு முடிந்தது; ஆதலின்
முந்தைப் பிறப்பில், பைந்தொடி! கணவனொடு
சிங்கா வண் புகழ்ச் சிங்கபுரத்துச்
சங்கமன் என்னும் வாணிகன் மனைவி
இட்ட சாபம் கட்டியது; ஆதலின்
வார் ஒலி கூந்தல்! நின் மணமகன் தன்னை
ஈர் ஏழ் நாளகத்து எல்லை நீங்கி
வானோர் தங்கள் வடிவின் அல்லதை
ஈனோர் வடிவில் காண்டல் இல்' எனக்
கோட்டம் இல் கட்டுரை கேட்டனன் யான்'' என;

*[வினை விளை காலம் என்றீர்-பழைய வினைப்பயன் வருகின்ற காலம் என்று சொன்னீரே; யாது அவர் வினை விளைவு என்ன-அவர் செய்த வினைப்பயன் என்ன என்று கேட்க; விறலோய் கேட்டி-வெற்றியுடைய அடிகளே! கேட்பீராக என்று (சாத்தனார் சொல்லுகிறார்) அதிராச் சிறப்பின்-கெடாச் சிறப்பினை உடைய; மதுரை மூதூர்-மதுரையாகிய பழைய நகரத்தில்; கொன்றை அம் சடை முடி-கொன்றை மாலையை அணிந்த அழகிய சடைமுடியை உடைய சிவபெருமானின்; மன்றப் பொதியிலில்-கோயில் மன்றங்களில் ஒன்றாகிய; வெள்ளி அம்பலத்து-; நள் இருள் கிடந்தேன்-நல்ல இருட்டில் கிடந்து உறங்கினேன்; (உறங்கிய பொழுது) ஆர் அஞர் உற்ற-மிக்க துன்ப முற்ற; வீரபத்தினி முன்-வீரபத்தினியாகிய கண்ணகியின் முன்; மதுரைமா தெய்வம்-மதுரையைக் காவல் புரியும் தெய்வம்; வந்து தோன்றி-; கொங்கையின்-உன் கொங்கையினால்; கொதி அழல் சீற்றம் விளைத்தோய்-கொதிக்கின்ற தீயை உன் கோபத்தால் உண்டாக்கினவளே!; நுங்கட்கு-உங்கள் இருவருக்கும்; முதிர்வினை முடிந்தது ஆதலின்-பழைய வினை முடிந்தது ஆகையால்; பைந்தொடி-பசிய வளையலை அணிந்தவளே! முந்தைப் பிறப்பில்-உங்களுடைய முன் பிறப்பில்; கணவனொடு-உன் கணவனுடன்; சிங்கா வண் புகழ் சிங்கபுரத்து-குறையாத வளமான புகழை உடைய சிங்கபுரம் என்னும் ஊரில்; சங்கமன் என்னும்-சங்கமன் என்ற பெயருடைய; வாணிகன் மனைவி-; இட்டசாபம்-; கட்டியது ஆதலின்-வந்து சேர்ந்தது ஆதலால்; வார் ஒலி கூந்தல்-நீண்டு தழைத்த கூந்தலை உடையவளே!; நின் மணமகன் தன்னை-உன் கணவனை; ஈர் ஏழ் நாள் அகத்து எல்லை நீங்கி-பதினான்கு நாட்களின் பகற்பொழுது கழித்து; வானோர் தங்கள் வடிவின் அல்லதை-தேவர்களின் உருவத்தில் அல்லாமல்; ஈனோர் வடிவில்-இந்த உலக மக்கள் வடிவில்; காண்டல் இல் என-காண முடியாது என்று சொன்ன; கோட்டம் இல் கட்டுரை-மாறுபாடு இல்லாத உறுதி மொழிகளை; கேட்டனன் யான் என-நான் கேட்டேன் என்று (சாத்தனார்) சொல்ல:]*

(55-62)

கண்ணகியின் சரித்திரத்தை இவ்விதம் சாத்தனர் சுருக்கமாய்ச் சொன்னதைக் கேட்ட இளங்கோ அடிகள், "இந்தச் சரித்திரத்தில் மூன்று அருமையான பொருள்கள் நிறைந்திருக்கின்றன. அவையாவன:

(1) நீதி முறை தவறிய அரசனுக்கு அறக்கடவுள் எமனாகத்தோன்றி அவனைக் கொல்லும். (2) புகழ் அமைந்த பத்தினியைச் சான்றோர் வணங்குவார்கள். (3) ஒருவர், முன் பிறப்பில் செய்த பழைய வினை இப் பிறப்பில் அவருக்குத் தகுந்த பயனை விளைவிக்கும். கண்ணகியின் கதையில் இந்த மூன்று சம்பவங்களும் ஒரு சிலம்பால் நேர்ந்தபடியால், **சிலப்பதிகாரம்** என்னும் பெயரால் உரையும் பாட்டும் கலந்த ஒரு நூலைச் செய்வோம்," என்று சொன்னார். இந்த வார்த்தைகளைக் கேட்ட சாத்தனர் மகிழ்ச்சியடைந்து, "இந்தக் கதை தமிழ் நாட்டு மூவேந்தர்களாகிய சோழன், பாண்டியன், சேரன் என்ற மூன்று அரசர்களுடைய நாடுகளிலும் நடை பெற்றதால், அடிகளே! நீரே அந்த நூலைச் செய்ய வேண்டும்" என்று சொன்னார்.

**"அரைசியல் பிழைத்தோர்க்கு அறம் கூற்று ஆவதூஉம்,**
**உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்**
**ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பதூஉம்,**
**சூழ்வினைச் சிலம்பு காரணமாகச்**
**சிலப்பதிகாரம் என்னும் பெயரால்**
**நாட்டுதும் யாம் ஓர் பாட்டுடைச் செய்யுள்" என,**
**"முடிகெழு வேந்தர் மூவர்க்கும் உரியது**
**அடிகள் நீரே அருளுக" என்றார்க்கு;**

[அரைசியல் பிழைத்தோர்க்கு-அரச முறைமையாகிய செங்கோல் முறை தவறிய அரசர்களுக்கு; அறம் கூற்று ஆவதூஉம்-அறக்கடவுள் எமனாக வந்து சேர்வதும்; உரைசால் பத்தினிக்கு-புகழ் நிறைந்த பத்தினிப் பெண்ணை; உயர்ந்தோர் ஏத்தலும்-சான்றோர் புகழ்ச்சி செய்தலும்; ஊழ்வினை உருத்து வந்து ஊட்டும் என்பதூஉம்-தாம் செய்த பழைய வினை முதிர்ந்துவந்து இப்பிறப்பில் பயனை விளைவிக்கும் என்பதும்; (ஆகிய இந்த உண்மைகள்) சூழ்வினைச் சிலம்பு-ஆராய்ந்து செய்த வேலைப்பாடுள்ள சிலம்பை; காரணமாக-காரணமாக வைத்துக்கொண்டு; சிலப்பதிகாரம் என்னும் பெயரால்-;நாட்டு

*தும் யாம் ஓர் பாட்டு உடைச் செய்யுள் என-நாம் உரையும் பாட்டும் கலந்த ஓர் நூலைச் செய்வோம் என்று இளங்கோ அடிகள் சொல்ல; முடிகெழு வேந்தர்-முடி தாங்கிய அரசர்களாகிய; மூவர்க்கும் உரியது-சேர, சோழ, பாண்டியன் என்ற மூன்று அரசர்களுக்கும் இக் கதை உரியது; (ஆகையால்) அடிகள் நீரே அருளுக-அடிகளே! நீரே அந்த நூலைச் செய்து அருள வேண்டும்; என்றார்க்கு-என்று சொல்லிய சாத்தனுருக்கு;]*

*(62-90)*

*சாத்தனுர் வேண்டியபடியே இளங்கோ அடிகள் சிலப்பதிகாரம் என்னும் பெரும் காவியத்தைச் செய்தார். இந்த நூலை அவர் முப்பது அத்தியாயங்களாகப் பிரித்து, ஒவ்வொரு அத்தியாயத்திற்கும் அதிலுள்ள கதையைக் குறித்துக் காட்டும் படியான பெயரையும் கொடுத்தார். இவ்விதம் உரைப்பாட்டை இடையிடையே தொகுத்த பாட்டுக்களால் ஆன சிலப்பதிகாரத்தைப் புகழ்மிக்க இளங்கோ அடிகள் செய்ய மதுரைப் புலவரான கூலவாணிகன் சாத்தனுர் இந்த நூலைக் கேட்டார்.*

**அவர்**

**மங்கல வாழ்த்துப் பாடலும், குரவர்**
**மனையறம் படுத்த காதையும், நடம் நவில்**
**மங்கை மாதவி அரங்கேற்று காதையும்,**
**அந்தி மாலைச் சிறப்புச் செய் காதையும்,**
**இந்திர விழவு ஊர் எடுத்த காதையும்,**
**கடலாடு காதையும்;**
**மடல் அவிழ், கானல் வரியும், வேனில் வந்து இறுத்தென**
**மாதவி இரங்கிய காதையும், தீதுடைக்**
**கனுத்திறம் உரைத்த காதையும், வினுத்திறத்து**
**நாடுகாண் காதையும், காடுகாண் காதையும்,**
**வேட்டுவ வரியும், தோட்டலர் கோதையொடு**
**புறஞ்சேரி இறுத்த காதையும், கறங்கு இசை**
**ஊர்காண் காதையும், சீர் சால் நங்கை**
**அடைக்கலக் காதையும், கொலைக்களக் காதையும்,**
**ஆய்ச்சியர் குரவையும், தீத்திறம் கேட்ட**
**துன்ப மாலையும், நண் பகல் நடுங்கிய**
**ஊர் சூழ் வரியும், சீர்சால் வேந்தனெடு**
**வழக்குரை காதையும், வஞ்சின மாலையும்,**
**அழற்படு காதையும், அருந் தெய்வம் தோன்றிக்**
**கட்டுரை காதையும், மட்டு அலர் கோதையர்**

குன்றக் குரவையும், என்று இவை அனைத்துடன்
காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல்,
வாழ்த்து, வரந்தரு காதையொடு
இவ் வாறைந்தும்,
உரை இடையிட்ட பாட்டுடைச் செய்யுள்
உரைசால் அடிகள் அருள, மதுரைக்
கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்,
இது பால் வகை தெரிந்த பதிகத்தின் மரபு என்;

[அவர் மங்கல வாழ்த்துப் பாடலும்-கண்ணகி கோவலன் இவர்களுடைய திருமணத்தில் மகளிர் வாழ்த்துதலையுடைய பாடலும்; குரவர்-கண்ணகி, கோவலனுடைய பெற்றோர்; மனையறம் படுத்த காதையும்-அவர்களைத் தனியே இல்லற வாழ்க்கை நடத்தச் செய்த காதையும்; நடம் நவில்-நடனம் ஆடுதலில் பெயர்பெற்ற; மங்கை மாதவி-பெண்ணாகிய மாதவி என்பவள்; அரங்கேற்று காதையும்-அரசன் முன்னிலையில் தன் நாட்டியத்தை அரங்கேற்றம் செய்த காதையும்; அந்தி மாலை-அந்திப் பொழுதாகிய மாலைக் காலத்தை; சிறப்புச் செய்காதையும்-சிறப்புச் செய்ததைச் சொல்லும் காதையும்; இந்திர விழவு ஊர் எடுத்த காதையும்-அந்தப் பட்டினத்தில் இந்திரனுக்கு விழா எடுத்த காதையும்; கடலாடு காதையும்-அந்த விழாவில் ஊர் மக்கள் கடலாடின காதையும்; மடல் அவிழ்-தாழையானது மடல் அவிழ்ந்த; கானல் வரியும்-கடற்கரைச் சோலையில் கண்ணகியும் கோவலனும் வரிப்பாட்டுகளை யாழில் பாடியதும்; வேனில் வந்து இறுத்து என-வேனில் காலம் வந்து தங்கிற்று என்று; மாதவி இரங்கிய காதையும்-கோவலன் தன்னை விட்டுப் பிரிந்தபின் மாதவி வருந்திய காதையும்; தீது உடை-தீங்கை உடைய; கனாத்திறம் உரைத்த காதையும்-கனவுச் செய்தியைக் கண்ணகி தன் தோழிக்கு எடுத்துச் சொல்லிய காதையும்; வினாத்திறத்து நாடுகாண் காதையும்-கண்ணகி மதுரை மூதூர் யாது எனக் கேட்ட சிறப்பினையுடைய சோழ நாட்டின் வளத்தை அவர் கண்ட காதையும்; காடுகாண் காதையும்-நாடு கடந்து அவர்கள் பாலை நிலத்தைக் கண்ட காதையும்; வேட்டுவ வரியும்-அங்கு வேட்டுவர்கள் வரிக்கூத்தாடியதும்; தோடு அலர் கோதையொடு-நெருங்கிய இதழ்களையுடைய பூவை அணிந்த கூந்தலை உடைய கண்ணகியோடு; புறஞ்சேரி இறுத்த காதையும்-கோவலன் மதுரைப் புறஞ்சேரியில் தங்கிய காதையும்; கறங்கு இசை-முரசு முழங்கும் இசையையுடைய; ஊர் காண் காதையும்-மதுரை மாநகரைக் கோவலன் கண்ட காதையும்; சீர்சால் நங்கை-அழகு நிறைந்த பெண்ணான கண்ணகியை; அடைக்கலக் காதையும்-மாதரியிடம் கவுந்தி அடிகள் அடைக்கலம் கொடுத்த காதையும்; கொலைக்களக் காதையும்;-கோவலன் கொல்லப்பட்ட காதையும்; ஆய்ச்சியர் குர

வையும்—தம் சேரியில் தீய நிகழ்ச்சிகள் கண்டதைக்கழிவு செய்வதற்கு மாதரி முதலான இடைச்சியர் குரவைக் கூத்தாடியதும்; தீத்திறம் கேட்ட துன்ப மாலையும்—கோவலன் கொலையுண்ட தீச் செய்தியைக் கேட்ட கண்ணகியின் துன்ப நிலையும்; நண்பகல் நடுங்கிய ஊர் சூழ் வரியும்—நடுப்பகலில் நாணத்தை விட்டுக்கண்ணகி தன் நெஞ்சு கலங்கி ஊரார் தன்னைச் சுற்றும்படி வந்த காதையும்; சீர் சால் வேந்தனொடு—புகழ் மிக்க பாண்டிய மன்னனோடு; வழக்கு உரை காதையும்—கண்ணகி தன் வழக்கை எடுத்துச் சொன்ன காதையும்; வஞ்சின மாலையும்—கண்ணகி பாண்டியன் நெடுஞ்செழியனுடைய தேவியிடம் தன் சபதத்தைச் சொன்ன இயல்பும்; அழல் படு காதையும்—அந்தச் சபதத்தால் கண்ணகி மதுரை நகரைத் தீ மூட்டிய காதையும்; அருந் தெய்வம் தோன்றி—கண்ணகி முன் மதுரையைக் காவல் புரியும் தெய்வம் தோன்றி; கட்டுரை காதையும்—கண்ணகிக்கு அவள் முற்பிறப்பைக் கூறிய மெய் மொழிகளையுடைய காதையும்;

மட்டு அலர் கோதையர்—தேன் நிறைந்த மலர்களாலான மாலையை அணிந்த குறமகளிர்; குன்றக் குரவையும்—வேங்கை நிழலில் பத்தினியாகிய கண்ணகியைக் கண்டதற்காக உற்பாதசாந்தியாகக் குரவைக் கூத்தாடியதும்; என்று இவை அனைத்துடன்—என்று சொல்லப்பட்ட இந்த இருபத்திநான்கு காதைகளுடன்; காட்சி—கண்ணகிக்குச்சிலை அமைக்கக் கல்லைக் கண்ட காதையும்; கால்கோள்;கல்லிலே பத்தினிக் கடவுளின் சிலையைச் செய்ய விழாத் தொடங்கிய காதையும்; நீர்ப்படை—அக்கல்லைக் கங்கையாற்றில் நீராட்டிய காதையும்; நடு கல்—கோயிலில் அந்தக் கற் சிலையை நட்டுப் பிரதிஷ்டை செய்த காதையும்; வாழ்த்து—பத்தினிக் கடவுள் செங்குட்டுவன் முதலியோரை வாழ்த்தின காதையும்; வரம் தரு காதையொடு—பத்தினிக் கடவுள் பலருக்கும் வரம் தந்த காதையுடனே; இவ்வாறைந்தும்—இந்த முப்பது காதைகளையும்; உரை இடை இட்ட—உரைச் செய்யுளை இடையிடையே தொடுத்த; பாட்டு உடைச் செய்யுள்—இசைப் பாட்டுச் செய்யுளும் கலந்த நூலாக; உரை சால் அடிகள்—புகழ் மிக்க இளங்கோ அடிகள்; அருள—செய்ய; மதுரைக் கூல வாணிகன் சாத்தன் கேட்டனன்—மதுரைத் தானிய வணிகனை சாத்தனார் என்னும் தமிழ்ப் புலவர் கேட்டார்; இது பால் வகை தெரிந்த—இது நூலின் கதை இன்னதென்று தெரிவதற்குக் கருவியாகிய; பதிகத்து மரபு—பதிகத்தின் செய்தி முறை]

பதிகத்தின் இலக்கணம் நூலிலுள்ள காதையைச் சுருக்கமாக எடுத்துக் காட்டுவது, அவ்விலக்கணத்தை உடைய பதிகம் இது என்று முடித்தார்.

**பதிகம் முற்றிற்று**

# உரைபெறு கட்டுரை

பாண்டியன் நெடுஞ் செழியன் செங்கோல் முறை தவறிக் கோவலனைக் கொலை செய்தபடியால், அன்று முதல் பாண்டிய நாட்டில் மழை இல்லாமல் வறுமையும் நோயும் அதிகரித்தன. ஒரு பொற்கொல்லனுடைய வஞ்சகத்தால் இத் தீங்கு நேர்ந்ததினால், நெடுஞ் செழியனுக்குப் பின் பாண்டிய நாட்டை ஆண்ட வெற்றிவேற் செழியன் பத்தினிக் கடவுளாகிய கண்ணகிக்கு ஆயிரம் பொற் கொல்லரைப் பலி கொடுத்துச் சாந்தி செய்ய, நாட்டில் மழை பெய்து நோயும் துன்பமும் நீங்கின.

இந்தச் செய்தியைக் கேட்ட கொங்கு நாட்டுச் சிற்றரசர்களான கோசரும், இலங்கை மன்னன் கயவாகுவும், சோழ நாட்டு மன்னன் பெருங்கிள்ளியும் தங்கள் நாட்டிலும் பத்தினிக் கடவுளுக்குக் கோயில் அமைத்து விழாவும், சாந்தியும் செய்ய, அவர்களுடைய நாடுகளெல்லாம் வளமாகச் செழித்தோங்கின.

சேர நாட்டு மன்னன் செங்குட்டுவன், தன் தலைநகராகிய வஞ்சிக் கருவூரில் பத்தினிக் கடவுளுக்குக் கோயில் அமைத்துச் சிறப்புச் செய்த விவரம் வஞ்சிக் காண்டத்தில் சொல்லப் பட்டிருக்கிறது. இந்தக் கோயில்தான் இப்போது கொச்சி ராச்சியத்திலுள்ள கொடுங்கோளூர் என்னும் ஊரிலிருக்கும் பகவதி கோயிலாயிருக்கலாம் என்று எண்ணச் சில ஆதாரங்கள் உண்டு. இந்தப் பகவதி கோயிலில் நடை பெறும் விழாக் காலத்தில் பாடப்படும் பாட்டுக்களில் பகவதி, "ஒற்றை முலைச்சி" என்று சொல்லப்படுகிருள்.

**அன்று தொட்டுப் பாண்டிய நாடு மழைவறங்**
**கூர்ந்து, வறுமை எய்தி, வெப்பு நோயுங் குருவும்**
**தொடரக், கொற்கையிலிருந்த வெற்றிவேற் செழியன்,**
**நங்கைக்குப் பொற்கொல்லர் ஆயிரவரைக் கொன்று,**
**களவேள்வியால் விழவொடு சாந்தி செய்ய, நாடு மலிய**
**மழை பெய்து, நோயும்துன்பமும் நீங்கியது.**
**அது கேட்டுக் கொங்கிளங் கோசர், தங்கள்**
**நாட்டகத்து, நங்கைக்கு விழவொடு சாந்தி செய்ய,**

மழை தொழில் என்றும் மாறாதாயிற்று.
அது கேட்டுக் கடல் சூழ் இலங்கைக்
கயவாகுவென்பான், நங்கைக்கு நாட்பலி
பீடிகைக் கோட்டம் முந்துறுத்து, ஆங்கு அரந்தை
கெடுத்து வரந்தரும் இவளென, ஆடித்திங்களகவையின்,
ஆங்கோர் பாடிவிழாக்கோள் பன்முறை
யெடுப்ப, மழை வீற்றிருந்து, வளம்பல பெருகிப்
பிழையா விளையுள் நாடாயிற்று.
அது கேட்டுச் சோழன் பெருங்கிள்ளி கோழி
யகத்து எத்திறத்தானும் வரந்தரும் இவள்
ஓர் பத்தினிக் கடவுளாகுமென, நங்கைக்குப் பத்தினிக்
கோட்டமுஞ் சமைத்து, நித்தல் விழாவணி
நிகழ்வித்தோனே.

[அன்று தொட்டுப் பாண்டியன் நாடு-; மழை வறம் கூர்ந்து-மழை இல்லாமையால் வறட்சி அதிகமாகி; வறுமை எய்தி-; வெப்பு நோயும் குருவும் தொடர-மழை இல்லாத வெப்பத்தினால் வரும் அம்மை நோயும் கொப்புளமும் அதிகப்பட; கொற்கையில் இருந்த-பாண்டிய நாட்டுத் தலைநகராகிய கொற்கை என்னும் ஊரில் அரசு செய்து வந்த; வெற்றி வேற் செழியன்-; நங்கைக்கு-பத்தினிக் கடவுளாகிய கண்ணகிக்கு; பொற் கொல்லர் ஆயிரவரைக் கொன்று-; களவேள்வி யால் விழவொடு சாந்தி செய்ய-பலி கொடுக்கும் வேள்வியினால் சாந்தி செய்து விழாக் கொண்டாட; நாடு மலிய மழை பெய்து-நாடு செழிப்படைய மழை பெய்து; நோயும் துன்பமும் நீங்கியது-;

அது கேட்டு-பாண்டியன் வெற்றி வேற் செழியன் சாந்தி செய்து தன் நாட்டுத் துன்பத்தை நீக்கிய செய்தியைக் கேட்டு; கொங்கு இளங் கோசர்-கொங்கு நாட்டின் சிற்றரசராகிய கோசர்; தங்கள் நாட்ட கத்து-தங்கள் நாட்டில்; நங்கைக்கு விழவொடு சாந்தி செய்ய-பத்தினிக் கடவுளுக்கு விழாவும் சாந்தியும் செய்ய; மழை தொழில் என்றும் மாறாதாயிற்று-மழையும் பயிர்த் தொழிலும் மாறாமல் செழிப்பைக் கொடுத்தன.

அது கேட்டுக்கடல் சூழ் இலங்கைக் கயவாகு என்பான்-கடலால் சூழப்பட்ட இலங்கை நாட்டின் அரசன் கயவாகு; நங்கைக்கு-பத்தினிக் கடவுளுக்கு; நாட்பலி பீடிகை-நாள் தோறும் பலியிடும் இடத்தை உடைய; கோட்டம் முந்துறுத்து ஆங்கு-கோயிலைக் கட்டி; அரந்தை கெடுத்து-துன்பத்தை நீக்கி; வரம்தரும் இவள் என-நாம் வேண்டும் வரத்தைக் கொடுப்பாள் இவள் என்று; ஆடித் திங்கள் அகவையில்-ஆடி மாதத்திலே; ஆங்கு ஓர் பாடி விழாக் கோள்-

தன்னுடைய நகரத்தில் விழா நடத்துவதை; பன் முறை எடுப்ப-ஆண்டுதோறும் தவறாமல் நடத்த; மழை வீற்றிருந்து-குறைவில்லாமல் மழை பெய்து; வளம் பல பெருகி-எல்லா வளமும் பெருகி; பிழையா விளையுள் நாடு ஆயிற்று-தவறாமல் விளை பொருள்கள் விளையும் நாடு ஆயிற்று. (அதாவது இலங்கை மாறாத செழிப்புடைய நாடாயிற்று.)

அது கேட்டு-; சோழன் பெருங்கிள்ளி-பெருங்கிள்ளி என்னும் சோழ மன்னன்; கோழியகத்து-தன் தலைமைப் பட்டினமாகிய உறையூரில்; இவள் ஓர் பத்தினிக் கடவுள் ஆகும்-கண்ணகியாகிய இவள் ஓர் பத்தினிக் கடவுள் ஆவாள் ஆதலால்; எத்திறத்தாலும் வரந்தரும் என-எந்த வகையிலும் நாம் வேண்டும் வரத்தைக் கொடுப்பாள் என்று; நங்கைக்குப் பத்தினிக் கோட்டமும் சமைத்து-இவளுக்குப் பத்தினிக் கோயிலை ஏற்படுத்தி; நித்தல் விழா அணிநிகழ்வித்தோனே-நித்தமும் விழாச் சிறப்புக்கள் நிகழும்படிச் செய்தான்.

[கொற்கை என்னும் பட்டினம் சில காலம் பாண்டியர்களுடைய தலைநகரமாயிருந்தது. இதில் குறிக்கப்பட்ட இலங்கை மன்னன் கயவாகு, கி. பி. 171 முதல் 193 வரை அரசாண்டவன்.]

**உரைபெறு கட்டுரை முற்றிற்று**

# புகார்க்காண்டம்

## மங்கலவாழ்த்துப் பாடல்

### (1-19)

புகார்க் காண்டத்தில், புகார் நகரமென்னும், காவிரிப்பூம் பட்டினத்தில் நடந்த செய்திகள் சொல்லப்படுகின்றன. இந்தக் காண்டம் 'மங்கல வாழ்த்துப் பாடல்' முதல் 'நாடுகாண்காதை' வரை பத்து அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. மங்கல வாழ்த்துப் பாடலில், கண்ணகிக்கும் கோவலனுக்கும் திருமணம் நடந்ததும், அது சமயம் மகளிர் அவர்களை வாழ்த்தியதும் சொல்லப்படுகின்றன. கண்ணகி கோவலன் இவர்களுடைய பிறப்பு வளர்ப்பில் விசேஷமாகச் சொல்லத்தக்க நிகழ்ச்சிகள் ஒன்றுமே இல்லை போலும். திருமணத்திலிருந்து கதை ஆரம்பிக்கின்றது.

நூல் ஆரம்பத்தில் கடவுள் வாழ்த்துக் கூறுவது வழக்கம். இளங்கோ அடிகள் கண்கண்ட தெய்வங்களை வாழ்த்துகிறார். சூரியன், சந்திரன், மழை, புகார்நகரம்-இவை எல்லா உயிர்களின் வாழ்க்கைக்கும் இன்றியமையாதவை. ஆகையால், சந்திரனைப் போற்றுவோம்; சூரியனைப் போற்றுவோம்; கரிய மேகங்களைப் போற்றுவோம் என்று ஆரம்பிக்கிறார். பின், புகார் நகரத்தைப் போற்றுவோம் என்று சொல்லுகிறார். இவைகளைப் போற்றுவதில் சோழ மன்னனின் செங்கோல் நீதியையும், வலிமையையும், அருளையும், புகழையும் வெகு அழகாக வெளிப்படுத்துகின்றார். சந்திரனுடைய இனிய குளிர்ச்சி சோழ மன்னனின் வெண்குடைக் குளிர்ச்சிபோல் மக்களைக் காப்பாற்றுகின்றது. சோழ மன்னனுடைய ஆணை ஒருசிறிதும் தவறாமல் நடைபெறுவது போல், சூரியன் சிறிதேனும் தவறாமல் மேரு மலையைச் சுற்றுகின்றான். சோழ மன்னன் வேற்றுமை இல்லாமல் எல்லா மக்களுக்கும் தன் அருளை அளிப்பதுபோல், கரிய மேகம் வானத்திலிருந்து எல்லா மக்களுக்கும் மழையைத் தருகின்றது. சோழ மன்னனின் குடிப்புகழ் ஓங்க ஓங்க, அவன் தலைநகராகிய புகாரின் புகழும் பெருமையும் ஓங்கிப் பரவுகின்றன.

பொதிகை மலையையும், இமய மலையையும் போலப் புகார் நகரம் எக்காலத்திலும் அழியாமல் நிலை பெற்றிருக்குமென்று கல்வி கேள்விகளிற் சிறந்த பெரியோர் சொல்லுகிறார்கள். ஏன்? இந்த மூன்று இடங்களிலும் சான்றோர் வாசம் செய்கிறார்கள். பொதிகை மலை அகத்தியருடைய இருப்பிடம். இமய மலையில் ஞானிகள் வசிக்கிறார்கள். புகார் நகரத்தில் பழங் குடிப் பெரியோர்கள் இருக்கின்றார்கள். புகார் நகரத்தின் மற்றொரு விசேஷம் என்னவென்றால், இப் பட்டினத்து மக்கள் தங்கள் நாட்டை விட்டுப் பிற நாடுகளுக்குக் குடியேற வேண்டுமென்று நினைத்ததுகூட இல்லை. நாட்டின் சிறப்பையும், அரசனின் பெருமையையும் விளக்க இதைவிட வேறு என்ன அத்தாட்சி வேண்டும்? மக்கள் தங்கள் நாட்டை விட்டுப் போவதற்கு நான்கு முக்கிய காரணங்கள் உண்டு. பகைவர் பயம், அரசன் அநீதி, வறுமையின் கொடுமை, நோயின் துன்பம். இந்த நான்கு கஷ்டங்களையும் அறியாத நகரம் புகார் நகரம். இவ்வளவு சிறந்த நகரம் இருந்த இடமும் கூடத் தெரியாமல் அழிந்து போய் விட்டது. எக்காலத்திலும் அழியாமல் நிலை பெற்றிருக்கும் நகரம் என்று இளங்கோ அடிகள் சொன்ன வாக்குப்பொய்யாகி விட்டதா? இல்லை, இல்லை. அழியாமைக்கு அடிகள் சொன்ன காரணம் என்ன? சான்றோர் வசிக்கும் இடம் என்னும் காரணம்தான். புகார் நகரத்தில் சான்றோர் குறையவும் நகரம் அழிந்து விட்டது போலும்.

## இயற்கை வழிபாடு

**திங்களைப் போற்றுதும்! திங்களைப் போற்றுதும்!**
**கொங்கு அலர்தார்ச் சென்னி குளிர் வெண்குடை**
**அங்கண் உலகு அளித்தலான். [போன்று இவ்**

**ஞாயிறு போற்றுதும்! ஞாயிறு போற்றுதும்!**
**காவிரி நாடன் திகிரிபோல், பொற் கோட்டு**
**மேரு வலம் திரிதலான்.**

**மாமழை போற்றுதும்! மாமழை போற்றுதும்!**
**நாம நீர் வேலி உலகிற்கு அவன் அளிபோல்,**
**மேல் நின்று தான் சுரத்தலான்.**

**பூம்புகார் போற்றுதும்! பூம்புகார் போற்றுதும்!**
**வீங்கு நீர் வேலி உலகிற்கு, அவன் குலத்தோடு**
**ஓங்கிப் பரந்து ஒழுகலான்.**

ஆங்குப்,
பொதியிலாயினும், இமயமாயினும்,
பதி எழுவுஅறியாப் பழங்குடி கெழீஇய
பொது அறு சிறப்பின் புகாரே ஆயினும்,
நடுக்கு இன்றி நிலைஇய என்பது அல்லதை
ஒடுக்கங் கூறார் உயர்ந்தோர் உண்மையின்;
முடித்த கேள்வி முழுது உணர்ந்தோரே.

[திங்களைப் போற்றுதும், திங்களைப் போற்றுதும்-சந்திரனைப் போற்றுவோமாக! சந்திரனைப் போற்றுவோமாக!; கொங்கு அலர் தார்ச் சென்னி-தேன் நிறைந்த பூக்களால் தொடுத்த மாலையை உடைய சோழ மன்னனின்; குளிர் வெண் குடைபோன்று-குளிர்ச்சியான வெள்ளிய குடையைப்போல்; இவ் அம் கண் உலகு அளித்தலான்-இந்த அழகிய இடத்தையுடைய உலகைக் காப்பாற்றுதலால்.

ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்-சூரியனைப் போற்றுவோமாக! சூரியனைப் போற்றுவோமாக!; காவிரி நாடன்-காவிரி பாயும் சோழ நாட்டு மன்னனுடைய; திகிரிபோல்-ஆணைச் சக்கரம் போல; பொன் கோட்டுமேரு-பொன் விளையும் கொடுமுடியையுடைய மேரு மலையை; வலம் திரிதலான்-வலப்பக்கமாகச் சுற்றி வருவதால்.

மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்-கரிய மேகத்தைப் போற்றுவோம்! கரிய மேகத்தைப் போற்றுவோம்! நாம நீர் வேலி-அச்சத்தைத் தரும் கடல் நீரை வேலியாக உடைய; உலகிற்கு-இந்த உலகத்திற்கு; அவன் அளிபோல்-அந்தச் சோழ மன்னனின் அருளைப்போல; மேல் நின்று தான் சுரத்தலான்-மேலே வானத்திலிருந்து மழை பொழிதலால்.

பூம் புகார் போற்றுதும் பூம் புகார் போற்றுதும்-அழகிய காவிரிப் பூம்பட்டினத்தைப் போற்றுவோம்; வீங்கு நீர் வேலி-நிறைந்த நீரையுடைய கடலைத் தனக்கு எல்லையாகக் கொண்ட; உலகிற்கு-இந்த உலகத்தில்; அவன் குலத்தோடு-சோழ மன்னனுடைய குலத்தோடு; ஓங்கிப் பரந்து ஒழுகலான்-தானும் சேர்ந்து புகழ் பெற்று வருவதால்.

(அதாவது சோழ மன்னனின் புகழ் ஓங்க ஓங்க, அவன் தலைநகராகிய காவிரிப்பூம் பட்டினத்தின் புகழும் ஓங்கியது.)

ஆங்கு-ஆதலால்; பொதியிலாயினும்-பொதிகை மலையேயாயினும்; இமயமாயினும்-இமய மலையேயாயினும்; பதி எழுவு அறியா-

எக்காரணத்தாலும் ஊரினின்றும் வெளியே குடிபோகாத; பழம் குடி கெழீஇய–பழமையான குடிமக்கள் பொருந்திய; பொது அறு சிறப்பின்–தனக்குத்தானே நிகரான சிறப்பினையுடைய; புகாரேயாயினும்–காவிரிப்பூம் பட்டினமேயாயினும்; நடுக்கு இன்றி நிலைஇய–பண்டைக் கால முதல் குறைபாடு இல்லாமல் நிலை பெற்றன; என்பது அல்லதை–என்று சொல்லுவதல்லாமல்; உயர்ந்தோர் உண்மையின்–சான்றோர் இந்த இடங்களில் வாழுதலால்; ஒடுக்கம் கூறார்–இவைகளுக்கு முடிவு உண்டு என்று சொல்லமாட்டார்கள்; (யாரெனில் அவர் தாம்) முடித்த கேள்வி–கேட்க வேண்டிய அறிவைத் தரும் நூல்களையெல்லாம் கேட்டு முடித்த; முழுது உணர்ந்தோர்–எல்லாவற்றையும் முற்றும் அறிந்த பெரியோர்.

[அதாவது, பொதிகை மலை, இமய மலை, புகார் நகரம் இந்த மூன்று இடங்களிலும் சான்றோர் வாழுதலால், எல்லாவற்றையும் அறிந்த பெரியோர் இந்த மூன்று இடங்களுக்கும் முடிவு உண்டு என்று சொல்ல மாட்டார்கள்.]

### (20-39)

சோழமன்னனுடைய தலைமைப் பட்டினமாகிய புகார் நகரம் தேவலோகத்தைப்போல் கீர்த்தியும் புகழும் பெற்ற பட்டினம்; பெரிய துறைமுகம். பல தேசங்களிலிருந்தும் வியாபாரக் கப்பல்கள் வரும். அதனால் காவிரிப்பூம் பட்டின மென்றால் எல்லாத் தேசங்களிலும் நன்றாய்த் தெரியும். இந்தப் பட்டினத்திலுள்ள செல்வர்கள் பணத்தைச் சம்பாதித்துப் புதைத்து வைத்து லோபிகள்போல் வாழ்ந்தார்களா? இல்லை. எல்லா இன்பத்தையும் அனுபவித்தார்கள். நாகலோகம் போகத்தில் சிறந்தது என்று சொல்லுவது உண்டு. அந்த நாகலோகத்தைப் போல் சிறந்த போகம் நிறைந்த பட்டினம் புகார். இவ்வூரில் மாநாய்கன் என்னும் வணிகன் ஒருவன். இவன் கொடையில் கர்ணன். வானத்திலிருந்து மழை தாராளமாய்ப் பெய்வது போலிருக்கும் இவனுடைய கொடை. மாநாய்கனுடைய குலத்திற்கு ஒரு பூங்கொம்புபோல் ஒரு பெண் பிறந்தாள். அவள் தான் கண்ணகி; அவளுக்கு வயது பன்னிரண்டு. வானத்திலே பொற்கொடியாய்த் தோன்றும் மின்னலைப் போன்ற மேனி படைத்தவள் கண்ணகி. அவளை, "அழகில் திருமகள், கற்பில் அருந்ததி" என்றே எல்லோரும் போற்றினார்கள், புகழ்ந்தார்கள்.

அந்நகரத்திலே பெருங்குடிகளில் ஒன்றைச் சேர்ந்த மாசாத்துவான் என்னும் ஒரு செல்வச் சீமானும் இருந்தான். வாணிபத் தொழிலில் தான் சம்பாதித்த பெருஞ் செல்வத்தைத் தான் மட்டும் அனுபவிப்பதல்லாமல், பிறருக்கும் தாராள மாய்ப் பொருளை இவன் கொடுத்தான். இப்பேர்ப்பட்ட கருணை உள்ளம் படைத்தவனுடைய மகன்தான் கோவலன். பதினாறு வயதை அடைந்த வாலிபன். சிறு வயதிலேயே பெரும் புகழைச் சம்பாதித்தவன். கோவலனுடைய அழகைக் கண்டு மயங்கிய பெண்கள், "இவன் கண் கண்ட முருகன்" என்று தங்கள் தோழியர் கூட்டத்தில் இவனைப் புகழ்ந்து பேசுவார்கள்.

## கண்ணகி சிறப்பு

**அதனால்,**
**நாக நீள் நகரொடு, நாக நாடதனொடு,**
**போகம் நீள் புகழ்மன்னும் புகார் நகர் அது தன்னில்,**
**மாகவான் நிகர்வண்கை மாநாய்கன் குலக் கொம்பர்;**
**ஈகைவான் கொடி அன்னாள்; ஈராறு ஆண்டு அகவையாள்**
**அவளுந்தான்,**
**போதில் ஆர் திருவினாள் புகழ் உடை வடிவு என்றும்,**
**தீது இலா வடமீனின் திறம் இவள் திறம் என்றும்,**
**மாதரார் தொழுது ஏத்த வயங்கிய பெருங் குணத்துக்**
**காதலாள்; பெயர், மன்னும் கண்ணகி என்பாள் மன்னோ.**

## கோவலன் சிறப்பு

**ஆங்கு,**
**பெரு நிலம் முழுது ஆளும் பெருமகன் தலைவைத்த**
**ஒரு தனிக் குடிகளோடு உயர்ந்து ஓங்கு செல்வத்தான்;**
**வரு நிதி பிறர்க்கு ஆர்த்தும் மாசாத்துவான் என்பான்;**
**இருநிதிக் கிழவன் மகன், ஈரெட்டு ஆண்டு அகவையான்;**
**அவனும்தான்,**
**மண்தேய்த்த புகழினான் மதிமுக மடவார்தம்**
**பண்தேய்த்த மொழியினார் ஆயத்துப் பாராட்டிக்**
**"கண்டு ஏத்தும் செவ்வேள்" என்று இசை போக்கிக்**
**கொண்டு ஏத்தும் கிழமையான் கோவலன் [காதலால்**
**[என்பான் மன்னோ.**

[அதனால்—இந்தச் சிறப்புக்களை யெல்லாம் உடையதானதால்; நாக நீள் நகரொடு—விண்ணுலகத்தோடும்; நாக நாடதனொடு—நாக லோகத்தோடும்; போகம் நீள் புகழ் மன்னும்—ஒத்த இன்பங்கள்

நிறைந்து புகழ் நிலை பெற்ற; புகார் நகர் அது தன்னில்—; மாகவான் நிகர்—வானத்தில் உள்ள மழையை ஒத்த; வண்கை மாநாய்கன்—வண்மை பொருந்திய கையை உடைய மாநாய்கன் என்பவனுக்கு;குலக் கொம்பர்—அவன் குலத்திற்கு ஒரு பூங்கொம்பு போலவும்; ஈகைவான் கொடி அன்னாள்—பொன் நிறமாய் வானத்தில் கொடியாக விழுகின்ற மின்னலைப் போலவும் உள்ளவள்; ஈராறு ஆண்டு அகவையாள்—பன்னிரண்டு ஆண்டுகளுக்கு உட்பட்ட வயதினள்;அவளும்தான்—;போதில் ஆர் திருவினாள்—மலரில் வாழும் திருமகளுடைய; புகழ் உடை வடிவு என்றும்—புகழ் நிறைந்த வடிவு இவள் வடிவுபோல் இருக்குமென்றும்; தீது இலா வடமீனின்—குற்றம் இல்லாத அருந்ததியின்; திறம்—கற்பு; இவள் திறம் என்றும்—இவள் கற்பை ஒக்கும் என்றும்; மாதரார் தொழுது ஏத்த—மகளிர் எல்லோரும் போற்றிப் புகழும்படியாக; வயங்கிய பெருங் குணத்து—விளங்குகின்ற உயர்ந்த குணங்களை; காதலாள்—விரும்பும் தன்மையை உடையவள்; பெயர் மன்னும் கண்ணகி என்பாள்—அவள் கண்ணகி என்று பெயர் கூறப்படுவாள்.

ஆங்கு—அந்த நகரத்திலேயே; பெரு நிலம் முழுது ஆளும்—உலகம் முழுமையும் ஆளுகின்ற; பெருமகன் தலைவைத்த—அரசனாகிய சோழ மன்னனைத் தலைமையாகவுடைய; ஒரு தனிக் குடிகளோடு—ஒப்பற்ற பெருங் குடிகளில்; உயர்ந்து ஓங்கு செல்வத்தான்—செழித்து வளர்ந்த செல்வத்தையுடையவன்; வரு நிதி பிறர்க்கு ஆர்த்தும்—தான் திரட்டுகின்ற பொருளைத் தான்மட்டும் அனுபவிக்காமல் ஏழைகளுக்கும் கொடுத்து உதவுகின்ற; மாசாத்துவான் என்பான்—மாசாத்துவான் என்னும் பெயரை உடையவனாகிய; இருநிதிக் கிழவன் மகன்—பெருஞ் செல்வம் நிறைந்தவனுடைய மகன்; ஈரெட்டு ஆண்டு அகவையான்—பதினாறு வருஷங்களுக்கு உட்பட்ட வயதினன்; அவனும்தான்—அவன் தான்; மண் தேய்த்த புகழினான்—மண்ணுலகம் சிறுகும்படி அவ்வளவு வளர்ந்த புகழையுடையவன்; மதிமுக மடவார்—நிலாப் போலும் அழகிய முகத்தையுடைய மகளிர்; தம் பண் தேய்த்த மொழியினார் ஆயத்து—இசையையும் பழிக்கும் அவ்வளவு இனிய மொழிகளைப் பேசும் தமது தோழிகளின் கூட்டத்தில்; பாராட்டி—; கண்டு ஏத்தும் செவ்வேள் என்று—கண்ணால் பார்த்துப் புகழப் படுகின்ற முருகனே என்று சொல்லி; இசை போக்கி—எங்கும் அவன் புகழைப் பரப்பி; காதலால் கொண்டு ஏத்தும்—காதலுடன் மிகப் புகழப் படுகின்ற; கிழமையான்—புகழ்ச்சிக்கு உரியவன்; கோவலன் என்பான்—அவன் கோவலன் என்று பெயர் சொல்லப்படுவான்.

[ஆயம்-தோழியர் கூட்டம்; மன்னோ என்பது மன் ஓ என்ற இரண்டு சொற்களால் ஆனது. இரண்டும் பொருள் இல்லாமல், இசையை நிறைக்க வந்த அசைச் சொற்கள்.]

(40-53)

மாநாய்கனும், மாசாத்துவானும் புகார் நகரத்தில் பெரிய பணக்காரர்கள். இருவரும் ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள். ஒரு வீட்டில் லட்சுமி போன்ற பெண் இருக்கிருள். மற்ற வீட்டில் அவளுக்கு ஏற்ற மணமகன் இருக்கிருன். கலியாணத்தைப் பற்றிக் கேட்பானேன்? கண்ணகிக்கும் கோவலனுக்கும் திருமணம் செய்துவிட வேண்டுமென்று தாய் தந்தையர் முடிவுக்கு வந்தார்கள்.

முடிவு செய்தால், உடனே காரியத்தை நிறைவேற்ற வேண்டியது தானே! முதலில் திருமணத்தைப் பற்றி ஊராருக்குச் செய்தி சொல்லி அவர்களே அழைக்க வேண்டும். யானையின் மேல் அழகிய பெண்களே ஏற்றினுர்கள். இந்தப் பெண்கள் சந்தனம் குங்குமம், மஞ்சள் முதலியவைகளே எடுத்துக் கொண்டு வீடுகள்தோறும் போய் எல்லோரையும் கலியாணத்திற்கு வரவேண்டுமென்று அழைத்தார்கள்.

ஊரார் எல்லோரும் வாழ்த்துவதற்காகத் தாலியை (திருமாங்கல்யம்) வாத்தியங்களுடன் ஊர்வலமாக எடுத்துப் போனுர்கள். ஒரு புறம் முரசு ஒலித்தது; மத்தளத்தின் ஒலி ஒரு புறம்; சங்கொலி ஒரு பக்கம். வெண்பட்டுக் குடைகள் ஓங்கி நிறைந்திருக்கின்றன. இந்த விமரிசையுடன் தாலியை ஒரு பொன் தட்டில் வைத்து ஊர் வீதிகளில் எடுத்துச் சென்றுர்கள்.

இனிக் கலியாண வீட்டின் சிறப்புக்களேப் பார்ப்போம். கலியாண மண்டபமோ வயிரமணி பதித்த தூண்களேயுடையது. மேலே பூமாலேகள் கணக்கில்லாமல் தொங்கவிடப்பட்டு இருக்கின்றன. இந்த மண்டபத்தின் மத்தியில் திருமணப் பந்தல் அமைக்கப்பட்டிருக்கிறது. பந்தலுக்கு மேல் நீலவர்ணப் பட்டு; பட்டின் கீழ் வெண் முத்தாரங்கள்.

பந்தலில் பெண்ணும் மணமகனும் உட்கார்ந்திருக்கிறுர்கள். சந்திரன் ரோகிணியைச் சேரும் தருணம். அதாவது, அப்போது ரோகிணி நட்சத்திரம். நல்ல அனுபவமுள்ள பார்ப்பான் சடங்குகளே நடத்துகிருன். "அம்மி மிதித்து

அருந்ததியைப் பார்த்தேன்'' என்று சொல்லிக் கோவலன் கண்ணகியின் முகத்தைப் பார்க்கின்றான். பின் இருவரும் தீயை வலம் சுற்றி வருகின்றார்கள். என்ன இன்பமான காட்சி! இந்தக் காட்சியைக் கண்டவர்கள் தங்கள் முன் பிறப்பிற் புண்ணியம் செய்தவர்களா யிருக்கவேண்டும்!

## திருமணம்

அவரை,
இரு பெருங் குரவரும் ஒரு பெரும் நாளான்
மண அணி காண மகிழ்ந்தனர் மகிழ்ந்துழி,
யானை எருத்தத்து, அணி இழையார் மேல் இரீஇ,
மாநகர்க்கு ஈந்தார் மணம்.
அவ்வழி,
முரசு இயம்பின; முருடு அதிர்ந்தன; முறை
எழுந்தன பணிலம்; வெண்குடை
அரசு எழுந்ததோர்படி எழுந்தன; அகலுள்
மங்கல அணி எழுந்தது.
மாலை தாழ் சென்னி வயிரமணித் தூணகத்து,
நீல விதானத்து, நித்திலப் பூம் பந்தர்க்கீழ்,
வான் ஊர் மதியம் சகடு அணைய, வானத்துச்
சாலி ஒரு மீன் தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிடத்
தீவலம் செய்வது காண்பார்கள் நோன்பு என்னை!

[அவரை-கண்ணகி, கோவலன் இருவரையும்; இரு பெருங் குரவரும்-அவர்களுடைய இரு பெரியோராகிய தாய் தந்தையர்களும்; ஒரு பெரும் நாளான்-ஒரு நல்லநாளிலே; மண அணி காண-திருமணக் கோலத்தைச் செய்து காண விரும்பி; மகிழ்ந்தனர்--; மகிழ்ந்துழி-அப்படி மகிழ்ச்சியடைந்ததும்; யானை எருத்தத்து-யானையின் மத்தகத்தில்; அணி இழையார்- அணிகலங்களுடைய பெண்களை; மேல் இரீஇ-மேலே இருத்தி; மாநகர்க்கு ஈந்தார் மணம்-அந்நகரத்திற்குத் திருமணச் செய்தியைத் தெரிவித்தார்கள்.

அவ்வழி-அவ்விடத்தில்; முரசு இயம்பின-முரசுகள் ஒலித்தன; முருடு அதிர்ந்தன-மத்தளங்கள் அதிர்ந்தன; பணிலம் முறை எழுந்தன-சங்கு முதலியன முறையாக எழுந்து ஒலித்தன; வெண்குடை--; அரசு எழுந்ததோர் படி-அரசன் புறப்பட்ட காலத்தில் குடைகள் எழுந்தது போல; எழுந்தன-உயர்ந்தன; அகலுள்-ஊரெங்கும்; மங்கல அணி எழுந்தது-தாலியை ஊரார் வாழ்த்தும்படி எடுத்துச் சென்றார்கள்.

மாலைதாழ் சென்னி-மாலைகள் தொங்குகிற உச்சியையுடைய; வயிரமணித் தூணகத்து-வயிரமணி பதித்த தூண்களையுடைய மண்டபத்தில்; நீல விதானத்து-நீலப்பட்டினாலான மேற்கட்டியின் கீழ் உள்ள; நித்திலம் பூம் பந்தர்க் கீழ்-முத்துக்கள் தொங்கவிடப் பட்டு அழகு நிறைந்த பந்தலில்.

வான் ஊர் மதியம்-வானத்தில் செல்லும் நிலா; சகடு அணைய-உரோகிணி நட்சத்திரத்திற் சேர(அப்படிப்பட்ட ஒரு நாளில்); வானத்துச் சாலி-வானத்தில் உள்ள அருந்ததியாகிய; ஒரு மீன் தகையாளை-விண் மீன் போன்ற கற்புடையவளை; கோவலன்-கோவலனுடன்; மாமுது பார்ப்பான்-சிறந்த முதிய பார்ப்பான்; மறை வழி காட்டிட-நூல் முறைப்படிச் சடங்குகளைச் செய்து காட்ட; தீவலம் செய்வது-மணமக்கள் தீயைச் சுற்றிவரும் காட்சியை; காண்பார்கள்-காண்பவர்களுடைய; நோன்பு என்னை-நல் வினை தான் என்ன?

[எருத்தம்-மத்தகம்; பணிலம்-சங்கு; சென்னி-உச்சி; விதானம்-மேற்கட்டி; சாலி-அருந்ததி; நோன்பு-நல்வினை,]

## *(54–68)*

தமிழ் மக்களுடைய கலியாணங்களில் பெண்களுக்குத்தான் முதன்மையான இடம். மங்களகரமான சடங்குகளைச் செய்ய வேண்டியது பெண்களுடைய வேலைதான். பார்ப்பான், செய்ய வேண்டிய சடங்குகளை முடித்தபின், மற்ற சடங்குகளைச் செய்யப் பெண்கள் வந்தார்கள். கண்ணைக் கவரும் அழகு விளங்கும் மேனியையுடைய பெண்கள்; எடுப்பான இளமுலைகளையுடைய பெண்கள்; முத்துப் போன்ற வெண்மையான பற்களையுடைய பெண்கள்; பொற்கொடி போன்ற பெண்கள்—இவர்கள் வாசனைப் பொருள்களையும், மலர்களையும், சந்தனத்தையும், மங்கல விளக்குகளையும், முளை விட்டிருக்கும் பாலிகைக் குடங்களையும், கைகளில் ஏந்திப் புகழ் உரைகளையும் இசைப் பாட்டுக்களையும் பாடிக்கொண்டு கலியாணப் பெண்ணையும் மணமகனையும் மங்கலப் படுக்கையில் இருத்தினார்கள். "உன் காதலனை விட்டுப் பிரியாமல், அவனை அணைந்த கைகள் நெகிழாமல், தீங்கில்லாத வாழ்க்கையாய் வாழ்வாயாக" என்று கண்ணகியையும், கோவலனையும் வாழ்த்தி அவர்கள்மேல் மலர்களைத் தூவினார்கள். பள்ளியறையில்இவ்விதம் மணமக்களை வாழ்த்தும்போது, செங்கோல் செலுத்தும் அரசனை மறக்க முடியுமா? "இமயமலையில்

எங்கள் சோழ மன்னன் நாட்டிய புலிக்கொடி அப்பாலுள்ள பொன் மலையாகிய மேரு மலையிலும் நிற்பதாக! எல்லாத் திக்குகளிலும் போரில் வெற்றி பெற்ற எங்கள் செம்பியன் தனது ஆணைச் சக்கரத்தை ஒழுங்காகச் செலுத்துவோனாக!'' என்று அரசனுக்கும் வாழ்த்தெடுத்தனர்.

## மங்கல வாழ்த்து

**விரையினர், மலரினர், விளங்கு மேனியர்,**
**உரையினர், பாட்டினர், ஒசிந்த நோக்கினர்;**
**சாந்தினர், புகையினர், தயங்கு கோதையர்,**
**ஏந்திள முலையினர், இடித்த சுண்ணத்தர்;**
**விளக்கினர், கலத்தினர், விரிந்த பாலிகை**
**முளைக்குட நிரையினர், முகிழ்த்த மூரலர்;**
**போதொடு விரி கூந்தல் பொலன் நறும் கொடி அன்னார்,**
**''காதலன் பிரியாமல், கவவுக்கை ஞெகிழாமல்,**
**தீது அறுக,'' என ஏத்திச் சில்மலர் கொடு தூவி,**
**அம்கண் உலகின் அருந்ததி அன்னாளை**
**மங்கல நல்அமளி ஏற்றினார்; தங்கிய**
**இப்பால் இமயத்து இருத்திய வாள் வேங்கை**
**உப்பாலைப் பொற்கோட்டு உழையதா, எப்பாலும்**
**செருமிகு சினவேல் செம்பியன்**
**ஒருதனி ஆழி உருட்டுவோன் எனவே.**

[விளங்கு மேனியர்—அழகு விளங்கும் மேனியையுடைய பெண்கள்; விரையினர்—வாசனைப் பொருள்களை உடையவராய்; மலரினர்—மலர்களை உடையவராய்; உரையினர் பாட்டினர்—புகழ் உரைகளையும் இசைப் பாட்டுக்களையும் பாடினவராய்; ஒசிந்த நோக்கினர்—ஒதுங்கிப் பார்த்த பார்வையினராயும்;

ஏந்து இள முலையினர்—எடுப்புற்ற இள முலைகளையுடைய பெண்கள்; சாந்தினர் புகையினர்—சந்தனத்தையும் வாசனைப் புகைப்பொருள்களையும் உடையவராய்; தயங்கு கோதையர்—விளக்கமுடைய கூந்தலையுடையவராய்; இடித்த சுண்ணத்தர்—இடித்த வாசனைப் பொடியை யுடையவராயும்;

முகிழ்த்த மூரலர்—அரும்பிய வெண்ணிறமான பற்களையுடைய பெண்கள்; விளக்கினர் கலத்தினர்—மங்கல விளக்குகளையும் அணிகலன்களையும் ஏந்தினவராய்; விரிந்த பாலிகை—விரிந்த பாலிகைப் பொருள்கள்; முளைக்குட நிரையினர்—முளைவிட்டிருக்கும் குடங்களை வரிசையாக எடுத்தவராயும்;

போதொடு விரி கூந்தல்—பூக்கள் விரிந்த கூந்தலையுடையவரான; பொலன் நறும் கொடி அன்னார்—பொன்னால் செய்த நறு மணமுள்ள கொடி போன்ற(மேலே சொல்லப்பட்ட) பெண்கள்; காதலன் பிரியாமல்—தன் காதலனை விட்டு எப்போதும் பிரியாமல்; கவவுக்கை ஞெகிழாமல்—காதலனும் இவளைத் தழுவிய கைகள் நெகிழாமல்; தீதுஅறுக என ஏத்தி—தீங்கில்லாமல் வாழ்வாயாக! என்று வாழ்த்தி; சில் மலர் கொடு தூவி—சில மலர்களைத் தூவி; அம்கண் உலகின்—அழகிய இவ் வுலகத்தில் தோன்றிய; அருந்ததி அன்னாளை—அருந்ததி போன்ற கண்ணகியை; மங்கல நல் அமளி ஏற்றினார்—மங்கலப் படுக்கையிலே இருத்தினார்கள்;

தங்கிய இப்பால் இமயத்து இருத்திய—நிலை பெற்ற இமயமலையின் இப்பக்கத்தில் நாட்டிய; வாள் வேங்கை—ஒளி பொருந்திய புலிக் கொடியானது; உப்பாலைப் பொன்கோட்டு உழையதா—அப்பாலுள்ள பொன்மலையிலும் நிற்பதாக!; எப்பாலும்—எல்லாத் திசைகளிலும்; செருமிகு—போர்த் தொழிலில் மேம்பட்ட; சினவேல் செம்பியன்—சினம் மிகுந்த வேலையுடைய சோழன்; ஒரு தனி ஆழி—தனதுஒப்பற்ற ஆணைச் சக்கரத்தை; உருட்டுவோன் என—ஒழுங்காகச் செலுத்துவோனாக என்று (வாழ்த்திக் கட்டிலில் இருத்தினார்கள்)

விளங்கு மேனியர், ஏந்து இள முலையினர், முகிழ்த்த மூரலர் ஆகிய மங்கல மகளிர் மங்கலப் பொருள்களையும் வாசனைப் பொருள்களையும் எடுத்துக்கொண்டு கண்ணகியை மங்கலப் படுக்கையில் இருத்தி, மணமக்களையும், சோழ மன்னனையும் வாழ்த்தினார்கள்.

[விரை—நறுமணம். உரை—புகழ், கவவுதல்—தழுவல். ஆழி—ஆணைச்சக்கரம். உழையது ஆக; உருட்டுவோன் ஆக—என்று ஆக என்பதை இரண்டு இடத்திலும் கூட்டுக]

**மங்கல வாழ்த்துப் பாடல் முற்றிற்று**

# மனையறம்படுத்த காதை

இந்தக் காதையில் கண்ணகியும் கோவலனும் இல்லற வாழ்க்கை நடத்தி இன்பத்தில் மூழ்கியிருக்கும் செய்தி சொல்லப்படுகின்றது.

*(1–13)*

புகார்நகர் என்னும் காவிரிப் பூம்பட்டினம் காவிரி ஆறு கடலிற் கலக்கும் இடத்தில் உள்ள துறைமுகப் பட்டினம். முற்காலத்தில் இந்தியாவிலுள்ள துறைமுகங்களில் இது மிகவும் முக்கியமானது. புகார் நகரின் சிறப்பு எல்லாத்தேசங்களிலும் பரவியிருந்தது. ஐரோப்பா, ஆப்ரிக்கா, சீனம் முதலிய பல நாடுகளிலிருந்தும் கப்பல்கள் புகார் நகரத்துக்கு வருவதுண்டு. எப்பொழுது பார்த்தாலும் துறை முகத்திற் கப்பல்கள் நிறைந்திருக்கும். வெளி நாடுகளிலிருந்தும், உள் நாட்டிலிருந்தும் ஏராளமான சாமான்களும், சரக்குகளும் இவ்விடம் வந்து குவியும். பல தேசங்களிலிருந்தும் வந்து குவிந்து கிடக்கும் சரக்குகளைப் பார்க்கும் போது, அந்தத் தேசங்களெல்லாமே ஒருங்குகூடிப் புகார் நகரத்திற் சேர்ந்து விட்டனவோ என்று தோன்றும்.

புகார் நகரத்தில் உள்ள வணிகர் ஏராளமான செல்வத்தை உடையவர்கள். அரசனிடத்திற்கூட இல்லாத செல்வம் இவர்களிடத்தில் உண்டு. அரிய தவத்தைச் செய்தவர்கள் அதன் பயனாக இன்பத்தை அனுபவிப்பதற்கு 'உத்தரகுரு' என்னும் போகபூமியிற் பிறப்பார்கள் என்று சொல்லுவதுண்டு. புகார் நகரம் உத்தர குருவைப் போன்ற ஒரு போக நகரம். அப்படிப்பட்ட பட்டினத்தில் கொழுங்குடிச் செல்வர்களான மாசாத்துவான், மாநாய்கன் என்பவர்கள் குலத்தில் தோன்றிய கண்ணகியும், கோவலனும் ஏழடுக்கு மாளிகையின் நடு அடுக்கில், ஒரு அழகிய மஞ்சத்தின்மேல் உல்லாசமாக உட்கார்ந்திருக்கிறார்கள்.

## கண்ணகியும் கோவலனும் பள்ளியறையில் இருத்தல்

**உரைசால் சிறப்பின், அரைசுவிழை திருவின்,**
**பரதர் மலிந்த பயங்கெழு மாநகர்**

முழங்கு கடல் ஞாலம் முழுவதும் வரினும்
வழங்கத் தவாஅ வளத்தது ஆகி,
அரும் பொருள் தரூஉம் விருந்தின் தேயம்
ஒருங்குதொக்கு அன்ன உடைப்பெரும் பண்டம்
கலத்தினும் காலினும் தருவனர் ஈட்டக்
குலத்தின் குன்றாக் கொழுங்குடிச் செல்வர்;
அத்தகு திருவின் அருந்தவம் முடித்தோர்
உத்தர குருவின் ஒப்பத் தோன்றிய
கயமலர்க் கண்ணியும் காதல் கொழுநனும்;
மயன்விதித்து அன்ன மணிக்கால் அமளிமிசை
நெடுநிலை மாடத்து இடைநிலத்து இருந்துழி;

[உரைசால் சிறப்பின்-புகழ் மிக்க சிறப்புடைய; அரைசு விழை திருவின் – அரசனும் விரும்பக்கூடிய செல்வத்தையுடைய; பரதர் மலிந்த - வாணிகர் நிறைந்த; பயம்கெழு மாநகர் - பல வளம் பொருந்திய பெரிய நகரமான காவிரிப்பூம் பட்டினம்; முழங்கு கடல் ஞாலம்- ஒலிக்கின்ற கடல் சூழ்ந்த உலகம்; முழுவதும் வரினும்- ஒன்றாகத் திரண்டு வந்தாலும்; வழங்கத்தவாஅ வளத்தது ஆகி- பொருள் தந்து உதவுவதில் குறையாத நிறைந்த செல்வத்தை உடையதாகி; அரும் பொருள்– அரிய பொருள்களை; தரூஉம் விருந்தின் தேயம்- கொடுக்கின்ற புதுப்புது நாடுகள் யாவும்; ஒருங்கு தொக்கு அன்ன- ஓரிடத்தில் வந்து திரண்டாற்போல்; உடைப் பெரும் பண்டம்– திரண்டு நிரம்பி இருக்கின்ற பண்டங்களை; கலத்தினும்– கப்பல் வழியாகவும்; காலினும்– உள் நாட்டு வழியாகவும்; தருவனர் ஈட்ட- கொண்டு வந்து சேர்க்கும்; குலத்தின் குன்றா– தமது குலத் தொழிலில் குறைவு படாத; கொழுங்குடிச் செல்வர் - செழித்த வணிகர் குடியில் வந்த செல்வரான மாசாத்துவான் மாநாய்கன் என்ற இருவருக்கு.

பல தேசத்துப் பொருள்களும் காவிரிப்பூம் பட்டினத்தில் நிறைந் திருந்தபடியால், அத்தேசங்கள் எல்லாம் திரண்டு இங்கே வந்து விட்டது போல் தோன்றிற்று.

அத்தகு திருவின்– அப்படி அறநெறியில் வந்த பொருளால்; அருந்தவம் முடித்தோர்– அரிய புண்ணியத்தைச் செய்தோர்; உத்தர குருவின் ஒப்ப– போக பூமிகளில் ஒன்றில் தோன்றியதைப் போல்; தோன்றிய–; கயமலர்க் கண்ணியும்–குளிர்ந்த மலர் போன்ற கண்களையுடைய கண்ணகியும்; காதல் கொழுநனும் - அவள் கணவனாகிய கோவலனும்; மயன் விதித்து அன்ன–தேவதச்சனாகிய மயனால் செய்யப்பட்டது போன்ற; மணிக்கால் அமளிமிசை–மணிகள் கோத்த

கால்களையுடைய பஞ்சணை மீது; நெடு நிலைமாடத்து-ஏழு அடுக்குகளையுடைய மாளிகையில்; இடை நிலத்து இருந்துழி-நடு மாடியில் இருந்தபோது]

(14–27)

கண்ணகியும் கோவலனும் இருந்த அறையின் சாளரங்கள் வழியாக வண்டுகள் உள்ளே நுழைகின்றன. இந்த வண்டுகள் ஆம்பல், மலர்ந்த தாமரை, தாழம்பூ, மாதவிக் கொடி, சண்பகப் பூ முதலிய பல பூக்களிலுள்ள மகரந்தப் பொடியை உண்டு, அதுவும் போதாமல் கண்ணகியின் நறுங் கூந்தலிலுள்ள மலர்களில் படிவதற்காக அவ்விருக்கும் அறையிற் புகுந்தன. வண்டுகளுடன் நறுமணம் தரும் இளந் தென்றலும் அறையினுள்ளே செல்லத் தொடங்கியது. தென்றல் வாடை வீசவே, காதல் மிகுந்து உணர்ச்சி பொங்கி இருவரும் மேல்மாடியிலுள்ள நிலா முற்றத்தை அடைந்தார்கள்.

## நிலாமுற்றத்தை அடைதல்

**கழுநீர் ஆம்பல், முழுநெறிக் குவளை,**
**அரும்புபொதி அவிழ்ந்த சுரும்புஇமிர் தாமரை,**
**அயல்பூ வாசம் அளைஇ, அயல்பூ**
**மேதகு தாழை, விரியல்வெண் தோட்டுக்**
**கோதை மாதவி, சண்பகப் பொதும்பர்த்**
**தாதுசேர்ந்து உண்டு, மாதர்வாள் முகத்துப்**
**புரிகுழல் அளகத்துப் புகல் ஏக்கற்றுத்**
**திரிதரு சுரும்பொடு, செவ்வி பார்த்து,**
**மாலைத் தாமத்து மணிநிரைத்து வகுத்த**
**கோலச் சாளரக் குறுங்கண் நுழைந்து,**
**வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்**
**கண்டு, மகிழ்வெய்திக், காதலின் சிறந்து;**
**விரைமலர் வாளியொடு வேனில் வீற்றிருக்கும்**
**நிரைநிலை மாடத்து அரமியம் ஏறி;**

[கழுநீர் ஆம்பல்–சேதாம்பல் என்னும் பூவிலும்; அரும்பு பொதி அவிழ்ந்த–அரும்பின் கட்டு மலர்ந்த; சுரும்பு இமிர் தாமரை–வண்டு ஒலிக்கும் தாமரையிலும்; அயல்பூ-மற்ற பூக்களிலும்; வாசம் அளைஇ–வாசங் கலந்த தேனைக் குடித்து; அயல் பூ–வேறு வகைப் பூக்களான; மேதகு தாழை–உயர்ச்சி மிகுந்த தாழையின்; விரியல் வெண்தோட்டு–விரிந்த வெள்ளிய மடல்களிலும்; கோதை மாதவி-மாலையாகப் பூக்கும் மாதவி என்னும் கொடியிலும்; சண்பகப் பொதும்

பர்–சண்பக மலர்கள் உள்ள சோலைகளிலும்; தாது சேர்ந்து உண்டு–அவற்றிலுள்ள மகரந்தப் பொடியை உண்டு; மாதர் வாள் முகத்து–பெண்களின் ஒளி பொருந்திய முகத்தின்மேல்; புரி குழல் அளகத்து–பிரிவாகப் பிரிந்த கூந்தலில் உள்ள; புகல் ஏக்கற்று–பூக்களில் உள்ளே புகுவதற்கு முடியாமல்; திரிதரு சுரும் பொடு–சுற்றிச் சுற்றிச் சுழலுகின்ற வண்டுகளோடு; மாலைத் தாமத்து மணி–மணிகளால் தொடுக்கப்பட்ட மாலையை; நிரைத்து வகுத்த-ஒழுங்காக வைத்து அழகு செய்த; கோலச் சாளரக் குறுங்கண்–அழகிய சன்னல் வழியாக; செவ்வி பார்த்து-காலமறிந்து; வண்டொடு நுழைந்து புக்க–வண்டுகளோடு சென்று புகுந்த; மணவாய்த் தென்றல்–நறுமணம் வீசுகின்ற தென்றற் காற்றை; கண்டு மகிழ்வு எய்தி–கண்டு மகிழ்ச்சி அடைந்து; காதலில் சிறந்து–காதலால் மிகுந்து; விரை மலர் வாளியொடு-வாசனையுடைய மலர்களாகிய அம்புகளோடு; வேனில் வீற்றிருக்கும்–மன்மதன் தங்கியிருக்கின்ற; நிரை நிலை மாடத்து–வரிசையாக நிற்கின்ற ஏழடுக்கு மாளிகையில் உள்ள; அரமியம் ஏறி–நிலா முற்றத்தைக் கண்ணகியும் கோவலனும் அடைந்து.

கோதை–மாலை; பொதும்பர்–சோலை; புரி–விரிவுபட்ட; சுரும்பு–வண்டு; குறுங்கண்–சிறு துளைகள்;

மணம் வீசுகின்ற தென்றலானது சன்னல் வழியாய்ப் புகுந்தவுடனே கூடல் விருப்பத்தால் நிலா முற்றத்தை இருவரும் அடைந்தனர்.]

(28–37)

நிலா முற்றத்தில் நல்ல மணம் வீசும் பலவகைப் பூக்கள் பரப்பின படுக்கையில் கண்ணகியும் கோவலனும் சூரியனும் சந்திரனும் ஒன்று சேர்ந்து இருந்ததுபோல் வீற்றிருந்தார்கள். சந்தனத்தால் கரும்பு போலவும் கொடிகள் போலவும் அழகிய உருவங்களைக் கண்ணகியின் தோள்களில் கோவலன் எழுதினான். நிலவைப்போல் விரிந்த வெண்மையான இதழ்களையுடைய மல்லிகைப் பூ மாலையைக் கோவலன் அணிந்துகொண்டு, செங்கழுநீர்ப் பூக்களால் தொடுத்த ஒரு மாலையைத் தன் காதலியின் கழுத்தில் அணிந்தான். தாங்கள் அணிந்திருந்த இரண்டு மாலைகளும் ஒன்றோடொன்று சேர்ந்து நெறிபிறழும்படித் தழுவி, காதல் இன்பத்தில் இருவரும் மயங்கிக் கிடந்தார்கள். அடங்காத காதல் கொண்ட கோவலன் கண்ணகியின் முகத்தைப் பார்த்து, காதல் வெறியால் இன்னதுதான் பேசுகின்றோமென்று தானே உணராமல் சில ஆசை வார்த்தைகளைச் சொல்லுகிறான்.

## இருவரும் களித்திருப்பது

சுரும்பு உணக் கிடந்த நறும்பூஞ் சேக்கைக்
கரும்பும், வல்லியும் பெருந்தோள் எழுதி,
முதிர்கடல் ஞாலம் முழுவதும் விளக்கும்
கதிர் ஒருங்கு இருந்த காட்சி போல;
வண்டுவாய் திறப்ப, நெடுநிலா விரிந்த
வெண்தோட்டு மல்லிகை விரியல் மாலையொடு,
கழுநீர்ப் பிணையல் முழுநெறி பிறழத்,
தாரும் மாலையும் மயங்கிக், கையற்றுத்,
தீராக் காதலின் திருமுகம் நோக்கிக்
கோவலன் கூறும், ஓர் குறியாக் கட்டுரை:

[சுரும்பு உணக் கிடந்த—வண்டுகள் உண்ணும்படி தேனோடு கிடந்த; நறும் பூஞ் சேக்கை—நல்ல மணம் வீசும் பூக்கள் பரப்பின படுக்கையிலிருந்து; கரும்பும் வல்லியும்—கரும்பு போலவும், கொடிகள் போலவும்; பெருந்தோள் எழுதி—கண்ணகியின் பெரிய தோள்களில் உருவங்களைச் சந்தனத்தால் எழுதி; முதிர் கடல் ஞாலம்—பழைமையான கடல் சூழ்ந்த உலகம்; முழுவதும்—;விளக்கும்—பிரகாசிக்கும்படி செய்கின்ற; கதிர்—சந்திரனும் சூரியனும்; ஒருங்கு இருந்த—ஒன்றாய்ச் சேர்ந்து இருந்த; காட்சி போல—;

வண்டுவாய் திறப்ப—வண்டுகள் இதழ்களை நெகிழ்த்ததால்; நெடு நிலா விரிந்த—நீண்ட நிலாவைப்போல் விரிந்த; வெண்தோட்டு மல்லிகை—வெண்மையான இதழ்களையுடைய மல்லிகைப்பூக்களால் செய்யப் பட்ட; விரியல் மாலையொடு—விரிந்த மாலையுடன்; கழுநீர்ப்பிணையல்—செங்கழுநீர் மாலையும்; முழுநெறி பிறழ—நிலைகுலைந்து சரிய; தாரும் மாலையும்—இருவரும் அணிந்திருந்த மாலைகள்; மயங்கி—ஒன்றோடொன்று சேர்ந்து கலந்து; கையற்று—காதல் இன்பத்தால் வந்த செயலற்ற நிலையில்; தீராக் காதலின்—அடங்காத ஆசையினால்; திருமுகம் நோக்கி—கண்ணகியின் அழகிய முகத்தைப் பார்த்து; ஓர் குறியாக் கட்டுரை—இன்னதென்று பொருள் இல்லாத சொற்களை; கோவலன் கூறும்—;

சேக்கை—படுக்கை. தார்—கோவலன் அணிந்திருந்த மாலை; மாலை—கண்ணகி அணிந்திருந்த மாலை. குறியாக் கட்டுரை—காதல் மயக்கத்தால் இன்னதுதான் பேசுகின்றோம் என்று தெரியாமற் சொல்லும் களிப்பு மொழிகள்.]

(38–52)

கண்ணகியும் கோவலனும் நிலா முற்றத்தில் இன்பத்தில் மூழ்கியிருக்கிறார்கள். கண்ணகியைப் பார்த்துக் கோவலன் காதல் மொழிகளைச் சொல்லுகிறான். அவளுடைய அழகைப் புகழ்கிறான். அவளுடைய அகன்ற அழகிய நெற்றி, வளைந்த புருவம், கொடிபோன்ற இடை, மலர்ந்த கண்கள் இவைகளின் பேரழகைப் பற்றிப் பேசுகிறான். "பரமசிவன் தன்னுடைய முடியிற் சூடிய பிறையை உன் நெற்றியாகக் கொடுப்பது பொருத்தமா யிருக்கும். மன்மதன் தன்னுடைய பெரிய கரும்புவில்லை உன் கரிய புருவங்களாகத் தரத்தகும். இந்திரன் பாற்கடலில் தோன்றிய வச்சிராயுதத்தை உன் இடையாகும்படித் தரவேண்டும். முருகக் கடவுள் தனது அழகிய சுடர் வேலை உன் இரு கண்களாக வைத்தான். அந்த வேல் விழிகள் என்னைக் கொல்வதுபோல் வருத்துகின்றன" என்று இப்படி யெல்லாம் கண்ணகியின் அழகைப் பாராட்டுகிறான்.

**கண்ணகியின் அழகைப் பாராட்டுதல்**

**குழவித் திங்கள் இமயவர் ஏத்த**
**அழகொடு முடித்த அருமைத்து ஆயினும்,**
**உரிதின் நின்னோடு உடன் பிறப்பு உண்மையின்**
**பெரியோன் தருக திருநுதல் ஆக என;**
**அடையார் முனை அகத்து அமர்மேம் படுநர்க்குப்**
**படை வழங்குவது ஓர் பண்பு உண்டு, ஆகலின்,**
**உருவிலாளன் ஒரு பெருங் கருப்பு வில்,**
**இரு கரும் புருவமாக ஈக்க;**
**மூவா மருந்தின் முன்னர்த் தோன்றலின்**
**தேவர் கோமான் தெய்வக் காவல்**
**படை நினக்கு அளிக்க, அதன் இடை நினக்கு இடைஎன;**
**அறுமுக ஒருவன் ஓர் பெறுமுறை இன்றியும்**
**இறுமுறை காணும் இயல்பினின் அன்றே**
**அம்சுடர் நெடுவேல் ஒன்றும், நின் முகத்துச்**
**செங்கடை மழைக்கண் இரண்டா ஈத்தது;**

[குழவித்திங்கள்-இளம்பிறைச் சந்திரனை; பெரியோன்-சிவபிரான்; இமயவர் ஏத்த-தேவர்கள் புகழ; அழகொடு முடித்த-அழகாகத் தலையில் சூடிய; அருமைத்து ஆயினும்-பெருமையை அச்சந்திரன் உடையவனா யிருப்பினும்; நின்னோடு-திருமகளாகிய உன்னுடன்;

உடன் பிறப்பு உண்மையின்-பாற்கடலிலிருந்து ஒன்ருகப் பிறந்த உரிமை உடையதாதலால்; திருநுதல் ஆக என-அந்த நிலா உன்னுடைய அழகிய நெற்றியாக அமையட்டுமென்று; பெரியோன் தருக-சிவபிரான் கொடுப்பானுக.

பாற்கடலைத் தேவர்கள் கடைந்தபோது திருமகளுடன் நிலாவும் தோன்றியது என்பது கதை. கண்ணகியைத் திருமகளாக வைத்து, அவளுடன் பிறந்த நிலாவை அவளுடைய நெற்றியாகச் சிவபிரான் கொடுக்கவேண்டும் என்ருன். அப்படிக் கேட்பதற்குக் காரணம் உடன் பிறப்பு உரிமை.

அடையார் முனை அகத்து-பகைவர்கள் எதிர்த்து நிற்கின்ற போர்க்களத்தில்; அமர் மேம்படுநர்க்கு-போரில் வெற்றி யடைவோருக்கு; படை வழங்குவது ஓர் பண்பு-படைக்கலங்களைக் கொடுத்து ஊக்கப்படுத்தும் தன்மை; உண்டு ஆகலின்-உலக வழக்கமாதலால்; உருவிலாளன்-மன்மதன்; ஒரு பெரும் கருப்பு வில்-தன்னுடைய ஒரு பெரிய கரும்பு வில்லை; இரு கரும் புருவமாக-இரண்டு கருநிறமான புருவங்களாக: ஈக்க-திருத்தி உனக்குக் கொடுப்பானுக;

பெண்கள் மன்மதனுடைய படை வீரர்கள் என்று இலக்கியங்களில் சொல்வது வழக்கம். படை வீரர்களில் ஒருத்தியாகிய கண்ணகி கோவலனை வெற்றி கொண்டாள். அப்படி வெற்றி கொண்டவளுக்கு மன்மதன் தன் வில்லை இரண்டாக வளைத்து அவள் புருவங்களாகச் செய்து கொடுப்பானுக என்பது கருத்து.

மூவா மருந்தின்-அழிவு கொடுக்காத அமிர்தத்திற்கு; முன்னர்த் தோன்றலின்-முன்பாகத் தோன்றியதால்; தேவர் கோமான்-இந்திரன்; தெய்வக்காவல்-தேவருலகத்தைக் காக்கின்ற; படை-வச்சிராயுதத்தை; நினக்கு அளிக்க-உனக்குக் கொடுப்பானுக; அதன் இடை-அதனுடைய நடுப்பகுதி; நினக்கு இடை என- உனக்கு இடையாக இருக்கட்டும் என்று.

பாற்கடலில் அமுதம் தோன்றுவதற்கு முன் வச்சிராயுதம் தோன்றியது. வச்சிராயுதம் அடியும் நுனியும் பெருத்து, இடைப் பகுதி சிறிதாய் இருக்குமாதலால் இந்திரன் உனச்கு இடையாக இருக்கட்டும் என்று அதைக் கொடுப்பானுக.

அறுமுக ஒருவன்-ஆறுமுகக் கடவுளாகிய முருகன்; ஓர் பெறுமுறை இன்றியும்-தனக்கு ஒரு பயனும் இல்லாவிடினும்; அம் சுடர் நெடு வேல்-தனது அழகிய ஒளியை வீசும் நீண்டவேலாகிய; ஒன்றும்-

ஒரே ஒரு கருவியையும்; நின் முகத்து-உன் முகத்தில்; செங்கடை மழைக்கண்-சிவந்த கடைக்கண்களையுடைய குளிர்ந்த கண்களாகிய; இரண்டா ஈத்தது-இரண்டு வடிவமாகக் கொடுத்ததற்குக் காரணம்; இறு முறை காணும்-நான் இறந்து விடவேண்டு மென்ற; இயல்பினின் அன்றே-ஆசையினால் அல்லவா?

முருகன் தன் வேலை அவளுடைய கண்களாக அமைத்துக் கொடுத்தான். ஏன்? கோவலனைக் கொல்லுவதற்கு! அதாவது அவளுடைய கண்கள் தன்னைக் கொல்வது போல் வருத்தின என்பது கருத்து.

## (53–61)

கண்ணகியின் சாயல், நடை, குரல்-இவைகளைக் கோவலன் புகழ்கிறான்: "பெரிய தோகையை விரித்தாடும் மயில் உன்சாயலைக் கண்டு தோல்வியடைந்து கானகத்துக்கு ஓடிவிட்டது. உன் நடையைப் பார்த்து வெட்கப்பட்ட அன்னப்பறவை வயல்களுக்குக் குடிபோய் விட்டது. உன் கிளி உன் அமுத மொழிகளைக் கேட்டு வருந்தினாலும், உன்னை விட்டுப் பிரிந்து ஓடவில்லை. ஏன்? உன்னுடைய இனிய மொழிகளைக் கேட்டுத் தானும் கற்றுக் கொள்ளலாம் என்று கருதித்தான்."

**மா இரும் பீலி மணிநிற மஞ்ஞை, நின்**
**சாயற்கு இடைந்து தண்கான் அடையவும்;**
**அன்னம், நன்னுதல்! மென் நடைக்கு அழிந்து**
**நன் நீர்ப் பண்ணை நளிமலர்ச் செறியவும்;**
**அளிய தாமே சிறுபசுங் கிளியே**
**குழலும், யாழும், அமிழ்தும் குழைத்த, நின்**
**மழலைக் கிளவிக்கு வருந்தின வாகியும்,**
**மட நடை மாது! நின் மலர்க்கையின் நீங்காது,**
**உடன் உறைவு மரீஇ, ஒருவா ஆயின;**

[மா இரும் பீலி-மிகப் பெரிய தோகையினையுடைய; மணி நிற மஞ்ஞை-நீல நிறமான மயில்; நின் சாயற்கு இடைந்து-உன் அழகான சாயலுக்கு வருந்தி; தண்கான் அடையவும்- குளிர்ந்த காட்டை நோக்கிச் செல்லவும்;

அன்னம்-அன்னப்பறவை; நன்னுதல்-அழகிய நெற்றியை யுடையவளே! மென் நடைக்கு அழிந்து-நின் தளர்ந்த நடைக்கு வெட்கப்பட்டு; நன் நீர்ப்பண்ணை-நல்ல நீரையுடைய வயல்களில் உள்ள; நளி மலர்-குளிர்ந்த மலர்களில்; செறியவும்-போய்த் தங்கவும்;

குழலும் யாழும் அமிழ்தும்-புல்லாங்குழலும், யாழும், அமிர்த மும்; குழைத்த-ஒன்ருகக் கலந்தது போன்ற; நின் மழலைக் கிளவிக்கு-உன் மழலை மொழிகளுக்கு; சிறு பசுங்கிளி-சின்னஞ்சிறு பசுங்கிளி கள்; வருந்தினவாகியும்-; மட நடை மாது-தளர்ந்த நடையுடைய பெண்ணே; நின் மலர்க் கையின்-உனது மலர் போன்ற கையிலிருந்து; நீங்காது-விட்டு ஓடிப்போகாமல்; உடன் உறைவு மரீஇ-உடன் உறைதலைப் பொருந்தி; ஒருவா ஆயின-பிரியாதன ஆயின (ஆதலால்); அளியதாமே-அவை மிகவும் இரங்கத்தக்கன.]

(62–72)

கண்ணகியின் இயற்கை அழகைப்பற்றிக் கோவலன் பாராட்டிப் பேசுகிருன். அழகுக்கு அழகு செய்வதில் என்ன பயன் என்ற கருத்தோடு சொல்லுகிருன். "இயற்கையழகு நிரம்பிய உனக்குத் தாலி ஒன்றே போதுமே! அப்படியிருக்க உன் தோழியர் உனக்கு மற்ற ஆபரணங்களை ஏன் பூட்டினுர்கள்? உன் அழகை எடுத்துக் காட்ட உனக்குச் சில மலர்கள் போதுமே; ஏன் வீணுய் உனக்குப் பெரிய மாலைகளைச் சூட்டினுர்கள்? உன் கூந்தலுக்கு அகிற் புகையை ஏற்றியதோடு அதன் மேல் மான்மதச்சாந்தை ஏன் பூச வேண்டும்? உன் அழகிய மார்பில் தொய்யில் எழுதியபின், முத்து மாலையையும் அணிந்ததினுல் என்ன பயன்? உன் அழகிய முகத்தில் வியர்வை உண்டாகவும், உன் இடை வருந்தவும் ஏன் இவ்வளவு நகைகளையும் மாலைகளையும் உனக்கு அணிந்தார்கள்? இதனுல் உன் தோழிகள் என்ன அடைந்தார்களோ தெரியவில்லையே'' என்று இப்படியெல்லாம் இன்ப மொழிகளைக் கொட்டுகிருன் கோவலன்.

**நறுமலர்க் கோதை! நின் நலம் பாராட்டுநர்,**
**மறுவில் மங்கல அணியே அன்றியும்**
**பிறிது அணி அணியப்பெற்றதை எவன் கொல்?**
**பல் இரும் கூந்தல் சில் மலர் அன்றியும்,**
**மெல் அவிழ் மாலையோடு என் உற்றனர் கொல்?**
**நானம் நல் அகில் நறும்புகை அன்றியும்**
**மான்மதச் சாந்தொடு வந்ததை எவன் கொல்?**
**திருமுலைத் தடத்திடைத் தொய்யில் அன்றியும்**
**ஒரு காழ் முத்தமொடு உற்றதை எவன் கொல்?**
**திங்கள் முத்து அரும்பவும், சிறுகு இடை வருந்தவும்**
**இங்கு இவை அணிந்தனர்; என் உற்றனர் கொல்?**

[நறு மலர்க் கோதை–நல்ல மணம் வீசும் பூமாலையை அணிந்த கண்ணகி! நின் நலம் பாராட்டுநர்–உன் அழகைப் பாராட்டும் தோழிகள்; மறுவில் மங்கல அணியே அன்றியும்–குற்றமில்லாத தாலியோடு; பிறிது அணி–மற்ற ஆபரணங்களையும்; அணியப் பெற்றதை–உனக்கு அணிவித்திருப்பதால்; எவன் கொல்–என்ன பயனோ!

பல் இரும் கூந்தல்–பலவாகிய பெரிய கூந்தலில்; சில் மலர் அன்றியும்–சில மலர்களைச் சூடியது போதாதென்று; மெல் அவிழ் மாலையோடு–மெல்லியதாய் மலர்கின்ற மாலையையும் அணிவதால்; என் உற்றனர் கொல்–என்ன பயனை அவர்கள் கருதினார்களோ ?

நானம்–கஸ்தூரி; நல் அகில்–நல்ல அகிற் கட்டை (இவைகளின்) நறும் புகை அன்றியும்–நல்ல மணமுள்ள புகை அல்லாமலும்; மான் மதச் சாந்தொடு–மான்மதம் என்ற சாந்தையும் பூசியதால்; வந்ததை எவன் கொல்–வந்த பயன் என்ன ?

திருமுலைத் தடத்திடை–அழகிய முலைகளுக்கிடையில்; தொய்யில் அன்றியும்– (சந்தனம் குங்குமம் இவைகளால்) எழுதப்பட்ட தொய்யிற் கொடியே அல்லாமலும்; ஒரு காழ் முத்தமொடு–ஒரு முத்து மாலையையும் அணிந்ததால்; உற்றதை எவன் கொல்–வந்தபயன் என்னவோ ?

திங்கள்–நிலாவைப் போன்ற உன் முகம்; முத்து அரும்பவும்–முத்து முத்தாக வியர்வை பூக்கவும்; சிறுகு இடை வருந்தவும்–மெல்லிய உன் இடை வருந்தும்படியும்; இங்கு இவை அணிந்தனர்–உனக்கு இவ்வளவு (நகைகளையும்) அணிந்தார்கள்; என் உற்றனர் கொல்–இதனால் அவர்கள் என்ன பயனைப் பெற்றார்களோ?]

(73-83)

அடங்காத காதலில் மூழ்கியிருக்கும் போது என்னதான் பேசுகிறோம் என்று தெரியாது. என்ன இன்பமொழிகளைச் சொன்னாலும் தீராது. இந்த நிலைமையில் இருக்கிறான் கோவலன். கண்ணகியின் அழகைப் பலவிதமாய்ப் பாராட்டினான். கடைசியாக அவளை என்னவென்றுதான் போற்றிப் புகழ்ந்து வியப்பதென்றே தெரியாமல், "பசும் பொன்னே, வலம்புரி முத்தே! கரும்பே! தேனே! என்உயிருக்கே மருந்தாக வந்தவளே! நீ மணியோ! அமுதமோ! இசைதானோ! என்னென்றுதான் கூறுவேன்?" என்று இவ்வாறு பலவகையாலும் புகழ்ந்து பேசிப் பாராட்டுகிறான்.

**"மாசறு பொன்னே! வலம்புரி முத்தே!**
**காசறு விரையே! கரும்பே! தேனே!**
**அரும் பெறல் பாவாய்! ஆருயிர் மருந்தே!**
**பெருங்குடி வாணிகன், பெருமட மகளே!**
**மலையிடைப் பிறவா மணியே என்கோ?**
**அலையிடைப் பிறவா அமிழ்தே என்கோ?**
**யாழ் இடைப் பிறவா இசையே என்கோ?**
**தாழ் இரும் கூந்தல் தையால்! நின்னை" என்று**
**உலவாக் கட்டுரை பல பாராட்டி**
**தயங்கு இணர்க் கோதை தன்னொடு தருக்கி,**
**வயங்கு இணர்த் தாரோன் மகிழ்ந்து செல்வுழி நாள்;**

[மாசு அறு பொன்னே–குற்றமில்லாத பசும் பொன்னே! வலம் புரி முத்தே–வலம்புரி என்னும் சங்கிற் பிறந்த முத்தே! காசு அறு விரையே–குற்றமற்ற நறுமணமே! கரும்பே–; தேனே–; அரும் பெறல் பாவாய்–பெறுதற்கரிய சித்திரம் போன்றவளே! ஆருயிர் மருந்தே–;பெருங்குடி வாணிகன்–உயர்ந்த வாணிகக் குலத் தலைவனுடைய; பெருமடமகளே–; தாழ் இரும் கூந்தல்–தாழ்ந்து நீண்ட கூந்தலையுடைய; தையால்–பெண்ணே! நின்னை–; மலை இடைப் பிறவா–மலையில் விளையாத; மணியே என்கோ–மணி என்று சொல்வேனோ; அலை இடைப்பிறவா–கடலில் தோன்றாத; அமிழ்தே என்கோ–; யாழ்இடைப்பிறவா இசையே என்கோ–;என்று–;உலவாக் கட்டுரை–தீராத சொற்களையெல்லாம் சொல்லி; பல பாராட்டி–பல வகையாலும் புகழ்ந்து பேசி; தயங்கு இணர்க் கோதை–விளங்குகின்ற பூங்கொத்துக்களால் செய்த மாலை அணிந்த கண்ணகியுடன்; தருக்கி–காதற் களிப்பினால் மிகுந்து;வயங்கு இணர்த்தாரோன்–விளங்குகின்ற மலர் மாலையை அணிந்த கோவலன்; மகிழ்ந்து செல்வுழி நாள்–மகிழ்ந்து வாழுகின்ற நாட்களில்;

உலவா–முடிவு பெறாத. கோதை–பெண்கள் அணியும் மாலை. தார்–ஆண்கள் அணியும் மாலை.]

## (84–90)

கலியாணம் ஆனபின் கணவனும் மனைவியும் தனி வீட்டிற்குக் குடிபோய் இல்லற வாழ்க்கையை நடத்துவது இப்போது மேல் நாட்டாருடைய வழக்கம். பண்டைக்காலத் தமிழர்களிடமும் இந்த நல்ல வழக்கம் இருந்தது. இவ்விதம் தனியாய்க் குடித்தனம் செய்தால், அனுபவமும், பொறுப்பும் உண்டாகும். குடும்பத்தில் சண்டை சச்சரவுகளும் குறைவுபடும். பழைய

வழக்கத்தை அனுசரித்துக் கண்ணகியின் தாய், கோவலனும் கண்ணகியும் இல்லற வாழ்க்கை நடத்துவதற்கு ஒரு தனியான வீட்டை ஏற்படுத்தித் தந்து, வேண்டிய சாமான்களையும் பணியாட்களையும் வைத்துச் சகல ஏற்பாடுகளையும் செய்தாள். குணசீலர்களையும் துறவிகளையும், விருந்தினர்களையும் நல்வரவேற்று இருவரும் இல்லறத்தை நடத்தும் பொறுப்பிலும் உரிமையிலும் இன்பமாக வாழ்ந்து வந்தார்கள். இப்படிச் சில ஆண்டுகள் கழிந்தன.

(இளங்கோவடிகளின் கதையில் கண்ணகியும் கோவலனும் பெருமையுடன் இல்லற வாழ்க்கை சில ஆண்டுகள் நடத்தினார்கள் என்றிருக்க, தற்கால நாடக மேடையிலும், சினிமாக் கதைகளிலும் கோவலன் மணவாசலிலிருந்தே மாதவியோடு போய்விட்டான் என்று அபத்தமாகக் கதையை மாற்றிவிடுகிறார்கள். நாம் அடிகள் தந்துள்ள அழகிய கவிதையை அனுபவிப்போம்.)

## இருவரும் இல்லறம் புகுவது

**வார்ஒலி கூந்தலைப் பேர் இயல் கிழத்தி,**
**மறப்பு அரும் கேண்மையோடு அறப்பரிசாரமும்,**
**விருந்து புறம்தரூஉம் பெருந்தண் வாழ்க்கையும்**
**வேறுபடு திருவின் வீறுபெறக் காண**
**உரிமைச் சுற்றமோடு ஒரு தனி புணர்க்க;**
**யாண்டு சில கழிந்தன இல்பெரும் கிழமையின்**
**காண்தகு சிறப்பின் கண்ணகி தனக்கென்.**

[பேர் இயல் கிழத்தி—மிக்க பெருந்தன்மை யுடையவளாகிய கண்ணகியின் தாய்; வார் ஒலி கூந்தலை—நீண்டு தழைத்த கூந்தலை யுடையவளாகிய கண்ணகியை; மறப்பரும் கேண்மையோடு—மறத்தற்கு அரிய காதலனாகிய கோவலனுடன்; அறப் பரிசாரமும்—இல்லறத்தார்க்கும் துறவறத்தார்க்கும் அறம்செய்து ஒழுகும் ஒழுக்கமும்; விருந்து புறம்தரூஉம்—விருந்தினரைப் பாதுகாக்கின்ற; பெரும் தண் வாழ்க்கையும்—பெரிய அன்பு நிறைந்த வாழ்க்கையும்; வேறுபடு திருவின்—பலவேறு வகையான செல்வத்தோடு; வீறு பெறக்காண—செழித்து வளர்ந்திடுவதைக் கண்டு மகிழ; உரிமைச் சுற்றமோடு—ஏவலாளர்களோடு; ஒரு தனி புணர்க்க—தனியாக வேறோர் வீட்டில் கூட்டி வைத்தனள்; (இப்படி வைக்க) காண் தகு சிறப்பின்—அங்ஙனம்

இனிய காட்சிக்குத்தக்க; கண்ணகி தனக்கு–; இல்பெருங் கிழமையில்–இல்லறத்தை நடத்தும் பெரிய உரிமையில்; யாண்டு சில கழிந்தன–சில ஆண்டுகள் கழிந்தன.

வார்–நீண்ட; கேண்மை–நட்பு; அறப்பரிசாரம்–அறம் செய்யும் ஒழுக்கம்; வீறு–செழித்து நிற்றல்;]

**வெண்பா**

**தூமப் பணிகள் ஒன்றித் தோய்ந்தால் என ஒருவார்**
**காமர் மனைவியெனக் கைகலந்து-நாமம்**
**தொலையாத இன்பமெலாம் துன்னினார் மண்மேல்**
**நிலையாமை கண்டவர்போல் நின்று.**

[தூமப் பணிகள் – புகைக்கப்படும் வாசனைத் திரவியங்கள்; ஒன்றித் தோய்ந்தால் என–ஒன்றுபட்டுக் கலந்தாற்போல; ஒருவார்–சிறிதும் பிரியாதவராகி; காமர் மனைவி எனக் கை கலந்து–காமனும் அவன் மனைவியும் எனும்படி ஒருவரை ஒருவர் அளவளாவி; நாமம் தொலையாத இன்பமெலாம்–பெயர் சொல்லி முடியாத எல்லாவித இன்பங்களையும்; மண்மேல் நிலையாமை கண்டவர் போல் நின்று–இந்த வுலகின் நிலையாமையைக் கண்டறிந்தவர்களைப் போல இருந்து; துன்னினார்–நுகர்ந்தார்கள்.

இவ்வுலக இன்பம் நிலையாது; எனவே எல்லா இன்பங்களையும் இப்பொழுதே நுகர்வோம் என்று காதல் இன்பத்தை நுகர்ந்தார்கள் கண்ணகியும் கோவலனும்.]

**மனையறம் படுத்த காதை முற்றிற்று**

# அரங்கேற்று காதை

மாதவி என்னும் நாட்டியப் பெண் சோழ மன்னனுடைய சபையில் தன் ஆடல் பாடலை அரங்கேற்றிப் பரிசு பெற்றதும், மாதவியின் அழகைக் கண்டு மயங்கிய கோவலன் அவள் வீட்டை அடைந்து, அவள் மையலிலே மயங்கித் தன் மனைவியையும் தன் வீட்டையும் மறந்ததும் முதலிய செய்திகள் இந்த அரங்கேற்று காதையில் சொல்லப்படுகின்றன.

பண்டைக் காலத்துத் தமிழ் மக்களுடைய வாழ்க்கையில், நாட்டியக் கலை மிகவும் சிறப்பாய் வளர்ச்சி பெற்றிருந்தது. மொழியை இயல், இசை, நாடகம் என மூன்று வகையாகப் பிரித்து, நாட்டியக் கலைக்கு இலக்கியங்களிலும், இலக்கணங்களிலும் ஒரு முக்கிய இடத்தைக் கொடுத்தது தமிழ் மொழிக்குத் தனியாய் அமைந்த சிறப்பு என்று சொல்லவேண்டும். சிவபெருமானை நடன மூர்த்தியாக வழிபடுவதும் தமிழ் நாட்டில்தான்.

ஒரு சமயத்தில் அகத்தியர் இந்திரசபைக்குப் போனார். தமிழ் முனிவராகையால், தமிழ் நாட்டுக் கலையாகிய நாட்டியக் கலையை அவருக்குமுன் நடத்தி, அவரைக் களிப்பிக்க வேண்டுமென்று, இந்திரன் ஊர்வசியை நடனமாடும்படிச் செய்தான். நாட்டியமாடும் போது, சபையிலிருந்த இந்திரன் மகன் சயந்தன் மேல் ஊர்வசி மோகம் கொண்டு, அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். சயந்தனும் அதே நிலைமையில் இருந்தான். இதைக் கண்ட அகத்தியர் கோபங் கொண்டு இருவரும் மண்ணுலகத்தில் பிறக்க வேண்டுமென்று சாபம் கொடுத்தார். இது ஒரு கதை; ஆனால் இந்தக் கதையிலிருந்து ஒரு விஷயம் வெளியாகின்றது. தமிழ் நாட்டில் நாட்டியக் கலைக்குப் புனிதமான இடத்தைத்தான் கொடுத்தார்கள்; ஆகையால் நாட்டியக் கலையைக் காமவிகாரத்தால் இழிவு படுத்தியவர்களுக்குச் சாபம் நேர்ந்தது.

அகத்தியருடைய சாபத்தால் மண்ணுலகிற் பிறந்த ஊர்வசியின் குலத்தில் தோன்றிய சித்திராபதி என்பவளுடைய

மகள் மாதவி. தேவமகளாகிய ஊர்வசியின் குலத்தைச் சேர்ந்தவர்களாதலால், இவர்களுக்குத் தேவ அடியார்கள் என்று பெயர் வந்தது. மாதவி பெருந்தோளும், நீண்ட கருங் கூந்தலுமுடைய கட்டழகி. அவளுக்கு ஐந்து வயதானவுடனே அவள் தாய் அவளுக்கு நாட்டியக் கலை கற்பிக்க ஏற்பாடு செய்தாள். ஏழு வருஷம் கலையைப் பயின்ருள் மாதவி. பனிரண்டாவது வயதில் ஆடல் பாடல் அழகு, இம் மூன்றிலும் மாதவி சிறந்து விளங்கினுள். அவளுடைய கலைத் திறமையைச் சோழ மன்னன் முன்னிலையில் அரங்கேற்றுவிக்க விரும்பினுர்கள்.

அரங்கேற்று காதையில் இசைக் கலை, நாட்டியக் கலை இவைகளின் இலக்கணத்தைப் பற்றி மிகவும் விரிவாகச் சொல்லப்படுகிறது. இந்தக் காதையில் வரும் அனேகம் கலைச் சொற்கள் இப்போது வழக்கத்திலில்லை. இவைகளின் சரியான பொருளும் விளங்கவில்லை. அடியார்க்கு நல்லாருடைய உரையைக் கொண்டு இலக்கியம், இசை, நாட்டியம் இம் மூன்றிலும் தேர்ச்சி யடைந்தவர்கள் எவ்வளவோ ஆராய்ச்சி செய்ய வேண்டியிருக்கிறது. அநேகம் கலைச் சொற்களுக்குப் பொருள் விளங்காத படியால், பதவுரை தெளிவாக எழுத முடியவில்லை. சுவாமி சுத்தானந்த பாரதியார் எழுதியிருக்கும் **சிலம்புச் செல்வம்** என்னும் புத்தகத்தில், அரங்கேற்று காதையில் சொல்லப்பட்ட விஷயங்கள் கூடிய வரையில் தெளிவாக்கப் பட்டுள்ளன.

## மாதவியின் குடிச்சிறப்பும் நாட்டியம் பழகுவதும்

**தெய்வ மால்வரைத் திருமுனி அருள
எய்திய சாபத்து இந்திர சிறுவனெடு
தலைக்கோல் தானத்துச் சாபம் நீங்கிய
மலைப்பு அரும் சிறப்பின் வானவர் மகளிர்
சிறப்பிற் குன்ருச் செய்கையொடு பொருந்திய
பிறப்பிற் குன்ருப் பெருந்தோள் மடந்தை
தாது அவிழ் புரிகுழல் மாதவி தன்னை,
ஆடலும் பாடலும் அழகும் என்று, இக்
கூறிய மூன்றின் ஒன்று குறை படாமல்,
ஏழாண்டு இயற்றி ஓர் ஈராறு ஆண்டில்
சூழ்கழல் மன்னற்குக் காட்டல் வேண்டி;**

[தெய்வ மால்வரைத் திருமுனி-தெய்வத் தன்மை பொருந்திய உயர்ந்த மலையில் உள்ள அகத்திய முனிவர்; அருள-அருள் செய்த தால்; எய்திய சாபத்து-உண்டான சாபத்தையுடைய; இந்திர சிறுவனோடு-இந்திரன் மகனோடு; தலைக்கோல் தானத்து-நாடக மேடையில்; சாபம் நீங்கிய-சாபம் நீங்கப் பெற்ற; மலைப்பு அரும் சிறப்பின்-வியப்பதற்கு அரிய சிறப்பினையுடைய; வானவர் மகளிர்-தெய்வ மகளிரின்; சிறப்பின் குன்ரு-சிறப்பினின் றும் குறைவுபடாத; செய்கையொடு பொருந்திய-நாடகத் தொழிலோடு பொருந்திய; பிறப்பில் குன்ரு-தெய்வ மகளிர் குடிப்பிறப்பில் குறைவுபடாத; பெருந் தோள் மடந்தை-பெரிய தோளையுடைய பெண்ணுன; தாது அவிழ் புரிகுழல்-தாதுகள் உதிர்ந்து பிரிவுபட்ட கூந்தலையுடைய; மாதவி தன்னை-மாதவியை;

ஆடலும், பாடலும், அழகும் என்று-கூத்தும், பாட்டும், அழகும் என்ற; இக் கூறிய மூன்றின் ஒன்று குறை படாமல் ஏழு ஆண்டு இயற்றி-ஏழு ஆண்டுகளாகப் பழக்கி; ஓர் ஈராறு ஆண்டில்-பன்னிரண்டாம் வயதில்; சூழ்கழல் மன்னற்கு-வீரக்கழலையணிந்த சோழ மன்னனுக்கு; காட்டல் வேண்டி-அவளுடைய நாட்டியத்தைக் காட்டவேண்டி;]

நாட்டியப் பெண்ணின் அமைதியைச் சொன்னபின், நாட்டியத்திற்கு வேண்டிய பல ஆசிரியர்களின் அமைதியைப் பற்றி மிகவும் விவரமாகச் சொல்லுகிருர். இவர்கள் **(1) ஆடலாசிரியன் (2) இசையாசிரியன் (3) நாட்டியக் கவிஞன் (4) தண்ணுமை ஆசிரியன் (5) குழலாசிரியன் (6) யாழாசிரியன்** என்போர்.

## ஆடலாசிரியன்

**இருவகைக் கூத்தின் இலக்கணம் அறிந்து,**
**பலவகைக் கூத்தும் விலக்கினிற் புணர்த்துப்,**
**பதினோ ராடலும் பாட்டும் கொட்டும்**
**விதிமாண் கொள்கையின் விளங்க அறிந்து ஆங்கு,**
**ஆடலும், பாடலும், பாணியும் தூக்கும்**
**கூடிய நெறியின கொளுத்துங் காலைப்**
**பிண்டியும், பிணையலும், எழிற்கையும், தொழிற்கையும்**
**கொண்ட வகையறிந்து கூத்துவரு காலைக்,**
**கூடை செய்தகை வாரத்துக் களைதலும்,**
**வாரஞ் செய்தகை கூடையிற் களைதலும்,**
**பிண்டி செய்தகை ஆடலிற் களைதலும்,**

**ஆடல் செய்தகை பிண்டியின் களைதலும்,**
**குரவையும் வரியும் விரவல செலுத்தி**
**ஆடற்கு அமைந்த ஆசான் தன்னொடும்;**

[இருவகைக் கூத்தின் இலக்கணம் அறிந்து–அகக் கூத்து புறக் கூத்து என்ற இரண்டு கூத்துக்களின் இலக்கணத்தைத் தெரிந்து; பலவகைக் கூத்தும்–பல வகைப்பட்ட நடனங்களையும்; விலக்கினில் புணர்த்து– 'விலக்கு' என்னும் பாட்டுக்களுக்கு உறுப்பாய்ப் பொருந்தும்படிச் செய்து; பதினோராடலும்–அல்லியம் என்பது முதல் கொடு கொட்டி என்பது வரையிலுள்ள பதினொரு வகை ஆடல்களும்; பாட்டும்–அந் நாட்டியங்களுக்குத் தகுந்த பாடல்களும்; கொட்டும்–அக் கூத்துக்களுக்கு வேண்டிய பலவகைத் தாள வாத்தியங்களும்; விதி மாண் கொள்கையின்–நூல்களில் விதிக்கப்பட்ட உயர்ந்த கொள்கைகளை ஒட்டி; விளங்க அறிந்து–தெளிய உணர்ந்து; ஆங்கு–;

ஆடலும் பாடலும்–;பாணியும்–அவைகளுக்கு ஒத்த தாளங்களும்; தூக்கும்–அத்தாளங்களிற் பிறக்கும் வேறு வேறு தாளங்களும்; கூடிய நெறியின – இவையெல்லாம் ஒன்றோடொன்று பொருந்திய கூத்துகளை; கொளுத்தும் காலை–ஆடிப் பாடச் செய்யும் பொழுது;

பிண்டியும்–ஒற்றைக் கையைக்கொண்டு நடித்தலும்; பிணையலும்–இரண்டு கைகளையும் கொண்டு நடித்தலும்; எழிற்கையும்–அழகு பெறக் கை காட்டுதலும்; தொழிற் கையும்–சில தொழில்கள் புலப்படும்படிக் கை காட்டுதலும்; கொண்ட வகை அறிந்து–இவற்றை அந்தந்தக் கூத்துக்குப் பொருந்திய வகையறிந்து; கூத்து வருகாலை–அவ்வக் கூத்து வரும் பொழுது; கூடை செய்தகை–ஒற்றையாகக் கொண்டு செய்த கையின் தொழில்; வாரத்துக் களைதலும்–இரட்டியல் செல்லாமலும்; வாரம் செய்தகை கூடையின் களைதலும்–இரட்டையாகக் கொண்டு செய்த கைத்தொழில் இரட்டிக் கிரட்டியினும் ஒற்றையினும் செல்லாமலும்;

பிண்டி செய்தகை–ஆடல் செய்யும் பொழுது; ஆடலின் களைதலும்–அபினயம் செய்யாமலும்; ஆடல் செய்தகை–அபினயம் செய்யும் பொழுது; பிண்டியின் களைதலும்–ஆடல் நிகழாமலும்;

குரவையும் வரியும்–குரவைக்கு ஆடும் கால் முறையும், வரிக் கூத்திற்கு ஆடும் கால் முறையும்; விரவல செலுத்தி –ஒன்றோடொன்று தடுமாறுமற் செய்து;

ஆடற்கு அமைந்த ஆசான் தன்னொடும்–இவ்விதம் இலக்கண முறைப்படி ஆட்டுவிக்கும் திறமையுடைய ஆசிரியனோடும்;]

## இசையாசிரியன்

யாழும், குழலும், சீரும், மிடறும்
தாழ்குரல் தண்ணுமை ஆடலொடு, இவற்றின்
இசைந்த பாடல் இசையுடன் படுத்து
வரிக்கும் ஆடற்கும் உரிப்பொருள் இயக்கித்
தேசிகத் திருவின் ஓசை கடைப் பிடித்துத்
தேசிகத் திருவின் ஓசை எல்லாம்
மாசு இன்று உணர்ந்த அறிவினன் ஆகிக்
கவியது குறிப்பும் ஆடல் தொகுதியும்
பகுதிப் பாடலும் கொளுத்துங்காலை
வசை அறு கேள்வி வகுத்தனன் விரிக்கும்
அசையா மரபின் இசையோன் தானும்;

[யாழும், குழலும்-யாழ்ப் பாடலும், குழல் பாடும் பாடலும்; சீரும்-தாளத்தின் வகைகளைத் தெளியக் காட்டும் தன்மையும்; மிடறும்-வாய்ப் பாட்டும்; தாழ் குரல் தண்ணுமை-தாழ்ந்த ஓசையை யுடைய மத்தளக் கருவியை வாசித்தலும்; ஆடலொடு-பதினொரு வகை ஆட்டத்துடனே;

இவற்றின் இசைந்த பாடல்-இவைகளுக்குப் பொருந்திய பாடல் களை; இசையுடன் படுத்து-இனிய இசையுண்டாகும்படிச் செய்து;

வரிக்கும் ஆடற்கும்-வரிப்பாடல் ஆடற்பாடல் என்ற இரண்டிற் கும்; உரிப் பொருள் இயக்கி-உரிய பொருள்களான இயக்கங்களைச் செய்து; தேசிகத் திருவின் ஓசை கடைப்பிடித்து-சொல் வகைகளின் ஓசை ஒன்றோடொன்று சேரும் முறையைக் கடைப் பிடித்து அறிந்து; தேசிகத் திருவின் ஓசையெல்லாம்-அப்படி இசை பொருந்துகின்ற வகைகளை யெல்லாம்; மா சு இன் று உணர்ந்த-குற்றமில்லாமல் தெரிந்த; அறிவினன் ஆகி-;

கவியது குறிப்பும்-பாட்டைச் செய்த புலவனுடைய கருத்தும்; ஆடல் தொகுதியும்-ஆடலாசிரியன் பாட்டிற்குப் பொருந்த ஆடும் ஆடலும்; பகுதிப் பாடலும்-ஆசிரியன் கருத்தும் பாடலின் பொருளும் பொருந்தும்படியான பகுதியையுடைய பாடலும்; கொளுத்துங்காலை-ஒன்று சேர ஆடுமிடத்து;

வசை அறு கேள்வி;-குற்ற மற்ற நூல் முறைப்படி; வகுத்தனன் விரிக்கும்-இங்கு சொல்லப்பட்ட முறைகளை யெல்லாம் வகுக்கவும் விரிக்கவும் வல்ல; அசையா மரபின்-கெடாத சிறப்பினையுடைய; இசையோன் தானும்-இசையாசிரியனும்;]

## நாட்டியக் கவிஞன்

*இமிழ்கடல் வரைப்பின் தமிழகம் அறியத்*
*தமிழ் முழுது அறிந்த தன்மைய னாகி,*
*வேத்தியல், பொதுவியல், என்றிரு திறத்தின்*
*நாட்டிய நன்னூல் நன்கு கடைப் பிடித்து,*
*இசையோன் வக்கிரித்து இட்டதை உணர்ந்து, ஆங்கு*
*அசையா மரபின் அதுபட வைத்து,*
*மாற்றோர் செய்த வசைமொழி அறிந்து,*
*நாத்தொலைவு இல்லா நன்னூற் புலவனும் !*

[இமிழ்கடல் வரைப்பின்–ஒலிக்கும் கடலை எல்லையாக உடைய; தமிழகம் அறிய–தமிழ் நாட்டார் அறிய; தமிழ் முழுது அறிந்த தன்மையனாகி–இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழையும் அறிந்த தன்மை உடையவனாகி;

வேத்தியல் பொதுவியல் என்றிரு திறத்தின்–வேத்தியல் பொதுவியல் என்று இரண்டு பிரிவினையுடைய; நாட்டிய நன்னூல்–நல்ல நாட்டிய நூலை; நன்கு கடைப் பிடித்து–;

இசையோன் வக்கிரித்து இட்டதை உணர்ந்து–இசை நூற் புலவன் பாட்டின் இசைப் போக்கை அமைத்த முறையை உணர்ந்து;

ஆங்கு–அம்முறைப்படி; அசையா மரபின் அது பட வைத்து–அம் முறை கெடாத சிறப்போடு பொருந்தும்படி வைத்து;

மாற்றோர் செய்த–இம்முறைக்கு மாறானவர்கள் பிழைபடச் செய்த; வசை மொழி அறிந்து–பிழை மொழிகளையெல்லாம் தெரிந்து;

நாத் தொலைவு இல்லா–நாவின் சிறப்புக்களில் சிறிதும் கேடு இல்லாத; நன்னூல் புலவனும்–நாடக நூல்களைக் கற்றறிந்த ஆசிரியனும்;

வேத்தியல் என்பது வேந்தர் முன் ஆடும் நாட்டியம். பொதுவியல் என்பது பொதுவான மற்ற இடங்களில் ஆடும் நாட்டியம்.]

## தண்ணுமை ஆசிரியன்

*ஆடல், பாடல், இசையே, தமிழே*
*பண்ணே, பாணி, தூக்கே முடமே,*
*தேசிகம், என்று இவை ஆசின் உணர்ந்து,*
*கூடை நிலத்தைக் குறைவின்று மிகுத்து, ஆங்கு*
*வார நிலத்தை வாங்குபு வாங்கி,*
*வாங்கிய வாரத்து யாழும் குழலும்*

**ஏங்கிய மிடறும் இசைவன கேட்பக்,**
**கூர் உகிர்க் கரணம் குறியறிந்து சேர்த்தி,**
**ஆக்கலும் அடக்கலும் மீத்திறம் படாமைச்**
**சித்திரக் கரணம் சிதைவின்று செலுத்தும்**
**அத்தகு தண்ணுமை அருந்தொழில் முதல்வனும்;**

[ஆடல் பாடல்—எல்லா வகைக் கூத்துக்களும் பாடல் இயல்புகளும்; இசையே—இசை வேறுபாடுகளும்; தமிழே—தமிழ் மொழிக்குத் தனிப்படையாக உள்ள இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழும், பண்ணே, பாணி, தூக்கே—பண்களும், தாளங்களும், தூக்குகளும்; முடமே—இவற்றின் குற்றங்களும்; தேசிகம் – அந்தந்த நாட்டிலுள்ள சொல் வழக்கமும்; என்று இவைஆசின் உணர்ந்து—என்ற இவைகளையெல்லாம் நுட்பமாகத் தெரிந்து;

கூடை நிலத்தைக் குறைவின்று மிகுத்து—ஓர் உருவை இரட்டிக்கிரட்டி சேர்க்கும்போது, நெகிழ்ந்தபடி நிரம்ப நிறுத்தவும்; ஆங்கு வார நிலத்தை வாங்குபு வாங்கி—அந்த இடத்திற்பெறும் இரட்டியைப் பாகஉருவான வழிநிற்கும்படி நிறுத்தி, கழியுமானங் கழிக்கவும் வல்லமை உடையவனாய்;

வாங்கிய வாரத்து—இப்படி நிகழ்ந்த உருக்களில்; யாழும் குழலும்—யாழின் பாடலும் குழலின் பாடலும்; ஏங்கிய மிடறும்—ஒலி பொருந்திய கண்டப் பாடலும்; இசைவன கேட்ப—கேட்போர் செவிக்கு இன்பமாயிருக்க; கூர் உகிர்க் கரணம்—கூரிய நகத்தையுடைய விரலின் செய்கையால்; குறியறிந்து சேர்த்தி—குறியறிந்து சேர வாசிக்க வல்லவனாய்;

ஆக்கலும் அடக்கலும்—மற்ற கருவிகளின் குறையை நிரப்புதலும், மிகுதியை அடக்குதலும்; மீத்திரம் படாமை—இவ்விதம் செய்யும்போது இசையில் இரந்திரம் தோன்றாமல் செய்தலும்;

சித்திரக்கரணம் சிதைவு இன்றி செலுத்தும்—இவைகளையெல்லாம் செய்யும்பொழுது கைத்தொழில் அழகு பெறச் செய்துகாட்டலும் வல்லவனாய்; அத்தகு—அத்தன்மையுடைய; தண்ணுமை அருந்தொழில் முதல்வனும்—தண்ணுமைக் கருவியின் அரிய தொழிலையுடைய ஆசிரியனும்;

முடம்—குற்றம்; கூர் உகிர்—கூரிய நகம்; கரணம்—செய்கை]

[தண்ணுமைக் கருவிகள் தோலால் செய்யப்பட்ட கருவிகள். அடியார்க்கு நல்லார் உரையில் தண்ணுமைக் கருவிகள் எத்தனை வகைப்பட்டவை என்று சொல்லுகிறார். அவை:—

பேரிகை, படகம், இடக்கை, உடுக்கை, மத்தளம், சல்லிகை, கரடிகை, திமிலை, குடமுழா, தக்கை, கணப்பறை, தமருகம், தண்ணுமை, தடாரி, அந்தரி, முழவு, சந்திரவளையம், மொந்தை, முரசு, கண்விடுதூம்பு, நிசாளம், துடுமை, சிறுபறை, அடக்கம், தகுணிச்சம், விரலேறு, பாகம், உபாங்கம், நாழிகைப்பறை, துடி, பெறும்பறை.]

## குழலாசிரியன்

சொல்லிய இயல்பினிற் சித்திர வஞ்சனை
புல்லிய அறிந்து புணர்ப்போன் பண்பின்
வர்த்தனை நான்கும் மயல் அறப் பெய்து, ஆங்கு
ஏற்றிய குரல் இளி என்று இரு நரம்பின்
ஒப்பக் கேட்கும் உணர்வினன் ஆகிப்,
பண் அமை முழவின் கண்நெறி அறிந்து
தண்ணுமை முதல்வன் தன்னொடும் பொருந்தி,
வண்ணப் பட்டடை யாழ்மேல் வைத்து, ஆங்கு
இசையோன் பாடிய இசையின் இயற்கை
வந்தது வளர்த்து வருவது ஒற்றி
இன்புற இயக்கி இசைபட வைத்து,
வார நிலத்தைக் கேடின்று வளர்த்து, ஆங்கு
ஈர நிலத்தின் எழுத்தெழுத் தாக
வழுவின்று இசைக்கும் குழலோன் தானும்;

[சொல்லிய இயல்பினில்–நூல்களில் சொல்லப்பட்ட முறைப்படி; சித்திர வஞ்சனை புல்லிய அறிந்து–சித்திரப் புணர்ப்பு வஞ்சனைப் புணர்ப்பு என்ற இரண்டு வகைக் கூத்தினையும் அறிந்து; புணர்ப்போன் பண்பின்–புணர்க்கவல்ல பாடலாசிரியனை ஒத்த அறிவுடையவனாய்; வர்த்தனை நான்கும் மயல் அறப் பெய்து–வர்த்தனை நான்கையும் தன் நிலை குலையாமற் காட்ட வல்லவனாய்;

ஆங்கு–அந்த இடத்தில்; ஏற்றிய குரல் இளி என்று இருநரம்பின்–குரல் நரம்பு இரட்டிக்க வரும் அரும்பாலையும், இளி நரம்பு இரட்டிக்க வரும் மேற் செம்பாலையும், இவை போல் அல்லாத பாலைகளையும்; ஒப்பக் கேட்கும் உணர்வினன் ஆகி–இசை நூல் வழக்கால் இணை நரம்பு தொடுத்துப் பாடும் அறிவினை உடையவனாகி;

பண் அமை முழவின் கண்ணெறி அறிந்து–பண்ணுதல் அமைந்த முழவின் கண்நெறியை அறிந்து; தண்ணுமை முதல்வன் தன்னோடும் பொருந்தி–தண்ணுமைக்காரனோடு பொருந்தி; வண்ணப்

பட்டடை யாழ் மேல்வைத்து–நிறத்தையுடைய நரம்பினை யாழ்மேல் வைத்து; ஆங்கு–அதன் வழியே; இசையோன் பாடிய இசையின் இயற்கை–இசைக்காரன் பாடின பாட்டின் இயல்பை; வந்தது வளர்த்து–பண்ணின் வரவுகளுக்குச் சுரம் குறைவு படாமல் நிறுத்தி; வருவது ஒற்றி–அந்தப் பண்ணுக்கு அயல் விரவாமல் நோக்கி; இயக்கி–பாடலின் இயல் வழக்கெல்லாம் சுவை பொருந்தக் காட்டி; இன்புற இசைபடவைத்து–பண் இலக்கணம் நிரம்ப வைத்து; வார நிலத்தைக் கேடின்று வளர்த்து–வாரப் பாடலை அளவு நிரம்ப நிறுத்த வல்லவனாய்; ஆங்கு–அப்பாடலிடத்தில்; ஈர நிலத்தின் எழுத்து எழுத்தாக–சொன்னீர்மைகளின் எழுத்துக்கள் சிதையாமல் எழுத்தெழுத்தாக இசைக்கும்; வழுவின்று இசைக்கும் குழலோன் தானும்–குற்றமில்லாமல் வாசித்துக் காட்டும் திறமையுடைய குழலாசிரியனும்;]

## யாழாசிரியன்

இனி யாழ் வாசிப்பவனுடைய லட்சணங்களைப் பற்றிச் சொல்லப்படுகிறது. தமிழர்களுடைய இசைக் கருவிகளில் யாழ் மிகவும் மேன்மை பெற்றது. யாழ் என்பது ஒரு நரம்புக் கருவி. பண்டைக் காலத்து யாழ் உருவத்தில் எப்படியிருந்தது என்று இப்போது உறுதியாகச் சொல்ல முடியாது. இப்போது வழக்கத்திலிருக்கும் வீணை யாழைப் போன்ற ஒரு கருவி என்பது பொதுவான அபிப்பிராயம். அடியார்க்கு நல்லாருடைய உரையில் யாழ் நான்கு வகைப்படும் என்று சொல்லுகிறார். அவையாவன: (1) 21 நரம்புகளுள்ள பேரி யாழ் (2) 19 நரம்புடைய மகர யாழ் (3) 14 நரம்புடைய சகோட யாழ் (4) 7 நரம்புடைய செங்கோட்டி யாழ். இப்போது வழங்கும் வீணை பெரும்பாலும் செங்கோட்டி யாழைப் போன்றது என்று சுத்தானந்த பாரதியார் கருதுகிறார்.

யாழாசிரியனைப் பற்றி அடியில் வரும் வரிகளுக்குச் சரியாகப் பொருள் தெரிய வேண்டுமானால், தமிழ் இசையைப் பற்றிய கொள்கைகள் முதலில் தெரிய வேண்டும். திருவாளர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் பதிப்பித்திருக்கும் சிலப்பதிகாரத்தின் 74 முதல் 81 வரையிலுள்ள பக்கங்களில் இந்த வரிகளின் உரையைப் பார்க்கலாம். இந்த உரையும் கூட, சாதாரண மக்களுக்கு மிகவும் கடினமாகையால், இந்த வரிகளுக்கு இங்கே உரை கொடுக்க வில்லை.

*ஈரேழ்தொடுத்த செம்முறைக் கேள்வியின்*
*ஓரேழ் பாலை நிறுத்தல் வேண்டி,*
*வன்மையிற் கிடந்த தார பாகமும்*
*மென்மையிற் கிடந்த குரலின் பாகமும்*
*மெய்க்கிளை நரம்பிற் கைக்கிளை கொள்ளக்*
*கைக்கிளை ஒழிந்த பாகமும் பொற்புடைத்*
*தளராத் தாரம் விளரிக்கு ஈத்துக்*
*கிளைவழிப் பட்டனள் ஆங்கே; கிளையும்*
*தன் கிளை அழிவுகண்டு அவள் வயிற் சேர,*
*ஏனை மகளிரும் கிளைவழிச் சேர,*
*மேலது உழைஇளி, கீழது கைக்கிளை*
*வம்புறு மரபிற் செம்பாலை ஆயது;*
*இறுதி ஆதி யாக ஆங்கு அவை*
*பெறுமுறை வந்த பெற்றியின் நீங்காது,*
*படுமலை, செவ்வழி, பகர் அரும் பாலை எனக்*
*குரல் குரலாகத் தற்கிழமை திரிந்தபின்,*
*முன்னதன் வகையே முறைமையில் திரிந்து, ஆங்கு*
*இளி முதலாகிய எதிர்படு கிழமையும்*
*கோடி விளரி மேற்செம்பாலை என*
*நீடிக் கிடந்த கேள்விக் கிடக்கையின்*
*இணை நரம்புடையன அணைவுறக் கொண்டு, ஆங்கு*
*யாழ் மேற்பாலை இடமுறை மெலிய*
*குழல்மேற் கோடி வலமுறை மெலிய*
*வலிவும் மெலிவும் சமனும் எல்லாம்*
*பொலியக் கோத்த புலமையோனுடன்;*

*(95–113)*

அரசன் முன்னிலையில் மாதவியின் நாட்டியத்தை அரங்கேற்றுவிக்க வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யத் தொடங்கினார்கள். பண்டைக் காலத்துத் தமிழ் மக்கள், கலை ரசிகர்கள். அழகான நாட்டியக் கலையை ஒரு அழகான இடத்தில் நடத்தினால் தான், கலையின் பெருமையும் அழகும் சரியாக விளங்கும். இந்தக் காலத்தில், நாட்டியமோ அல்லது நாடகமோ நடத்த வேண்டுமென்றால், இடத்தைப் பற்றி எவரும் சிரமம் எடுத்துக் கொள்வதில்லை. இடிந்த சுவர், தகரக் கூரை, அழுக்கடைந்த நிலம் இவைகளின் மத்தியில் நாட்டியம் நடைபெறும். பண்டைக் காலத்துத் தமிழ் மக்கள் இவ்விதம் செய்யவில்லை. நாட்டியத்திற்குப் பொருத்தமான ஒரு இடத்தை

முதலில் குறித்து, அதன்பின், அந்த இடத்தில் அழகான மேடையை அமைத்தார்கள். மேடையின் அளவும் அழகும் ஒன்றுகப் பொருந்தி யிருக்க வேண்டும். ஏழுகோல் அகலம் எட்டுக்கோல் நீளம், ஒருகோல் உயரம், உள்ள மேடை அமைக்கப்பட்ட தென்று நூலில் சொல்லப் பட்டிருக்கிறது.

இப்போதுங்கூட, மலையாள நாட்டில், மரத்தை அளப் பதற்குக் 'கோல்' என்று சொல்லப்பட்ட அளவைத்தான் வைத்திருக்கிருர்கள். இந்தக் கோல், 28 அங்குலம் நீள முள்ளது. சிலப்பதிகாரம் எழுதப்பட்ட காலத்திலுங்கூட, கோலின் அளவு இதுவாகவே இருந்திருக்கலாம். அப்படி யானுல், அரங்கின் மேடை 16 அடி 4 அங்குல அகலமும், 18 அடி 8 அங்குல நீளமும், தரையிலிருந்து 2 அடி 4 அங்குல உயரமும் உள்ளதாக இருந்திருக்கவேண்டும். மேடையின் மேல் உள்ள தூண் மேலே உத்தரமாக இடப்பட்ட பலகைக் கும், மேடையின்மேற் பரப்பப்பட்ட பலகைக்கும் இடையிலே, 4 கோல் அளவு—அதாவது, 9 அடி 4 அங்குலம்—என்று சொல் லப்பட்டிருக்கின்றது. இந்த அளவுகளைக் கொண்ட ஒரு மேடை, நாட்டியத்திற்கு மிகவும் பொருத்தமான தென்று நன்முக வெளிப்படும்.

அளவிற் பொருத்தமான மேடையை அமைத்து, அதை அலங்காரம் செய்து நாலுவகைப் பூதங்களைப் படமாக எழுதி மேலிடத்தே வைத்தனர். வெளிச்சத்திற்காக நிலை விளக்குகள் வைத்தபோது தூண்களின் நிழல், மேடையில் விழாமல் இருக் கும்படி அவ்வளவு பொருத்தமான இடத்தில் வைத்தார்கள். திரைச்சீலைகளைத் தொங்கவிட்டார்கள். மேற்கட்டியின் மீது, சித்திரங்கள். முத்துகளாலும், மலர்களாலும் தொடுக் கப்பட்ட அழகிய மாலைகள் மேடையின் மேற்கட்டியிலிருந்து தொங்கின. இவ்வளவு அரிய வேலைப் பாடுகள் நிறைந்த அழகிய மேடையை மாதவியின் நாட்டியத்திற்கு அமைத்தனர்.

## அரங்கின் அமைதி

**எண்ணிய நூலோர் இயல்பினில் வழாஅது,**
**மண்ணகம் ஒருவழி வகுத்தனர் கொண்டு,**
**புண்ணிய நெடுவரைப் போகிய நெடுங்கழைக்**
**கண்ணிடை ஒருசாண் வளர்ந்தது கொண்டு,**

நூல்நெறி மரபின் அரங்கம் அளக்கும்
கோல் அளவு, இருபத்துநால் விரலாக,
எழுகோல் அகலத்து எண்கோல் நீளத்து
ஒருகோல் உயரத்து உறுப்பின தாகி;
உத்தரப் பலகையோடு அரங்கின் பலகை
வைத்த இடைநிலம் நாற்கோலாக;
ஏற்ற வாயில் இரண்டு உடன் பொலியத்,
தோற்றிய அரங்கில் தொழுதனர் ஏத்தப்
பூதரை எழுதி மேல்நிலை வைத்து;
தூண் நிழல் புறப்பட மாண்விளக்கு எடுத்து, ஆங்கு
ஒருமுக எழினியும், பொருமுக எழினியும்,
கரந்து வரல் எழினியும் புரிந்து உடன் வகுத்து, ஆங்கு
ஓவிய விதானத்து, உரைபெறு நித்திலத்து
மாலைத் தாமம் வளையுடன் நாற்றி,
விருந்து படக் கிடந்த அருந்தொழில் அரங்கத்து;

[எண்ணிய நூலோர்—ஆராயப்பட்ட சிற்ப நூலாசிரியர்களின்; இயல்பின் வழாஅது—முறையிலிருந்து மாறுபடாமல்; மண்ணகம் ஒரு வழி வகுத்தனர் கொண்டு—நிலத்திலே குற்றம் நீங்கின ஓரிடத்தை வகுத்துக் கொண்டு; புண்ணிய நெடுவரை—புண்ணியமுடைய நீண்ட மலையாகிய இமயமலையில்; போகிய—நீண்டு வளர்ந்த; நெடுங்கழை—நெடிய மூங்கிலுள்; கண் இடை ஒரு சாண் வளர்ந்தது கொண்டு—ஒரு கணுவிற்கும் மற்றொரு கணுவிற்கும் இடையில் ஒரு சாண் நீளம் உடையதாய் வளர்ந்த மூங்கிலைக் கொண்டு; நூல் நெறி மரபின்—நூல்களிற் கூறப்படும் முறையாலே; அரங்கம் அளக்கும் கோலளவு—நாடகமேடையை அளக்கும் கோலின் அளவு; இருபத்து நால் விரலாக—இருபத்து நான்கு விரல் கொண்ட அளவுடையதாக (நறுக்கி); எழுகோல் அகலத்து—ஏழுகோல் அகலத்தையும்; எண் கோல் நீளத்து—எட்டுக்கோல் நீளத்தையும் ஒரு கோல் உயரத்து—ஒரு கோல் உயரத்தையும் கொண்ட; உறுப்பின தாகி—அளவுள்ள தாகி; உத்தரப் பலகையோடு—தூண் மேலே உத்தரமாக இடப்பட்ட பலகைக்கும்; அரங்கின் பலகை—நாடகமேடையின் மேலுள்ள பலகைக்கும்; வைத்த இடைநிலம்—இடையிலே வைத்த இடைவெளி; நாற்கோலாக—நாலுகோல் அளவினதாக இருக்க;

ஏற்றவாயில் இரண்டுடன் பொலிய—அளவிற்கேற்ற வாயில்கள் இரண்டாக விளங்க; தோற்றிய அரங்கில்—செய்யப்பட்ட அம்மேடையில்; தொழுதனர் ஏத்த—எல்லோரும் வணங்கி வாழ்த்தும்படி; பூதரை எழுதி மேல்நிலை வைத்து—நாலுவகைப் பூதங்களைப் படமாக எழுதி மேலிடத்திலே வைத்து;

தூண்நிழல்—தூண்களின்நிழல்; புறப்பட—மேடையிலும், அவைக் களத்திலும் படாமல் வெளியே விழும்படி; மாண் விளக்கு எடுத்து—மாட்சிமையுடைய நிலைவிளக்கு ஏற்றி; ஆங்கு—; ஒரு முக எழினியும்—ஒரு திரையாக விடப்படுகின்ற திரைச்சீலையும்; பொரு முக எழினியும்—இரண்டு பக்கத்தினின்றும் வந்து ஒன்றாகப்பொருந்தும்படி விடப்படுகின்ற இரட்டைத் திரைச்சீலையும்; கரந்து வரல் எழினியும்-மேலே மறைவாகக் கட்டியிலிருந்து பின் தொங்கவிடப் படுகின்ற திரைச்சீலையும் ஆகியவற்றை; புரிந்து உடன் வகுத்து—அழகு படச் செய்து வகைவகையாகத் தொங்கவிட்டு; ஆங்கு—; ஓவிய விதானத்து—சித்திரம் தீட்டிய மேற்கட்டி மீது; உரைபெறு நித்திலத்து—புகழ்பெற்ற முத்துக்களால்; மாலைத் தாமம் வளையுடன் நாற்றி—மாலை, தாமம், வளை என்ற அழகிய மாலைகளைத் தொங்க விட்டு; விருந்துபடக் கிடந்த—புதுமைத் தோற்றம் தோன்றும்படி விளங்கிய; அருந் தொழில் அரங்கத்து—அரிய வேலைப் பாடுகள் அமைந்த மேடையிலே;]

## (114-128)

மேல் நாடுகளிற் பல இசை வாத்தியங்களைப் பலபேர் ஒரே சமயத்தில் வாசிப்பதுண்டு. இதற்கு "ஆர்க்கெஸ்ட்ரா" என்று சொல்வது. வழக்கத்தில் இதை "பாண்டு வாத்தியம்" என்று நாம் சொல்லுகின்றோம். பாண்டு வாத்தியக் கச்சேரியை நடத்தி வைக்க ஒரு தலைவன் உண்டு. அவன் கையில் ஒரு கோலை வைத்துக் கொண்டு, கோலை ஆட்டிச் செய்யும் சைகைகளால், எல்லா வாத்தியக் காரர்களும் பொருத்தமான சமயத்திலும், பொருத்தமான ஓசையிலும் அவரவர்களுடைய வாத்தியங்களை வாசிப்பார்கள். தலைவனுடைய கோல், பாண்டு வாத்தியக் கச்சேரிக்கு மிகவும் முக்கியமானது. இதுபோலவே, நாட்டியத்தை நடத்தும் நட்டுவனுடைய கையில் ஒரு கோல் உண்டு. நாட்டியத் தலைவன், கையில் வைத்திருக்கும் கோலுக்குத் 'தலைக்கோல்' என்று பெயர். இந்தக் கோலால், தாளம் தட்டி, நட்டுவன் நாட்டியப்பெண்ணை ஆட்டி வைக்கின்றான்.

தலைக் கோலுக்கு, முற்காலத்தில் மிகப் பெருமை கொடுத்தார்கள். இந்திர சபையில் ஊர்வசி, அகத்தியன் முன் நடனமாடிய போது, முனிவர் கொடுத்த சாபத்தால், ஊர்வசியும் இந்திரன் மகன் சயந்தனும் மண்ணுலகிற் பிறந்தார்கள். ஊர்வசி நாட்டியக் கன்னியாகப் பிறந்தாளென்றும், சயந்தன்

மூங்கிலாகப் பிறந்தான் என்றும் கதை. மூங்கிலால் செய்யப்பட்ட தலைக்கோலைச் சயந்தன் என்று வைத்து, அதற்குவழிபாடு செய்தார்கள். இமய மலையிலிருந்து கொண்டு வரப்பட்ட மூங்கில், அல்லது போர்க் களத்தில் முதுகு காட்டி ஓடிய பகைவர்களிடமிருந்து கைப் பற்றிய வெண் குடைக் காம்பு, இவைகளில் ஒன்றிலிருந்து தலைக்கோலைச் செய்தார்கள். கோலைப் பொன்னாலும், நவமணிகளாலும் வேலைப்பாட்டோடு அழகு செய்து, அதை நீராட்டி, மாலையணிந்து, பட்டத்து யானையின் மேல் வைத்து ஊர்வலம் செய்து, அரசனுடைய சபையில், நாட்டியத் தலைவனாகிய நட்டுவன் கையில் கொடுத்தார்கள்.

## தலைக்கோல் அமைதி

**பேர் இசை மன்னர் பெயர்புறத்து எடுத்த**
**சீர் இயல் வெண்குடைக் காம்பு நனி கொண்டு,**
**கண் இடை நவமணி ஒழுக்கி, மண்ணிய**
**நாவல் அம் பொலம் தகட்டு இடை நிலம் போக்கி,**
**காவல் வெண்குடை மன்னவன் கோயில்**
**இந்திர சிறுவன் சயந்தன் ஆகென**
**வந்தனை செய்து, வழிபடு தலைக்கோல்**
**புண்ணிய நன்னீர் பொற்குடத்து ஏந்தி**
**மண்ணிய பின்னர், மாலை அணிந்து,**
**நலம் தரு நாளால் பொலம்பூண் ஓடை**
**அரசு உவாத் தடக்கையில் பரசினர் கொண்டு,**
**முரசு எழுந்து இயம்ப, பல் இயம் ஆர்ப்ப,**
**அரைசொடு பட்ட ஐம்பெருங் குழுவும்**
**தேர்வலம்செய்து, கவி கைக் கொடுப்ப,**
**ஊர்வலம் செய்து புகுந்து, முன்வைத்தாங்கு;**

[பேர் இசை மன்னர்–பெரிய புகழையுடைய பகை மன்னர்கள்; பெயர் புறத்து எடுத்த–முதுகு காட்டி ஓடிய போர்க்களத்திற் கைப் பற்றிய; சீர் இயல் வெண் குடைக்காம்பு–சிறப்புக்கள் இயன்ற வெண் கொற்றக் குடையின் காம்பினை–; நனி கொண்டு–மிக்க சிறப்போடே கைக் கொண்டு; கண் இடை நவமணி ஒழுக்கி–அக்காம்பின் கணுக்களிலெல்லாம் ஒன்பது மணிகளையும் வைத்துப் பதித்து; மண்ணிய–நன்கு துப்புரவு செய்யப்பட்ட; நாவல் அம்பொலந் தகட்டு-நாவல் என்னும் அழகிய பொன்னின் தகட்டால்; இடை நிலம் போக்கி–கணுக்களின் நடுவாகிய இடத்தை மறையச் செய்து;

காவல் வெண் குடை மன்னவன் கோயில்–காவல் செய்யும் வெண் கொற்றக் குடையுடைய வேந்தனின் அரண்மனையிலே; இந்திர சிறுவன் சயந்தன் ஆகென–அந்தக் கோல் இந்திரன் மகன் சயந்தன் என்று நினைத்து; வந்தனை செய்து–வணக்கஞ் செய்து; வழிபடு தலைக் கோல்-போற்றத் தகுந்த அத் தலைக்கோலை; புண்ணிய நன்னீர் பொற் குடத்து ஏந்தி மண்ணிய பின்னர்–நல்ல புண்ணிய நீரைப் பொற் குடத்திலே ஏந்திவந்து நீராட்டிய பின்னர்; மாலை அணிந்து–; நலம் தரு நாளால்–நன்மை தருகின்ற நல்ல நாளிலே; பொலம்பூண் ஓடை– பொன்னாலான பூண்களையும் நெற்றிப் பட்டத்தையுமுடைய; அரசு உவாத் தடக் கையில்–பட்டத்து யானையின் பெரிய கையிலே–பரசினர் கொண்டு–வாழ்த்துக்களோடு கொண்டு கொடுத்து; முரசு எழுந்து இயம்ப–முரசம் ஓங்கி முழங்க; பல் இயம் ஆர்ப்ப–பலவகை வாத்தி யங்களும் ஆரவாரிக்க; அரசொடு பட்ட ஐம் பெரும் குழுவும்–அரச னொடு கூடிய ஐந்து பகுதியாகவுள்ள அமைச்சர், புரோகிதர், சேனா பதியர், தூதுவர், ஒற்றர் என்னும் கூட்டத்தினரும்; தேர்வலம் செய்து– தேரோடு வலமாகச் சுற்றி வந்து; கவிகைக் கொடுப்ப–நாடகக் கவி யின் கையிலே அத் தலைக்கோலைக் கொடுத்து; ஊர் வலம் செய்து புகுந்து முன் வைத்து–ஊரை வலமாக வந்து அரங்கிலே புகுந்து எதிர்முகமாகத் தலைக்கோலை வைத்து; ஆங்கு–அப்பால்;]

## ( *129–159* )

கண்ணுக்கும், மனதிற்கும் இன்பந்தரும்படி அமைக்கப் பட்ட சபையில், மன்னனும் அவனது பரிவாரங்களும், பொது மக்களும் வந்து சேர்ந்தார்கள். மேடையின்மேல் இசைக் கருவியை ஏந்திய வாத்தியக்காரர்கள் அவர்களுடைய இடத் தில் ஒழுங்காக நின்றார்கள். மாதவி தன் வலது காலை முன்னே வைத்து மிதித்து மேடையின்மேல் ஏறி, வலது பக்கத்துத் தூணைச் சேர்ந்து நின்றாள். நாட்டியத்திற்குத் துணை செய்ய ஆடல், பாடலில், தேர்ச்சி பெற்ற மகளிர் இடது தூண் பக்கம் நின்றனர். முதலில், அலாரிப்பு என்று சொல்லும் கடவுள் வாழ்த்துப் பாடலைப் பாடியபின், யாழ், குழல், மத்தளம் முதலிய கருவிகள் ஒன்று சேர்ந்து, இன்பமாக இசைத்தன. இந்த வாத்தியக் கருவிகளெல்லாம், ஒன்றோடொன்று தழுவிக் கலந்து இசை யெழுப்ப, நாட்டிய நன்னூல் முறையிலிருந்து தவறாமல், எல்லாக் குற்றங்களையும் நீக்கி, மாதவி, தன் நாட் டியத்தை ஆடி முடித்தாள். பொன்னாலான ஒரு பூங்கொடியே ஆடலும் பாடலும் வல்லதாய் வந்து, நடித்தாற் போலிருந்தது அந்தக் காட்சி.

## மாதவி நடனமாடுதல்

இயல்பினின் வழாஅ இருக்கை முறைமையின்,
குயிலுவ மாக்கள் நெறிப்பட நிற்ப,
வலக்கால் முன்மிதித்து ஏறி, அரங்கத்து,
வலத்தூண் சேர்தல் வழக்கு எனப் பொருந்தி,
இந்நெறி வகையால் இடத்தூண் சேர்ந்த
தொல்நெறி இயற்கைத் தோரிய மகளிரும்:
சீர் இயல் பொலிய, நீர் அல நீங்க,
வாரம் இரண்டும் வரிசையிற் பாடப்;
பாடிய வாரத்து ஈற்றில் நின்று இசைக்கும்
கூடிய குயிலுவக் கருவிகள் எல்லாம்,
குழல் வழி நின்றது யாழே; யாழ்வழித்
தண்ணுமை நின்றது தகவே; தண்ணுமைப்
பின்வழி நின்றது முழவே; முழவொடு
கூடி நின்று இசைத்தது ஆமந்திரிகை;
ஆமந்திரிகையோடு அந்தரம் இன்றிக்
கொட்டு இரண்டு உடையது ஓர் மண்டிலம் ஆக,
கட்டிய மண்டிலம் பதினொன்று போக்கி,
வந்த முறையின் வழிமுறை வழாமல்,
அந்தரக் கொட்டுடன் அடங்கிய பின்னர்,
மீத்திறம் படாமை வக்காணம் வகுத்துப்
பாற்பட நின்ற பாலைப் பண்மேல்,
நான்கின் ஒரீஇய நன்கனம் அறிந்து;
மூன்று அளந்து ஒன்று கொட்டி, அதனை
ஐது மண்டிலத்தால் கூடை போக்கி;
வந்த வாரம் வழி மயங்கிய பின்றை;
ஆறும் நாலும் அம்முறை போக்கிக்
கூறிய ஐந்தின் கொள்கை போலப்
பின்னையும் அம்முறை பேரிய பின்றை;
பொன் இயல் பூங்கொடி, புரிந்து உடன் வகுத்தென,
நாட்டிய நன்னூல் நன்கு கடைப் பிடித்துக்
காட்டினள் ஆதலின்;

இயல்பினின் வழாஅ இருக்கை முறைமையின் – நெறியிலிருந்து மாறுபடாத வரிசை முறையிலே; குயிலுவ மாக்கள் நெறிப்பட நிற்ப–இசைக்கருவியுடைய வாத்தியக்காரர்கள் ஒழுங்குபெற நிற்க; வலக்கால் முன்மிதித்து ஏறி–மாதவிதன் வலக்காலை முன்னேவைத்து மிதித்து ஏறி; அரங்கத்து–மேடையில்; வலத்தூண் சேர்தல்–வலப் பக்கத்துத் தூணைச் சென்று அடைதல்; வழக்கு எனப் பொருந்தி–நாடக வழக்கு என்று அவ்விடத்தைச் சேர்ந்து;

இந் நெறி வகையில்–மாதவி சேர்ந்த இந்நெறி முறைப்படியே; இடத்தூண் சேர்ந்த–இடப் பக்கத்துத் தூணைச் சென்று சேர்ந்த; தொல் நெறி இயற்கை–பழைமையான வழக்கியல்புகளையுடைய; தோரிய மகளிரும்–ஆடல் பாடலில் தேர்ச்சி பெற்ற மகளிரும்; சீரியல் பொலிய; தாள இலக்கணங்கள் விளங்க; நீர் அல நீங்க–அதற்கு ஏலாத குற்றங்கள் நீங்க; வாரம் இரண்டும்–இரண்டு வகையான வாரப் பாட்டுக்களை; வரிசையிற் பாட–பாடும் முறையாலே பாட; பாடிய வாரத்து–அவ்வாறு பாடிய வாரப்பாட்டின்; ஈற்றில் நின்று இசைக்கும்–கடைசியிலே நின்று இசைக்கின்ற; கூடிய–தம்முள் ஒன்றோடொன்று பொருந்திய; குயிலுவக் கருவிகள் எல்லாம்–இசைக் கருவிகள் எல்லாம்; குழல் வழி நின்றது யாழே–யாழ் குழலின் இசையை ஒட்டி இசைத்தது; யாழ்வழி–யாழை ஒட்டி; தண்ணுமை நின்றது தகவே–பொருத்தமாக மத்தளம் இசைத்தது; தண்ணுமைப் பின் வழி நின்றது முழவே–மத்தளத்தின் பின்னால் முழவு பொருந்தி யிசைத்தது; முழவொடு கூடி நின்று–குடமுழாவோடு பொருந்தி நின்று; இசைத்தது ஆமந்திரிகை–ஆமந்திரிகை என்னும் இடக்கையாகிய கருவி இசைத்தது. முழவு–ஒருவகை மத்தளம்;

ஆமந்திரிகையோடு–; அந்தரம் இன்றி–வேற்றுமை தோன்றாமல்; கொட்டு இரண்டு உடையது ஓர் மண்டிலமாக–ஒரு மண்டிலத்திற்குக் கொட்டு இரண்டாக (என்றது, ஒரு தாளத்திற்கு இரண்டு பற்றாக); கட்டிய மண்டிலம்–கட்டுக்கோப்பான ஐந்து தாளத்திலும் பதினொன்று போக்கி–பதினொரு தாளப் பற்றுக்களை இட்டு;

வந்த முறையின்–நாடக வழக்கமாக வந்த முறையில்; வழி முறை வழாமல்–நெறிதுறை மாறுபடாமல்; அந்தரக் கொட்டுடன்–அந்தரக் கொட்டு என்னும் இந்த "ஒத்து" ஆடுதலோடு; அடங்கிய பின்னர்–;

மீத்திறம் படாமை–அளவு மேலிட்டுப் போகாமல்; வக்காணம் வகுத்து–ஆலாபனம் செய்து; பாற்பட நின்ற–அளவு பட்டு நின்ற; பாலைப் பண்மேல்–பாலை என்ற பண்ணின் மேல்; நான்கின் ஒரீஇய நன்கனம் அறிந்து–"நாலுறுப்பும் குறைபாடில்லாத உருவுக்குச் சொற்படுத்தியும் இசைப் படுத்தியும் அறிந்து பாட்டும் கொட்டும் கூத்தும் நிகழ்த்தி;" மூன்று அளந்து–மூன்று ஒத்துடைய மட்ட தாளத்திலே தொடங்கி; ஒன்று கொட்டி–ஒரொத்துடைய ஏகதாளத்திலே முடித்து; அதனை–; ஐது மண்டிலத்தால்–அழகிய மண்டில நிலையாலே; கூடை போக்கி–தேசிக் கூத்திற்கு ஒற்றித்தும் இரட்டித்தும் ஒத்தும் வழக்கப்படி அக்கூத்தினை ஆடி முடித்து; (அதாவது ஐவகைத் தாளத்தையுடைய தேசிக் கூத்தை ஆடும் முறையிலே ஆடி)

**வந்த வாரம் வழி மயங்கிய பின்றை**
**ஆறும் நாலும் அம்முறை போக்கிக்**
**கூடிய ஐந்தின் கொள்கை போலப்**
**பின்னையும் அம்முறை பேரிய பின்றை**

—இவற்றின் பொருள் தெளிவாக விளங்கவில்லை.

பொன் இயல் பூங்கொடி—பொன்னாலான ஒரு பூங்கொடி; புரிந்து உடன் வகுத்தென—ஆடலும் பாடலும் வல்லதாய் வந்து நடித்தாற் போல; நாட்டியநன்னூல் நன்கு கடைப் பிடித்து—நாட்டிய இலக்கண முறையைச் சிறப்புறக் கடைப்பிடித்து; காட்டினள் ஆதலின்—தன் திறம் முழுமையும் காட்டினளாதலால்;

(159–175)

மாதவியின் குற்றமில்லாத நாட்டியத்தைக் கண்டு மகிழ்ந்த மன்னன், அக்காலத்து வழக்கப்படி, அவளுக்கு இலையாலும் பூவாலும் செய்யப்பட்ட ஒரு மாலையுடன், தலைக் கோல் ஒன்றையும், ஆயிரத் தெட்டுக் கழஞ்சு பொன்னையும் பரிசாகக் கொடுத்தான். மன்னன் கொடுத்த மாலையை மாதவியின் தாய் சித்திராபதி ஒரு கூனி கையிற் கொடுத்து, இம் மாலையை ஆயிரத்தெட்டுப் பொன்கள் கொடுத்து, யார் வாங்குகிறாரோ அவரே மாதவியின் கணவராவார் என்று சொல்லிக் கூனியை நகர இளைஞர் நடமாடும் தெருவில் நிறுத்தினாள்.

சபையில் மாதவியின் ஆட்டத்தைக் கோவலன் பார்த்து, மயங்கி விட்டான். மயக்கந் தெளியாமல், தெருவிற் போகும் போது, மாலையுடன் நின்ற கூனியைப் பார்த்து அவளுடைய வார்த்தைகளைக் கேட்டதும், முன்பின் யோசியாமல், ஆயிரத் தெட்டுப் பொன்னை அவள் கையிற் கொடுத்து, அவளுடன் மாதவியின் வீட்டை அடைந்தான். மாதவியின் இன்பத்தில் மயங்கி அறிவு சோர்ந்த கோவலன், அவளை விட்டுப் பிரிய மனமில்லாதவனாய்த் தன் வீட்டையும், தன் மனைவியையும் மறந்து மாதவியின் வீட்டிலேயே தங்கி விட்டான்.

### மாதவி பரிசு பெற்றதும்
### கோவலன் அவளை உற்றதும்

**—காவல் வேந்தன்**
**இலைப்பூங் கோதை இயல்பினின் வழாமைத்**
**தலைக்கோல் எய்தித் தலை அரங்கு ஏறி,**

விதிமுறைக் கொள்கையின் ஆயிரத்து எண் கழஞ்சு
ஒரு முறையாகப் பெற்றனள்; அதுவே
"நூறு பத்து அடுக்கி எட்டுக்கடை நிறுத்த
வீறு உயர் பசும்பொன் பெறுவது இம்மாலை;
மாலை வாங்குநர் சாலும்நம் கொடிக்கு" என,
மான் அமர் நோக்கி, ஓர் கூனி கைக் கொடுத்து,
நகர நம்பியர் திரிதரு மறுகில்
பகர்வனர் போல்வதோர் பான்மையின் நிறுத்த;
மாமலர் நெடுங்கண் மாதவி மாலை
கோவலன் வாங்கிக் கூனி தன்னொடு
மணமனை புக்கு, மாதவி தன்னோடு
அணைவுறு வைகலின், அயர்ந்தனன் மயங்கி,
விடுதல் அறியா விருப்பினன் ஆயினன்; †
வடு நீங்கு சிறப்பின் தன் மனையகம் மறந்து என்.

[காவல் வேந்தன்–நாடு காவல் செய்யும் வேந்தனிடத்தே; இலைப் பூங்கோதை–இலையும் பூவும் சேரத் தொடுத்த மாலையுடன்; இயல்பினின் வழாமை–தன் ஆடல் பாடல் அழகுகளில் மாறுபடாமல்; தலைக்கோல் எய்தி–தலைக்கோல் கொள்ளும் சிறப்பினைப்பெற்று; தலை அரங்கு ஏறி–தலைமையான வேந்தன் அரங்கினில் முதன்மையாக ஏறி; விதி முறைக் கொள்கையின்–நூல்களால் விதிக்கப் பெற்ற கொள்கை முறைப்படி; ஆயிரத்தெண் கழஞ்சு–ஆயிரத்தெட்டுக் கழஞ்சு பொன்னை; ஒரு முறையாகப் பெற்றனள்–;

அதுவே–அன்று முதலாக அம்மாலையின் விலையைப் பரிசமாக முடிவு செய்து; நூறுபத்து அடுக்கி எட்டுக் கடை நிறுத்த வீறுயர் பசும் பொன் பெறுவது இம்மாலை–இம்மாலை மாற்றுயர்ந்த ஆயிரத்தெட்டுப் பசும் பொன் விலையுள்ளது; மாலை வாங்குநர் சாலும் நம் கொடிக்கு என–நமது கொடி போன்ற மங்கை மாதவிக்கு இம்மாலை வாங்குவோர் தக்கவராவார் என்று; மான் அமர் நோக்கி–மான் போன்ற பார்வை யுடையவளாகிய; ஓர் கூனி கைக் கொடுத்து– கூனி ஒருத்தியின் கையிலே மாதவியின் தாய் சித்திராபதி கொடுத்து; நகர நம்பியர் திரிதரு மறுகில்–நகரத்து இளைஞர் திரிகின்ற தெருவிலே; பகர்வனர் போல்வதோர் பான்மையின் நிறுத்த–விலை கூறுவோர் போன்ற ஒரு பாவனையாக அவளை நிறுத்த; மாமலர் நெடுங்கண் மாதவி மாலை–அழகிய மலர் போன்ற கண்களையுடைய மாதவியின் மாலையை; கோவலன் வாங்கி–; கூனி தன்னொடு–; மணமனைபுக்கு–மணக்கோலத்தோடு விளங்கும் அவள் வீட்டிலேபுகுந்து; மாதவி தன்னோடு–; அணைவுறு வைகலின்–கட்டியணைந்த அன்றே; அயர்ந்தனன் மயங்கி–அவள் இன்பத்தில் மயங்கி அறிவு சோர்ந்தனன்; (அதனால்);

விடுதல் அறியா விருப்பினன் ஆயினன்–அவளை விட்டுப் பிரிய விருப்பமில்லாதவனாயினான்; வடு நீங்கு சிறப்பின்–குற்றம் நீங்கிய சிறப்பினையுடைய; தன்மனையகம் மறந்து–தன் வீட்டினை மறந்து;]

**வெண்பா.**

**எண்ணும் எழுத்தும் இயல்ஐந்தும் பண்நான்கும்**
**பண் நின்ற கூத்துப் பதினொன்றும்—மண்ணின்மேல்**
**போக்கினாள் பூம்புகார்ப் பொற்றொடி மாதவி தன்**
**வாக்கினால் ஆடரங்கின் வந்து.**

எண்ணும்–கணக்கும்; எழுத்தும்–இயற்றமிழும்; இயல் ஐந்தும்–எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்ற ஐவகை இலக்கணங்களும்; பண் நான்கும்–நால்வகைப் பண்களும்; பண் நின்ற–பண்ணோடு ஒத்துநின்ற; கூத்துப் பதினொன்றும்–பதினொருவகைக் கூத்துக்களும் (ஆகிய இவற்றை), மண்ணின்மேல் போக்கினாள்–உலகமெங்கும் புகழ் பரவும்படி விளக்கினாள்; பூம் புகார்ப் பொற்றொடி மாதவி–பூம்புகார் நகரத்தின் பொன் வளையல் அணிந்த மாதவியானவள்; தன் வாக்கினால் ஆடு அரங்கின் வந்து–தன்னுடைய திறமையினால் ஆடுகின்ற நாடகமேடை மீது வந்து.

அரங்கத்தின் மேல் தோன்றி, எல்லாச்சிறப்பும் விளங்க, ஆடி விளக்கினாள் மாதவி.

**அரங்கேற்று காதை முற்றிற்று**

# அந்திமாலைச் சிறப்புச்செய் காதை

(1-20)

உலகத்தில் சூரிய வெப்பம் இல்லாவிட்டால், எந்த உயிரும் வாழ முடியாதென்பது அறிவு நூல்களை ஆராய்ச்சி செய்தவர்கள் கண்ட முடிவு. சூரியன், இல்லாவிட்டால் உலகில் எந்தக் காரியமும் நடைபெருது. பொதுவாகவே உலக மக்களுக்குச் சூரியனைப் போல், பெண்களுக்கு அவர்களுடைய கணவர்; குடிகளுக்கோ நாட்டு மன்னன். சூரியன் மறையும் பொழுது நிலமகள், தன் கணவனைப் பிரிந்த ஒரு பெண்ணைப் போலத் துயரத்தில் ஆழ்ந்து, கணவன் பிரிந்து விட்டாலும், தன் அருமைப் புதல்வஞன இளம் பிறை இன்னும் வரவில்லையே என்று புலம்புகிருள்.

இதுவரை நிலமகளை ஒரு பெண்ணுகக் கருதி வந்ததை விட்டு, வெறும் நிலம் என்று வைத்துக் கொண்டு பார்க்கும் போது, சூரியன் மறைந்த காலமானது, அரசன் இல்லாத நாடு போல் தோன்றுகிறது. அரசனில்லாத நாடு என்று மட்டுமல்ல, அரசனிருந்தும் இல்லாதது போல் உள்ள நாடு. ஏனென்ருல், தன் குடிகளைக் காப்பாற்ற அந்த அரசனிடம் சரியான படைகள் இல்லை. ஒழுங்காக வரி செலுத்தும் குடிகளை அவ்வரசன் காப்பதுமில்லை. வரி செலுத்தாமல் சூழ்ச்சிகள் செய்யும் குடிகளை அவன் தண்டிப்பதுமில்லை. இவ்விதம் நிலைகெட்ட ஒரு நாட்டில் எங்கு பார்த்தாலும் குழப்பம். அடுத்த நாட்டிலுள்ள மன்னன், வெகு நாளாக இந்த நாட்டின் மேல் கண் வைத்துக் கொண்டிருக்கிருன். குழப்பம் ஏற்படவே, இந்தப் பகையரசனுக்கு நல்ல சந்தர்ப்பமும் வாய்த்து விடுகிறது. சூழ்ச்சி செய்யும் மக்களைத் துணையாகக்கொண்டு, வெகு எளிதில், நாட்டைக் கைப்பற்றுகிருன். உலகத்திற்கு அரசன் போல் விளங்கிய சூரியன் மறைந்து, உலகம் மயங்கியிருக்கும் பொழுது, பகையரசனைப் போல், மாலைப் பொழுது எங்கும் சூழ்ந்து விடுகிறது.

மாலைப் பொழுது வந்த காலத்தில், அரசனுக்கு வரியைச் செலுத்தியும் வருத்தத்தோடிருக்கும் குடிகளைப்போல், கணவர்

இருந்தும், அவரைப் பிரிந்த பெண்கள், துயரத்தில் ஆழ்ந்திருக்கிறார்கள். கண்ணகி இந்நிலைமையில் இருக்கிறாள். வரி செலுத்தாத குடிகளைப் போல், தங்கள் காதலரைக் கூடிய பெண்கள் களிப்படைந் திருக்கிறார்கள். இது மாதவியின் நிலை.

இது ஒருபுறமிருக்க, மாலைப் பொழுதில் ஆடு மாடுகளைத் தம் வீட்டிற்கு ஓட்டிக்கொண்டு போகும் இடையர்கள், குழலில் அருமையான இசையைப் பொழிகிறார்கள். பெண்களின் கூந்தலில் உள்ள முல்லைப் பூக்களில் வண்டுகள் வாய்வைத்து ஊதுகின்றன.

பூக்களில் படிந்திருக்கும் வண்டுகளை ஓட்டி, அரும்புகளில் நிறைந்த நறுமணத்தை வீசித் தென்றல் அசைந்து கொண்டிருக்கிறது. இருளைப் போக்க, வளையல்கள் குலுங்கும் அழகிகள், வீடுகளில் அழகான விளக்கினை ஏற்றுகிறார்கள்.

## மாலைப் பொழுது தோன்றுவது

**விரிகதிர் பரப்பி உலகமுழுது ஆண்ட,**
**ஒரு தனித் திகிரி உரவோற் காணேன் ;**
**அம்கண் வானத்து அணிநிலா விரிக்கும்,**
**திங்கள்அம் செல்வன் யாண்டு உளன்கொல் ? எனத்,**
**திசைமுகம் பசந்து, செம்மலர்க் கண்கள்**
**முழுநீர் வார, முழுமெயும் பனித்துத்,**
**திரைநீர் ஆடை இரும்நில மடந்தை**
**அரைசு கெடுத்து அலம்வரும் அல்லற்காலைக் ;**
**கறைகெழு குடிகள் கைதலை வைப்ப,**
**அறைபோகு குடிகளொடு ஒருதிறம் பற்றி,**
**வலம்படு தானை மன்னர் இல்வழிப்,**
**புலம்பட இறுத்த விருந்தின் மன்னரின்,**
**தாழ்துணை துறந்தோர் தனித்துயர் எய்தக்,**
**காதலர்ப் புணர்ந்தோர் களிமகிழ்வு எய்தக்,**
**குழல்வளர் முல்லையிற் கோவலர் தம்மொடு,**
**மழலைத் தும்பி வாய்வைத்து ஊத ;**
**அறுகால் குறும்பு எறிந்து, அரும்பு பொதி வாசம்**
**சிறுகால் செல்வன் மறுகில் தூற்ற ;**
**எல்வளை மகளிர் மணி விளக்கு எடுப்ப,**
**மல்லல் மூதூர் மாலைவந்து இறுத்தென ;**

[விரிகதிர் பரப்பி-விரிந்த ஒளிக்கதிர்களைப் பரப்பி; உலகமுழுது ஆண்ட-உலகம் முழுவதையும் ஆண்ட; ஒரு தனித்திகிரி-ஒப்பில்லாத ஒரே சக்கரத்தையுடைய; உரவோன்-அழிவில்லாதவனாகிய சூரியனை; காணேன்-நான் காண முடியவில்லை; அம் கண் வானத்து-அழகிய இடத்தையுடைய வானத்தில்; அணி நிலா விரிக்கும்-அழகிய நிலா வொளியைப் பரப்புகின்ற; திங்கள் அம் செல்வன்-சந்திரனாகிய அழகிய செல்வன்; யாண்டு உளன்கொல் என-எங்கே இருக்கிறானோ என்று; திசை முகம் பசந்து-தன் முகங்களாகிய நான்கு திசைகளும் பசலை பூத்து; செம்மலர்க்கண்கள்-சிவந்த பூக்களாகிய கண்களில் முழுநீர் வார-ததும்பிக் கண்ணீர் வழிய; முழுமெயும் பனித்து-தன் உடலெல்லாம் நடுங்கி; திரை நீர் ஆடை இருநில மடந்தை-அலைகள் மோதும் கடல் நீரை ஆடையாகக் கொண்ட பெரிய நிலமகளானவள்; அரைசு கெடுத்து அலம் வரும்-அரசன் இல்லாமல் நெஞ்சு கலங்குகின்ற; அல்லற்காலை-துன்பக் காலத்தில்;

கறைகெழு குடிகள் கை தலைவைப்ப-அரசனுக்குச் செலுத்தும் வரியைச் செலுத்திய குடிகள் கையைத் தலையில் வைத்து வருந்தும் படி; அறை போகு குடிகளோடு-வரி செலுத்தாது சூழ்ச்சி செய்யும் குடிமக்களை; ஒரு திறம் பற்றி-ஒரு பெருந்துணையாகக் கொண்டு; வலம்படு தானை மன்னர் இல்வழி-வெற்றி கொள்ளும் படையினை யுடைய வேந்தர் இல்லாத நாட்டில்; புலம்பட இறுத்த-அந்நாடு அழியும்படியாக அங்குச் சென்று படையுடன் தங்கிய; விருந்தின் மன்னரின்-புதிய பகை மன்னர்களைப் போல, தாழ் துணை துறந்தோர் தனித் துயர் எய்த-உள்ளத்தில் ஆழ்ந்த துணைவரைப் பிரிந்த மகளிர் ஒப்பற்ற துயரத்தை அடையவும்; காதலர்ப் புணர்ந்தோர்-காதலரைக் கூடிய மகளிர்; களி மகிழ்வு எய்த-களிப்பினாலே நிறைந்த மகிழ்ச்சியை அடையவும்; குழல் வளர் முல்லையில்-புல்லாங் குழலில் வளர்கின்ற முல்லை என்று சொல்லப்படும் இசையையும், மகளிர் கூந்தலில் விளங்கும் முல்லைப் பூவையும்; கோவலர் தம்மொடு மழலைத் தும்பி வாய் வைத்து ஊத-முறையே இடையர்களும், வண்டுகளும் தம் வாயிலே வைத்து ஊதவும்; அறுகால் குறும்பு எறிந்து-ஆறுகால்களையுடைய வண்டின் கூட்டத்தை யோட்டி; அரும்பு பொதிவாசம்-அரும்புகளில் நிறைந்த நறுமணத்தை; சிறுகால் செல்வன்-மெல்லிய தென்றற் காற்றாகிய செல்வன்; மறுகில் தூற்ற-தெருவெல்லாம் வீசவும்; எல்வளை மகளிர் மணி விளக்கு எடுப்ப-ஒளி வீசும் வளையல் அணிந்த மகளிர் அழகிய விளக்கினை ஏற்றவும்; மல்லல் மூதூர் மாலை வந்து இறுத்தென-வளப்பம் மிக்க பழைய நகரத்திலே மாலைப் பொழுது வந்து தங்கிற்று என்று;]

(21-34)

பகையரசனைப்போல் வந்து தங்கிய மாலைப் பொழுதை வெருட்டி ஓட்டுவதற்கு வெள்ளிய இளநிலா வானத்தில் தோன்றுகிறது. சந்திர குலத்தைச் சேர்ந்த பாண்டியர்களின் குலத்திற்கு முதல்வனுனபடியால், இளம்பருவமுள்ள நிலாவுக்குப் பகையரசர்களை வெருட்டி யடிக்கும் சக்தி இருக்கிறது. மாலைப் பொழுது ஓடியவுடன் பால்போன்ற வெள்ளிய நிலாவின் கதிர்கள் எங்கும் பரவி ஒளி வீசுகிறது. நிலா வெளிச்சத்தில் மாதவியும், கோவலனும் நிலா முற்றத்தை அடைகிருர்கள். அவ்விடத்தில் முல்லை மல்லிகை முதலிய பூக்களால் பரப்பப்பட்ட படுக்கையின் மேல், இருவரும் காதலின்பத்தில் மூழ்கி இருக்கிருர்கள். ஆசை நிறைந்த நெஞ்சோடு தன் காதலனைத் தழுவியதால், கலைந்த அழகைத் திருத்திக் கொண்டு, மாதவி கோவலனுக்குப் பின்னும் இன்பத்தை ஊட்டுகிருள்.

## மாதவி கோவலனுடன் இன்புற்றிருப்பது

**இளைய ராயினும், பகை அரசு கடியும்**
**செருமாண் தென்னர் குலமுதல் ஆகலின்,**
**அந்தி வானத்து வெண்பிறை தோன்றிப்,**
**புன்கண் மாலைக் குறும்பு எறிந்து ஓட்டிப்,**
**பான்மையில் திரியாது பால்கதிர் பரப்பி,**
**மீனரசு ஆண்ட வெள்ளி விளக்கத்து**
**இல்வளர் முல்லையொடு மல்லிகை அவிழ்ந்த**
**பல்பூம் சேக்கைப் பள்ளியுள் பொலிந்து,**
**செந்துகிர்க் கோவை சென்று ஏந்து அல்குல்,**
**அம்துகில் மேகலை அசைந்தன வருந்த,**
**நிலவுப் பயன் கொள்ளும் நெடுநிலா முற்றத்துக்**
**கலவியும் புலவியும் காதலற்கு அளித்து, ஆங்கு—**
**ஆர்வ நெஞ்சமொடு கோவலற்கு எதிரிக்,**
**கோலங் கொண்ட மாதவி அன்றியும்;**

[இளையராயினும்—தாம் வயதில் சிறியவராயினும்; பகை அரசு கடியும்—பகை அரசர்களை வெருட்டி யடிக்கும்; செருமாண் தென்னர்—போரில் வல்லவராகிய பாண்டியர்களின்: குல முதல் ஆகலின்—குலத்திற்கு முதல்வன் ஆதலால்; அந்தி வானத்து வெண் பிறை தோன்றி—சிவந்த அந்தி வானத்திலே வெள்ளிய இளநிலாத் தோன்றி; புன்கண் மாலைக் குறும்பு எறிந்து ஓட்டி—கணவரைப் பிரிந்தோர்க்கு வருத்தங்

தரும் மாலைக் காலமாகிய குறுநில மன்னனை வென்று வெருட்டி; பான்மையில் திரியாது—அரசியல் முறைமை தவறாமல்; பால் கதிர் பரப்பி-புகழாகிய பால் போன்ற வெள்ளிய கதிர்களைப் பரப்பி;

மீன்அரசு ஆண்ட—நிலாவொளி ஆட்சி செய்த; வெள்ளி விளக்கத்து—வெள்ளை நிறமான வெளிச்சத்தில்; இல் வளர் முல்லையொடு—வீட்டில் வளர்கின்ற முல்லைப் பூக்களும்; மல்லிகை-மல்லிகைப் பூக்களும்; அவிழ்ந்த—நன்கு மலர்ந்து அவிழ்த்து விடப்பட்ட; பல் பூ—மற்றைப் பல பூக்களும் நிரம்பிய; சேக்கைப் பள்ளியுள்-படுக்கையின் மேல்; பொலிந்து – அழகு பெற்று; செந்துகிர்க் கோவை – சிவந்த பவளத்தால் கோக்கப்பட்ட-ஆபரணத்தையுடைய; சென்று ஏந்து அல்குல்- அகன்று உயர்ந்த இடையில்; அம்துகில் மேகலை – அழகிய ஆடையின் மேல் அணிந்த மேகலாபரணம்; அசைந்தன வருந்த-அசைந்து அசைந்து வருந்த; நிலவுப் பயன் கொள்ளும் – நிலா வொளியின் இன்பத்தை அனுபவிக்கக் கூடிய; நெடு நிலா முற்றத்து-உயர்ந்த நிலாமுற்றத்தில்; கலவியும் புலவியும்—கூடலும் ஊடலும்; காதலற்கு அளித்து—தன் காதலனாகிய கோவலனுக்குத் தந்து; ஆங்கு—; ஆர்வ நெஞ்சமொடு-ஆசை நிறைந்த நெஞ்சத்தோடு; கோவலற்கு எதிரி—கோவலனை எதிரேற்று அணைந்து; கோலங் கொண்ட – அணைந்தால் கலைந்த அழகைத் திருத்திக் கொண்ட; மாதவி அன்றியும் மாதவியல்லாமலும்]

(35–46)

குளிர் காலமாயிருந்தால், பெண்கள் கூந்தலுக்குக் கற்கண்டும், அகிற் கட்டையும் சேர்த்து எரிக்கப் பட்ட வாசனைப் புகையைப் போடுவது வழக்கம். நூலில் சொல்லப்பட்ட நிகழ்ச்சி நடக்கும் காலம் கோடைக் காலம். ஆகையால் இவ்விதம் புகைக்கு அவசியம் ஏற்படவில்லை. கோடைக் காலத்திற்கு ஏற்றவண்ணம் நல்ல சந்தனத்தை அணிந்து கொள்ளுகிறார்கள். இமயமலையில் உண்டான சந்தனக் கல்லில் பொதிய மலையில் விளைந்த சந்தனக் கட்டையால் அரைக்கப்பட்ட சந்தனம் இது. காதலர் வீற்றிருக்கும் மெத்தையின் மேல் தாமரைத் தளிர்களும், குவளைமலரும், செங்கழுநீர்ப் பூவும், பச்சிலைகளும் ஆகிய இவைகளால் தொடுக்கப்பட்ட மாலைகளும், முத்துமாலைகளும், வாசனைப்பொடிகளும் சிந்திக் கலந்து கிடக்கின்றன. தென்றற் காற்று வீசுகின்றது. காதலர் இன்பத்தில் மூழ்கி யிருக்கிறார்கள். காதலி, தன் காதலன் மார்பில் ஒன்றி, இன்பக் களிப்பான துயிலில் இருக்கிறாள். மாதவியைப் போலத் தம் காதலருடன் கூடியிருக்கும் பெண்களின் இன்ப நிலை இப்படி உல்லாசத்திலிருக்கிறது.

## மாதவியைப் போல் தம் காதலரைக் கூடிய மகளிரின் நிலை

குடதிசை மருங்கின் வெள் அயிர் தன்னொடு
குணதிசை மருங்கில் கார்அகில் துறந்து,
வடமலைப் பிறந்த வான்கேழ் வட்டத்துத்;
தென்மலைப் பிறந்த சந்தனம் மறுகத்
தாமரைக் கொழு முறித் தாதுபடு செழுமலர்க்,
காமரு குவளைக் கழுநீர் மாமலர்ப்,
பைந்தளிர்ப் படலை, பரூஉக்காழ் ஆரம்,
சுந்தரச் சுண்ணத் துகளொடும் அளைஇச்,
சிந்துபு பரிந்த செழும்பூஞ் சேக்கை
மந்த மாருதத்து மயங்கினர் மலிந்து; ஆங்கு,
ஆவியம் கொழுநர் அகலத்து ஒடுங்கிக்,
காவிஅம் கண்ணார் களித்துயில் எய்த;

குடதிசை மருங்கின்—மேற்குத் திசையில் உண்டான; வெள்அயிர் தன்னொடு-வெள்ளை நிறமுடைய கற்கண்டுடன்; குண திசை மருங்கில் கார் அகில் துறந்து—கீழ்த்திசையில் விளைந்த கரிய அகிற் கட்டையின் புகையை ஊட்டும் அவசியமில்லாமல்;

வடமலைப் பிறந்த வான்கேழ் வட்டத்து—வட திசையிலுள்ள இமய மலையில் உண்டான மிகுந்த ஒளியை யுடைய சந்தனக்கல்லில்; தென் மலைப் பிறந்த சந்தனம் மறுக—தென் திசையிலுள்ள பொதியமலையில் உண்டான சந்தனக் கட்டையானது நன்கு அரைபட;

தாமரைக் கொழு முறி—தாமரையின் கொழுமையான தளிர்களை யும்; தாதுபடு செழுமலர்—மகரந்தப் பொடி நிறைந்த செழுமையான மலர்களையும்; காமறு குவளை—அழகிய குவளை மலரையும்; கழுநீர் மாமலர்-செங்கழுநீர்ப் பூவினையும்; பைந் தளிர்ப் படலை—பசிய தளிர் களோடு தொடுக்கப் பட்ட பச்சிலை மாலையுடன்; பரூஉக் காழ்ஆரம்—பெரிய முத்து மாலையும்; சுந்தரச் சுண்ணத் துகளொடும்—அழகிய வாசனைப் பொடிகளுடன்; அளைஇ—கலந்து; சிந்துபு பரிந்த-சிந்திச் சிதறிய; செழும் பூஞ் சேக்கை-செழுமையான பூக்கள் பரப்பின படுக்கையில்; மந்த மாருதத்து-தென்றற் காற்றால்; மயங்கினர் மலிந்து—கூடித் தெளிந்து மீண்டும் காதற் களிப்பிலே மயங்கி; ஆவி அம் கொழுநர் அகலத்து ஒடுங்கி—தம் உயிர் போன்ற காதலர் மார்பில் ஒன்றி; காவி அம் கண்ணார் களித்துயில் எய்த—நீலப் பூப்போன்ற அழகிய கண்களையுடைய மகளிர் இன்பத் துயிலிலே மயங்கிக் கிடக்க;]

(47–57)

மாதவி கோவலனுடன் கூடி, மகிழ்ந்திருக்கிறாள். பத்தினியாகிய கண்ணகியின் நிலைமை எப்படி இருக்கிறது என்பதைப் பார்ப்போம். கண்ணகி ஆறாத துன்பத்தில் மூழ்கி இருக்கிறாள். கணவனைப் பிரிந்த பத்தினிக்கு ஆடை, ஆபரணம், அழகு இவையெல்லாம் எதற்காக? காலில் அணிந்திருந்த சிலம்பைக் கழற்றி எறிந்தாள். இடையில் மேகலாபரணம் இல்லை. மார்பில் குங்குமத்தாலும் சந்தனத்தாலும் தொய்யில் எழுதவில்லை. எல்லா ஆபரணங்களையும் களைந்தெறிந்து விட்டாலும் கணவன் கட்டிய தாலியை எடுக்க முடியுமா? கயிற்றிற் கோத்த தாலி மட்டுந்தான், அவளுடைய ஆபரணமாய் இருந்தது. காதிலுங்கூடக் குழை இல்லை. மனக்கலக்கத்தால், முகத்தில், சிறிய வியர்வைத் துளிகள் உண்டாகின்றன. கண்ணிலோ அஞ்சனமில்லை. நெற்றியிலோ திலகமில்லை. கூந்தலில் வாசனைத் தைலங்களும் இல்லை. கணவனைக் காணாத வருத்தத்தால், முகமலர்ச்சியும் புன்சிரிப்பும் இல்லவே இல்லை. இவ்விதமாக, உடல் அழகு மங்கி, மனம் செயலற்றுச் செய்வதறியாது சோர்ந்திருக்கிறாள் கண்ணகி.

### கணவனைப் பிரிந்த கண்ணகியின் துயரம்

**அம்செம் சீறடி அணிசிலம்பு ஒழிய,**
**மென்துகில் அல்குல் மேகலை நீங்கக்,**
**கொங்கை முன்றில் குங்குமம் எழுதாள்;**
**மங்கல அணியின் பிறிது அணி மகிழாள்;**
**கொடுங்குழை துறந்து வடிந்துவீழ் காதினள்;**
**திங்கள் வாண்முகம் சிறுவியர்ப் பிரியச்,**
**செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்பப்,**
**பவள வாள்நுதல் திலகம் இழப்பத்,**
**தவள வாள்நகை கோவலன் இழப்ப,**
**மை இரும் கூந்தல் நெய் அணி மறப்பக்,**
**கையறு நெஞ்சத்துக் கண்ணகி அன்றியும்;**

[அம் செம், சீறடி–அழகிய சிவந்த சிறிய அடிகளில் இருக்கும் சிறப்பை; அணி சிலம்பு–அழகிய சிலம்பு, ஒழிய–ஒழிந்து போக; மென் துகில் அல்குல்–மெல்லிய ஆடை யுடைய இடையை; மேகலை நீங்க–மேகலை என்னும் அணி நீங்க; கொங்கை முன்றில்–தன் கொங்கைப் பரப்பில்; குங்குமம் எழுதாள்–குங்குமம் பூசாதவளாய்; மங்கல

*அணியின் – மங்கலநாணாகிய தாலியைத் தவிர; பிறிது அணி மகிழாள்–வேறோர் அணியை அணிந்து மகிழாதவளாகி; கொடுங்குழை துறந்து–வளைந்த குழை என்னும் காதணியை நீக்கி; வடிந்து வீழ் காதினள்–துவண்டு விழுகின்ற காதையுடையவளாகி; திங்கள் வாள் முகம் சிறுவியர்ப்பு இரிய–நிலாப் போல ஒளி விளங்கும் அழகிய முகத்தில், புணர்ச்சியில் உண்டாகும் சிறிய வியர்வைகள் தோன்றாமலே; செங்கயல் நெடுங்கண் அஞ்சனம் மறப்ப–சிவந்த கயல் மீன் போன்ற நீண்ட கண்களை மை மறந்து விட; (அதாவது விழிகளில் மை தீட்டாமல்) பவள வாள் நுதல் திலகம் இழப்ப–பவளம் போல் ஒளிவீசும் நெற்றியைப் பொட்டு இழந்து விட; தவள வாள்நகை கோவலன் இழப்ப–முத்தைப் போன்ற ஒளியுடைய புன்சிரிப்பைக் கோவலன் இழந்து விட; மை இரும் கூந்தலை நெய் அணி மறப்ப-மேகம் போலக் கருத்த கூந்தலை வாசனைத் தைலங்கள் மறந்துவிட; கையறு நெஞ்சத்துக் கண்ணகி அன்றியும்-செயலற்ற நெஞ்சையுடைய கண்ணகி அல்லாமலும்;]*

## *(58–71)*

கண்ணகியைப்போல் கணவரைப் பிரிந்திருந்த மாதர் மிகுந்த வருத்தத்தில் மூழ்கியிருக்கிறார்கள். தம் கணவரை நினைக்கும் போதெல்லாம், உலைக்களத்திலுள்ள துருத்தியைப் போலப் பெருமூச்சு விட்டு, மேனி ஒடுங்குகிறார்கள். கோடைக் காலமாயிருந்த போதிலும், தென்றல் வீசும் நிலாமுற்றத்திற்குப் போக மனமில்லை. ஏனென்றால், நிலாவின் பரந்த ஒளியைப் பார்க்கும் போது, அவர்களுக்குத் தம் கணவருடைய நினைவு அதிகமாகிறது. இருண்ட அறையிற் போய்ப்படுத்துக் கொள்ளுகிறார்கள். தம் கணவரை நினைவூட்டும்நிலா வெளிச்சமும், தென்றற் காற்றும் உள்ளே புகாமலிருக்கும்படி, அந்த அறையின் சாளரங்களையும் அடைத்து விடுகிறார்கள். மார்பில் அணிந்திருந்த முத்தாரங்களைக் கழற்றி எறிந்து விடுகிறார்கள். மார்பில் சந்தனமும் இல்லை. படுக்கையிலோ செங்கழுநீர்ப் பூக்களும், குவளைப் பூக்களும் இல்லை. தாம் படுத்திருந்த படுக்கை, அன்னப் பறவையின் மெல்லிய சிறகினால் திணித்துச் செய்யப் பட்டிருந்த போதிலும், முன் தம்கணவருடன், கூடலும், ஊடலும் நடந்தபின் உண்டான களித்துயில் உண்டாகவில்லை. அழுத கண்களும் சிவந்துவிட்டன. இந்த நிலைமையில், தூக்கங்கொள்ளாமல், படுக்கையில் புரண்டபடியே எப்போது விடியுமோஎன்று ஏங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

## கண்ணகியைப்போல் கணவரைப் பிரிந்தவர் வருத்தம்

காதலர்ப் பிரிந்த மாதர் நோதக,
ஊதுஉலைக் குருகின் உயிர்த்தனர் ஒடுங்கி,
வேனிற் பள்ளி மேவாது கழிந்து,
கூதிர்ப் பள்ளிக் குறுங்கண் அடைத்து,
மலையத்து ஆரமும், மணிமுத்து ஆரமும்
அலர்முலை ஆகத்து அமையாது வருந்தத்;
தாழிக் குவளையொடு தண்செங் கழுநீர்
வீழ்பூஞ் சேக்கை மேவாது கழியத்;
துணைபுணர் அன்னத் தூவியிற் செறித்த
இணைஅணை மேம்படத் திருந்து துயில் பெறாஅது
உடைப் பெருங் கொழுநரோடு ஊடற்காலத்து
இடைக் குமிழ் எறிந்து கடைக்குழை ஓட்டிக்
கலங்கா உள்ளங் கலங்கக் கடைசிவந்து
விலங்கிநிமிர் நெடுங்கண் புலம்புமுத்து உறைப்ப;

[காதலர்ப் பிரிந்த மாதர் நோதக-தமது கணவர்களைப் பிரிந்த மகளிர் வருத்தம் மிகும்படி; ஊது உலைக் குருகின்-ஊதப்படுகின்ற உலைக்களத்திலுள்ள துருத்தியைப் போல; உயிர்த்தனர் ஒடுங்கி-பெருமூச்சு விட்டு ஒடுங்கி; வேனிற் பள்ளி-இளவேனிற்காலத்தில் படுக்கின்ற நிலா முற்றத்தில்; மேவாது கழிந்து-படுக்காமல் இருந்து; கூதிர்ப் பள்ளி-குளிர் காலத்தில் படுக்கின்ற நடுமாடியில்; குறுங்கண் அடைத்து-சாளரங்களை அடைத்து; மலையத்து ஆரமும்-பொதிய மலைச் சந்தனமும்; மணி முத்து ஆரமும்-முத்து மணிகளால் கோக்கப்பட்ட மேகலையும்; அலர் முலை ஆகத்து-பரந்த கொங்கையினையுடைய மார்பில்; அடையாது வருந்த—பொருந்தாமல் வருந்த; தாழிக் குவளையொடு-தாழியில் பூத்த குவளைப் பூவோடு; தண் செங்கழுநீர்-குளிர்ந்த சிவந்த செங்கழுநீர்ப் பூக்களும்; வீழ் பூஞ் சேக்கை-விரும்பப்படுகின்ற அழகிய படுக்கையில்; மேவாது கழிய- பொருந்தாமல் கழிய (அதாவது அப் பூக்களைப் படுக்கையில் பரப்பாமல் வருந்தியிருக்க)

துணைபுணர் அன்னத் தூவியிற் செறித்த-சேவல் அன்னத்தைக் கூடுகின்ற பெட்டை அன்னம் உருகி உதிர்த்த சிறகைத் திணித்துச் செய்த; இணை அணை மேம்பட-இரட்டையாகிய படுக்கைமேல், இன்பமுண்டாகும்படி;• திருந்து துயில்-தூங்கும் அழகிய தூக்கத்தினை; பெறாது-பெறாமல்; உடைப் பெருங் கொழுநரோடு - தம்முடைய பெருங்குணமுள்ள கணவரோடு; ஊடற்காலத்து-முன் ஊடல் செய்த காலத்தில் இடைக்குமிழ் எறிந்து-இடையிலுள்ள குமிழை எறிந்து விட்டு; கடைக்குழை ஓட்டி—கன்னத்தின் கடைப் பக்கமாக வுள்ள

குழை என்ற காதணியை எறிந்து; கலங்கா உள்ளம் கலங்க - அப்பொழுது கலங்காத நெஞ்சம் இப்போது கலங்க; கடை சிவந்து-கடைக்கண் சிவந்து; விலங்கி நிமிர் நெடுங்கண் - குறுக்கு நெடுக்காக ஓடுகின்ற நீண்ட கண்களில்; புலம்பு முத்து உறைப்ப-வருத்தத்தால் முத்து முத்தாகக் கண்ணீர் சிந்த;

துணை–இரட்டை; தூவி-சிறகு; விலங்குதல்-குறுக்கிடுதல்; புலம்பு-தனிமையினால் வரும் வருத்தம்; உறைத்தல்-நீர் துளித்தல்.]

(72–84)

பொழுது விடியும் தோற்றத்தை, இளங்கோவடிகள் வருணிக்கும் போது, புகார் நகரிலுள்ள குளத்தை ஒரு பெண்ணாக வைத்து வருணிக்கிறார். இந்தப் பெண், அன்னமாகிய மெல்லிய நடையையும், ஆம்பற் பூவின் நல்ல மணத்தையும், தாமரையாகிய சிவந்த வாயையும், குளிர்ந்த கருமணலாகிய கூந்தலையும் உடையவள். வண்டுகள் பாடிய இசையைக் கேட்டு, அவளுடைய கண்களாகிய குவளைப் பூக்கள் மலர்கின்றன. பறவைகளின் முரசொலியும் கோழி கூவும் சங்கொலியும் ஊரைத் தூக்கத்தினின்றும் எழுப்பி விட்டன. சூரியன் மறைந்த காலம் முதல், பின்னும் தோன்றும் காலம் வரையில், தூங்காமல் இருக்கும் மன்மதன், கரும்பாகிய வில்லையும், மலராகிய அம்பையும் கையிலேந்திச் சிறப்பாக இரவு முழுதும் ஊர்க் காவல் செய்தான்.

அதாவது மக்களின் காதல் நினைவுக்கு அரசனாக விளங்கினான்.

## பொழுது விடிவது

**அன்ன மென்னடை நன்னீர்ப் பொய்கை,**
**ஆம்பல் நாறும் தேம்பொதி நறுவிரைத்,**
**தாமரைச் செவ்வாய்த், தண் அறல் கூந்தல்,**
**பாண்வாய் வண்டு நோதிறம் பாடக்,**
**காண்வரு குவளைக் கண்மலர் விழிப்பப்,**
**புள்வாய் முரசமொடு, பொறிமயிர் வாரணத்து**
**முள்வாய்ச் சங்கம் முறை முறை ஆர்ப்ப,**
**உரவு நீர்ப் பரப்பின் ஊர் துயில் எடுப்பி,**
**இரவுத் தலைப்பெயரும் வைகறைகாறும்,**
**அரை இருள் யாமத்தும் பகலும் துஞ்சான்,**
**விரைமலர் வாளியொடு கரும்புவில் ஏந்தி,**
**மகர வெல் கொடி மைந்தன் திரிதர,**
**நகரங் காவல் நனி சிறந்தது என்.**

[அன்ன மென்னடை—அன்னமாகிய மெல்லிய நடையினையும்; ஆம்பல் நாறும்-ஆம்பற் பூவின் மணம் வீசுகின்ற; தேம் பொதி நறு விரை-தேன் நிறைந்த நல்ல மணத்தையுடைய; தாமரைச் செவ் வாய்-தாமரையாகிய சிவந்த வாயினையும்; தண் அறல் கூந்தல்-குளிர்ந்த கருமணலாகிய கூந்தலையும் உடைய; நன் நீர்ப் பொய்கை-நல்ல நீரையுடைய பொய்கை என்னும் பெண்; பாண்வாய் வண்டு-பாடுகின்ற வாசனையுடைய வண்டுகள்; நோதிரம் பாட—வருத்தம் உண்டாக்கும் இசையைப் பாட; காண்வரு குவளை—அழகான குவளைப் பூக்களாகிய; கண் மலர் விழிப்ப-கண்ணாகிய மலர்கள் தூக்கத் தினின்றும் விழிக்க; புள்வாய் முரசமொடு-பறவைகளின் ஒலியாகிய முரசொலியுடன்; பொறி மயிர் வாரணத்து—புள்ளிகள் நிறைந்த மயிரடர்ந்த கோழிகளின்; முள் வாய்ச் சங்கம்-கூரிய வாயாகிய சங்குகள்; முறைமுறை ஆர்ப்ப—விட்டு விட்டு முழங்கவும்; உரவு நீர்ப் பரப்பின்-வலிமையுடைய கடலைப்போலப்பரந்திருக்கின்ற; ஊர் துயில் எடுப்பி-ஊரைத் தூக்கத்தினின்றும் எழுப்பி; இரவுத் தலைப்பெயரும் வைகறை காறும்—இராக்காலம் நீங்கிப் போகின்ற கடைச்சாமம் வரையில்; அரை இருள் யாமத்தும்—நல்ல இருளையுடைய நடுயாமத்திலும்; பகலும்-ஒரு சாமத்தின் பாதி நேரமாகிய மூன்றே முக்கால் நாழியுங் கூட; துஞ்சான்—உறங்காதவனாகிய; மகர வெல் கொடி மைந்தன்—மீன் கொடியையுடைய மன்மதன்; விரை மலர் வாளியொடு—வாசமுள்ள மலராகிய அம்புடன்; கரும்பு வில் ஏந்தி—கரும்பாலாகிய வில்லையும் கையிலேந்தி; திரிதர-எங்கும் உலாவ; நகரங்காவல்-ஊர்க் காவலானது; நனி சிறந்தது—மிகச் சிறப்புடையதாயிருந்தது.]

(வெண்பா)

**கூடினார்பால் நிழலாய்க் கூடார்பால் வெய்யதாய்க்**
**காவலன் வெண்குடைபோல் காட்டிற்றே—கூடிய**
**மாதவிக்கும் கண்ணகிக்கும் வான்ஊர் மதிவிரிந்து**
**போதவிழ்க்கும் கங்குற் பொழுது.**

கூடினார்பால் நிழலாய்—நட்பாகச் சேர்ந்தவர்க்கு நிழலாகியும், கூடார்பால் வெய்யதாய்—பகையாய்ச் சேராதவர்க்குக் கொடியதாகவு முள்ள, காவலன் வெண்குடைபோல்—சோழ மன்னனுடைய வெண் கொற்றக் குடையைப்போல், போது அவிழ்க்கும் கங்குல் பொழுது-பூக்கள் இதழ்களை விரிக்கின்ற இரவு நேரத்தில், வான் ஊர் மதி விரிந்து-வானிலே ஒளிவிரிந்து செல்லுகிற சந்திரன், கூடிய மாதவிக்கும் கண்ணகிக்கும்—கோவலனைக் கூடியமாதவிக்கும், அவனைப் பிரிந்த கண்ணகிக்கும், காட்டிற்று - முறையே குளிர்ச்சியுடையதாகவும், கொடியதாகவும் தன்னைக் காட்டிற்று.

அந்தி மாலைச் சிறப்புச்செய் காதை முற்றிற்று

# இந்திரவிழவூரெடுத்த காதை

இந்தக் காதையில் காவிரிப்பூம் பட்டினத்தின் நகரமைப்பும், செல்வச் சிறப்பும், அவ்வூரில் சித்திரை மாதத்தில் இந்திரனுக்குத் திருவிழா நடந்ததும் முதலிய செய்திகள் சொல்லப் படுகின்றன.

(1-6)

நூலாசிரியருக்கு நிலமகள் ஒரு அழகிய பெண் போல் தோன்றுகிருள். அலை வீசும் கடல் அவளுடைய ஆடை. மலைகள் அவள் மார்பு. நீண்ட தூய்மையான ஆறு அவள் மார்பின் மேலுள்ள மாலை. கரிய மேகம் அவளுடைய கூந்தல். இருளாகிய போர்வை அவள் மேல் மூடியிருக்கின்றது. சூரியன் மேருமலையின் உச்சியில் தோன்றித் தன் கதிர்களால் நிலமகளின் போர்வையாகிய இருளை விலக்குகிருன். அழகிய நிலமகளின் மேனி பொன் போலும் ஒளியை வீசுகின்றது. காலை நேரத்தில், சூரியனுடைய ஒளி வீசும் சமயத்தில்தான் ஒரு நகரின் அழகும், செழிப்பும், மேன்மையாகத் தோன்றும். இனிமையான காலை நேரத்தில், கவி நம்மைப் புகார் நகரத்திற்கு அழைத்து, அந்த நகரின் சிறப்பையும் அழகையும் காட்டுகின்ருர்.

## சூரியன் தோன்றுவது

**அலை நீர் ஆடை, மலை முலை ஆகத்து,**
**ஆரப் பேரியாற்று, மாரிக் கூந்தல்,**
**கண் அகன் பரப்பில், மண்ணக மடந்தை,**
**புதை இருள் படாஅம் போக நீக்கி,**
**உதைய மால்வரை உச்சித் தோன்றி;**
**உலகு விளங்கு அவிர்ஒளி மலர்கதிர் பரப்பி;**

[அலைநீர் ஆடை—கடலாகிய ஆடையினையும்: மலைமுலை ஆகத்து—மலையாகிய முலையையுடைய மார்பினையும்; ஆரப் பேர்யாற்று-பெரிய ஆருகிய மாலையினையும்; மாரிக் கூந்தல்—மேகமாகிய கூந்தலினையும்; கண் அகன் பரப்பின்— இடமகன்ற பரப்பினையுமுடைய; மண்ணக மடந்தை-நிலஉலகமாகிய பெண்மகளை; புதை இருள் படாஅம் போக நீக்கி—மூடி மறைத்திருந்த இருட்டாகிய போர்வை விலகும்படி நீக்கி,

*உதைய மால் வரை—மேருமலையின்; உச்சித் தோன்றி—உச்சியில் தோன்றி; உலகு விளங்கு அவிர் ஒளி—உலகம் விளங்குதற்குக் காரணமான சூரியன்; மலர் கதிர் பரப்பி—தனது விரிந்த கதிர்களைப் பரப்பி;]*

*(7–39)*

காவிரிப்பூம்பட்டினம், காவிரி நதி கடலில் சேருமிடத்திலுள்ள பெரிய துறைமுகப் பட்டினம். ஏறக்குறைய 2,000 வருடங்களுக்கு முன்பே, இந்தப் பட்டினம், உலகெங்கும் புகழ் பெற்றிருந்தது. இந்தியாவைப் பற்றி மேல் நாட்டார் ஏறத்தாழ 2,000 வருடங்களுக்கு முன் எழுதின நூல்களிலும், குறிப்புக்களிலும் புகார் நகரம் சிறந்த துறைமுகம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப் பட்டினம் இரண்டு பெரிய பிளவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. வர்த்தகம் மும்முரமாக நடைபெற்ற பாகத்திற்கு **மருவூர்ப் பாக்கம்** என்றும், அரசனும் செல்வர்களும் வசித்த பாகத்திற்குப் **பட்டினப் பாக்கம்** என்றும் பெயர். இவை இரண்டிற்கு மிடையில், பகல் சந்தை கூடும் பொது நிலமாகிய **நாளங்காடி** என்று சொல்லப்பட்ட இடமிருந்தது.

இனி, கடற்கரையைச் சேர்ந்துள்ள மருவூர்ப் பாக்கத்தைப் பார்ப்போம். நிலா முற்றங்களும், வர்த்தகச் சரக்குகள் நிறைந்த மாளிகைகளும் கண்ணுக்குத் தெரிகின்றன. கடலோரத்தில் உள்ள மாளிகைகளில், மேல் நாட்டாராகிய யவனர் வசிக்குமிடங்கள் கண்ணைப் பறிக்கும்படியான அழகு பொருந்தியவை. கடற்கரை யோரமாக, மற்றொருபுறத்தில், பலநாடுகளிலிருந்து வந்த கப்பலோட்டிகள் ஒன்றாகக் கூடியிருக்கிறார்கள்.

மருவூர்ப் பாக்கத்தில் வசிப்பவர்கள் பெரும்பான்மையும் வர்த்தகர்களாயிருந்த போதிலும், இவர்கள் வாழ்க்கையில் பரம ரசிகர்கள். இவர்களுடைய தேவைக்காகக் குங்குமக் குழம்பு, வாசனைப் பொடிகள், சந்தனம், பூக்கள், நறுமணப் புகைப் பொருள்கள் ஆகியவைகளை விற்பவர் நகர வீதியில் எப்பொழுதும் திரிந்து கொண்டிருக்கிறார்கள். கைத்தொழிற் சாலைகள் ஒருபுறம் இருக்கின்றன. இச்சாலைகளில் பட்டினாலும், பருத்தியினாலும், உரோமத்தினாலும், அழகிய துணிகளை நெய்யும் பட்டுசாலியர் ஒருபுறம் வசிக்கிறார்கள். சில வீதிகளில் பட்டும், பவளமும், முத்தும், மணிகளும், பொன்னும்

ஆகியவைகளாற் செய்யப்பட்ட அரிய ஆபரணங்களை விற்கும் கடைகள் நிறைந்திருக்கின்றன. பலவகைத் தானியங்கள் விற்கும் தெருக்கள் ஒரு புறம்.

பிட்டு வாணிகர் அப்ப வாணிகர், கள், மீன், இறைச்சி முதலியன விற்போர், உப்பு வாணிகர், வெற்றிலை, பாக்கு, கற்பூரம் முதலிய விற்போர், கப்பலோட்டும் தொழிலாளர் என்ற இவர்களெல்லாம் மற்றொருபுறம் இருக்கிறார்கள்.

அழகிய கைத்தொழில்களில் ஈடுபட்ட வெண்கலக் கன்னாரும், செம்புத் தொழில் செய்வோரும், தச்சர்களும், கொல்லர்களும், சித்திரக்காரரும், தட்டாரும், குயவரும், தையற்காரரும், தோல் வேலை செய்யும் சக்கிலியரும், இன்னும் பல வகைப்பட்ட கைத்தொழிலாளரும் ஒருபுறம் வாழ்கின்றனர். குழலர், பாணர் முதலான இசைகாரர்கள் மற்றொருபுறமிருக்கிறார்கள். இம் மருவூர்ப் பாக்கத்தில் எங்கே பார்த்தாலும் வாழ்க்கைக்குச் சிறப்பும் இன்பமும் கொடுக்கும் மக்கள் நிறைந்திருக்கிறார்கள்.

## மருவூர்ப்பாக்கம்

**வேயா மாடமும் வியன்கல இருக்கையும்**
**மான்கண் காலதர் மாளிகை இடங்களும்.**
**கயவாய் மருங்கின் காண்போர்த் தடுக்கும்**
**பயனறவு அறியா யவனர் இருக்கையும்;**
**கலம்தரு திருவின் புலம் பெயர் மாக்கள்**
**கலந்திருந்து உறையும் இலங்குநீர் வரைப்பும்;**
**வண்ணமும் சுண்ணமும் தண்நறும் சாந்தமும்**
**பூவும் புகையும் மேவிய விரையும்**
**பகர்வனர் திரிதரு நகர வீதியும்;**
**பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்**
**கட்டு நுண்வினைக் காருகர் இருக்கையும்;**
**தூசும் துகிரும் ஆரமும் அகிலும்**
**மாசு அறு முத்தும் மணியும் பொன்னும்**
**அருங்கல வெறுக்கையோடு அளந்துகடை அறியா**
**வளம்தலை மயங்கிய நனந்தலை மறுகும்;**
**பால்வகை தெரிந்த பகுதிப் பண்டமொடு**
**கூலம் குவித்த கூல வீதியும்;**
**காழியர், கூவியர், கள்நொடை யாட்டியர்,**

மீன்விலைப் பரதவர், வெள்உப்புப் பகருநர்,
பாசவர், வாசவர், மைந்நிண விலைஞரோடு
ஓசுநர் செறிந்த ஊன்மலி இருக்கையும்;
கஞ்ச காரரும், செம்பு செய்குநரும்,
மரம் கொல் தச்சரும், கருங்கைக் கொல்லரும்,
கண்ணுள் வினைஞரும் மண்ணீட்டாளரும்,
பொன்செய் கொல்லரும் நன்கலம் தருநரும்,
துன்ன காரரும், தோலின் துன்னரும்,
கிழியினும் கிடையினும் தொழில் பல பெருக்கிப்
பழுதுஇல் செய்வினைப் பால் கெழு மாக்களும்;
குழலினும் யாழினும் குரல்முதல் ஏழும்
வழு இன்று இசைத்து, வழித்திறம் காட்டும்
அரும் பெறல் மரபின் பெரும்பாணிருக்கையும்;
சிறுகுறும் கைவினைப் பிறர்வினை யாளரொடு
மறுவின்றி விளங்கும் மருவூர்ப் பாக்கமும்;

[வேயா மாடமும்-கூரையில்லாத இடமாகிய நிலா முற்றமும்; வியன் கல இருக்கையும்-நிறைந்த அணிகலங்களையுடைய அறையும்; மான் கண் கால் அதர்-மானின் கண்போல வடிவமைந்த சாளரங்களை யுடைய; மாளிகை இடங்களும்-மாளிகையாகிய இடங்களும்;

கயவாய் மருங்கின்-புகார் நகரத்திற்குப் பக்கமாகவுள்ள; காண் போர்த் தடுக்கும்-தம்மைக் கண்டோர் கண்களை, அப்பால் வேறொரு பொருள்மேற் செல்ல விடாமல் தடுக்கின்ற; பயன் அறவு அறியா-வளம் குறைவு பட்டறியாத; யவனர் இருக்கையும்-யவனர்களின் இருப்பிடங்களும்,

கலம் தரு திருவின்-கப்பலிற் கொண்டு வரும் செல்வத்தின் பொருட்டு; புலம் பெயர் மாக்கள்-தமது நாட்டை விட்டு நீங்கி வந்த வெளி நாட்டு மக்கள்; கலந்திருந்து உறையும்-பலரும் ஒன்றாகக்கூடியிருந்து வாழுகின்ற; இலங்கு நீர் வரைப்பும்-விளக்கமுடைய கடற்கரை இடங்களும்;

வண்ணமும்-குங்குமக் குழம்பு முதலியனவும்; சுண்ணமும்-பூசப்படுகின்ற வாசனைப் பொடிகளும்; தண் நறும் சாந்தமும்-குளிர்ந்த நறுமணமுள்ள சந்தனமும்; பூவும் புகையும்-பலவகைப் பூக்களும், புகைப் பொருள்களும்; மேவிய விரையும்-ஒன்றுக்கொன்று பொருத்தமாகக் கலந்த பிற வாசனைப் பொருள்களும்; பகர்வனர் திரிதரு-விற்பவர்கள் எங்கும் திரிகின்ற; நகர வீதியும்-நகரத் தெருக்களும்;

பட்டினும் மயிரினும் பருத்தி நூலினும்-பட்டு நூலாலும் உரோமத்தாலும், பருத்தி நூலாலும்; கட்டு நுண்வினை—அழகிய துணிகளைக் கட்டி நெய்கின்ற; காருகர் இருக்கையும்-பட்டு சாலியர் இருக்குமிடங்களும்;

தூசும் துகிரும் ஆரமும் அகிலும்—பட்டும், பவளமும், சந்தனமும், அகிற் கட்டையும்; மாசு அறு முத்தும் மணியும் பொன்னும்-குற்றமற்ற முத்தும், மற்ற மணிகளும் பொன்னும், அருங்கல வெறுக்கையோடு—அரிய ஆபரணங்களாகிய செல்வமும் என்றவைகளோடு அளந்து கடை அறியா—எண்ணி எல்லை காண முடியாத; வளம் தலை மயங்கிய—செல்வமெல்லாம் இவை இவை என்று பிரித்தறிய முடியாமற் குவிந்து கிடந்த; நனம் தலை மறுகும்-பரந்த இடத்தையுடைய வீதிகளும்;

பல்வகை தெரிந்த-வேறு வேருகப் பிரிக்கப் பட்ட; பகுதிப் பண்டமொடு-பல பண்டங்களோடு; கூலம் குவித்த—நெல், புல்முதலான பலவகைத் தானியங்கள் குவிக்கப் பட்ட; கூல வீதியும்-பல சரக்குக் கடைத் தெருவும்;

காழியர்—பிட்டு வாணிகரும்; கூவியர்-அப்ப வாணிகரும்; கள் நொடை யாட்டியர்—கள்ளை விற்கும் வலைச்சியரும்; மீன் விலைப்பரதவர்—மீனை விற்கின்ற வலையர்களும்; வெள் உப்புப் பகருநர்—வெள்ளிய உப்பை விற்கும் உப்பு வாணிகரும்' பாசவர்—வெற்றிலை விற்போரும்; வாசவர்—பாக்கு, கற்பூரம் முதலான ஐவகை வாசனைப் பொருள்களை விற்போரும்; மை நிண விலைஞரோடு-ஆட்டின் கொழுப்பை விற்போருமாகிய இவர்களோடு; ஓசுநர் செறிந்த-கப்பலோட்டும் மாலுமிகள் நெருங்கிய; ஊன்மலி இருக்கையும்—இறைச்சி மிகுந்த இருப்பிடங்களும்;

கஞ்சகாரரும்—வெண்கலக்கன்னரும்; செம்புசெய்குநரும்-செம்புத் தொழில் செய்வோரும்; மரம் கொல் தச்சரும்-மர வேலை செய்கின்ற தச்சர்களும்; கரும் கைக் கொல்லரும்-வலிய கையினையுடைய கொல்லர்களும்; கண்ணுள் வினைஞரும் - கண்ணைக் கவரும் வேலைப்பாடுள்ள சித்திரக்காரரும்; மண்ணீட்டாளரும்—மண்ணால் பல பொருள்கள் செய்யும் குயவரும்; பொன் செய் கொல்லரும்-பொன்னால் தொழில் செய்கின்ற தட்டாரும்; நன்கலம் தருநரும்-மணிகளால் அணிகலம் செய்கின்ற இரத்தினத் தட்டாரும்; துன்னகாரரும் - தையற்காரர்களும்; தோலின் துன்னரும்-தோல்வேலை செய்பவர்களும்; கிழியினும் — சீலையினும்; கிடையினும் - வெண்டுகளிலும்; தொழில் பல பெருக்கி — பலவகைத் தொழில்களைப் பெருக்கி; பழுது இல் செய்வினை—குற்றமற்ற நுண்ணிய தொழில்களையுடைய; பால் கெழு மாக்களும்-பல வேறு வகைப்பட்ட மக்களும்;

குழலினும் யாழினும்-புல்லாங் குழலிலும், யாழிலும்; குரல் முதல் ஏழும்-குரல் என்னும் இசையை முதலாகவுடைய ஏழு இசைகளையும்; வழு இன்று இசைத்து-குற்றமற இசைத்து; வழித் திறம் காட்டும்-அந்த இசைகள் பிறப்பதற்கு இன்றியமையாத இருபத்தொரு கூறுபாடுகளையும் காட்டக் கூடிய; அரும் பெறல் மரபின்-பெறுதற்கரிய இசை முறைகளை அறிந்த; பெரும்பாண் இருக்கையும்-குழலர், பாணர் முதலான பெரிய இசைகாரர்கள் இருக்குமிடங்களும்; சிறு குறும் கைவினை-சின்னஞ்சிறு கைத்தொழில்களைச் செய்யும்; பிறர் வினையாளரொடு-பிற தொழிலாளர்களோடு; மறு இன்று விளங்கும்-குற்றமின்றி விளங்குகின்ற; மருவூர்ப் பாக்கமும்--;]

## (40–58)

இனிப் **பட்டினப் பாக்கத்தின்** சிறப்பைப் பார்ப்போம். அரசன் வசிக்கும் அரண்மனை இருப்பது இவ்விடத்தில்தான்; தேரோடுவதும் இவ்வீதிகளில். இங்கே பெருங்குடியில் பிறந்த வாணிகர்களின் மாளிகைகள் நிறைந்திருக்கின்றன. அந்தணர்களும், பெருங் குடியானவர்களும், மருத்துவ நூலோரும், சோதிட நூலோரும், முத்துக் கோப்பவர்களும், சங்கு வளையல்களை அறுப்பவரும் அவரவர் தொழிலுக் கேற்ற முறையில் வசிக்கும் வீதிகள் இங்கே இருக்கின்றன. அரசன் புகழைப் பாடும் சூதர், அரச சபையில் நகைவிளைக்கும் நளினக்காரர், கூத்தாடும் விலைமகளிர், குற்றேவல் செய்யும் பெண்கள், பயிற்சி பெற்ற இசைகாரர்கள் என்ற இவர்களெல்லாம் வாழும் இருப்பிடங்களும் இங்கே உண்டு. அரண்மனையைச் சுற்றிலும் குதிரை வீரரும், யானை வீரரும், தேரோட்டுவோரும், காவல் செய்யும் மறவர்களும் வசிக்கிறார்கள். இவர்களல்லாமல் நகரத்தைச் சேர்ந்த பல பெரியோர்களும் பட்டினப் பாக்கத்தில் வாழ்கின்றனர். இப் பட்டினப்பாக்கத்தின் சிறப்பைப் புலவர்கள் நிறையப் பாடியிருக்கிறார்கள்.

### பட்டினப் பாக்கம்

**கோவியன் வீதியும், கொடித்தேர் வீதியும்,**
**பீடிகைத் தெருவும், பெருங்குடி வாணிகர்**
**மாடமறுகும், மறையோர் இருக்கையும்,**
**வீழ்குடி உழவரோடு, விளங்கிய கொள்கை**
**ஆயுள் வேதரும், காலக் கணிதரும்,**
**பால் வகை தெரிந்த பன்முறை இருக்கையும்;**

திருமணி குயிற்றுநர், சிறந்த கொள்கையொடு
அணிவளை போழுநர் அகன்பெரு வீதியும்;
சூதர், மாகதர் வேதாளிகரொடு,
நாழிகைக் கணக்கர், நலம்பெறு கண்ணுளர்,
காவல் கணிகையர், ஆடற் கூத்தியர்,
பூவிலை மடந்தையர் ஏவல் சிலதியர்,
பயில் தொழில் குயிலுவர், பன்முறைக் கருவியர்,
நகை வேழம்பரொடு வகைதெரி இருக்கையும்;
கடும்பரி கடவுநர், களிற்றின் பாகர்,
நெடுந்தேர் ஊருநர், கடுங்கண் மறவர்
இருந்துபுறஞ் சுற்றிய பெரும்பாய் இருக்கையும்;
பீடுகெழு சிறப்பின் பெரியோர் மல்கிய
பாடல்சால் சிறப்பின் பட்டினப் பாக்கமும்;

[கோவியன் வீதியும்-அரசன் வாழும் பெருந் தெருவும்; கொடித் தேர் வீதியும்- கொடி பறக்கும் தேரோடுகின்ற வீதியும்; பீடிகைத் தெருவும்-கடைத் தெருவும்; பெருங்குடி வாணிகர்-பெருங்குடியில் பிறந்தவர்களான வாணிகர்களின் மாளிகைகள் நிரம்பிய வணிக வீதியும்; மறையோர் இருக்கையும்-அந்தணர் இருப்பிடங்களும்;

வீழ்குடி உழவரொடு-யாவரும் விரும்பும் குடியிற் பிறந்த உழவர்களோடு; விளங்கிய கொள்கை-சிறந்த கொள்கைகளையுடைய; ஆயுள் வேதரும்-மருத்துவ நூலோரும்; காலக் கணிதரும்-சோதிட நூலோரும்; பால்வகை தெரிந்த-பலரும் வேறு வேறாகப் பிரிந்துள்ள; பன்முறை இருக்கையும்-இருப்பிடங்களும்;

திருமணி குயிற்றுநர்-முத்துக் கோப்பவர்களும்; சிறந்த கொள்கையொடு- தமக்குச் சிறந்த தொழில் முறையால்; அணிவளை போழுநர்-அழகிய வளையல்களை அறுப்போரும்; அகன் பெரு வீதியும்-வாழ்கின்ற அகன்ற பெரிய தெருக்களும்;

சூதர்-அரசனை நின்று புகழ்வோரும்; மாகதர்-அவனை இருந்து புகழ்வோரும்; வேதாளிகரொடு-வைதாளி என்னும் ஒருவகை ஆட்டத்தை ஆடுவோரும்; நாழிகைக் கணக்கர்-நாழிகை தெரிவிப்போரும்; நலம் பெறு கண்ணுளர்-அழகிய கோலங் கொள்ளுகின்ற கூத்தர்களும்; காவல் கணிகையர்-அரங்கத்தில் ஏறியாடும் விலைமகளிரும், ஆடல் கூத்தியர்-அக்க் கூத்தாடுகின்ற விலை மகளிரும்; ஏவல் சிலதியர்-குற்றேவல் செய்யும் பெண்களும்; பயில் தொழில் குயிலுவர்-தம் தொழிலை நன்கு பயின்ற இசைகாரர்களும்; பன்முறைக் கருவியர்-பலவகை முறைகளுடன் வாசிக்கும் இசைகாரர்களும் (என்றது,

படையிலும், விழாவிலும் இசை கொட்டுகிறவர்களை) நகை வேழம்பரொடு—நகை விளைவிக்கின்ற நளினக்காரர்களோடு; வகை தெரி இருக்கையும்—அவரவர் வகைகள் நன்கு தெரிகின்ற இருப்பிடங்களும்;

கடும்பரி கடவுநர்—விரைந்து செல்லும் குதிரைகளைச் செலுத்தும் குதிரை வீரரும்; களிற்றின் பாகர்—யானை வீரரும்; நெடுந்தேர் ஊருநர்—நெடிய தேர்களை ஓட்டுவோரும்; கடுங்கண் மறவர்—கடுஞ்சினத்தோடு பார்க்கும் கண்ணையுடைய மறவர்களும்; இருந்து புறஞ்சுற்றிய—அரண்மனையைச் சுற்றி யிருக்கின்ற; பெரும்பாய் இருக்கையும்—பெரிய பரந்த இருப்பிடங்களும்;

பீடு கெழு சிறப்பின்—பெருமை வாய்ந்த சிறப்பினையுடைய; பெரியோர் மல்கிய—பெரியோர்கள் திரண்டிருக்கின்ற; பாடல் சால் சிறப்பின்—புலவர்களால் பாடப் பெற்ற சிறப்பினையுடைய; பட்டினப் பாக்கமும்—;

குயிற்றுதல்—கோத்தல்; போழ்தல்—அறுத்தல்; பாய்—பரந்த.]

## (59–75)

மருவூர்ப் பாக்கத்திற்கும் பட்டினப் பாக்கத்திற்கும் இடையே யுள்ள நாளங்காடியில் பெருந்திரளாய் மக்கள் கூடியிருப்பதையும், பண்டங்களைக் கொடுப்பவர் கொள்பவர் செய்யும் ஓசையையும் பார்க்கும்போது, இரண்டுபெரிய மன்னர்கள் போர்புரிவதற்குச் சேருமிடம் போலத் தோன்றுகிறது. இங்கே நாள்தோறும் பகற் சந்தை கூடும். இங்கே யுள்ள மரங்கள் அடர்ந்த சோலையில் அம்மரங்களையே கால்களாகக் கொண்டு கடைகள் கட்டியிருக்கிறார்கள்.

நாளங்காடியில் ஒரு பூதத்தின் பலிபீடம் இருக்கிறது. முன்னொரு காலத்தில் முசுகுந்தன் என்ற சோழ மன்னனுக்குக் காவலாக இருக்கும்படி இந்திரனால் ஏவப்பட்ட ஒரு பூதத்தின் பலிபீடம் இருந்தது என்று ஒரு கதை உண்டு. சித்திரை மாதத்தில் சித்ரா பௌர்ணமி யன்று, பெண்கள் அவரை, துவரை, எள்ளு, பொங்கற் சோறு, பூக்கள் முதலியவைகளைப் படைத்துப் பூஜையிட்டுக் குரவைக் கூத்தாடுகிறார்கள். "சோழ நாட்டில், பசி, நோய், பகைமை என்பன வெல்லாம் நீங்கி, மழையும் செல்வமும் செழித்து, அரசன் நீடூழி வாழ வேண்டு" மென்று வாழ்த்தி, இப்பெண்கள் ஆரவாரத்தோடு கூத்தாடுகிறார்கள்.

## நாளங்காடியில் பெண்கள் பூசையிடுதல்

இருபெரு வேந்தர் முனையிடம் போல
இருபாற் பகுதியின் இடைநிலமாகிய
கடைக்கால் யாத்த மிடைமரச் சோலைக்
கொடுப்போர் ஓதையும் கொள்வோர் ஓதையும்
நடுக்கு இன்றி நிலைஇய நாளங்காடியில்,
சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென
வெற்றிவேல் மன்னற்கு உற்றதை ஒழிக்க எனத்,
தேவர் கோமான் ஏவலின் போந்த
காவல் பூதத்துக் கடைகெழு பீடிகைப்
புழுக்கலும் நோலையும் விழுக்குடை மடையும்
பூவும் புகையும் பொங்கலும் சொரிந்து,
துணங்கையர் குரவையர் அணங்கெழுந்து ஆடிப்
பெருநில மன்னன் இருநிலம் அடங்கலும்
பசியும் பிணியும் பகையும் நீங்கி,
வசியும் வளனும் சுரக்க'' என வாழ்த்தி
மாதர்க் கோலத்து வலவையின் உரைக்கும்
மூதிற் பெண்டிர் ஓதையிற் பெயர;

[இருபெரு வேந்தர் – இரண்டு பெரிய மன்னர்களின்; முனை இடம் போல–போர் செய்வதற்குச் சேரும் இடம் போர்க்களமானாற் போல; இருபால் பகுதியின்-மருவூர்ப் பாக்கம், பட்டினப் பாக்கம் என்ற இரண்டு பகுதிகளுக்கும்; இடைநிலமாகிய-நடுவிடமாகிய; கடைகால் யாத்த–கடைகளுக்குக் கால்களாகக் கட்டப்பட்ட; மிடை மரச்சோலை-நெருங்கிய மரங்களையுடைய சோலையில்; கொடுப்போர் ஓதையும்-பண்டங்களை விலைக்கு விற்பவர்களுடைய ஓசையும்; கொள்வோர் ஓதையும்–அவற்றை வாங்குவோர்களின் ஓசையும்; நடுக்கு இன்றி நிலைஇய–குறைவு படாமல் நிலைபெற்ற; நாளங்காடியில்-பகற் கடைகள் இருக்குமிடத்தில்;

சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென-சித்திரை மாசத்துச் சித்திரை நாளில் நிறைநிலா தோன்றிவிட்டது கண்டு; வெற்றி வேல் மன்னற்கு–வெற்றி கொள்ளும் வேலைப் பிடித்த மன்னனுக்கு; உற்றதை ஒழிக்க என–நேர்ந்த துன்பத்தைப் போக்குவதற்கென்று; தேவர் கோமான் ஏவலின் போந்த-இந்திரனுடைய ஏவலைக் கேட்டு வந்த; காவல்பூதத்து-புகார் நகரத்தைக் காவல் செய்கின்ற பூதத்தினுடைய; கடை கெழு பீடிகை–வாயிலில் அமைந்த பலி பீடிகையில்;

புழுக்கலும்–புழுக்கப்பட்ட அவரை துவரை முதலியனவும்; நோலையும்-எள்ளின் கசிவும்; விழுக்கு உடை மடையும்–கொழுப்பை யுடைய சோறும்; பூவும் புகையும் பொங்கலும்–பூக்களையும், புகைப்

பொருள்களையும், பொங்கற் சோற்றையும்; சொரிந்து–சிந்தி; துணங்கையர் குரவையர்–துணங்கைக் கூத்தையும் குரவைக் கூத்தையும் ஆடினவராகி; அணங்கு எழுந்து ஆடி–மேலும் தெய்வமேறி ஆடி; பெருநில மன்னன் –பெரிய நிலத்தை யாளும் மன்னனின்; இருநிலம் அடங்கலும்–இப்பெரிய உலகம் முழுவதும்; பசியும் பிணியும் பகையும் நீங்கி–பசி, நோய், பகைமை என்பனவெல்லாம் நீங்கப்பெற்று; வசியும் வளனும்–மழையும் செல்வமும்; சுரக்க என வாழ்த்தி–செழிப்பனவாக என்று கூறி வாழ்த்தி; மாதர்க் கோலத்து–கண்டார் விரும்பும் அழகிய கோலத்தோடு; வலவையின் உரைக்கும்–நாணம் இல்லாதவரைப் போலக் கூறுகின்ற; மூதிற் பெண்டிர்–மறக்குடிப் பிறந்த மகளிர்; ஓதையிற் பெயர–ஆரவாரத்தோடு பலியிட்டுப் போக;]

(76–88)

நாளங்காடியில் உள்ள பூதத்தின் பலி பீடத்தில், பெண்கள் இவ்விதம் பூசையிட, வீரர்கள், மற்றொருபுறம் பலியிட்டு வழிபாடு செய்கிறார்கள். மருவூர்ப் பாக்கத்தில் வசிக்கும் மறவர்களும், பட்டினப் பாக்கத்தில் வாழும் படைத் தலைவர்களும் ஒன்றாகக்கூடி, "எங்கள் மன்னனுக்கு, எவ்விதத் தீங்கும் நேராமல் காப்பாயாக" என்று ஆரவாரம் செய்து, பூதத்தை வணங்குகின்றனர். இவர்கள் செய்யும் பலியைப் பார்க்கும் போது, மனதிற்கு அச்ச முண்டாகிறது. கவண் என்னும் கருவியிலிருந்து கல்லை வீசி எறியும் வீரர்களும், பெருங் கூட்டமாகக் கூடி யிருக்கிறார்கள். இவர்களுடைய சுருண்டு கருத்த தலைமயிரையும், சிவந்து சினந்திருக்கும் கண்களையும் பார்ப்பவர்களுக்கு, அச்சத்தால் நடுக்கமுண்டாகும். இவர்கள் தங்கள் கையாலேயே தங்கள் தலையை வெட்டிப் பலி கொடுக்கும் பயங்கர வீரர்கள். "எங்கள் மன்னனைக் காப்பாற்றுவாயாக" என்று வேண்டி இடி முழக்கம் எழும்புவது போல் முரசை அடித்துத் தங்களைத் தாங்களே பலியாகக் கொடுத்தார்கள்.

## நாளங்காடியில் வீரர்கள் பலியிடுதல்

**மருவூர் மருங்கின் மறங்கொள் வீரரும்,**
**பட்டினமருங்கின் படைகெழு மாக்களும்,**
**முந்தச் சென்று முழுப்பலி பீடிகை**
**"வெந்திறல் மன்னற்கு உற்றதை ஒழிக்க" எனப்**
**பலிக்கொடை புரிந்தோர் வலிக்கு வரம்பு ஆக எனக்**

**கல் உமிழ் கவணினர், கழிப்பிணிக் கறைத்தோல்**
**பல்வேல் பரப்பினர், மெய்உறத் தீண்டி**
**ஆர்த்துக் களங்கொண்டோர், ஆர் அமர் அழுவத்துச்**
**சூர்த்துக் கடைசிவந்த சுடுநோக்குக் கருந்தலை,**
**''வெற்றி வேந்தன் கொற்றங் கொள்க'' என**
**நற்பலி பீடிகை நலங்கொள வைத்து, ஆங்கு,**
**உயிர்ப்பலி உண்ணும் உருமுக் குரல் முழக்கத்து,**
**மயிர்க் கண் முரசொடு வான்பலி ஊட்டி;**

[மருவூர் மருங்கின்–மருவூர்ப் பாக்கத்திலுள்ள; மறம் கொள் வீரரும்–ஆண்மை நிறைந்த வீரர்களும்; பட்டின மருங்கின்–பட்டினப் பாக்கத்திலுள்ள; படை கெழு மாக்களும்–படைத் தொழில் வல்ல வீரர்களும்; முந்தச்சென்று–ஒருவர்முன் ஒருவர் முந்தச்சென்று; முழுப் பலி பீடிகை–தங்களைத் தாங்களே வெட்டியிடும் பலியை உண்ணுகின்ற பீடிகையில்; வெம் திறல் மன்னற்கு–மிக்க வலிமை யினையுடைய அரசனுக்கு; உற்றதை ஒழிக்க என–வரும் இடையூறுகளை ஒழிப்பாயாக என்று கூறி; பலிக் கொடை புரிந்தோர்-பலியிடுதலைச் செய்த வீரர்கள்; வலிக்கு வரம்பு ஆக என–வலிமைக்குத் தாங்களே எல்லையாவார்களாக என்று;

கல் உமிழ் கவணினர்–கல்லை வீசி எறிகின்ற கவண் என்னும் கருவியை உடையவராய்; கழி பிணி–தசை சேர்ந்திருக்கின்ற; கறைத் தோல்–கறை படிந்த கேடயத்தோடு; பல் வேல் பரப்பினர்–பல வேற்படை யுடையவராய்; மெய் உறத் தீண்டி–உடலோடு உடல் சேர்ந்து மாறுபட்டு; ஆர்த்து-ஆரவாரித்து; களங்கொண்டோர்–போர்க் களத்தைக் கைக்கொண்ட அவ்வீரர்கள்; ஆர் அமர் அழுவத்து-ஆரவாரம் மிக்க போர்க்களத்தில்; சூர்த்து–பார்ப்பவர்களை அச்ச முறுத்தி; கடைசிவந்த – கடைக் கண் சிவந்திருக்கின்ற; சுடு நோக்குக் கருந்தலை–சுடுவது போன்ற கடும்பார்வையையுடைய தமது கரிய மயிரடர்ந்த தலையை; வெற்றி வேந்தன் கொற்றம் கொள்க என–வெற்றி மிக்க வேந்தன் மேலும் வலிமை பெறுவானாக என்று வேண்டி; நல் பலி பீடிகை–அந்த நல்ல பலி பீடத்தில்; நலம் கொள வைத்து–நன்மை உண்டாவதற்காக வைத்து; ஆங்கு–; உயிர்ப் பலி உண்ணும் உருமுக் குரல் முழக்கத்து–உயிர்ப் பலியை உண்ணுகின்ற இடி போலும் ஓசையால் முழக்கஞ் செய்யும்; மயிர்க் கண் முரசொடு–மயிரையுடைய கண்களைக் கொண்ட முரசத்தை அடித்து; வான் பலி ஊட்டி – அவ்வுயர்ந்த பலியை ஊட்டி; ]

*(89–110)*

இதுவரையில் புகார் நகரத்தின் அமைப்பையும் வாணிகச் சிறப்பையும் பார்த்தோம். பட்டினப் பாக்கத்தில் அரசனுடைய அரண்மனை இருக்கின்றது. அதன் பெருமையைக்

கவனிப்போம். சோழன் கரிகாலனுடைய காலத்தில்தான், புகார் நகரம் இவ்வளவு சிறப்பையும் பெற்றது. சிறு வயதில் ஏற்பட்ட ஒரு விபத்தினால் இவனுடைய கால்கள் நெருப்பில் கருகியதால் இவனுக்குக் கரிகாலன் என்ற பெயர் வந்தது. வெண்ணி என்னுமிடத்தில் நடந்த பெரும்போரில், பாண்டிய சேர அரசர்களை வென்று, சோழ மன்னனின் புகழையும் வலிமையையும் கரிகாலன் நிலைநாட்டினான். அதற்குப் பின், தமிழ் நாட்டில், தனக்குச் சமானமான அரசர் ஒருவரும் இல்லையாகையால், வடநாட்டின் மேல் படை யெடுத்துச் சென்று, அநேகம் வெற்றிகளைப் பெற்று, இமயமலை வரையில் போனான். இமயமலையைத் தாண்ட முடிய வில்லையே என்று கோபம் கொண்டு, அதன் மேல், தன் புலிக் கொடியை நாட்டிவிட்டுத் திரும்பினான். திரும்பி வரும் வழியில் ,வச்சிர நாட்டு அரசன், கரிகாலனுக்கு ஒரு முத்துப்பந்தலைத் திறையாகக் கொடுத்தான். அவன் பகைவனான மகத அரசன், ஒரு கொலு மண்டபத்தைத் திறையாகக் கொடுத்தான். கரிகாலனுடைய நண்பனான அவந்தி மன்னன் தன்னுடைய தோரணவாயிலைப் பரிசாகக் கொடுத்தான். இந்த முத்துப் பந்தரும், கொலு மண்டபமும், தோரண வாயிலும், பொன்னாலும் மணியாலும், செய்த அரிய வேலைப் பாடுகளை உடையவை. இவை சாமானிய தச்சர்களால் செய்யப் பட்டவை யல்ல. முன்னொரு காலத்தில், இம்மூன்று மன்னர்களின், மூதாதையர் செய்த உதவிக்காகத் தெய்வத் தச்சனாகிய மயனால் செய்து கொடுக்கப்பட்டவை. இவைகளை யெல்லாம் புகார் நகரத்திற்குக் கொண்டுவந்து, ஒன்றுசேர்த்து, கண்ணைக் கவரும் ஒரு கொலு மண்டபத்தைக் கரிகாலன் அமைத்தான். இம்மண்டபத்தின் அழகையும், கம்பீரத்தையும் பல புலவர்கள் பாடியிருக்கின்றனர். இந்த மண்டபத்திற்குப் பட்டி மண்டபம் என்று பெயர்.

## சோழன் கரிகாலன் வடநாட்டு அரசரை வென்று திரும்பி, இயற்றிய பட்டி மண்டபம்

**இருநில மருங்கின் பொருநரைப் பெறாஅச்**
**செரு வெம் காதலின் திருமா வளவன்,**
**வாளும் குடையும் மயிர்க்கண் முரசும்**
**நாளொடு பெயர்த்து "நண்ணார்ப் பெறுக, இம்**
**மண்ணக மருங்கின் என் வலிகெழு தோள்" எனப்**
**புண்ணிய திசைமுகம் போகிய அந்நாள்,**

*அசைவுஇல் ஊக்கத்து நசைபிறக்கு ஒழியப்*
*பகை விலக்கியது இப்பயங்கெழு மலையென,*
*இமையவர் உறையும் சிமையப் பிடர்த்தலைக்*
*கொடுவரி ஒற்றிக் கொள்கையிற் பெயர்வோற்கு;*
*மாநீர் வேலி வச்சிர நல் நாட்டுக்*
*கோன்இறை கொடுத்த கொற்றப் பந்தரும்;*
*மகதநல் நாட்டு வாள்வாய் வேந்தன்,*
*பகைபுறத்துக் கொடுத்த பட்டி மண்டபமும்;*
*அவந்தி வேந்தன் உவந்தனன் கொடுத்த*
*நிவந்து ஓங்கு மரபின் தோரண வாயிலும்;*
*பொன்னினும் மணியினும் புனைந்தன வாயினும்,*
*நுண்வினைக் கம்மியர் காணாமரபின;*
*துயர் நீங்கு சிறப்பின் அவர் தொல்லோர் உதவிக்கு,*
*மயன் விதித்துக் கொடுத்த மரபின; இவைதாம்,*
*ஒருங்கு உடன் புணர்ந்து, ஆங்கு, உயர்ந்தோர் ஏத்தும்*
*அரும்பெறல் மரபின் மண்டபம் அன்றியும்;*

இருநில மருங்கின்–பெரியநிலப்பரப்பையுடைய தமிழ்நாட்டில்; பொருநரைப் பெறாஅ–எதிர்த்துப் போர் செய்வாரைப் பெறாது; செருவெம் காதலின்–போர் மேல் எழுந்த மிக்க விருப்பத்தால்; திருமாவளவன்–கரிகால் வளவன்; வாளும் குடையும்–தனதுவாளையும் குடையையும்; மயிர்க்கண் முரசும்–மயிரடர்ந்த கண்களையுடைய முரசத்தையும்; நாளொடு பெயர்த்து–நல்ல நாளிலே போருக்குப் புறப்படச் செய்து; இம்மண்ணக மருங்கின்–இந்நிலவுலகின்: என் வலிகெழு தோள்–வலிமை நிறைந்த எனது தோள்கள்; நண்ணார்ப் பெறுக என–பகைவர்களைப் பெறுவதாக என்று; புண்ணிய திசை முகம் போகிய அந்நாள்–புண்ணிய திசை எனப்படும் வடதிசையில் படையெடுத்துப் போன அந்நாளில்; அசைவு இல் ஊக்கத்து–சோர்தல் இல்லாத நிறைந்த ஊக்கத்தையுடைய; நசை பிறக்கு ஒழிய–போர் மேல் ஒழிந்த விருப்பம் மேற்போகாது பின்னிடும்படி; பகை விலக்கியது–எனக்குப் பகையாய் நின்று என்னை விலக்கியது; இப் பயம் கெழு மலை என–இந்தப் பல நலங்களும் நிறைந்த பெருமலை என்று; இமயவர் உறையும்–தேவர்கள் வாழ்கின்ற; சிமையப் பிடர்த் தலை–இமய மலையின் பிடரியில்; கொடுவரி ஒற்றி–தனது புலிக் கொடியை நாட்டி; கொள்கையிற் பெயர்வோற்கு–தான் கொண்ட போர்க் கொள்கையோடு திரும்பிய அக்கரிகாலனுக்கு;

மாநீர் வேலி வச்சிர நல் நாட்டு–கடலைக் காவலாகவுடைய வச்சிர நாட்டின்; கோன் இறை கொடுத்த–அரசன் கப்பமாகக் கொடுத்த; கொற்றப் பந்தரும்–தனது வெற்றியால் வந்த முத்துப் பந்தரும்;

மகத நல்நாட்டு-மகத நாட்டின்; வாள்வாய் வேந்தன்-வாட் போர் செய்வதில் திறமை வாய்ந்த மன்னன்; பகை புறத்துக் கொடுத்த-தோல்வி அடைந்து பின்னர்த் திறையாகக் கொடுத்த பட்டி மண்டபமும்-அரசன் கொலுவிருக்கும் மண்டபமும்;

அவந்தி வேந்தன்-அவந்தி நாட்டு அரசன்; உவந்தனன் கொடுத்த-மிக்க விருப்பத்தோடு தந்த; நிவந்து ஓங்கு மரபின்-மிக உயர்ந்து விளங்கும் தொழிற் சிறப்பினையுடைய; தோரண வாயிலும்-தோரணத்தையுடைய வாயிலும் (ஆகிய எல்லாம்;)

பொன்னினும் மணியினும் புனைந்தன வாயினும்-பொன்னாலும் மணியாலும் செய்யப்பட்டன ஆயினும்; நுண்வினைக் கம்மியர்-நுட்பமான தொழில்களைச் செய்ய வல்ல தட்டாரால்; காணா மரபின-செய்யப்படாத சிறப்பினையுடைய; (அவை) துயர் நீங்கு சிறப்பின்-துன்பங்கள் நீங்கிய சிறப்பினையுடைய; அவர் தொல்லோர் உதவிக்கு-அவ்வரசர்களின் மூதாதையர் ஓரோர் காலத்தில் செய்தவுதவிக்குக் கைம்மாறாக; மயன் விதித்துக் கொடுத்த-மயன் என்னும் தெய்வத் தச்சனால் செய்து கொடுக்கப்பட்ட; மரபின-சிறப்பினை உடையன: இவைதாம்-; ஒருங்கு உடன் புணர்ந்து-ஒன்றாக ஓரிடத்தில் சேர்ந்து; ஆங்கு-; உயர்ந்தோர் ஏத்தும்-பெரியோரால் புகழப்படுகின்ற; அரும் பெறல் மரபின்-பெறுதற்கரிய சிறப்பினையுடையதாய்க் கட்டப்பட்ட; மண்டபம் அன்றியும்-அப் பட்டி மண்டபத்தை யல்லாமலும்;]

## (111–127)

பட்டினப் பாக்கத்தில் வெள்ளிடை மன்றம், இலஞ்சிமன்றம், நெடுங்கல் மன்றம், பூதசதுக்கம், பாவை மன்றம்—என்ற ஐந்து அற்புதமான தெய்வத் தன்மை பொருந்திய பொது இடங்கள் உண்டு. வெள்ளிடை மன்றம் வியாபாரச் சரக்குகளை அடுக்கி வைக்குமிடம். இம் மன்றத்தில் மூட்டைமூட்டையாகக் கட்டிய சரக்குகள் குவிந்திருக்கின்றன. ஒவ்வொரு மூட்டையின்மேலும் இன்ன சரக்கென்றும், அதன் எடை இன்னதென்றும், அதற்கு உரியவன் இன்னான் என்றும் காட்டக்கூடிய முத்திரைகள் இடப்பட்டிருக்கின்றன. இம்மன்றத்திற்குக் கதவும், தாழும், காவலுமில்லை. இப்படியிருந்தும், ஒரு மூட்டையாவது களவு போவதில்லை. எவனாவது ஒரு திருடன் இவ்விடத்திலிருந்து ஒரு மூட்டையைத் திருடினால், அதைத் தலைமேல் வைத்து, மன்றத்தைச் சுற்றிச் சுற்றி வருவதல்லாமல், அவன் வெளியில் போக முடியாது. இந்த மன்றத்தைக் காக்கும் தெய்வத்தின் சக்தி இது.

அடுத்தாற்போல், இலஞ்சி மண்டபம் இருக்கின்றது. இலஞ்சி என்ருல் குளம். இந்தக் குளத்தில், கூன், குறள், ஊமை, செவிடு, குட்டம் இவைகளால், பிணிபட்டவர் மூழ்கி வணங்கிஞராஞல், இவர்களுடைய நோயெல்லாம் நீங்கி நலம் பெறுவார்கள்.

அதற்கு அப்பால், நெடுங்கல் மண்டபம் இருக்கின்றது. இந்த மண்டபத்தில் நீண்டு ஒளிவீசும் ஒரு குத்துக்கல் உண்டு. இந்தக் கல்லைச் சுற்றி வந்து தொழுதால், பைத்தியம் பிடித்தவர்களும், விஷத்தை உண்டவர்களும், பாம்புவாய்க் கடிப்பட்டோரும், பேய் பிடிக்கப்பட்டவரும் குணமடைவார்கள்.

## வெள்ளிடை மன்றம், இலஞ்சி மன்றம், நெடுங்கல் மன்றம்

வம்ப மாக்கள் தம்பெயர் பொறித்த
கண்ணெழுத்துப் படுத்த எண்ணுப் பல்பொதிக்
கடைமுக வாயிலும், கருந்தாழ்க் காவலும்,
உடையோர் காவலும், ஓரீஇய வாகிக்,
கட்போர் உளரெனின், கடுப்பத் தலையேற்றிக்,
கொட்பினல்லது, கொடுத்தலீயாது
உள்ளுநர்ப் பனிக்கும் வெள்ளிடை மன்றமும் ;
கூனும் குறளும் ஊமும் செவிடும்
அழுகுமெய் யாளரும் முழுகினர் ஆடிப்,
பழுதுஇல் காட்சி நல்நிறம் பெற்று,
வலஞ்செயாக் கழியும் இலஞ்சி மன்றமும்;
வஞ்சம் உண்டு மயல் பகை உற்ருேர்,
நஞ்சம் உண்டு நடுங்கு துயர் உற்ருேர்,
அழல்வாய் நாகத்து ஆர்எயிறு அழுந்தினர்,
கழல்கண் கூளிக் கடுநவைப் பட்டோர்,
சுழல வந்து தொழத்துயர் நீங்கும்
நிழல்கால் நெடுங்கல் நின்ற மன்றமும் ;

[வம்ப மாக்கள்-பிறநாட்டிலிருந்து இங்நாட்டிற்குப் புதியவராய் வந்த மக்கள்; தம்பெயர் பொறித்த-தங்கள் பெயர்களை எழுதிய; கண்ணெழுத்துப் படுத்த-இன்ன சரக்கென்று எழுதியிடப்பட்ட; எண்ணுப் பல்பொதி-எண்களும் குறிக்கப்பட்ட பலவகை மூட்டைகளையுடைய; கடை முகவாயிலும்-பண்டசாலைகளின் கடை வாசற் காவலும்; கருந்தாழ்க்காவலும்-வலிய தாழிட்ட காவலும்; உடையோர் காவலும்-அம்மூட்டைகளுக்கு உரியவரின் காவலும்; ஓரீஇய வாகி-ஆகிய எல்லாக்காவலும் நீங்கப் பெற்று; கட்போர் உளரெனின்-

களவு செய்வோர் உண்டானால்; கடுப்பத்தலை ஏற்றி–கழுத்துக் கடுக்கும் படித் தங்கள் தலையிலே ஏற்றிக் கொண்டு; கொட்பின் அல்லது–அங்குமிங்கும் சுழன்று திரிவதல்லாமல்; கொடுத்தல் ஈயாது–அக்கள்வர் அப்பொருட்களை வெளியில் கொண்டு போகும்படி விடாமல்; உள்ளுநர்ப் பனிக்கும்–களவு செய்வோரை நினைத்தாலும் நடுங்கச் செய்யும்; வெள்ளிடை மன்றமும்–வெளியான இடத்தினையுடைய மன்றமும்;

கூனும் குறளும் ஊமும் செவிடும்–கூனர்களும், குள்ளர்களும், ஊமைகளும், செவிடர்களும்; அழுகு மெய்யாளரும்–தீராத நோயால் அழுகிய உடலை உடையோரும் (ஆகிய இவர்கள்); முழுகினர் ஆடி–நன்கு முழுகிக் குளித்து; பழுது இல் காட்சி–குற்றமில்லாத தோற்றத் தோடு; நன்நிறம் பெற்று–அழகிய நிறத்தையும் பெற்று; வலம் செயாக் கழியும்–அவ்விடத்தை வலப்புறமாகச்சுற்றி வந்து போகின்ற; இலஞ்சி மன்றமும்–தெய்வத்தன்மை பொருந்திய பொய்கையாகிய இலஞ்சி மன்றம் என்னும் இடமும்;

வஞ்சம் உண்டு–பகைவரால் கொடுக்கப்பட்ட மருந்தை உண்டு; மயல் பகை உற்றோர்–பித்தம் பிடித்தவர்கள்; நஞ்சம் உண்டு–நஞ்சை அறியாமல் உண்டு; நடுங்கு துயர் உற்றோர்–நடுக்கந்தரும் துன்பத்தை அடைந்தோர்; அழல்வாய் நாகத்து–தீயைப் போன்ற நச்சுவாயையுடைய பாம்பினது; ஆர் எயிறு அழுந்தினர்–கூரிய பற்களால் கடிக்கப் பட்டவர்; கழல் கண் கூளிக் கடுநவைப் பட்டோர்–பிதுங்கிய கண்களையுடைய பேயினால் கொடிய துன்பத்தை அடைந்தோர் (ஆகிய இவர்கள்); சுழல வந்து தொழ–சுற்றி வந்து வணங்கிய அளவிலே; துயர் நீங்கும்–தமது துன்பங்கள் நீங்கப் பெறுகின்ற; நிழல்கால் நெடுங்கல்–ஒளி வீசும் குத்துக்கல்; நின்ற மன்றமும்–நிற்கின்ற மன்றமும்;]

(128–138)

அதன் பிறகு, நான்கு பாதைகள் கூடும் சதுக்கத்தில் ஒரு பூதம் இருக்கின்றது. கொடிய பாவங்களைச் செய்யும் மக்களை இந்தப் பூதம் தன்னுடைய பாசக் கயிற்றில் கட்டி அடித்து உண்ணும். போலித் துறவியாக வேடம் போடுகிறவர்களையும், கற்பில்லாத பெண்களையும், அரசனுக்குக் கேடு விளைக்கும் அமைச்சர்களையும், பிறருடைய மனைவியரை விரும்புவோரையும், பொய்ச்சாட்சி சொல்லுவோரையும், புறங்கூறி நடப்போரையும் தன் பாசக்கயிற்றில் கட்டி விழுங்குவேன் என்று ஊரெங்கும் கேட்கும்படி இந்தப் பூதம் ஆரவாரம் செய்து கொண்டிருக்கும். புகார் நகரம் நான்கு காதப்

பரப்பு உடையது. சுமார் பத்து மைல் சுற்றளவு என்று சொல்லலாம். இந்த நகரத்தில் மேற்சொன்ன கொடிய பாவங்களைச் செய்வோர், பிழைத்திருக்கவே முடியாது.

இதற்கு அப்பால், ஒரு பாவை மன்றம் இருக்கின்றது. இந்த மன்றத்தில் ஒரு பொம்மை உண்டு. இந்தப் பதுமை, வாய் திறந்துபேசாது. ஆனால், அரசன் செங்கோல் முறை தவறி நடந்தாலும், நீதி மன்றத்தில் நீதி செலுத்துவோர் ஒருதலைச் சார்பாகத் தீர்ப்புச் சொன்னாலும், இந்தப் பதுமையினுடைய கண்களிலிருந்து கண்ணீர் வடியும். குற்றம் செய்பவர்களைத் தண்டிக்க அரசன் இருக்கின்றான். ஆனால் அரசனும், அவனைச் சேர்ந்த நியாயாதிபதிகளும் நீதி முறையிலிருந்து தவறினால், அவர்களைத் தண்டிப்பதற்கு எவருமில்லை. இருந்தபோதிலும் இந்தப் பாவையின் அழுகையால், அரசன் நீதி தவறி விட்டான் என்று எல்லோருக்கும் தெரிந்து விடும். இந்தப் பயத்தினாலே அரசன் செங்கோல் முறை தவறாமல் ஆட்சி செய்தான்.

### பூத சதுக்கமும், பாவை மன்றமும்

**தவம் மறைந்து ஒழுகும் தன்மையிலாளர்,**
**அவம் மறைந்து ஒழுகும் அலவைப் பெண்டிர்,**
**அறைபோகு அமைச்சர், பிறர் மனை நயப்போர்,**
**பொய்க்கரி யாளர், புறங்கூற்றாளர் என்**
**கைக்கொள் பாசத்துக் கைப்படுவோர்'' எனக்**
**காதம் நான்கும் கடுங்குரல் எடுப்பிப்,**
**பூதம் புடைத்து உணும் பூதசதுக்கமும்;**
**அரைசுகோல் கோடினும், அறங்கூறு அவையத்து**
**உரை நூல் கோடி ஒருதிறம் பற்றினும்,**
**நாவொடு நவிலாது நவைநீர் உகுத்துப்,**
**பாவை நின்று அழூஉம் பாவை மன்றமும்,**

[தவம் மறைந்து ஒழுகும்-தவவேடத்தில் மறைந்து தவமில்லாமல் பொய் ஒழுக்கத்தையுடைய; தன்மையிலாளர்-நல்ல தன்மையில்லாதவர்; அவம் மறைந்து ஒழுகும் அலவைப் பெண்டிர்-தீய ஒழுக்கத்தில் மறைந்து ஒழுகும் கற்பில்லாத பெண்களும்; அறைபோகு அமைச்சர்-அரசனுக்குக் கேடு உண்டாக்குகின்ற அமைச்சர்களும்; பிறர்மனை நயப்போர் - பிறருடைய மனைவியரை விரும்புவோரும்; பொய்க்கரியாளர் பொய்ச் சாட்சிக்காரரும்; புறங்கூற்றாளர் - புறங்கூறித் திரிகிறவர்களும்; (ஆகிய இவர்கள்) என் கைக்கொள் பாசத்து - என் கையில் கொண்டிருக்கிற இப்பாசக் கயிற்றில்

கைப்படுவோர் என – அகப்படுவோராவர் என்று; காதம் நான்கும்–நான்கு காதமளவும்; கடுங்குரல் எடுப்பி – மிகுந்த முழக்கத்தை உண்டு பண்ணி; பூதம் புடைத்து உணும்–அத்தீயவர்களைப் பூதம் அடித்துத் தின்னுகின்ற; பூத சதுக்கமும் – பூதம் நிற்கின்ற நாற்சந்தியும்;

அரைசு கோல் கோடினும்–அரசன் செங்கோல் முறை தவறினாலும்; அறம்கூறு அவையத்து-வழக்கு முறைகளைக் கூறுகின்ற நீதி மன்றத்தில் உள்ளார்; உரை நூல் கோடி–பெரியோர் கூறிய நூல் முறைமையில் மாறுபட்டு; ஒரு திறம் பற்றினும்–ஒருதலைச் சார்பாகத் தீர்ப்புக்கூறினும்; நாவொடு நவிலாது–தன் நாவினால் வெளிப்படக் கூறாமல்; நவைநீர் உகுத்து–துன்பந்தரும் கண்ணீரைச் சிந்தி; பாவை நின்று அழூஉம்–பதுமை நின்று அழுகின்ற; பாவை மன்றமும்–பாவை மன்றம் எனப்படும் தெய்வ நிலையமும்;]

## (139–156)

இந்திர விழாவைக் கொண்டாட வேண்டிய ஏற்பாடுகள் நடந்தன. இந்த விழா, இருபத்தெட்டுத் தினங்கள் நடைபெறும். மேற்சொன்ன ஐந்து மன்றங்களிலும் பலிகளையிட்டுப் பூசை செய்தார்கள். வச்சிரக் கோட்டத்தில் இருந்த முரசை ஒரு யானையின் மேல் ஏற்றி, இந்திரனுடைய யானையாகிய ஐராவதத்திற்கு அமைந்த கோவிலுக்குக் கொண்டு போய் முரசையடித்து, விழாத் தொடங்கிய செய்தியை ஊரெங்கும் தெரிவித்தார்கள். நகர வீதிகளெல்லாம், அலங்கரிக்கப்பட்டன. ஊரிலுள்ள பெரிய மாளிகைகளின் திண்ணைகளில், வயிரத்தாலும் பவளத்தாலும் செய்யப்பட்ட திரண்ட தூண்கள் விளங்கின. மாளிகைகளின் வாயில்களில், மகரதோரணங்கள் தொங்கின. வீதிகள் தோறும், தண்ணீர் நிறைந்த பொற்குடங்களும், பாலிகைப் பொருள்களும், பதுமை விளக்குகளும், பொன்னால் செய்த கொடிகளும், வெண்சாமரையும், நிறைந்திருந்தன. வாசனைப் பொருள்களின் நறுமணம் எங்கும் வீசிற்று. இவ்விதமாகப் புகார் நகரத்தில் இந்திர விழாத் தொடங்கிற்று.

## விழாவுக்கு, நகர் அலங்காரம்

**மெய்வகை உணர்ந்த விழுமியோர் ஏத்தும்**
**ஐவகை மன்றத்தும் அரும்பலி உறீஇ;**
**வச்சிரக் கோட்டத்து மணம் கெழு முரசம்,**

**கச்சை யானைப் பிடர்த்தலை ஏற்றி,**
**வால்வெண் களிற்றரசு வயங்கிய கோட்டத்துக்**
**கால்கோள் விழாவின் கடைநிலை சாற்றி,**
**தங்கிய கொள்கைத் தருநிலைக் கோட்டத்து**
**மங்கல நெடுங் கொடி வானுற எடுத்து,**
**மரகத மணியொடு, வயிரம் குயிற்றிய**
**பவளத் திரள்கால் பைம்பொன் வேதிகை**
**நெடுநிலை மாளிகைக் கடைமுகத்து யாங்கணும்,**
**கிம்புரிப் பகுவாய்க் கிளர்முத்து ஒழுக்கத்து,**
**மங்கலம் பொறித்த மார வாசிகைத்**
**தோரணம் நிலைஇய, தோம்அறு பசும்பொன்**
**பூரண கும்பத்துப் பொலிந்த பாலிகை,**
**பாவை விளக்குப், பசும்பொன் படாகை,**
**தூமயிர்க் கவரி, சுந்தரச் சுண்ணத்து,**
**மேவிய கொள்கை வீதியில் செறிந்து, ஆங்கு—**

[மெய்வகை உணர்ந்த - உண்மைப் பொருள்களை நன்கறிந்த; விழுமியோர் ஏத்தும் - பெரியோரால் புகழப்படுகின்ற; ஐவகை மன்றத்தும் – ஐந்து வகையான மன்றங்களிலும்; அரும்பலி உறீஇ– அரிய பூசைகளைச் செய்து; வச்சிரக் கோட்டத்து- இந்திரனுடைய வச்சிராயுதம் நிற்கும் வச்சிரக் கோட்டத்திலுள்ள; மணம் கெழு முரசம் – விழாவுக்குரிய முரசத்தை; கச்சையானைப் பிடர்த்தலை ஏற்றி– கச்சுக் கயிறு கட்டிய யானையின் பிடரியிலே ஏற்றி வைத்து; வால் வெண் களிற்றரசு - ஒளி பொருந்திய வெண்ணிறமான யானைகளின் அரசனாகிய ஐராவதம்; வயங்கிய – விளங்குகின்ற; கோட்டத்து - கோயிலில்; கால்கோள் விழாவின் கடைநிலை சாற்றி – தொடங்கப் பட்ட இந்திரவிழாவின் முடிவை முரசையடித்துச் சொல்லி; தங்கிய கொள்கை–நிலவுலகில் வந்து தங்கிய சிறப்பையுடைய; தருநிலைக் கோட்டத்து–கற்பகமரம் நிற்கும் கோயிலில்; மங்கல நெடும் கொடி மங்கலச் சிறப்புடைய நீண்ட கொடியை; வான் உற எடுத்து- வானத்தை யளாவும்படி எடுத்துக் கட்டி;

மரகத மணியொடு – மரகத மணியுடன்; வயிரம் குயிற்றிய – வயிரத்தையும் பதித்த; பவளத்திரள்கால் – பவளத்தால் செய்யப் பட்ட திரண்ட தூண்களை யுடைய; பைம்பொன் வேதிகை – பசுமை யான பொன்னால் செய்யப்பட்ட திண்ணையையுடைய; நெடுநிலை மாளிகை – நீண்ட நிலைகளையுடைய மாளிகைகளின்; கடைமுகத்து யாங்கணும்–கடை வாசல்கள் தோறும்; கிம்புரிப் பகுவாய் கிளர் முத்து ஒழுக்கத்து – பூண் கட்டிய பிளந்த வாயிலிருந்து புறப்பட்டு வரும் முத்துக்களின் மாலைகளை உடைய; மங்கலம் பொறித்த–எட்டு

வகை மங்கலப் பொருள்களும் எழுதப்பட்ட; மகரவாசிகைத் தோர ணம் – வாசிகை வடிவமாக வளைவுடன் செய்யப்பட்ட மகரதோர ணங்கள்; நிலைஇய – நிலை பெற்ற; (அதாவது, வாயில்தோறும் இத்தகைய மகர தோரணங்கள் இருந்தன; அவற்ருேடு) தோம் அறு பசும் பொன் – குற்றமில்லாத பசும் பொன்ஞல் ஆகிய; பூரண கும்பத்து – நிறை குடங்களுடன்; பொலிந்த பாலிகை – முளைத்து விளங்குகின்ற பாலிகைப் பொருள்களும்; பாவை விளக்கு – பொம் மைகள் தாங்கிநிற்கும் பாவை விளக்குக்களும்; பசும்பொன் படாகை– பசிய பொன்ஞல் செய்யப்பட்ட கொடியும்; தூமயிர்க் கவரி–தூய் மையான கவரி மயிரால் செய்யப்பட்ட வெண்சாமரையும்; சுந்தரச் சுண்ணத்து – அழகிய வாசனைப் பொடிகளுடன்; மேவிய கொள்கை– பொருந்தியிருக்கும் சிறப்பினையுடைய; வீதியில் – பெருந்தெருவில்; செறிந்து – நிறைந்து; ஆங்கு – பலி இட்ட அப்பொழுதே; ]

(157–168)

நகர் அலங்காரமானபின், இந்திரனுக்கு நீராட்டும் வைபவம் தொடங்கிற்று. அரசனுடைய அவைக் களத்தில், முதன்மையாக இருக்கும் 'ஐம்பெருங்குழு' என்று சொல்லப்பட்ட அமைச்சர், புரோகிதர், சேஞதிபதியர், தூது வர், ஒற்றர், ஆகிய இவர்களும், அரசனுடைய பரிவாரத்தைச் சேர்ந்த 'எண்பேராயம்' என்று சொல்லப்பட்ட கணக்கன், சர்வாதிகாரி, பொக்கிஷதாரி, வாயிற்காப்போன் ஜனப்பிரதி நிதி, படைத்தலைவன், யானைத்தலைவன், குதிரைத்தலைவன், ஆகிய இவர்களும், இளவரசரும், வணிக மக்களும், குதிரைப் பாகரும், யானைப் பாகரும், தேர்ப்பாகரும் ஆகிய எல்லோரும் ஒன்ருய்ச் சேர்ந்து, அரசனை வாழ்த்திக் காவிரி நதிக்குச் சென் றனர். பொன்ஞலான குடங்களில், காவிரியின் சங்கமத்துறை யிலிருந்து, புண்ணியத் தீர்த்தத்தை எடுத்து, அந்நீரால் இந்தி ரனைக் குளிப்பாட்டிஞர்கள். உலக மக்கள் பார்த்து மயங்கும் படியாகவும், தேவர்கள் வியக்கும் படியாகவும் இருந்தது, இந்தக் காட்சி.

## இந்திரனை நீராட்டுதல்

**ஐம்பெரும் குழுவும், எண்பேராயமும்,**
**அரசகுமரரும், பரத குமரரும்,**
**கவர் பரிப் புரவியர் களிற்றின் தொகுதியர்,**
**இவர் பரித் தேரினர், இயைந்து ஒருங்கு ஈண்டி,**

"அரைசு மேம்படீஇய அகனிலை மருங்கில்,
உரைசால் மன்னன் கொற்றம் கொள்க," என,
மாஇரு ஞாலத்து, மன்னுயிர் காக்கும்,
ஆயிரத்தோ ரெட்டு அரசுதலைக் கொண்ட
தண்நறும் காவிரித் தாதுமலி பெருந்துறைப்
புண்ணிய நன்னீர் பொற்குடத் தேந்தி,
மண்ணகம் மருள், வானகம் வியப்ப,
விண்ணவர் தலைவனை விழுநீர் ஆட்டி;

[ஐம்பெருங் குழுவும்–அரசன் அவைக்களத்தில் இருப்போராகிய ஐவகையான பெரியோர் கூட்டமும்; எண்பேர் ஆயமும்–அரசனுக்குத் துணைபுரியும் எட்டு வகையான பெரியோர் கூட்டமும்; அரச குமரரும்–இளவரசர்களும்; பரத குமரரும்–வணிகமக்களும்; கவர் பரிப்புரவியர்–நிலத்தைக் கவர்ந்து செல்லும் குதிரைகளையுடையவராய்; களிற்றின் தொகுதியர்–யானைக்கூட்டத்தையுடையவராய்; இவர் பரித் தேரினர்–எழுந்து விரைந்து செல்லும் தேரினையுடையவராய்; இயைந்து ஒருங்கு ஈண்டி–தம்முள் சேர்ந்து ஒன்றுக்கத்திரண்டு;

அகனிலை மருங்கில்–அகன்று நிலைபெற்ற இவ்வுலகில்; அரைசு மேம்படீஇய–தமது அரசியல் மேம்பட வேண்டி; உரைசால் மன்னன்–புகழ் மிகுந்த வேந்தன்; கொற்றம் கொள்க என–வெற்றி பெறுவானாக என்று கூறி; மா இரு ஞாலத்து–மிகப்பெரிய இவ்வுலகத்து; மன் உயிர் காக்கும்–நிலைபெற்ற உயிர்களைக் காக்கின்ற; ஆயிரத்து ஒரெட்டு அரசுதலைக் கொண்ட–ஆயிரத்தெட்டு அரசர்கள் முன்னொரில் தம் தலையில் சுமந்து கொண்ட சிறப்பினையுடைய; தண் நறும் காவிரித் தாதுமலி பெருந்துறை–குளிர்ந்த மணமுடைய காவிரியாற்றின், பூந்தாது நிறைந்த பெரிய சங்கமத்துறையில்; புண்ணிய நன்னீர்–அப்புண்ணியத் தீர்த்தத்தை; பொன் குடத்து ஏந்தி–பொன்னாலான குடங்களில் எடுத்து; மண்ணகம் மருள–உலகில் உள்ளார் பார்த்து மயங்கும்படியாகவும்; வானகம் வியப்ப–வானத்திலுள்ளார் வியக்கவும்; விண்ணவர் தலைவனை–இந்திரனை; விழுநீர் ஆட்டி–அப் புண்ணிய நீரில் குளிப்பாட்டி;

படீஇய—படுவதற்காக]

*(169–188)*

புகார் நகரத்திலுள்ள எல்லாக் கோயில்களிலும் மடங்களிலும், அரண்மனையிலும், தெருக்களிலும், விழாவின் முழக்கம் நிறைந்திருக்கின்றது. எல்லா மதத்தினரும்,

சமய வேறுபாடில்லாமல், இந்திர விழாவைக் கொண்டாடினர். தற்காலத்தில், விழாவென்ருல் ஒரு சமயத்தைச் சேர்ந்த மக்களுக்கும், மற்றசமயத்தைச் சேர்ந்தவர்களுக்கும் சண்டையும், சச்சரவும் ஏற்படும் ஒரு சந்தர்ப்பமாக முடிகிறது. பண்டைக்காலத்துத் தமிழ் மக்களின் விழாக்கள் இவ்விதமில்லை. விழா என்ருல், எல்லா மக்களும் சேர்ந்து, கொண்டாடும் ஒரு சிறப்பான நிகழ்ச்சி. புகார் நகரத்தில் இந்திரவிழா எப்படி நடைபெற்றது என்று பார்ப்போம். சிவன் கோயில், முருகன் கோயில், பலராமன் கோயில், விஷ்ணு கோயில் என்ற இவைகளிலெல்லாம் ஓமம் வளர்த்துக் கொண்டாடினுர்கள். இவை யல்லாமல் மற்ற கோயில்களில், அவரவருடைய முறைப்படிக் கொண்டாடினுர்கள். புத்தர், சமணர் ஆகியவர்களின் பள்ளிகளிலும், மடங்களிலும், ஏராளமான கூட்டங்கள் நிறைந்து புராணங்களையும் நீதி நூல்களையும் வாசிப்பதைக் கேட்டார்கள். அரசனுடைய அரண்மனையிலும் விழாக் கொண்டாட்டம் சிறப்பாக நடை பெற்றது. இந்த மகிழ்ச்சியான நாளில் எல்லா மக்களும் கலந்து மகிழ வேண்டுமென்று, சிறையில் அடைக்கப்பட்ட பகைவர்களையுங்கூட அரசன் விடுதலை செய்து விட்டான். பழந்தமிழர் இசை ரசிகர்கள் ஆதலால், யாழ் முதலிய பல்வித இசைக் கருவியாளரும், வாய்ப் பாட்டில் வல்ல பாணர்களும் இனிமையான இசை வகைகளை நகர் எங்கும் எழுப்பினுர்கள். இராப்பகலாகச் சிறிய தெருக்களிலும், தேரோடும் பெரிய வீதிகளிலும், முரசடிக்கும் ஓசையால், நகரத்து மக்கள் தூங்கவுமில்லை.

## நகரெங்கும் விழாக் கொண்டாட்டம்

**பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்,**
**அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்,**
**வால்வளை மேனி வாலியோன் கோயிலும்,**
**நீலமேனி நெடியோன் கோயிலும்,**
**மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்**
**மாமுது முதல்வன் வாய்மையின் வழாஅ**
**நான் மறை மரபின் தீ முறை ஒருபால் ;**
**நால்வகைத் தேவரும், மூவறு கணங்களும்,**
**பால்வகை தெரிந்த பகுதித் தோற்றத்து**
**வேறுவேறு கடவுளர் சாறு சிறந்து ஒருபால் ;**
**அறவோர் பள்ளியும், அறன் ஓம்படையும்,**

புறநிலைக் கோட்டத்துப் புண்ணியத் தானமும்,
திறவோர் உரைக்கும் செயல் சிறந்து ஒருபால் ;
கொடித்தேர் வேந்தனொடு கூடா மன்னர்
அடித்தளை நீக்க அருள் சிறந்து ஒருபால்,
கண்ணுளாளர், கருவிக்குயிலுவர்,
பண்யாழ்ப் புலவர், பாடற் பாணரொடு
எண் அரும் சிறப்பின் இசை சிறந்து ஒருபால் ;
முழவுக் கண் துயிலாது முடுக்கரும் வீதியும்
விழவுக் களி சிறந்த வியலுள்; ஆங்கண்

[பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும் – பிறவாத உடலை யுடைய பெரியவனாகிய சிவபிரான் கோயிலிலும்; அறுமுகச்செவ்வேள் அணிதிகழ் கோயிலும் – ஆறுமுகத்தையுடைய முருகனின் அழகு விளங்குகின்ற கோயிலிலும் ; வால் வளை மேனி – ஒளி பொருந்திய சங்குகளைப் போல வெள்ளை நிறமுடைய, வாலியோன் கோயிலிலும்– (பலராமன் கோயிலிலும்) நீலமேனி நெடியோன் கோயிலும் – நீல நிறமான திருமாலின் கோயிலிலும் ; மாலை வெண்குடை–முத்து மாலை அணிந்த வெண் கொற்றக் குடையை உடைய ; மன்னவன் கோயிலும் – அரசன் அரண்மனையிலும் ; மாமுது முதல்வன்–மிக்க முதுமையை யுடைய உலக முதல்வனாகிய பிரமனின் ; வாய்மையின் வழாஅ – உண்மை மொழியினின்றும் பிறழாத ; நான் மறை மரபின் – நான்கு வேதங்களின் முறையிலேயே ; தீ முறை ஒரு பால்– தீ வளர்க்கும் அறமுறைகள் ஒரு பக்கம் நடக்க ;

நால்வகைத் தேவரும் – நான்கு வகையான தேவர்களும் ; மூஅறு கணங்களும் – பதினெட்டு வகைத் தேவர் கூட்டங்களும் ; பால்வகை தெரிந்த – வேறுபாட்டு வகைகள் புலப்படக்கூடிய ; பகுதித் தோற்றத்து – பகுத்து வைக்கப்பட்ட தோற்றத்தையுடைய; வேறு வேறு கடவுளர் ; – பல வேறு தேவர்களின் ; சாறு சிறந்து ஒரு பால்– திருவிழா ஒரு பக்கம் சிறப்பாக நடைபெற ;

அறவோர் பள்ளியும் – புத்தர் பள்ளிகளிலும் ; அறன் ஓம்படையும்– தருமத்தைக் கற்பிக்கும் இடங்களிலும்; புற நிலைக் கோட்டத்து– புறம்பாக உள்ள திருக்கோயில்களாகிய ; புண்ணியத் தானமும் – மற்றுமுள்ள புண்ணிய இடங்களிலும்; திறவோர் உரைக்கும் செயல்– நூல் வல்லோர் கூறும் அறவுரைகள் ; சிறந்து ஒரு பால் - ஒரு பக்கம் சிறப்பாகச் சொல்லப்பட ;

கொடித்தேர் வேந்தனோடு கூடா மன்னர் - கொடி பறக்கும் தேரையுடைய மன்னனோடு பொருந்தாத பகை வேந்தரின் ; அடித்

தளை நீக்க - அடிகளில் இடப்பட்ட விலங்குகளை நீக்குவதற்கு; அருள் சிறந்து ஒருபால் - ஒரு பக்கம் அரசன் அருள் சிறக்கப் பெற்று;

கண்ணுளாளர் - பெரும் பாணர் என்னும் இசைகாரரும்; கருவிக் குயிலுவர் - தோலால் செய்யப்பட்ட இசைக் கருவியை இசைப்போரும்; பண்யாழ்ப் புலவர் - இசையின் பண்களை யாழில் வைத்துப் பாடிக் காட்ட வல்லவரும்; பாடல் பாணரொடு - வாய்ப் பாட்டில் வல்ல பாணர்களோடு; எண் அரும் சிறப்பின் இசை சிறந்து ஒரு பால் - எண்ணுதற்கரிய சிறப்பினையுடைய இசைகளை எழுப்பி ஒரு பக்கம் சிறக்க;

முழவுக் கண் துயிலாது - முழவினுடைய கண்கள் ஓய்வு பெருமல்: முடுக்கரும் - சிறிய தெருக்களிலும்; வீதியும் - தேரோடும் பெரிய வீதிகளிலும்; விழவுக்களி சிறந்த - விழாக் கொண்டாட்டம் சிறப்புற்ற; வியலுள் ஆங்கண் - அகன்ற ஊரிடத்தில்;

ஓம்படை - பாதுகாப்பு; அறத்தைப் பாதுகாக்குமிடம் அறனோம் படை. விழாக் கொண்டாட்டத்தின் மகிழ்ச்சியினாலே காவலில் வைக்கப்பட்ட பகைவர்களை அரசன் விடுதலை செய்தான். கண்ணுளாளர் - இசைகாரர். வியலுள் - அகன்ற ஊர்.]

## (189–201)

நகர வீதிகளில் வேடிக்கை பார்த்துக் கொண்டு, இளைஞர்கள் விலை மாதர்களோடு திரிகிறார்கள். தம் காதலரைப் பிரிந்த பெண்கள், துக்கத்தில் மூழ்கித் தம் வீட்டை விட்டு வெளிவராமல் இருக்கிறார்கள். மாதவிக்கு இவ்வித நிலைமை வரவில்லை. கோவலனும், மாதவியும் களிப்போடு தெருவில் சுற்றித் திரிகிறார்கள். தெருக்களிலெல்லாம், இன்பக்களிப்பை ஊட்டும் ஒரே கோலமாயிருக்கிறது. முல்லை, மல்லிகை, இருவாட்சி, குவளை, செங்கழுநீர் என்ற இவைகளால் தொடுக்கப்பட்ட மாலைகளைக் கோவலனும் மாதவியும் அணிந்திருக்கிறார்கள். நாளங்காடியில் கடைகளிலெல்லாம், பலவிதப் பூக்கள் குவியல் குவியலாக நிறைந்து, நறுமணத்தை வீசுகின்றன. சந்தனமும், அகிற் புகையும் நிறைந்த மேனியுடனே, பெண்கள் கும்பல் கும்பலாகப் போய்க் கொண்டிருக்கிறார்கள். அவர்களிடத்தில் கோவலன் காமக் குறிப்பான இன்பமொழிகளைப் பேசுகின்றான். கோவலனுடன் சில இசைகாரர்களும், நகரக் காமுகர்களும் திரிகிறார்கள்.

## கோவலன் மாதவியுடன் திரிதல்

காதற் கொழுநனைப் பிரிந்து, அலர் எய்தா,
மாதர்க் கொடுங் குழை மாதவி தன்னோடு,
இல்வளர் முல்லை, மல்லிகை, மயிலை,
தாழிக் குவளை சூழ் செங்கழுநீர்
பயில்பூங் கோதைப் பிணையலிற் பொலிந்து,
காமக் களி மகிழ்வு எய்திக், காமர்
பூம்பொதி நறுவிரைப் பொழிலாட்டு அமர்ந்து ;
நாள் மகிழ் இருக்கை நாளங்காடியில்,
பூமலி கானத்துப் புதுமணம் புக்குப் ;
புகையும் சாந்தும் புலராது சிறந்து,
நகையாடு ஆயத்து நன்மொழி திளைத்துக்,
குரல் வாய்ப் பாணரொடு, நகரப் பரத்தரொடு,
திரிதரு மரபின் கோவலன் போல;

[காதற் கொழுநனைப் பிரிந்து - தன்னால் காதலிக்கப்பட்ட கணவனைப் பிரிந்து ; அலர் எய்தா - அலரை அடையாத ; மாதர்க் கொடுங்குழை - அழகிய வளைந்த குழை என்னும் காதணியையுடைய; மாதவி தன்னொடு - மாதவியோடு ; இல் வளர் முல்லை - வீட்டில் வளர்கின்ற முல்லைப் பூ ; மல்லிகை - மல்லி ; மயிலை - இருவாட்சி ; தாழிக்குவளை - தாழிகளில் வளர்ந்த குவளைமலர் ; சூழ் செங்கழுநீர்-வண்டுகள் சூழ்ந்த செங்கழுநீர்ப் பூ ; (ஆகியவைகளால்) பயில் பூங் கோதைப் பிணையலிற் பொலிந்து - நெருங்கத் தொடுக்கப்பட்ட பூ மாலையாகிய பிணையல் என்ற மாலைவகையால் அழகு பெற்றும்; காமக்களி மகிழ்வு எய்தி - காமக் கிளர்ச்சியால் மிகக் களிப்படைந்து; காமர் பூம்பொதி நறுவிரை - விருப்பந்தரும் பூக்கள் நிறைந்து நறுமணமுள்ள ; பொழிலாட்டு அமர்ந்து - சோலையில் விளையாடுதலை விரும்பியும் ; நாள் மகிழ் இருக்கை நாள் அங்காடியில்-நாள் தோறும் மகிழ்ந்திருக்கும் இருப்பினையுடைய காலைக்கடையில்; பூமலி கானத்து பூக்கள் நிறைந்த இடமான பூவிற்கும் இடங்களில் ; புதுமணம்புக்கு-புதிய மணத்தின் நடுவே சென்றும் ; புகையும் சாந்தும் புலராது சிறந்து - அகிற் புகையும் சந்தனமும் காய்ந்து விடாமல் மேலும் பூசி அழகு மிகுந்தும் ; நகை ஆடு ஆயத்து நன்மொழி திளைத்து-நகைத்து விளையாடுகின்ற கூட்டத்தோடு காமக் குறிப்பான இன்ப மொழிகளை இடைவிடாது பேசியும் ; குரல் வாய்ப்பாணரொடு - குரல் என்னும் இசையைப் பாடவல்ல பாணர்களோடும் ; நகரப் பரத்தரொடு-நகரத்துக் காமுகர்களோடும் ; திருதரு மரபின்-திரிகின்ற இயல்போடே ; கோவலன் போல-கோவலன் செல்ல ;

அலர்–தன் காதலனைப் பிரிந்து வருந்துவதைப் பற்றி, ஊரார் கூறும் சொற்கள். தாழி–சிறு தொட்டி; ஆயம்–கூட்டம், திளைத்தல்–இடை விடாது பேசுதுல்.]

(202–227)

சித்திரை மாதம் இளவேனிற் காலம். சுருதி பாடும் வண்டோடு, தென்றற் காற்று நகர வீதிகள் எங்கும் திரிகின்றது. அந்தத் தெருக்களில், கண்டோர் கண்ணைக் கவரும் அழகுடைய விலை மாதர்கள், மன்மதன் படைவீரர்களைப் போலத் திரிகிருர்கள். நிலாவானது, தன்னுடைய பகைவனை இராகுவுக்குப் பயந்து, புகார் நகரத்திற்கு வந்து விட்டதோ என்று தோன்றுகிறது, அவர்களுடைய முகத்தைப் பார்த்தால்.

அவர்களுடைய கரிய கூந்தல் நிலாவைச் சுற்றியிருக்கும் கரிய மேகங்கள்போல் இருக்கின்றது. நிலாவிடத்தில் ஒரு களங்கம் உண்டு; ஆனல் இப்பெண்களுடைய முகத்தில் களங்கம் என்பதே கிடையாது. கயல்மீன் போன்ற கண்களும், குமிழம்பூப் போன்ற மூக்கும் இப்பெண்களின் முகத்தை அழகு செய்கின்றன. இவர்களுடைய உருவத்தைப் பார்த்தால் மின்னற் கொடியோ என்று சந்தேகிக்க வேண்டி யிருக்கிறது. மின்னற் கொடி என்ருலும், சாதாரண மின்னற் கொடியல்ல. மன்மதன், குளிர்ந்த நிலாவையே நிலமாகக் கொண்டு, அந்த நிலத்தில், அமுதம் என்னும் நீரைப் பாய்ச்சி வளர்த்த கொடியான மின்னற் கொடி இது.

அந்த மின்னற் கொடிதான் இப்படி வந்துவிட்டதோ என்றும் தோன்றுகிறது. சோழ மன்னனுக்கு, எல்லாச் செல்வத்தையும் கொடுக்க லட்சுமி புகார் நகரத்தில் குடிகொண்டிருக்கிருள். தாமரையானது, அவளைத் தேடிக் கொண்டு, இந்தப் பெண்களைப் போல் மாறுவேடம் பூண்டு இவ்விதம் வந்ததோ என்றும் தோன்றும்.

இப் பெண்களுடைய உறுப்புக்களைப் பார்க்கும் போது, இவர்கள் தம்மைக் கண்டவர் உயிரை மயக்கித் தம் வசப்படுத்தும் வலிமையை உடையவர்கள்; இந்த வலிமையைப் பார்க்கும் போது, நீதி நெறி தவருமல், அரசு புரியும் சோழ மன்னனுடைய நாட்டில் புகுவதற்கு அஞ்சி, யமனே இப்பெண்ணுருவாக வந்தானே என்று தோன்றும்.

தெருவில் திரியும் நகர இளைஞர், இப்பெண்களைப் பார்த்ததும், அவர்களை இழுத்துத் தழுவியதால், இப்பெண்கள் மார்பில் இருக்கும் சந்தனக் குழம்பு, தங்கள் மார்பில் பட்டது. இந்தக் கோலத்தோடு, இந்த இளைஞர்கள் தங்கள் மனைவியரை அடைந்தார்கள்.

## தெருவில் திரியும் விலைமாதரும் நகர இளைஞரும்

இளிவாய் வண்டினொடு இன்இள வேனிலொடு,
மலய மாருதம் திரிதரு மறுகில்
13 கரு முகில் சுமந்து, குறுமுயல் ஒழித்து, ஆங்கு—
இரு கருங் கயலோடு இடைக்குமிழ் எழுதி,
அங்கண் வானத்து அரவுப் பகை அஞ்சித்
திங்களும் ஈண்டுத் திரிதலும் உண்டு கொல்?
நீர்வாய் திங்கள் நீள் நிலத்து, அமுதின்
சீர்வாய்த் துவலைத் திருநீர் மாந்தி,
மீனேற்றுக் கொடியோன் மெய்பெற வளர்த்த,
வான வல்லி வருதலும் உண்டுகொல்?
இருநில மன்னர்க்குப் பெருவளங் காட்டத்,
திருமகள் புகுந்தது, இச் செழும்பதியாம் என,
எரி நிறத்து இலவமும், முல்லையும் அன்றியும்,
கருநெடுங் குவளையும், குமிழும் பூத்து, ஆங்கு—
உள்வரிக் கோலத்து உறுதுணை தேடிக்,
கள்ளக் கமலம் திரிதலும் உண்டுகொல்?
மன்னவன் செங்கோல் மறுத்தல் அஞ்சிப்,
பல் உயிர் பருகும் பகுவாய்க் கூற்றம்,
ஆண்மையின் திரிந்து, தன் அருந்தொழில் திரியாது,
நாணுடைக் கோலத்து நகை முகம் கோட்டிப்,
பண்மொழி நரம்பின் திவவுயாழ் திரியாது,
பெண்மையின் திரியும் பெற்றியும் உண்டு என
உருவிலாளன் ஒரு பெருஞ் சேனை
இகல் அமர் ஆட்டி, எதிர் நின்று விலக்கி, அவர்
எழுதுவரிக் கோலம் முழுமெயும் உரீஇ,
விருந்தொடு புக்க பெருந்தோட் கணவரொடு;

[இளிவாய் வண்டினொடு - இளி என்னும் சுரத்தைப் பாடுகின்ற வண்டுகளோடும்; இன் இளவேனிலொடு—இனிய இளவேனிலோடும்; மலய மாருதம்—பொதிய மலையிலிருந்து வரும் தென்றற் காற்று; திரிதரு மறுகில் – உலாவுகின்ற தெருக்களில்;

கருமுகில் சுமந்து–கரியமேகத்தைச் சுமந்து; குறுமுயல் ஒழித்து–சிறிய முயல் போன்ற களங்கத்தை நீக்கி; ஆங்கு–; இருகரும் கயலோடு–இரு பக்கங்களிலும் இரண்டு கரிய கயல் மீன்களோடும்; இடைக்குமிழ் எழுதி–அவற்றின் நடுவில் ஒரு குமிழம் பூவையும் பெற்று; அம் கண் வானத்து–அழகிய இடத்தை யுடைய வானத்தில்; அரவுப் பகை அஞ்சி–பாம்பு தன்னைப் பிடிக்கும் என்ற பகைமைக்கு அஞ்சி; திங்களும்–சந்திரனும்; ஈண்டுத் திரிதலும் உண்டுகொல்–இவ்வுலகில் வந்து திரிவதும் உண்டோ?

நீர் வாய் திங்கள் நீள் நிலத்து–குளிர்ச்சி பொருந்திய சந்திரனாகிய நீண்ட நிலத்திலே; அமுதின் சீர் வாய்–அமுதத்தின் சீர்மை வாய்ந்த; துவலைத் திருநீர்–துளிகளையுடைய அமுத கலையாகிய நீரை; மாந்தி–குடிக்கச் செய்து; மீனேற்றுக் கொடியோன்–ஆண் மீன் எழுதப்பட்ட கொடியுடைய மன்மதன்; மெய்பெற வளர்த்த–வடிவு நன்கு விளங்கும் படியாக வளர்த்தெடுத்த; வானவல்லி வருதலும் உண்டுகொல்–மின்னற் கொடி இந்நிலவுலகில் வருதலும் உண்டோ?

இருநில மன்னற்கு–பெரிய உலகத்தை ஆளும் மன்னவனுக்கு; பெரு வளம் காட்ட–மிக்க வளத்தைக் காட்டுவதற்காக; திருமகள்–லட்சுமி; இச்செழும்பதி–இச்செழிப்பான நகரில்; புகுந்தது ஆம் என–புகுந்தாளாம் என்னும்படி; எரி நிறத்து இலவமும்–நெருப்புப் போலச் சிவந்த நிறத்தையுடைய இலவம் பூவும்; முல்லையும் அன்றியும்–முல்லைப் பூவையும் அல்லாமல்; கருநெடுங் குவளையும் குமிழும் பூத்து–கரிய நீண்ட குவளை மலரும் குமிழம் பூவும் பூத்து; ஆங்கு–அந்நகரில்; உள்வரிக் கோலத்து உறுதுணை தேடி–வேறு உருவத்தோடு தனக்கு உற்ற துணைவியாகிய திருமகளைத் தேடிக்கொண்டு கள்ளக் கமலம் திரிதலும் உண்டுகொல்–கள்ளத்தனமுடைய தாமரை திரிவதும் உண்டோ?

பல் உயிர் பருகும் பகுவாய்க் கூற்றம்–பல உயிர்களையும் கொல்லுகின்ற, பிளந்த வாயையுடைய எமன்; ஆண்மையின் திரிந்து–தன் ஆண்மைத் தன்மையினின்றும் மாறுபட்டு; (அதாவது, ஆண்மைத் தன்மையை விட்டு) தன் அரும் தொழில் திரியாது–தன்னுடைய அரிய கொலைத் தொழிலில் மாறுபடாமல்; நாணுடைக் கோலத்து–நாணம் நிறைந்த உருவத்தோடு; நகை முகம் கோட்டி; இனிய புன்முறுவல் பூத்த முகத்தையும் எழுதி; பண்மொழி நரம்பின்–இனிய இசையைப் பாடுகின்ற நரம்பினையுடைய; திவவு யாழ் மிழற்றி–கட்டமைந்த யாழில் இசையை எழுப்பி; பெண்மையின் திரியும்–பெண்ணுருவோடு திரிகின்ற; பெற்றியும் உண்டு என–தன்மையும் உண்டு கொல் என்று;

உருவிலாளன் ஒரு பெருஞ் சேனை-மன்மதனுடைய ஒப்பில்லாத பெரிய சேனையாகிய மகளிரை; எதிர் நின்று விலக்கி-அக்காமுகர்கள் அவரெதிரே நின்று தடுத்து; இகல் அமர் ஆட்டி-காதற் சண்டைக்கு இழுத்து வென்று; அவர் எழுது வரிகோலம் - அம்மகளிர் தமது முலைகளில் எழுதிய தொய்யில் முதலிய அழகிய வரிகள்; முழுமெயும் உறீஇ - தமது மார்பு முழுவதும் படிந்து; விருந்தொடு புக்க - அப்புதிய கோலத்தோடு வீட்டிலே புகுந்த; பெருந்தோள் கணவரொடு - பெரிய தோளையுடைய தமது கணவருடனே;]

(228–234)

அருந்ததியைப் போல், பத்தினிகளான மனைவியர் தம் கணவர் வரும் கோலத்தைக் கண்டு, கோபத்துடன் சிவந்த கண்ணோடு இருக்கிறார்கள். கணவனுடன் கூடிய பின்னரும், சினம் தணியவில்லை. இதைக் கண்ட கணவர், "இக்கலவி யின்பத்திலும் தீராத கடைச்சிவப்பைத் தீர்க்கும்மருந்து, இவ்வுலகில் வேறு என்ன இருக்கின்றது" என்று தெரியாமல் நடுங்குகின்றனர்.

## இளைஞர் தங்கள் மனைவியரை அடைதல்

**உடன் உறைவு மரீஇ, ஒழுக்கொடு புணர்ந்த**
**வடமீன் கற்பின் மனை உறை மகளிர்,**
**மாதர் வாள் முகத்து மணித் தோட்டுக் குவளைப்**
**போது புறங் கொடுத்துப் போகிய செங்கடை**
**விருந்தின் தீர்ந்திலதாயின், யாவதும்**
**மருந்தும் தருங்கொல் இம் மாநில வரைப்பு எனக்**
**கையற்று நடுங்கும் நல்வினை நடுநாள் ;**

[உடன் உறைவு மரீஇ - தம் கணவருடன் கூடி வாழ்தலைப் பெற்று; ஒழுக்கொடு புணர்ந்த - இல்லற ஒழுக்கத்துடனே பொருந்திய; வடமீன் கற்பின் - அருந்ததி போன்ற கற்பையுடைய; மனை உறை மகளிர் - இல்லற மகளிரின்; மாதர் வாள் முகத்து - அழகிய ஒளிபொருந்திய முகத்தில் உள்ள; மணித் தோட்டுக் குவளைப் போது - நீலமணி போலும் இதழ்களை யுடைய குவளை மலரின் அழகை; புறங்கொடுத்து - தோற்கடித்து; போகிய செங்கடை - நீண்டு சிவந்த கடைக் கண்ணின் சினம்; விருந்தின் தீர்ந்திலது ஆயின் - நாம் இப்புதிய கோலத்தோடு வந்திருந்தும் தீராது போனால்; இம்மாநில வரைப்பு - இப் பெரிய நிலவுலகம்; யாவதும் மருந்தும் தருங்கொல் - இதைத் தீர்க்க ஒரு சிறு மருந்தும்

தரவல்லதோ?; என-என்று; கையற்று-செயலற்றுப் போய் நடுங்கும்-நெஞ்சு நடுங்குகின்ற; நல்வினை நடுநாள்-நல்ல விழாச் சிறப்பையுடையநடு இரவிலே;]

(235-240)

இந்திர விழா நாளில் ஊரெங்கும் ஆடல், பாடல், காதல் ஆகிய களிப்பு நிறைந்திருக்க கணவனைப் பிரிந்த கண்ணகியின் துயரமான நிலையோ மிகவும் பரிதாபம்! தன் உள்ளத்தில் உறையும் துயரத்தை என்ன மறைத்த போதிலும் கண்களில் நீர் சொரிந்து, கண்கள் சிவக்கின்றன. மாதவியோ, காதலனுடன் கூடி அளவில்லாத மகிழ்ச்சி பெற்றிருக்கிருள். இவளும் தன் உள்ளத்தில் உள்ள களிப்பை மறைத்தாலும், கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகுகின்றது. விலை மாதரோடு கூடித் திரிந்த நகர இளைஞர் தம் வீடு சேர்ந்து மனைவியரை அடைந்தனர். கோவலனும் அம்மாதிரிப் பத்தினியாகிய தன் மனைவியை எப்போது அடைவானே? எனினும் விரைவில் திரும்பி வருவான் என்னும் குறிகள் தோன்றுகின்றன. மாதவிக்கு, அவளுடைய வலது கண்ணும், கண்ணகிக்கு இடது கண்ணும் துடிக்கின்றன. பெண்களுக்கு இடது கண் துடித்தால் விரைவிலே நன்மை உண்டாகும் என்பதற்கு அது ஓர் அறிகுறி.

## கண்ணகியின் துயரம்

**உள்ளக நறும்தாது உறைப்ப, மீது அழிந்து,**
**கள்உக நடுங்கும் கழுநீர் போலக்**
**கண்ணகி கருங்கணும், மாதவி செங்கணும்,**
**உள் நிறை கரந்து அகத்து ஒளித்து, நீர் உகுத்தன ;**
**எண்ணுமுறை இடத்தினும், வலத்தினும் துடித்தன**
**விண்ணவர் கோமான் விழவு நாளகத்து என்.**

[உள்ளக நறும்தாது உறைப்ப-உட்புறம் சிதைந்து அதனல் நறுமணமுள்ள தாதுக்கள் தேனைச் சொட்டவிடுவதால்; மீது அழிந்து-பூவின் மேற் பகுதி அழிந்து; கள் உக-தேன் கீழே வழிந்து விழ; நடுங்கும்-நடுங்குகின்ற; கழுநீர் போல-செங்கழுநீர்ப் பூப்போல்; கண்ணகி கருங்கணும்-கண்ணகியினுடைய கரிய கண்களும்; மாதவி செங்கணும்-மாதவியினுடைய சிவந்தகண்களும்; உள்நிறைகரந்து அகத்து ஒளித்து-கண்ணகி உள்ளுக்குள் தனது கற்பையும், மாதவி உள்ளுக்குள் தனது நிறைந்த களிப்பையும் மறைத்து மூடி வைத்தலால்; நீர்

உகுத்தன-கண்ணீரைச் சிந்தின; எண்ணுமுறை-கூறிய முறைப் படியே; இடத்தினும் வலத்தினும் துடித்தன-இடப்பக்கத்திலும் வலப்பக்கத்திலும்; துடித்தன; விண்ணவர் கோமான் விழவு நாளகத்து-இந்திரனுடைய விழா நாளிலே.

உறைத்தல்-சொட்டுதல். கண்ணகி தன் கணவனைப் பிரிந்து வாடுவதால், அவள் கண்களைக் கருங்கண் என்றார். மாதவி கோவலனுடன் கூடி மகிழ்தலால், அவள் கண்கள் செங்கண் எனப்பட்டன.]

இந்திரவிழவூரெடுத்த காதை முற்றிற்று

# கடலாடு காதை

இந்தக் காதை புகார் நகரத்திலுள்ள மக்கள், இந்திர விழா முடிவில், கடலுக்குச் சென்று நீராடுவதைக் கூறுவது.

(1-34)

இமயமலையின் வடக்குப்பக்கம், தேன் மலர்ச் சோலைகள் நிறைந்த பெருஞ்சேடி என்னும் பெயருடைய ஒரு இடம் உண்டு. அது தேவகுலத்தைச் சேர்ந்த வித்தியாதரர் வசிக்கு மிடம். இவ்விடத்திலுள்ள ஒரு வித்தியாதரன், தன் மனைவி யுடன் காமக் கடவுளுக்கு விழாக் கொண்டாடும் போது, புகார் நகரத்தில் இந்திர விழா நடக்கும் காலம் அதுவே என்று அவன் நினைவுக்கு வந்தது. புகார் நகரத்தின் சிறப்பு, அக் காலத்தில் அவ்வளவு தூரம் பரவி யிருந்தது. தேவமக்களும் கண்டு களிப்படையக் கூடிய இந்திர விழாவைக் காண விரும் பியவனாய், அவன் தன் மனைவியைப் பார்த்து, "தெற்கே, தமிழ் நாட்டில், காவிரிப்பூம் பட்டினத்தில், சித்திரை மாதத்தில் இந்திரனுக்குத் திருவிழா நடைபெறும். அதைப் போய் நாம் பார்ப்போம். அந் நகரில், அருமையான காட்சிகளுமுண்டு. சோழ மன்னனின் மூதாதையாகிய முசுகுந்தன் என்பவன், ஒரு காலத்தில், இந்திரனுக்குச் செய்த உதவியால், முசுகுந்தனுக்கு மெய்க் காவலாக, ஒரு பூதத்தை இந்திரன் அவனுக்குக் கொடுத் தான். அப் பூதம் இன்றைக்குப் புகார் நகரத்தைக் காவல் செய்கின்றது. அதை நாம் காணலாம். இதல்லாமல், அந் நகரத்தில் அதிசயமான ஐந்து மன்றங்கள் உள்ளன. அந்த ஐவகை மன்றத்தின் சிறப்பையும் நாம் காண்போம். இன்பத் தைத் தரும் வேறு காட்சிகளையும் கண்டு விட்டு, அங்கே இந்திரனை நாமும் வழிபடுவோம்" என்றான்.

இவ்விதமாகத் தன் மனைவிக்குச் சொல்லி, அவளுடன் இமயமலையிலிருந்து, தென் திசையை நோக்கி, வித்தியாதரன் புறப்பட்டான். இமயமலையைக் கடந்து, வழியிலுள்ள காட்சி களைத் தன் மனைவிக்குக் காண்பித்துக் கொண்டே பிரயாணஞ் செய்தான். செழுநீர்க் கங்கை பாயும் நாடுகளையும், உச்சயினி

நகரத்தையும், விந்திய மலையின் அருகிலுள்ள பெரிய காடுகளையும், திருவேங்கட மலையையும் கடந்து காவிரி பாயும் சோழ நாட்டை அடைந்து, கடைசியாகப் பூஞ்சோலைகள் நிறைந்த காவிரிப்பூம் பட்டினத்திற்கு வந்து சேர்ந்தனர். சேர்ந்து, நகரில் நடைபெறும் விழாவைக் கண்டு மகிழ்ந்து, இருவரும் அவ்வூரிலுள்ள கோவில்களில் வழிபாடு செய்தார்கள்.

## இந்திர விழாக் காண வித்தியாதரனும் மனைவியும் வருதல்

வெள்ளி மால்வரை வியன் பெருஞ் சேடிக்
கள் அவிழ் பூம் பொழில் காமக் கடவுட்குக்,
கருங்கயல் நெடுங்கண் காதலி தன்னொடு
விருந்தாட்டு அயரும் ஓர்விஞ்சை வீரன்,
''தென்திசை மருங்கின் ஓர் செழும்பதி தன்னுள்
இந்திர விழவு கொண்டு எடுக்கும் நாள் இது வெனக்,
கடுவிசை அவுணர் கணங்கொண்டு சண்டிக்
கொடுவரி ஊக்கத்துக் கோநகர் காத்த
தொடுகழல் மன்னற்குத் தொலைந்தன ராகி,
நெஞ்சிருள் கூர நிகர்த்துமேல் விட்ட
வஞ்சம் பெயர்த்த மாபெரும் பூதம்,
திருந்துவேல் அண்ணற்குத் தேவன் ஏவ,
இருந்து பலி உண்ணும் இடனும் காண்கும்;
அமராபதி காத்து அமரனிற் பெற்றுத்
தமரின் தந்து, தகைசால் சிறப்பின்
பொய்வகை இன்றிப் பூமியிற் புணர்த்த
ஐவகை மன்றத்து அமைதியும் காண்குதும்;
நாரதன் வீணை நயம் தெரி பாடலும்,
தோரிய மடந்தை வாரம் பாடலும்
ஆயிரங் கண்ணோன் செவியகம் நிறைய
நாடகம் உருப்பசி நல்காளாகி,
'மங்கலம் இழப்ப வீணை, மண் மிசைத்
தங்குக இவள்' எனச் சாபம் பெற்ற,
மங்கை மாதவி வழிமுதல் தோன்றிய,
அங்கு அரவு அல்குல் ஆடலும் காண்குதும்;
துவர் இதழ்ச் செவ்வாய்த் துடியிடை யோயே!
அமரர் தலைவனை வணங்குதும் யாம்'' எனச்
சிமையத்து இமையமும், செழுநீர்க் கங்கையும்,
உஞ்சையம் பதியும், விஞ்சத்து அடவியும்,

**வேங்கட மலையும், தாங்கா விளையுள்**
**காவிரி நாடும் காட்டிப், பின்னர்ப்,**
**பூவிரி படப்பைப் புகார் மருங்கு எய்திச்,**
**சொல்லிய முறைமையின் தொழுதனன் காட்டி,**
**மல்லல் மூதூர் மகிழ் விழாக் காண்போன் ;**

[வெள்ளி மால்வரை – வெள்ளி போன்ற உயர்ந்த இமயமலையில்; வியன் பெருஞ்சேடி – அகன்ற பெருஞ்சேடி என்னுமிடத்தில்; கள் அவிழ் பூம் பொழில் – தேன் ஊறுகின்ற பூக்கள் நிறைந்த சோலையில்; காமக்கடவுட்கு – காம தேவனுக்கு ; கரும் கயல் நெடுங்கண் – கரிய கயல்மீன் போன்ற நீண்ட கண்ணையுடைய; காதலி தன்னொடு – தன் காதலியுடன் இருந்து ; விருந்தாட்டு அயரும் – புதிதாகச் செய்யும் விழாவைக் கொண்டாடுகின்ற ; ஓர் விஞ்சை வீரன் – ஒரு வித்தியாதரன் ; தென்திசை மருங்கின் – தெற்குத் திசையில்; ஓர் செழும்பதி தன்னுள் – ஒரு செழிப்பான நகரத்தில்; இந்திரவிழவு கொண்டு எடுக்கும் நாள் – இந்திர விழாவினைக் கொண்டாடும் நாள் ; இது என – இது தான் என்று ;

கடுவிசை அவுணர் கணம் கொண்டு ஈண்டி – மிக விரைந்து செல்லும் அரக்கர்கள் கூட்டமாகத் திரண்டு; கொடுவரி ஊக்கத்து – புலி போலும் ஊக்கத்துடன் ; கோ நகர் காத்த – இந்திரனுடைய நகரைக் காவல் செய்த; தொடு கழல் மன்னற்கு – கட்டிய வீரக் கழல் அணிந்த முசுகுந்த மன்னனுக்கு ; தொலைந்தனர் ஆகி – முன்னர்த் தோற்று ஓடிப்போய் ; (பிறகு அவனுடைய) நெஞ்சு இருள் கூர – உள்ளமும் அறிவும் இருண்டு போகுமாறு ; நிகர்த்து மேல் விட்ட – தாங்கள் அனைவரும் ஒத்து அவன் மேல் விடுத்த ; வஞ்சம் – மாயமான அம்பை ; பெயர்த்த – தன் மந்திரத்தைக் கூறித் தடுத்த ; மாபெரும் பூதம் – மிகப் பெரிய பூதம் ; திருந்து வேல் அண்ணற்கு – அழகிய வேலையுடைய முசுகுந்தனுக்குப் பணி செய்யும்படி ; தேவன் ஏவ – இந்திரன் ஏவுதலால், வந்து; இருந்து பலி உண்ணும் – புகார் நகரில் பலிகளை உண்ணுகின்ற ; இடனும் காண்குதும் – நாளங்காடியிடத்தையும் காண்போம்.

அமராபதி காத்து – விண்ணுலகத்தைக் காவல் செய்து ; அமரனின் பெற்று – தேவேந்திரனிடத்தில் பெற்று ; தமரின் தந்து – தனக்குத் தன் குடியினரால் தரப்பட்டு ; தகைசால் சிறப்பின் – அழகு மிக்க சிறப்பினையுடைய ; பொய்வகை இன்றிப் பூமியிற் புணர்த்த – பொய்க்கும்படி இல்லாமல், இவ்வுலகிலேயே நிலைபெறும்படி வைக்கப்பட்ட ; ஐவகை மன்றத்து – ஐந்து வகைப்பட்ட மன்றங்களின் ; அமைதியும் காண்குதும் – பெருமையையும் காண்போம்.

நாரதன் வீணை – நாரத முனிவனின் வீணையில் உண்டாகின்ற நயம் தெரி பாடலும் – ஏழிசையும் வெளிப்படுகின்ற பாடலையும்; தோரிய மடந்தை – தோரிய மடந்தை என்னும் ஆடி முதிர்ந்த நாடகப் பெண் பாடுகின்ற; வாரம் பாடலும் – வாரம் என்னும் ஒரு வகைப் பாடலையும்; ஆயிரங்கண்ணோன் – இந்திரனின்; செவியகம் நிறைய – செவிகள் நிறையும்படி; நாடகம் உருப்பசி நல்காளாகி – நாடகமாடும் உருப்பசி என்னும் தேவதாசி ஆடிப்பாடி மகிழ்ச்சி யூட்டாதவளாகி; வீணை மங்கலம் இழப்ப – வீணை மங்கலப்பொலிவை இழக்க; மண் மிசைத் தங்குக இவள் என – இவள் நிலவுலகிலே வீணையோடு சென்று தங்குவாளாக என்று; சாபம் பெற்ற–இந்திர சபையிலிருந்த அகத்தியனால் சபிக்கப்பட்டு, இச்சாபத்தால் இங்கு வந்து பிறந்த; மங்கை மாதவி – மங்கையாகிய மாதவியின்; வழி முதல் – குடி வழியில்; தோன்றிய –; அரவு அல்குல் ஆடலும் – பாம்பின் படம் போன்ற இடையை யுடைய மாதவியின் ஆடலையும்; அங்குக் காண்குதும் – அவ்விடத்தே காண்போம்; துவர் இதழ்ச் செவ்வாய்த் துடி இடையோயே – பவளம் போலச் சிவந்த உதட்டை யுடைய வாயினையும், உடுக்கை போன்ற இடுப்பினையும் உடைய வளே!; அமரர் தலைவனை வணங்குதும் யாம் என – இந்திரனை நாமும் வணங்குவோம் என்று; (தன் மனைவிக்குக் கூறி)

சிமையத்து இமையமும் – கொடுமுடிகளையுடைய இமயமலையை யும்; செழுநீர்க் கங்கையும்–வளம் மிக்க நீரையுடைய கங்கையாற்றை யும்; உஞ்சயம் பதியும் – அழகிய உச்சயினி நகரத்தையும்; விஞ்சத்து அடவியும் – விந்தியமலைக் காடுகளையும்; வேங்கட மலையும் – திருவேங் கட மலையையும்; தாங்காவிளையுள் – அடங்காத விளைச்சலையுடைய; காவிரி நாடும் – காவிரி பாயும் சோழ நாட்டையும்; காட்டி – அவ ளுக்குக் காட்டி; பின்னர் –; பூவிரி படப்பை – பூக்கள் விரிந்த சோலை களையுடைய; புகார் மருங்கு எய்தி – காவிரிப்பூம் பட்டினத்தின் பக்கத்தே வந்து; சொல்லிய முறைமையின் – புறப்படுமுன் தன் மனைவிக்குச் சொல்லிய முறையிலே; தொழுதனன் காட்டி – மன்றம் முதலான எல்லா இடங்களையும் வணங்கி, அவற்றின் சிறப்புக் களையும் விளக்கிக் காட்டி; மல்லல் மூதூர் – வளமிக்க பழைய ஊரா கிய அவ்விடத்தில்; மகிழ் விழாக் காண்போன் – களிப்புத் தரும் திருவிழாவைக் காணும் அவன்;

மால் - உயர்ச்சி, விருந்து – புதுமை, விஞ்சை வீரன் – வித்தியா தரன், தேவர் குலத்தைச் சேர்ந்தவன். தகை - அழகு.

இந்திரன் நகரைக் காத்த முசுகுந்தனிடம் தோற்று ஓடிய அசுரர்கள் மீண்டும் வந்து ஒன்றாகத் திரண்டு, மாய அம்புகளை ஏவினர். அதனால், அவன் கண்ணும் மனமும் இருண்டு மயங்கி

நின்றான். இந்திரனுடைய பூதம் ஒன்று, ஒரு மந்திரத்தை அவனுக்குக் கற்பிக்க, அவன், அம் மயக்கந் தீர்ந்து தன் போர் வலியால் அசுரர்களை வென்றான். துணை புரிந்த சிறப்புடைய அப் பூதத்தை இந்திரன் அவனுக்கே தந்துவிட, அது அவனோடு வந்து புகாரில் தங்கிற்று. அது தங்கியது, நாளங்காடியில்.]

*(35–71)*

மாதவி, பேரும் புகழும் பெற்ற ஒரு நாட்டியப் பெண். இந்திர விழாவின் போது ஊரார் எல்லாரும் கண்டு களிக்கும்படி மாதவி நடனமாடிக் கொண்டிருக்கிறாள். முதலில், திருமாலையும் நான்கு வருணத்தாருக்கும் உள்ள பூதங்களையும், எல்லா உயிர்களுக்கும் நலங் கொடுக்கும் சிறப்பினையுடைய நிலாவையும் புகழ்ந்து பாடிப் பிறகு, தாளத்தின் இயல்புகள் நன்கு விளங்க, மாதவி பதினொரு வகைக் கூத்துக்களையும் ஆடினாள். அவள் ஆடிய பதினொருவகைக் கூத்துக்களாவன:—

1. கொடுகொட்டியாடல். 2. பாண்டரங்கக் கூத்து. 3. அல்லியத் தொகுதி. 4. மல்லாடல். 5. துடிக் கூத்து. 6. குடைக்கூத்து. 7. குடக்கூத்து. 8. பேடியாடல். 9. மரக்காலாடல். 10. பாவைக்கூத்து. 11. கடையம் என்பன. இந்தப் பதினொரு ஆடல்களையும் ஒவ்வொன்றிற்கும் பொருத்தமான அணி, கொள்கை, நிலை, அவிநயம் இவைகளுடன் விதி முறைப்படி ஆடி, அவற்றிற்கு ஏற்ற இசைகளையும் பாடிய மாதவியை, வித்தியாதரன், தன் மனைவிக்குச் சுட்டிக் காட்டி, "இவள் தான் ஊர்வசியின் குலத்தில் தோன்றிய மாதவி என்னும் நாடகக் கணிகை'' என்று சொல்லி, இருவரும் ஆடல் பாடல்களை அநுபவித்து மகிழ்ந்தார்கள்.

## மாதவியின் ஆடலில் வித்தியாதரன் மகிழ்ச்சி

**மாயோன் பாணியும், வருணப் பூதர்**
**நால்வகைப் பாணியும், நலம் பெறு கொள்கை**
**வானூர் மதியமும் பாடிப், பின்னர்ச்**
**சீர் இயல் பொலிய, நீர் அல நீங்கப்,**
**பாரதி ஆடிய பாரதி அரங்கத்துத்,**
**திரிபுரம் எரியத் தேவர் வேண்ட,**
**எரிமுகப் பேர் அம்பு ஏவல் கேட்ப,**
**உமையவள் ஒருதிறன் ஆக, ஓங்கிய**

இமையவன் ஆடிய கொடுகொட்டி யாடலும் ;
தேர் முன் நின்ற திசைமுகன் காணப்,
பாரதி யாடிய வியன் பாண்டரங்கமும் ;
கஞ்சன் வஞ்சம் கடத்தற்காக,
அஞ்சன வண்ணன் ஆடிய ஆடலுள்,
அல்லியத் தொகுதியும் ; அவுணற் கடந்த
மல்லின் ஆடலும் ; மாக்கடல் நடுவண்,
நீர்த்திரை அரங்கத்து நிகர்த்து முன் நின்ற
சூர்த்திறம் கடந்தோன் ஆடியதுடியும் ;
படை வீழ்த்து அவுணர் பையுள் எய்தக்
குடை வீழ்த்து அவர் முன் ஆடிய குடையும் ;
வாணன் பேரூர் மறுகிடை நடந்து,
நீள் நிலம் அளந்தோன் ஆடிய குடமும் ;
ஆண்மை திரிந்த பெண்மைக் கோலத்துக்
காமன் ஆடிய பேடி யாடலும் ;
காய்சின அவுணர் கடுந்தொழில் பொருஅள்,
மாயவள் ஆடிய மரக்கால் ஆடலும் ;
செருவெம் கோலம் அவுணர் நீங்கத்,
திருவின் செய்யோள் ஆடிய பாவையும் ;
வயல் உழை நின்று, வடக்கு வாயிலுள்
அயிராணி மடந்தை ஆடிய கடையமும் ;
அவரவர் அணியுடன், அவரவர் கொள்கையின்
நிலையும், படிதமும் நீங்கா மரபின்,
பதினோ ராடலும் பாட்டின் பகுதியும்,
விதிமாண் கொள்கையின் விளங்கக் காணாய் ;
தாது அவிழ் பூம்பொழில் இருந்து யான் கூறிய
மாதவி மரபின் மாதவி இவள்'' எனக்,
காதலிக்கு உரைத்துக், கண்டு மகிழ்வு எய்திய
மேதகு சிறப்பின் விஞ்சையன் அன்றியும் ;

[மாயோன் பாணியும் - திருமாலைப் பாடுகின்ற தேவபாணியும் ; வருணப் பூதர் - நால்வகை வருணங்களுக்குரிய நான்கு பூதங்களை யும் பாடுகின்ற ; நால்வகைப் பாணியும் - நான்கு வகைத் தேவ பாணியும்; நலம் பெறு கொள்கை - பல உயிரும் தன்னால் நலம் பெறும் சிறப்பினையுடைய ; வான் ஊர் மதியமும் - வானத்தில் ஊர்ந்து செல்லும் சந்திரனையும் : பாடி -; பின்னர் -;

சீர் இயல் பொலிய - தாளத்தின் இயல்புகள் நன்கு சிறப்புற ; நீர் அல நீங்க - தாள இயல்புக்கு மாறானவை நீங்க ; திரிபுரம் எரி யத் தேவர் வேண்ட - முப்புரங்களும் அழியவேண்டித் தேவர்கள்

கேட்டுக் கொள்ள; எரி முகப் பேர் அம்பு ஏவல் கேட்ப – தன் முகத்திலிருந்து தீயைக் கக்குகின்ற பெரிய அம்பானது, "புரங்களை எரிப்பாயாக" என்ற வளவிலே, அங்ஙனமே அழித்து நிற்க; (அப்படி அழிக்கப்பட்ட சாம்பல் மேல்) பாரதி ஆடிய – பைரவி என்னும் தெய்வம் நின்று கூத்தாடிய; பாரதி அரங்கத்து - பாரதி என்பவள் ஆடியதால் பாரதி அரங்கம் எனப் பெயர் பெற்ற உலக மாகிய சுடுகாட்டில்; உமையவள் ஒரு திறனாக-உமாதேவி ஒரு பகுதியில் நின்று துணை செய்ய; ஓங்கிய இமையவன்–தெய்வங்களுள் உயர்ந்த சிவபிரான்; ஆடிய-விரும்பியாடிய; கொடு கொட்டியா டலும் - கொடுகொட்டி என்னும் ஆடலும்;

தேர் முன் நின்ற-தேரின் முன்பாகத் தேரைச் செலுத்தி நின்ற; திசை முகன் காண–பிரமன் காணும்படி; பாரதி ஆடிய–; வியன் பாண்ட ரங்கமும் - பெரிய பாண்டரங்கம் என்ற ஆடலும்;

கஞ்சன் வஞ்சம் கடத்தற்காக-கஞ்சன் என்பவனுடைய வஞ்ச மான மாயச் செய்கையைக் கடந்து வெல்லுவதற்காக; அஞ்சன வண் ணன்–மைபோலும் கரிய நிறமுடைய திருமால் (கண்ணன்) ஆடிய ஆடலுள்-ஆடிய பத்துவகை ஆடலுள் ஒன்றாகிய; அல்லியத்தொகு தியும்–அல்லியத் தொகுதி என்னும் ஆடலும்;

அவுணற் கடந்த–திருமால், வாணன் என்னும் அசுரனை வென்ற; மல்லின் ஆடலும்–மல்லாடுதல் என்னும் கூத்தும்;

மாக்கடல் நடுவண்–கரிய கடலின் நடுவில்; நீர்த்திரை அரங் கத்து-அலைநிரம்பிய கடலை மேடையாகக் கொண்டுநின்று; நிகர்த்து முன் நின்ற சூர்த்திறம் கடந்தோன்–தன்னை எதிர்த்துத் தனக்கு முன் பாக நின்றவனாகிய சூரபன்மனின் வஞ்சத்தை வென்ற முருகன்; ஆடிய துடியும்–அப்பொழுது ஆடிய துடிக்கூத்தும்;

படை வீழ்த்து அவுணர்பையுள் எய்த-போரிலே தோற்றுப் படைக் கருவிகளைக் கீழே எறிந்து, அரக்கர்கள் துன்பப்பட்டபோது; குடை வீழ்த்து அவர் முன் ஆடிய குடையும்-அவர் முன்பாகத் தனது குடையைத் தாழ்த்தி, முருகன் ஆடிய குடைக்கூத்தும்;

வாணன்-வாணன் என்னும் அசுரனின்; பேர் ஊர் மறுகிடை நடந்து-பெரிய நகரத்தின் வீதியிற் சென்று; நீள்நிலம் அளந்தோன்–பெரிய இவ்வுலகத்தை அளந்தவனாகிய திருமால்; ஆடிய குடமும்–குடத்தைக் கையில் கொண்டு ஆடிய குடக்கூத்தும்;

ஆண்மை திரிந்த - ஆண்மைத் தன்மையினின்றும் மாறுபட்ட; பெண்மைக் கோலத்து - பெண்மை வேடத்தோடு ; காமன், ஆடிய- காமன் கூத்தாடிய ; பேடியாடலும் - பேடு என்னும் கூத்தும் ;

காய்சின அவுணர் - கொதிக்கும் கோபத்தையுடைய அசுரர் களின் ; கடும் தொழில் பொருஅள் - கொடுஞ் செயல்களைப் பொருத வளாகி; மாயவள் ஆடிய- துர்க்கை ஆடிய ; மரக்கால் ஆடலும்-மரத் தால் ஆகிய காலைக் கொண்டு, அதனாலாடிய கூத்தும் ;

அவுணர் செருவெம்கோலம் நீங்க - அசுரர்களின் கொடிய போர்க்கோலம் நீங்கும்படியாக; திருவின் செய்யோள்-திருமகளாகிய சிவந்த நிறமுடைய இலக்குமி ; ஆடிய பாவையும் - கொல்லிப்பாவை வடிவாய் நின்று ஆடிய பாவைக் கூத்தும் ;

வயல் உழை நின்று - வயலிடத்தில் நின்று ; வடக்கு வாயிலுள் -முற்கூறிய வாணன் என்னும் அரசனுடைய நகரத்தின் வடக்கு வாயிலில் நின்று ; அயிராணி மடந்தை - இந்திராணியாகிய பெண் ; ஆடிய கடையமும் - ஆடிய கடையம் என்னும் கூத்தும் ;

அவரவர் அணியுடன் - அங்ஙனம் கூறப்பட்ட கூத்தாடியவர் களின் அணியுடனும் ; அவரவர் கொள்கையின் - அவரவருடைய கொள்கையுடனும் ஆடிய ; நிலையும் - நின்ற நிலையில் ஆடலும் ; படிதமும் - சாய்ந்த நிலையில் கிடந்து ஆடலும் ஆகிய முறைகள்; நீங்கா மரபின் - நீங்காத சிறப்பினையுடைய ; பதினோராடலும் ; பதினொரு வகைப்பட்ட ஆடல்களையும்; பாட்டின் பகுதியும்- அவ்வவ் வாடல்களுக்கேற்ற பாடல் வகைகளையும்; விதிமாண் கொள்கையின் விளங்க - விதி முறைகள் மாட்சிமைப் படும்படி விளங்குவதை; காணாய் - நன்கு பார்ப்பாயாக ;

தாது அவிழ் பூம் பொழில் - மகரந்தப் பொடி சிந்துகின்ற பூக்கள் நிறைந்த சோலையில் ; இருந்து யான் கூறிய- தங்கி யிருந்து என்னால் கூறப்பட்ட ; மாதவி மரபின் - மாதவி என்னும் தேவதாசி யின் குடிவழியில் வந்து தோன்றிய ; மாதவி இவள் என - அம்மாதவி இவள் தான் என்று ; காதலிக்கு உரைத்து - தன் காதலிக்குக் கூறி, கண்டு - அவற்றையெல்லாம் அவளோடு தானும் கண்டு ; மகிழ்வு எய்திய - களிப்படைந்த ; மேதகு சிறப்பின் - உயர்ந்த தகுதிகள் வாய்ந்த சிறப்பினையுடைய ; விஞ்சையன் அன்றியும் - விஞ்சையனா கிய அத்தேவனை அல்லாமலும் ;

பொன், வெள்ளி, இரும்பு என்ற மூவகைப் பொருளால் ஆன மூன்று கோட்டைகளில் தங்கி, அரக்கர்கள் தமக்குப் பகைவரான

தேவர்களை அழித்து வந்தனர். தேவர்கள் சிவபிரானிடம் முறையிட, அவர் தீயை ஏவி, அவர் கோட்டைகளை அழித்து, அழித்த சாம்பல் மீது தாம் நின்று தாண்டவ மாடினார். அங்ஙனம் இரக்க மில்லாது அழித்து ஆடினதால், இவ்வாடலுக்குக் "கொடு கொட்டியாடல்" எனப் பெயர் வந்தது; (கொடு–கொடிய; கொட்டியாடுதல்) கஞ்சன் –கண்ணனின் மாமன். கொல்லிப்பாவை ; கொல்லி மலையின் மேற்குத் திசையில் உள்ள ஒரு தெய்வப் பதுமை. அது அளவு கடந்த பேரழகு உடையது. கடையம் – கடைசிக்கூத்து.]

## (72-110)

புகார் நகரில் நடைபெறும் இந்திரவிழாவும் மாதவியின் ஆடலும் அதிகச் சிறப்பு வாய்ந்தவையாகையால், தேவலோகத்தில் உள்ளவர்களுங்கூட, மனித உருவத்துடன் புகார் நகருக்கு வந்து அளவற்ற மகிழ்ச்சியடைந்தார்கள். கோவலனும், மாதவியின் ஆட்டத்தைக் கண்டு, பரவசமடைந்தான். ஆட்டமும் முடிந்தது. முடிவு பெற்ற சமயத்தில், பெரிய களிப்பிலே மூழ்கியிருந்த கோவலனுக்குச் சினமும் வெறுப்பும் உண்டாயிற்று. தன்னுடைய காதலியின் ஆடல், பாடல், அழகு இவைகளைத் தான் மட்டுமல்லாமல், ஊர் மக்கள் எல்லாரும் கண்டு களிக்கின்றார்களே என்ற பொறாமை இவன் மனதில் உண்டாயிற்று.

இவ்விதம் கலக்கம் அடைந்திருந்த கோவலன் மனதைக் களிப்படையும்படிச் செய்ய, மாதவி, அலங்காரம் செய்து கொள்ளுகிறாள். இரண்டாயிரம் வருடங்களுக்கு முன், தமிழ் நாட்டுப் பெண்கள், தங்கள் மேனியை அழகு படுத்தும் கலையை எவ்வளவு நன்றாக அறிந்திருந்தார்கள் என்பதையறியும் போது, அது, இக்காலத்திலும் வியப்பையுண்டாக்கும். மேல்நாட்டுப் பெண்கள், தங்கள் மேனியின் அழகைச் சிறப்பிக்கச் செய்யும் "டாய்லட்" என்னும் முறைகளைப் பற்றிக் கேள்விப்படுகிறோம். தமிழ் நாட்டுப் பெண்கள், முன்காலத்தில், எவ்வளவு அருமையான "டாய்லட்" முறைகளைக் கையாண்டார்கள் என்பது சிலப்பதிகாரத்தில் நன்கு தெரியவரும். கூந்தலை அழகு செய்யும் முறையைப் பார்ப்போம். நெல்லி, அத்தி, கருங்காலி, மாந்தளிர் முதலிய பத்துத் துவர்களையும், அகில், சந்தனம் முதலிய ஐந்து வகை நறுமணங்களையும் இலவங்கம், பச்சிலை, ஏலம், நன்னாரி, கஸ்தூரி, இலாமிச்சம், நறுந்தாது, கொடுவேரி முதலிய முப்பத்திரண்டு ஓமாலிகைகளையும் நீரில் ஊறவைத்து,

எடுத்த தைலத்தைக் கூந்தலுக்குப் பூசிக் கழுவினாள். பிறகு கூந்தலை அகிற் புகையில் உலர்த்தி, கஸ்தூரிக் குழம்பு பூசி, ஐந்து சடையாகப் பின்னினாள். கூந்தலை இவ்வாறு அழகு செய்தபின், மாதவி, பலவிதமான அணிகளைப் பூட்டினாள். கால் விரல்களுக்குப் பீலி முதலிய அணிகளையும், காலுக்குப் பாடகம், சதங்கை, பாதசாலம் முதலிய அணிகளையும் அணிந்தாள். தனது திரண்ட துடையில், துடையணி என்னும் ஆபரணத்தைப் பூட்டி, நீல நிறமான பூஞ்சேலையை உடுத்து, அதன் மேல் முப்பத்திரண்டு முத்து வடங்களால் செய்யப்பட்ட மேகலாபரணத்தை அணிந்தாள். தோளுக்கு, அழகிய தோள் வளைகளையும், சிறு மயிர் படிந்த முன் கையில் சித்திர வேலை செய்த சூடகம், செம் பொற்கைவளை, வால்வளை முதலிய அணிகளையும், மெல்லிய விரல்களில் வாளை மீன் போன்ற நெளி, மணி மோதிரம், வைரமோதிரம் முதலியவைகளையும், கழுத்தில் நுட்பமான வேலைப்பாடுள்ள வீரசங்கிலி, சரப்பளி, மணியாரம் முதலிய அணிகளையும் அணிந்தாள். கழுத்தணிகளின் கொக்கிகளில் வைத்த ஒரு அழகிய முகப்பு, மெல்லிய பிடரியை மறைத்தது. தன்னுடைய அழகிய காதின் அழகு மிகும்படி, இந்திர நீலத்தின் இடையே வைரங்கள் பதிக்கப்பட்ட நீலக் குதம்பை என்னும் அணியைப் பூட்டினாள். கருங் கூந்தலில் சீதேவி, தென்பல்லி, வடபல்லி, தலைப்பாளை, செழுநீர்வலம்புரி என்ற இவைகளால் தொடுக்கப்பட்ட தலையணிகளையும் அணிந்தாள். இவ்விதமாக, ஆபரணங்களை அணிந்து தன்னை அழகு படுத்திக் கொண்டு, ஊடல் பெற்றிருந்த கோவலனுக்கு, இன்பத்தைக் கொடுத்துப் பள்ளியறையில் இருந்தாள், மாதவி.

### மாதவி அலங்காரமும் கோவலன் மனக்களிப்பும்

**அந்தரத் துள்ளோர் அறியா மரபின்,**
**வந்து காண்குறூஉம் வானவன் விழவும்,**
**ஆடலும் கோலமும் அணியும் கடைக்கொள,**
**ஊடற் கோலமோடு இருந்தோன் உவப்பப்,**
**பத்துத் துவரினும், ஐந்து விரையினும்,**
**முப்பத் திருவகை ஓமாலிகையினும்**
**ஊறின நன்னீர், உரைத்த நெய் வாசம்,**
**நாறு இரும் கூந்தல் நலம்பெற ஆட்டிப் ;**
**புகையிற் புலர்த்திய பூமென் கூந்தலை,**
**வகைதொறும் மான்மதக் கொழுஞ்சேறு ஊட்டி ;**

அலத்தகம் ஊட்டிய அம்செம் சீறடி,
நலத்தகு மெல் விரல் நல் அணி செறீஇப் ;
பரியகம் நூபுரம் பாடகம் சதங்கை
அரியகம் காலுக்கு அமைவுற அணிந்து ;
குறங்கு செறிதிரள் குறங்கினிற் செறித்துப் ;
பிறங்கிய முத்து அரை முப்பத் திருகாழ்
நிறம் கிளர் பூம்துகில் நீர்மையின் உடீஇக் ;
காமர் கண்டிகை தன்னொடு பின்னிய
தூமணித் தோள்வளை தோளுக்கு அணிந்து ;
மத்தக மணியொடு, வயிரம் கட்டிய
சித்திரச் சூடகம், செம்பொன் கைவளை,
பரியகம் வால்வளை, பவழப் பல்வளை,
அரிமயிர் முன்கைக்கு அமைவுற அணிந்து ;
வாளைப் பகுவாய் வணக்குறு மோதிரம்,
கேழ்கிளர் செங்கேழ் கிளர் மணி மோதிரம்,
வாங்குவில் வயிரத்து மரகதத் தாள் செறி,
காந்தள் மெல்விரல் கரப்ப அணிந்து,
சங்கிலி, நுண்தொடர், பூண்ஞாண் புனைவினை,
அம்கழுத்து அகவயின் ஆரமோடு அணிந்து ;
கயில்கடை ஒழுகிய காமர் தூமணி
செயத்தகு கோவையின் சிறுபுறம் மறைத்து ஆங்கு
இந்திர நீலத்து இடையிடை திரண்ட,
சந்திரபாணி தகைபெறு கடிப்பிணை
அம்காது அகவயின் அழகுற அணிந்து ;
தெய்வ உத்தியொடு, செழுநீர் வலம்புரி,
தொய்யகம் புல்லகம், தொடர்ந்து தலைக்கு அணி
மைஈர் ஓதிக்கு மாண்புற அணிந்து ;
கூடலும் ஊடலும் கோவலற்கு அளித்துப்
பாடு அமை சேக்கைப் பள்ளியுள் இருந்தோள் ;

[அந்தரத்துள்ளோர் - வானத்திலுள்ள தேவர்கள் ; அறியா மரபின் – நிலவுலகத்தார் அறியாத வடிவத்தோடு; வந்து காண்குறூஉம் வானவன் விழவும் - இங்கு வந்து காணுகின்ற இந்திரனுடைய விழாவும் ; ஆடலும் கோலமும் – மாதவி ஆடுதலும், அவள் ஆட்டத்திற்கேற்ற கோலமும்; அணியும் - அங்ஙனம் ஆடுதலால் பிறந்த அழகும்; கடைக்கொள - முடிந்து போக, (அதனால் பிறந்த) ; ஊடற்கோலமோடு - வெறுப்பான தோற்றத்தோடு ; இருந்தோன் உவப்ப – இருந்த கோவலன் களிப்படையும்படி ;

பத்துத் துவரினும் - பத்துவகைப்பட்ட துவர்ப்பான பொருளி லும்; ஐந்து விரையினும் - ஐவகைப்பட்ட மணமுள்ள பொருள் களிலும்; முப்பத்து இருவகை ஓமாலிகையினும் - முப்பத்திரண்டு வகையான ஓமாலிகை என்னும் வாசனைப் பொருள்களிலும்; ஊறின நன்னீர் - கிடந்து ஊறின நல்ல நீரினால்; உரைத்த நெய் வாசம் - பூசப்பட்ட தைலத்தின் வாசமானது; நாறு - நாறுகின்ற; இரும் கூந்தல் - பெரிய கூந்தலை; நலம் பெற ஆட்டி - நன்கு நிறம் பெறும் படியாக நீராட்டி; புகையின் புலர்த்திய - அகிற்புகையால் உலர்த் திய; பூ மென் கூந்தலை - பூக்களணிந்த மெல்லிய கூந்தலை; வகை தொறும் - ஐந்து வகையாகப் பகுத்து, ஒவ்வொரு வகையிலும்; மான் மதக் கொழுஞ்சேறு - கஸ்தூரியாகிய கொழுமையான சாந்தினை; ஊட்டி - நன்கு பூசி;

அலத்தகம் ஊட்டிய அம் செம் சீறடி - செம் பஞ்சுக்குழம்பு ஊட்டப்பட்ட அழகிய சிவந்த சிறிய அடிகளில்; நலத்தகு மெல் விரல் - அழகு விளங்கும் மெல்லிய விரல்களுக்கு ஏற்ற; நல் அணி செறீஇ - நல்ல அணிகளைப் பூட்டி;

பரியகம் - பாதசாலம் என்னும் ஒருவகைக் காலணியையும்; நூபுரம் - சிலம்பையும்; பாடகம் - பாடகம் என்னும் அணியினை யும்; சதங்கையையும்; அரியகம் - காற்சரி என்னும் ஒரு வகை அணியையும்; காலுக்கு அமைவுற அணிந்து - அடிகளுக்குப் பொருந் தும்படியாக அணிந்து;

குறங்குசெறி திரள் குறங்கினிற் செறித்து - குறங்குசெறி என் னும் அணியைத் திரண்ட துடைகளில் பூட்டி;

பிறங்கிய முத்து அரை முப்பத்திருகாழ் - இடுப்பில் கட்டப்படு கின்ற பெரிய முத்துக்களால் முப்பத்திரண்டு கோவைகளாகச் செய்த மேகலாபரணத்தை; நிறம்கிளர் பூந்துகில் நீர்மையின் உடீஇ - நீல நிறம் விளங்குகின்ற பூத் தொழிலையுடைய சேலையின் மேல் அழகு பெற உடுத்து;

காமர் கண்டிகை தன்னொடு - காமத்தைத் தருகின்ற மாணிக்க வளையுடன்; பின்னிய - பொற் சங்கிலியில் பின்னப்பட்ட; தூமணி - தூய மணிகளான; தோள்வளை - தோளுக்கு அணியும் முத்து வளைகளை; தோளுக்கு அணிந்து - தோள்களில் அணிந்து;

மத்தக மணியொடு - உச்சியில் வைக்கப்பட்ட மாணிக்கத்தோடு; வயிரம் கட்டிய - வயிரமும் பதிக்கப்பட்ட சித்திரச் சூடகம் - சித்திரத் தொழில் அமைந்த கடகமும்; செம்பொன் கைவளை - செம்

பொன்னால் செய்யப்பட்ட கையிலணியப்படும் வளையலும்; பரியகம்-நவமணிகள் அழுத்திய வளையலும்; வால்வளை – சங்கு வளையலும்; பவளப் பல்வளை – பவளங்களால் ஆன பல வளையல்களும்; (ஆகிய இவற்றை); அரிமயிர் முன்கைக்கு அமைவுற அணிந்து – மெல்லிய மயிர்களையுடைய முன் கையில் அழகு பொருந்த அணிந்து; வாளைப் பகுவாய் வணக்குறு மோதிரம் – வாளை மீனின் பிளவுபட்ட வாய் போல வளைக்கப்பட்ட மோதிரத்தையும்; கேழ்கிளர்; ஒளி வீசுகின்ற; செங்கேழ்கிளர் – செந்நிறம் விளங்குகின்ற; மணி – மாணிக்கத்தாலான; மோதிரம் – மோதிரத்தையும்; வாங்கு – வளைந்து ஓடுகின்ற; வில் - ஒளியையுடைய; வயிரத்து - சுற்றிலும் வயிரத்தையுடைய; மரகதத்தாள்செறி – மரகதம் பதிக்கப்பட்ட தாள்செறி என்னும் மோதிரத்தையும்; காந்தள் மெல்விரல் – காந்தள் பூப் போன்ற மெல்லிய விரல்கள்; கரப்ப அணிந்து – மறையும்படியாக அணிந்து;

சங்கிலி - வீரசங்கிலியையும்; நுண் தொடர் – நுண்ணிய சங்கிலியையும்; பூண்ஞாண் – அணியப்படும் வேறு வடங்களையும்; புனைவினை - அழகு செய்து வேலைப்பாடு நிறைந்த பிற அணிகலங்களையும்; அம் கழுத்து அகவயின் – அழகிய கழுத்தின்கண்; ஆரமோடு அணிந்து – முத்து மாலையோடு அணிந்து;

கயில் கடை - நகையின் முகப்பிலே; ஒழுகிய – தொங்கவிடப்பட்ட; காமர் – விருப்பந்தருகின்ற; தூமணி செயத்தகு - தூய ஒன்பது மணிகளாலும் செய்த சிறப்பினையுடைய; கோவையின் – வடங்களால்; சிறுபுறம் மறைத்து – பிடரியை அழகு செய்து மூடி; ஆங்கு – பின்பு;

இந்திர நீலத்து இடையிடை திரண்ட – இந்திர நீலம் என்னும் மணியின் இடையிடையே பதிக்கப்பட்ட, சந்திரபாணி – வயிரங்களால்; தகைபெறு கடிப்பிணை - அழகு பெற்ற நீலக் குதம்பை என்னும் அணியினை; அம்காது அகவயின் - அழகிய காதிடத்தில்; அழகுற அணிந்து – அழகு மிகும்படி அணிந்து;

தெய்வ உத்தியொடு – சீதேவி என்னும் அணியுடன்; செழுநீர் வலம்புரி – வளம் நிறைந்த தன்மையுடைய வலம்புரிச் சங்கையும்; தொய்யகம் – தொய்யகம் என்னும் அணியும்; புல்லகம் – வடபல்லி தென்பல்லி என்னும் அணிகளுமாகிய; தொடர்ந்த – இவையெல்லாம் ஒன்றோடொன்று அழகுபெறச் சேர்ந்த; தலைக்கு அணி – தலைக்கு அணியும் அணிவகையை; மை ஈர் ஓதிக்கு–மேகம்போன்ற குளிர்ந்த கூந்தலுக்கு; மாண்புற அணிந்து – அழகு மிகும்படி அணிந்து;

கூடலும் ஊடலும் கோவலற்கு அளித்து – புணர்ச்சியையும் ஊடலையும் கோவலனுக்கு மாறி மாறித் தந்து; பாடு அமை சேக்கைப் பள்ளியுள் – படுக்கை அமைந்த இருவரும் சேர்கின்ற பள்ளியுள்; இருந்தோள் – இருந்தவளாகிய மாதவி ;]

### (111-133)

இந்திரவிழாவின், முடிவு நாள் அன்று பௌர்ணமி. நகர மக்கள் எல்லோரும் அன்று நீராடிக் களிக்கக் கடற்கரைக்குக் கும்பல் கும்பலாகப் போய்க் கொண்டிருக்கிறார்கள். இந்தக் கடல் விளையாட்டைக்காண, மாதவியும் கோவலனோடு புறப்படுகிறாள். காலம், நாலாஞ்சாமம். வானத்தில் வெள்ளி வெளிச்சம் தோன்றி, இருளை ஓட்டிற்று. பொய்கைகளில் உள்ள தாமரைப் பூக்களில் உறங்கும் பறவைகள் இசை பாடுகின்றன. கோழி கூவுகின்றது. இந்தக் குளிர்ந்த நேரத்தில் கோவலன் மாலையையும், அணிகளையும் அணிந்து, கோவேறு கழுதையின் மீது ஏறிக்கொள்ள, மான் போன்ற கண்ணையுடைய மாதவி ஒரு பல்லக்கிலேறி, இருவரும் கடற்கரையை நோக்கிப் புறப்படுகின்றார்கள்.

இவர்கள் போகும் நகர வீதிகளின் காட்சிகளைப் பார்ப்போம். கொழுத்த செல்வத்தின் குவியல் நிறைந்த மாளிகைகள், தெருவின் இரண்டு பக்கங்களிலும் காண்கின்றன. இம்மாளிகைகள், திருமகளின் இருப்பிடமோ என்று தோன்றுகின்றன. கடைத் தெருவில், சேடிப் பெண்கள் மைவிளக்கையும், மாணிக்க விளக்கையும் எடுத்து, அறுகம் புல்லையும் நெற்பயிரையும் தெளித்துக் கொண்டு, தாம் அணிந்திருக்கும் அணிகள் ஒலிக்கும்படியாகத் திரிகின்றனர். மருவூர்ப் பாக்கத்திலுள்ள வீதிகளில், கப்பலில் வந்து இறங்கிய செல்வங்கள் நிறைந்திருக்கின்றன. வெண் மணல் நிரம்பிய கடலோரத்தில் உள்ள தெருக்களில், அயல் நாட்டார், தத்தம் நாடுகளிலிருந்து கொண்டு வந்த பல சரக்குகளும் குவிந்து கிடக்கின்றன, இவற்றையெல்லாம் தாண்டிக் கடற்கரையை அடைந்தார்கள்.

## கோவலனும் மாதவியும் நகர வீதி வழியாகக் கடற்கரைக்குப் போவது

**உருகெழு மூதூர் உவவுத் தலைவந்தெனப்,**
**பெருநீர் போகும் இரியல் மாக்களொடு,**

மடல் அவிழ் கானல் கடல் விளையாட்டுக்
காண்டல் விருப்பொடு வேண்டின ளாகிப்,
பொய்கைத் தாமரைப் புள்வாய் புலம்ப,
வைகறை யாமம் வாரணம் காட்ட,
வெள்ளி விளக்கம் நள் இருள் கடியத்,
தார் அணி மார்பனொடு பேர் அணி அணிந்து,
வான வண்கையன் அத்திரி ஏற,
மான் அமர் நோக்கியும் வையம் ஏறிக்;
கோடிபல அடுக்கிய கொழு நிதிக் குப்பை
மாடமலி மறுகின் பீடிகைத் தெருவின்,
மலர் அணி விளக்கத்து மணி விளக்கு எடுத்து, ஆங்கு
அலர் கொடி அறுகும் நெல்லும் வீசி,
மங்லத் தாசியர், தம்கலன் ஒலிப்ப
இருபுடை மருங்கினும் திரிவனர் பெயரும்,
திருமகள் இருக்கை செவ்வனம் கழிந்து;
மகர வாரி வளந்தந்து, ஓங்கிய
நகர வீதி நடுவண் போகிக்;
கலம் தரு திருவின் புலம்பெயர் மாக்கள்
வேலை வாலுகத்து விரிதிரைப் பரப்பின்,
கூலமறுகில் கொடி எடுத்து நுவலும்,
மாலைச்சேரி மருங்கு சென்று எய்தி;

[உரு கெழு மூதூர் — பகைவர்களுக்கு அச்சத்தை உண்டாக்கும் மிகப் பழைய அவ்வூரில்; உவவுத் தலைவந்தென — பௌர்ணமி நாள் வந்தது என்று; பெருநீர் போகும் — கடலாடப் போகின்ற; இரியல் மாக்களொடு — விரைந்து செல்லும் மக்களொடு; மடல் அவிழ் கானல் — தாழை முதலிய பூக்கள் மடல் அவிழ்ந்த கடற்கரைச் சோலையை யுடைய; கடல் விளையாட்டு — கடலில் விளையாடுதலை; காண்டல் விருப்பொடு வேண்டினளாகி - காண்பதை மிகுந்த ஆசையுடன் விரும்பினவளாகி;

பொய்கைத் தாமரை—பொய்கைகளிலுள்ள தாமரைப் பூக்களில் இருக்கும்; புள்வாய் புலம்ப — பறவைகள் வாய்விட்டுக் கூவ; வைகறையாமம் — வைகறையாகிய நாலாஞ் சாமத்தை; வாரணம் காட்ட—கோழி கூவிக் காட்ட; வெள்ளி விளக்கம் நள்ளிருள் கடிய— வானத்தில் வெள்ளி வெளிச்சம் செறிந்த இருளைப் போக்க; தார் அணி மார்பனொடு - மாலை யணிந்த மார்பினையுடைய கோவலனோடு; பேர் அணி அணிந்து — பெரிய அணிகலங்களை அணிந்து; வான வண்கையன் - மழை போன்ற ஈகைவளமுள்ள கையையுடைய

கோவலன்; அத்திரி ஏற – கோவேறு கழுதை மீது ஏறிக்கொள்ள; மான் அமர் நோக்கியும் – மான் போன்ற விருப்பந் தரும் பார்வையையுடைய மாதவியும்; வையம் ஏறி – பல்லக்கில் ஏறி;

கோடி பல அடுக்கிய – பல கோடியாக அடுக்கி எண்ணப்படுகிற; கொழுநிதிக்குப்பை–கொழுத்த செல்வத்தின் குவியலையுடைய; மாடம் மலி மறுகின் – சரக்கு மாளிகைகள் நிறைந்த தெருவினை யுடைய; பீடிகைத் தெருவின் – கடைத்தெருவில்; மலர் அணி – பூக்கள் அணிந்த; விளக்கத்து – மை விளக்கோடு; மணி விளக்கு – மாணிக்கத்தாலான விளக்கையும்; எடுத்து – ஏற்றி; ஆங்கு - அவ்விடத்தில்; அலர் கொடி அறுகும்–படர்ந்த கொடிகளையுடைய அறுகம் புல்லும்; நெல்லும் வீசி – நெற் பயிரையும் தெளித்து; மங்கலத் தாசியர் – ; தம் கலன் ஒலிப்ப – தாம் அணிந்த அணிகலங்கள் ஒலிக்கும்படியாக; இரு புடை மருங்கினும்– தெருவின் இரண்டு பக்கத்திலும்; திரிவனர் பெயரும் – திரிந்து செல்லுகின்ற; திருமகள் இருக்கை – திருமகள் இருக்கும் இடமாகிய அத்தெருவினை; செவ்வனம் கழிந்து - முழுவதும் கடந்து சென்று; மகர வாரி–பெரிய மீன்கள் நிறைந்த கடலின்; வளம் தந்து ஓங்கிய - செல்வமெல்லாம் கொண்டுவரப்பட்டு அதனால் உயர்ச்சியடைந்த; நகர வீதி நடுவண் போகி; நகரத்துத் தெருவின் நடுவில் போய்;

கலம் தரு திருவின் – கப்பல்கள் தந்த செல்வத்தையுடைய; புலம் பெயர் மாக்கள் – தமது தேசத்தை விட்டு வந்த பிறநாட்டு மக்கள்; வேலை வாலுகத்து – கடல் கொண்டு வந்து குவித்த வெள்ளிய மணலை யுடைய; விரி திரைப் பரப்பின் – விரியும் அலைகள் வீசுகின்ற கரையிடத்தில் அமைந்த; கூல மறுகில் – பலவகைச் சரக்குகளையுடைய தெருக்களில்; கொடி எடுத்து நுவலும் – அவ்வச் சரக்குகளுக்குத் தனித்தனியே கொடி எடுத்து அறிவிக்கின்ற; மாலைச்சேரி மருங்கு சென்று எய்தி – வரிசையாக இருக்கும் பிறநாட்டவர் இருப்பிடத்தைப் போய் அடைந்து;

புலம் – தேயம்; வாலுகம் – வெண்மணல்; கூலம் – பல சரக்கு. அதற்குக் கொடி எடுத்தலாவது, இங்கு இன்னின்ன சரக்குகள் உள, அவற்றின் நயம் இவை என்று அறிவிக்கும் கொடிகளை எடுத்தல்.]

## (134–151)

கடற்கரையோரத்தில் காணும் காட்சிகளைப் பார்ப்போம். இன்னும் சரியாகப் பொழுது விடியவில்லை. விழாக்காலமான படியால், இரவு முழுதும் விளக்குகள் ஒரு பக்கம் எரிந்து கொண்டிருக்கின்றன. பொன் வேலை செய்கின்ற தட்டார்கள்,

விளக்குகளுக்கு முன், தங்கள் அருமையான வேலையைச் செய்து கொண்டிருக்கிறார்கள். கப்பல்களுக்குத் துறைமுகத்தின் வழி காட்டும் பெரிய விளக்குகள், ஒளி வீசிக் கொண்டிருக்கின்றன. மீன்களைக் கவர்ச்சி செய்வதற்கு வலையர்கள் கட்டு மரங்களில் விளக்கை ஏற்றி வைத்திருக்கிறார்கள். அயல் நாடுகளிலிருந்து வந்த வியாபாரிகளுடைய கடைகளில் விடி விளக்குகள் எரிந்து கொண்டிருக்கின்றன. பண்டசாலைகளைக் காப்பவர்கள், விளக்குகளைக் கையில் ஏந்திக் காவல் செய்கின்றனர். எங்கு பார்த்தாலும் ஒரே வெளிச்சமும், மக்களின் கூட்டமும் காணப்படுகின்றன. கடலோரத்திலுள்ள வெள்ளிய மணல், விளக்குகளின் ஒளியை அதிகப் படுத்திக் காண்பிக்கிறது. மணல் நிரம்பிய கடற்கரையாயிருந்த போதிலும், அங்கேயுள்ள தாழம்பூச் சோலைகளைப் பார்த்தால், வளப்பம் மிகுந்த மருத நிலம் போல் தோன்றுகின்றது. இவ்வளவு அழகு நிறைந்த கடற்கரையில், மாதவி தன் தோழிகளுடனும், கோவலனுடனும் வந்து சேர்ந்தாள்.

## விடியற்காலையில் கடற்கரைக் காட்சி

வண்ணமுஞ் சாந்தும் மலரும் சுண்ணமும்
பண்ணியப் பகுதியும் பகர்வோர் விளக்கமும்
செய்வினைக் கம்மியர் கைவினை விளக்கமும்
காழியர் மோதகத்து ஊழுறு விளக்கமும்
கூவியர் கார் அகல் குடக்கால் விளக்கமும்
நொடை நவில் மகடூஉக் கடைகெழு விளக்கமும்
இடையிடை மீன்விலை பகர்வோர் விளக்கமும்
இலங்கு நீர் வரைப்பின் கலங்கரை விளக்கமும்
விலங்குவலைப் பரதவர் மீன்திமில் விளக்கமும்
மொழிபெயர் தேத்தோர் ஒழியா விளக்கமும்
கழிபெரும் பண்டம் காவலர் விளக்கமும்
எண்ணு வரம்பு அறியா இயைந்து ஒருங்கு ஈண்டி,
இடிக்கலப்பு அன்ன ஈர் அயிர் மருங்கின்
கடிப்பகை காணும் காட்சிய தாகிய,
விரைமலர்த் தாமரை வீங்குநீர்ப் பரப்பின்,
மருத வேலியின் மாண்புறத் தோன்றும்
கைதை வேலி நெய்தல்அம் கானல்,
பொய்தல் ஆயமொடு பூங்கொடி பொருந்தி;

[வண்ணமும் - எழுதப்படுகின்ற குழம்பும்; சாந்தும் - சந்தனமும்; மலரும் - பூக்களும்; சுண்ணமும் - வாசனைப் பொடிகளும்; பண்ணியப் பகுதியும் - பலவகைப் பண்டங்களும்; (ஆகிய இவற்றை) பகர்வோர் விளக்கமும் – விற்பவர்கள் வைத்திருக்கும் விளக்குகளும்;

செய்வினைக் கம்மியர் – வேலைப்பாடமைய அணிகளைச் செய்யும் தட்டார்; கைவினை விளக்கமும் – வேலை செய்யுமிடத்திலுள்ள விளக்குகளும்;

காழியர் – பிட்டு வாணிகர்; மோதகத்து - பிட்டு விற்பதற்கு எடுத்த; ஊழ் உறு விளக்கமும்; – வரிசை வரிசையாக வைத்த விளக்குகளும்;

கூவியர் - அப்ப வாணிகர்களின்; கார் அகல் – கரிய அகல் விளக்குகளாகிய; குடக்கால் விளக்கமும் - குடத்தண்டில் வைக்கப் பட்ட விளக்குகளும்;

நொடை நவில் – பண்டங்களை விலை கூறுகின்ற; மகடூஉ - மிலேச்ச மகளிர்; கடைகெழு விளக்கமும் – தம் கடைகளில் வைத்த விளக்குகளும்;

இடையிடை மீன் விலை பகர்வோர் விளக்கமும் – ஆங்காங்கு, மீன்களை விலை கூறுவோர் எடுத்த விளக்குகளும்;

இலங்குநீர் வரைப்பின் – விளங்குகின்ற நீரையுடைய கடற் கரையில்; கலம் கரை விளக்கமும் – கப்பல்களுக்கு வழிகாட்டி யழைக்கும் விளக்குகளும்;

விலங்கு வலைப் பரதவர் – குறுக்காக வலை வீசி மீன் பிடிக்கும் வலையர்களின்; மீன் திமில் விளக்கமும் - மீன் பிடிக்கும் கட்டு மரங் களில் வைத்த விளக்குகளும்;

மொழி பெயர் தேத்தோர் – மொழி வேறுபட்ட தேயத்தினின் றும் வந்த அயல் நாட்டார்; ஒழியா விளக்கமும் – பொழுது விடியு மளவும் ஏற்றி வைத்த விளக்குகளும்;

கழிபெரும் பண்டம் - மிக்க பெரும் பண்டங்களையுடைய; காவலர் விளக்கமும் - காவலாளிகள் எடுத்த பண்டசாலை விளக்கு களும்;

எண்ணுவரம்பு அறியா – எண்ணி எல்லை அறியப்படாதனவாய்; இயைந்து ஒருங்கு ஈண்டி – சேர்ந்து ஒன்றாகத் திரண்டு; இடிக்

கலப்பு அன்ன – மாவைக் கலந்தாற் போன்ற; ஈர் அயிர் மருங்கின்– மிகவும் நுண்ணிய மணலின் மேல்; கடிப்பகை காணும் – வெண் சிறுகடுகை இட்டால், அதுவும் தெரியக்கூடிய; காட்சியது ஆகிய – அத்துணை விளக்கம் உடையதாயிருந்த; விரை மலர்த் தாமரை – மணம் வீசும் தாமரை மலர்ந்த; வீங்கு நீர்ப் பரப்பின் – மிக்க நீர்ப் பரப்பினையுடைய; மருதவேலியின் - மருத நிலத்தைப் போல; மாண்புறத் தோன்றும் – சிறப்பு மிகத் தோன்றுகின்ற; கைதை வேலி - தாழம்பூவை வேலியாகவுடைய; நெய்தல் அம் கானல் – அழகிய கடற்கரைச் சோலையில்; பொய்தல் ஆயமொடு பூங்கொடி பொருந்தி – விளையாடுகின்ற தன் தோழிமாரோடு, பூங்கொடியைப் போன்ற மாதவி தானும் சென்று சேர்ந்து.

ஊழ் – வரிசை, முறை; மா – இடிக்கப்பட்ட மாவின் தூள்; அயிர் – நுண்ணிய மணல்; கடி – பேய்; பேயை வேப்பிலையால் ஓட்டுவது வழக்கு; வெண் சிறு கடுகும் பயன் படும்; இரண்டிற்கும் "கடிப் பகை" என்பது பெயர். அதாவது ,பேய்க்குப் பகை;]

## (152–165)

பலவகைப் பண்டங்களை விற்பவர் கூட்டம் ஒரு புறமிருக்கத், துறைமுகத்திலோ, பண்டங்களும் செல்வங்களும் நிறைந்த கப்பல்கள், நிறைந்திருக்கின்றன. புகார் நகரிலுள்ள எல்லா மக்களும் விளையாட்டுக் கோலத்துடன் எங்கு பார்த்தாலும் திரிந்து கொண்டிருக்கிறார்கள். அரச மக்களும், அவருடைய ஏவலாளரும், வாணிப இளைஞர்களும், ஆடல் பாடல் செய்யும் மகளிரும், திரள் திரளாகக் கூடியிருக்கின்றனர். இதற்கென்று அமைக்கப்பட்ட மேடைகளில், ஆடல் பாடல்கள் நடக்கின்றன. காவிரியாற்றில் புதுநீர் வரும்போது, சோழன் கரிகாலன் கொண்டாடும் விழாவானது, எவ்வளவு சிறப்பாக இருக்குமோ, அவ்வளவு சிறப்பான காட்சி, கடற்கரை ஓரத்தில் விளங்குகின்றது. கடலின் ஓசையும் மக்கள் விளையாட்டின் ஓசையும் ஒன்றாகச் சேர்ந்து, ஒரே ஓசையாக ஒலித்துக் கொண்டிருக்கின்றது.

## கடற்கரையில் நகர மக்கள் ஆடல் பாடலுடன் களித்திருப்பது

**நிரை நிரை எடுத்த புரைதீர் காட்சிய**
**மலைப்பல் தாரமும், கடற்பல் தாரமும்**

வளந்தலை மயங்கிய துளங்குகல இருக்கை ;
அரசிளங் குமரரும், உரிமைச் சுற்றமும்,
பரத குமரரும், பல்வேறு ஆயமும்,
ஆடுகள மகளிரும், பாடுகள மகளிரும்,
தோடுகொள் மருங்கின் சூழ்தரல் எழினியும்
விண்பொரு பெரும் புகழ்க் கரிகால் வளவன்
தண்பதம் கொள்ளும் தலைநாள் போல,
வேறு வேறு கோலத்து வேறு வேறு கம்பலை
சாறு அயர் களத்து வீறு பெறத்தோன்றிக்,
கடற்கரை மெலிக்கும் காவிரிப் பேர் யாற்று,
இடம்கெட ஈண்டிய நால்வகை வருணத்து,
அடங்காக் கம்பலை உடங்கு இயைந்து ஒலிப்ப,

[நிரை நிரை எடுத்த - வரிசை வரிசையாகக் குவிக்கப்பட்ட ; புரைதீர் காட்சிய – குற்றமற்ற காட்சியையுடையனவாகிய ; மலைப் பல் தாரமும் – மலையில் விளைந்த பலவகைப் பண்டங்களும் ; கடற் பல் தாரமும் – கடலில் விளைந்த பலவகைப் பண்டங்களும் ; வளம் தலைமயங்கிய - செல்வங்கள் ஒன்றோடொன்று கலந்து கிடக்கின்ற; துளங்கு கல இருக்கை – அசைகின்ற பல கப்பல்கள் தங்கிய துறை முகத்தில் ;

அரசிளங்குமரரும் - இளையவரான அரசமக்களும்; உரிமைச் சுற்றமும் - அவருடைய ஏவலாளரும் ; பரத குமரரும் – இளையவரான வாணிப மக்களும் ; பல்வேறு ஆயமும் – பலவேறு வகைப் பட்ட ஆயமகளிரும் ; ஆடுகள மகளிரும் பாடுகள மகளிரும் - ஆடல் பாடல் செய்து அங்கங்கிருக்கும் மகளிரும் ; தோடு கொள் மருங்கின் – திரளாகவுள்ள இடத்திலெல்லாம் ; சூழ்தரல் எழினியும் – சூழ்ந்து கிடக்கின்ற திரைச்சீலைகளும் (என்றது, ஆடல் பாடல் நடக்குமிடங் களில் உள்ள அழகிய திரைகளை)

விண் பொரு பெரும் புகழ்க் கரிகால் வளவன் – வானத்தை யளாவிய மிக்க புகழுடைய கரிகாற் சோழன் ; தண்பதம் கொள் ளும் - புதுப்புனல் விழாக் கொண்டாடுகின்ற ; தலைநாள் போல – அம் முதல் நாளைப் போல ; வேறு வேறு கோலத்து – வேறு வேறான கோலங்களோடு; வேறு வேறு கம்பலை - வேறு வேறான ஓசைகளும் ; சாறு அயர் களத்து – திருவிழாக் கொண்டாடிய அவ்விடத்தில் ; வீறு பெறத் தோன்றி – சிறப்பு மிகும்படியாகத் தோன்றி ; கடற் கரை மெலிக்கும் – அலையை மோதி மோதிக் கடற்கரையை இடித்து மெலிய வைக்கின்ற ; காவிரிப் பேர் யாற்று – காவிரியாகிய பெரிய

ஆற்றினுடைய; இடம் கெட - இடமெல்லாம் மறையும்படியாக; (என்றது, ஆற்றில் சிறிதும் வெற்றிடம் இல்லாமற் போகும் படி) ஈண்டிய - திரண்டு வந்து கூடிய; நால்வகை வருணத்து - நால் வகைச் சாதியினரின்; அடங்காக் கம்பலை-அடங்காத ஓசைக ளெல்லாம்; உடங்கு இயைந்து ஒலிப்ப - ஒன்ருகச் சேர்ந்து ஒரே ஓசையாக ஒலிக்க;

சாறு - விழா. அயர்தல் - கொண்டாடுதல். உடங்கு - ஒன்ருக ]

## (166-174)

நகர மக்களின் கூட்டம் நிறைந்த கடற்கரையில் உள்ள தாழம்பூச் சோலை ஒன்றில், ஒரு புன்னை மரத்து நிழலில், புது மணல் பரப்பி, அழகான திரை கட்டி, அதன் நடுவே ஒரு வெண் கால் அமளியில், மாதவி கோவலனுடன் இருக்கின்ருள். தன் தோழி வசந்த மாலையின் கையில் உள்ள யாழை, மாதவி தன் கையில் வாங்கி இசையை எழுப்புகிருள்.

### கடலோரத்திலுள்ள சோலையில் மாதவி கோவலனுடன் இன்புற்றிருத்தல்

**கடல்புலவு கடிந்த மடல்பூந் தாழைச்**
**சிறை செய் வேலி அகவயின், ஆங்கு, ஓர்**
**புன்னை நீழல் புதுமணல் பரப்பில்;**
**ஓவிய எழினி சூழ உடன் போக்கி,**
**விதானித்துப் படுத்த வெண்கால் அமளி மிசை,**
**வருந்துபு நின்ற வசந்தமாலைகைத்**
**திருந்து கோல் நல்லியாழ், செவ்வனம் வாங்கிக்,**
**கோவலன் தன்னெடும் கொள்கையில் இருந்தனள்,**
**மாமலர் நெடுங்கண் மாதவி தானென்,**

[கடல் புலவு கடிந்த - கடலினது புலால் நாற்றத்தைப் போக்கிய; மடல் பூந் தாழை - மணம் மிகுந்த மடல் அவிழுகின்ற பூவை யுடைய தாழையினுல்; சிறை செய் வேலி - இயற்கையாகவே வேலி போலத் தடுக்கப்பட்டிருந்த; அகவயின் ஆங்கு - அந்த உட்பட்ட நடுவிடத்தில்; ஓர் புன்னை நீழல் - ஒரு புன்னை மரத்து நிழலில்; புது மணல் பரப்பில் - புதிய மணலாகிய அப் பரப்பிடத்தில்; ஓவிய எழினி - சித்திரம் எழுதப்பட்ட திரைகளை; சூழ உடன் போக்கி - சுற்றிலும் நன்கு கட்டி; விதானித்து - மேலே மேற் கட்டியும் எடுத்து; படுத்த வெண்கால் அமளி மிசை - விரித்த வெள்ளிய காலை யுடைய படுக்கை மீது; வருந்துபு நின்ற - வழி வந்த வருத்தத்தால்

வருந்தி நின்ற; வசந்த மாலை கை-வசந்த மாலையின் கையில் உள்ள; திருந்து கோல் நல்யாழ் - செம்மையான நரம்பினையுடைய நல்ல யாழை; செவ்வனம் வாங்கி – மகிழ்ச்சியான உள்ளத்தோடும் வாங்கி; கோவலன் தன்னொடும் – கோவலனோடும்; கொள்கையின் இருந்தனள் - மகிழ்ச்சியுடன் இருந்தாள்; மா மலர் நெடுங்கண் – அழகிய மலர் போன்ற நீண்ட கண்ணையுடைய; மாதவி தான் –;]

(வெண்பா)

வேலைமடல் தாழை உள் பொதிந்த வெண்தோட்டு
மாலைத் துயின்ற மணிவண்டு—காலைக்
களிநறவம் தாதுஊதத் தோன்றிற்றே காமர்
தெளிநிற வெங்கதிரோன் தேர்

[வேலை – கடற்கரையிலுள்ள; மடல் தாழை – மடல் விரிந்த தாழையின்; உள் பொதிந்த வெண்தோட்டு – உள்ளே செறிந்த வெள்ளிய இதழிலே – மாலைத்துயின்ற மணிவண்டு – மாலை நேரத்திலே தூங்கிய நீலவண்டு; காலை – காலையில்; களிநறவம் தாது ஊத - இன்பம் தரும் தேனையும் மகரந்தப் பொடியையும் ஊதும்படி; காமர் தெளிநிற வெங்கதிரோன்தேர் – அழகான தெளிந்த நிறத்தையும் வெண்மையான கதிர்களையும் உடைய சூரியனது தேர்; தோன்றிற்று. கிழக்கு வானத்திலே உதித்தது. (அதாவது சூரியன் உதித்தான்.]

கடலாடுகாதை முற்றிற்று.

# கானல்வரி

கானல் வரி என்பது, கடற்கரையைப் பற்றிப் பாடும் வரிப் பாட்டு என்று சொல்லப்படும் ஒருவகை இசைப்பாட்டு. கோவலனும் மாதவியும் கடற்கரைச் சோலையிலிருந்து, வரிப்பாட்டுக் களைப் பாடியதும், கோவலன் மாதவியை விட்டுப் பிரிந்து போவதும் முதலான செய்திகள் இதில் சொல்லப்படுகின்றன.

## (1-20)

கோவலனும் மாதவியைப்போல், இசைக்கலையில், பயிற்சி பெற்றவன். இருவரும் கடற்கரைச் சோலையை அடைந்தவுடன், மாதவி தன் தோழி வசந்தமாலை கையிலிருந்த யாழை வாங்கித் தொழுது, அதன் நரம்புகளை நன்கு ஆராய்ந்து, இசை எழுப்பிக் கோவலன் கையில் கொடுத்தாள். அரங்கேற்று காதையில் நாட்டிய இலக்கணத்தைப்பற்றி விரிவாகச் சொன்னதுபோல், இந்த இடத்தில் இசையிலக்கணக் குறிப்புக்களில் சிலவற்றை நூலாசிரியர் எடுத்துக் காட்டுகிறார். இவர் குறிக்கும் விஷயங் களுக்குப் பொருள் தெரிவது கடினமாயிருந்தாலும், இக் குறிப்புக்களால் பண்டைத் தமிழ் மக்கள், இசைக்கலையில் எவ் வளவு முன்னேற்ற மடைந்திருந்தார்கள் என்பதை ஒருவாறு அறியலாம். மாதவி கொடுத்த யாழைக் கையில் வாங்கிக் கோவலன் காவேரி யாற்றைப் பற்றிய பாடல்களையும், கடற் கரையைப்பற்றிய பாடல்களையும் பாடத் தொடங்கினான்.

### கோவலன் யாழ் வாசிப்பது

#### கட்டுரை

**சித்திரப் படத்துள் புக்குச், செழுங்கோட்டின் மலர் புனைந்து,**
**மைத்தடம் கண் மணமகளிர் கோலம்போல் வனப்புஎய்திப்,**
**பத்தரும் கோடும் ஆணியும் நரம்பும் என்று**
**இத்திறத்துக் குற்றம் நீங்கிய யாழ், கையில் தொழுது வாங்கிப்**
**பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல்,**
**கண்ணிய செலவு, விளையாட்டுக், கையூழ்,**
**நண்ணிய குறும்போக்கு என்று நாட்டிய**
**எண்வகையால் இசை எழீஇப்,**

**பண்வகையால் பரிவு தீர்ந்து,**
**மரகதமணித் தாள்செறிந்த மணிக்காந்தள் மெல்விரல்கள்,**
**பயிர் வண்டின் கிளைபோலப் பல்நரம்பின் மிசைப்படர,**
**வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல்,**
**சீருடன் உருட்டல், தெருட்டல், அள்ளல்,**
**ஏருடைப் பட்டடை என இசையோர் வகுத்த**
**எட்டுவகையின், இசைக்கரணத்துப்**
**பட்டவகை, தன்செவியின் ஓர்த்து,**
**ஏவலன் ; பின் பாணி யாது? எனக்**
**கோவலன் கை யாழ் நீட்ட, அவனும்**
**காவிரியை நோக்கினவும், கடற்கானல் வரிப்பாணியும்**
**மாதவிதன் மனம்மகிழ, வாசித்தல் தொடங்குமன்,**

[சித்திரப் படத்துள் புக்கு – சித்திரத் தொழில் செய்யப்பட்ட உறையினுள் புகுந்து ; செழுங்கோட்டின்-அழகிய யாழின் தண்டில் ; மலர் புனைந்து – மலர்கள் சூட்டி ; மைத்தடம் கண் – மை திட்டிய அகன்ற கண்களையுடைய ; மணமகளிர் கோலம்போல் – திருமணக் கோலங் கொண்ட பெண்களின் கோலத்தைப் போல; வனப்பு எய்தி- மிக்க அழகைப் பெற்று ; பத்தரும் கோடும் ஆணியும் நரம்பும் என்று இத்திறத்து – பத்தர், கோடு, ஆணி நரம்பு என்று சொல்லப்பட்ட இப்பிரிவுகளில் ; குற்றம் நீங்கியயாழ் – நால்வகைக் குற்றங்களும் நீங்கிய யாழை; கையில் தொழுது வாங்கி–தன் கையால் தொழுது வாங்கி;

பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு என்று நாட்டிய எண் வகையால் இசை எழீஇ – யாழை வாசிப்பதற்குமுன் அதை ஆராய்வதற்காகச் செய்யும் இந்த எட்டு வகையாலும் அதில் இசை எழுப்பிப் பார்த்து ; பண்வகையால் பரிவு தீர்ந்து – பண்ணின் வகைகளில் ஏற்படும் குற்றங்கள் நீங்கப் பெற்று ;

மரகத மணித்தாள் செறிந்த – மரகத மணியால் செய்த மோதிரங்கள் அணிந்த ; மணிக் காந்தள் மெல்விரல்கள் – அழகிய நீலநிறமுடைய காந்தள் பூப் போன்ற மெல்லிய விரல்கள் : பயிர் வண்டின் கிளைபோல – இசைபாடும் வண்டின் கூட்டம்போல ; பல்நரம்பின் மிசைப்படர - பலவாகிய யாழின் நரம்புகளின்மேல் செல்ல; வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், சீருடன் உருட்டல், தெருட்டல், அள்ளல், ஏர் உடைப்பட்டடை என – ; இசையோர் வகுத்த – இசை நூல் புலவரால் வகுக்கப்பட்ட; எட்டு வகையின் இசைக் கரணத்துப் பட்ட - எட்டு வகையாக இசைத் தமிழில் சொல்லப்பட்ட ; வகை – முறைகளை ; தன் செவியின் ஓர்த்து – தன் செவியினால் எல்லாக் குணங்களும் அவ் யாழில் பொருந்தியுள்ளனவா என்று ஆராய்ந்து ;

ஏவலன்—(கோவலனைப் பார்த்து) இதில் இசை பாடுங்கள் என்று ஏவவில்லை; பின் — மற்று; பாணி யாது என — வாசிக்கும் தாள வகை யாது அறிய வேண்டுகிறேன் என்பவள்போல; கோவலன் கை யாழ் நீட்ட - கோவலன் கையிலே யாழை நீட்டிக் கொடுக்க; அவனும் — ; காவிரியை நோக்கினவும் — காவிரியைப் பற்றிய பாடல்களையும்; கடற்கானல் வரிப்பாணியும் — கடற்கரைச் சோலையைப் பற்றிய வரிப்பாடல்களையும்; மாதவி தன் மனம் மகிழ — மாதவியின் மனம் மகிழும்படியாக; வாசித்தல் தொடங்கும் — யாழை வாசிக்கத் தொடங்கினான்.

கட்டுரை என்பது இக்காதைக்கு ஒரு முன்னுரை போல்வது. படம் — மூடும்துணி; அதாவது உறை. பத்தர் என்பது யாழின் அடிப்பகுதியில் பருத்து அகன்ற ஒரு உறுப்பு. கோடு — தண்டு. ஆணி — யாழின் உறுப்புக்களைப் பொருத்துவதற்காகப் பூட்டப்பட்டிருக்கும் ஆணிகள். திறம் — வகை. கோடு, ஆணி, நரம்பு என்பன அவற்றைப் பற்றிய குற்றங்களைக் குறித்து நிற்கும் பெயர்கள். கண்ணிய — ஆராயப்பட்ட; நண்ணிய — பெருமை பொருந்திய; தாள் — மோதிரம்; கிளை — இனம்; சீர் — இசையின் ஒழுங்கு; வார்தல் — சுட்டுவிரல் யாழின்மேல் செய்கின்ற தொழில்; வடித்தல் — சுட்டு விரலும் பெருவிரலும் சேர்ந்து யாழின் நரம்புகளை உட்புறமாகவும், வெளிப் புறமாகவும் ஆராய்தல்; உந்தல் — நரம்புகளைத் தடவுதல்; உறழ்தல் - நரம்புகளையெல்லாம் வரிசையாக இசை எழுப்பிப் பாராமல், ஒரு நரம்பையோ, இரு நரம்பையோ இடையிட்டு ஆராய்தல் தெருட்டல், அள்ளல், பட்டடை — இவைகளுக்குப் பொருள் தெரியவில்லை; பாணி — தாளம்; மன் — அசை.]

## காவிரியாற்றைப் பற்றிய பாடல்கள்

### (2)

சோழ நாட்டிற்குச் செல்வத்தையும் வளத்தையும் தருவது காவேரி யாறு. கோவலன் யாழை வாசித்துப் பாடும் போது, முதலாவதாக, இவ்வாற்றைப் பற்றிப் பாடுகின்றான். காவேரி யாறு சோழநாட்டு மக்களுக்கு மட்டுமல்லாமல், அந்நாட்டிற்கு வரும் எல்லா மக்களுக்கும் தன் செல்வத்தைக் கொடுக்கும். காவேரிநாட்டின் அரசனாகிய சோழன், தன் புகழை நிலை நாட்டக் கங்கை பாயும் நாடு வரையில் செல்லுகின்றான். தன் கணவனாகிய சோழன், கங்கையாகிய மற்றொரு பெண்ணை நாடிப் போனான் என்று காவேரி பிணங்கவில்லை. எங்கே போனாலும்

தன்னுடைய நாட்டில் செங்கோல் முறை தவறுமல் ஒழுங்காகச் சோழ மன்னன் ஆட்சி செய்வதால், கற்புடைய நீ இவ்வாறு உன் கணவனிடம் பிணங்காமல் இருக்கிருய் என்று அறிந்தேன். காவேரியே! நீ வாழ்வாயாக!

(3)

சோழ மன்னன், தன் புகழை நிலை நாட்டப் பாண்டியனுக்குரிய கன்னியாகுமரி வரையில் சென்றுன். எங்கே சென்றுலும், தன் நாட்டைத் தவறுமல் செங்கோல் செலுத்தி வந்தான். கயல் மீன்களைக் கண்ணுகவுடைய காவிரியே! உனது தலைவன் உன்னை விட்டுக் கன்னியாகுமரியை நோக்கிப் போன போதும் நீ அவனுடன் பிணங்கவில்லை. மனவுறுதியுள்ள பத்தினிகளின் பெருங் கற்புத் திறமை இப்படித்தான் இருக்குமென்று அறிந்தேன். காவிரியே! நீ வாழ்வாயாக!

(4)

காவேரி யாற்றில் எல்லாக் காலங்களிலும், வெள்ளம் நிறைந்து ஓடும். ஆகையால், காவேரி பாயும் இடமெல்லாம், மக்களின் உழைப்பும், ஓசையும் நிறைந்திருக்கும். இரு பக்கங்களிலும், நிலத்தை உழவு செய்பவர் ஓசையும், ஆற்றின் நீர் மதகுகளின்மேல் மோதும் ஓசையும், வாய்க்கால்களில் வெள்ளம் நிறைந்து, உடைத்துக் கொண்டு ஓடும் ஓசையும், புது நீர் விழாவில் விழாக் கொண்டாடுவோர் ஓசையும் எப்பொழுதும் ஆரவாரிக்கும்படி நீர் ஓடும் காவிரியே! இவ்வளவு சிறப்பிற்கும் காரணம், உன் தலைவனுன சோழ மன்னன், தன் வீரர்களைக் கொண்டு, நாட்டைப் பாதுகாத்துச் செங்கோல் செலுத்துவதே யாகும். காவிரியே! நீ நெடிது வாழ்வாயாக!

**திங்கள் மாலை வெண்குடையான்,**
**சென்னி செங்கோல் அது ஓச்சிக்,**
**கங்கை தன்னைப் புணர்ந்தாலும்,**
**புலவாய் வாழி! காவேரி!**
**கங்கை தன்னைப் புணர்ந்தாலும்**
**புலவாது ஒழிதல், கயற்கண்ணுய்!**
**மங்கை மாதர் பெருங்கற்பு என்று**
**அறிந்தேன் வாழி! காவேரி!**

[திங்கள் - சந்திரனைப் போன்று ஒளி வீசுகின்ற; மாலை - முத்து மாலை யணிந்த; வெண்குடையான் - வெண் கொற்றக் குடையை உடையவனாகிய; சென்னி - சோழ மன்னன்; செங்கோல் அது ஓச்சி - தனது செங்கோலை ஒழுங்காகச் செலுத்தி; கங்கை தன்னைப் புணர்ந்தாலும் - கங்கையாற்றைக் கூடினாலும்; (என்றது, தனக்குரிய நாட்டை நன்கு காத்துப், பின் கங்கையாறு வரையுள்ள மற்ற நாடுகளையும் வயப்படுத்தி ஆண்டாலும்) காவேரி - ஏ, காவிரியே! புலவாய் - நீ வெறுத்துப் பிணங்க மாட்டாய்: (என்றது, காவிரி தான் பாயும் நாட்டிற்கு மட்டுமல்லாமல், மற்ற நாடுகளையும் காப்பாற்றக் கூடிய அவ்வளவு வளமுடையது) வாழி - ஆதலால் நீ வாழ்வாயாக.

கங்கை தன்னைப் புணர்ந்தாலும் - அவன் அவ்வாறு கங்கை யாற்றைக்கட்டி ஆண்டாலும்; புலவாது ஒழிதல் - அதற்கென்று மாறுபடாமல் இருத்தல்; கயல் கண்ணாய் - கயல் மீன்களாகிய கண்ணையுடையவளே!; மங்கை மாதர் பெருங் கற்பு என்று - மங்கையாகிய மென்மைத் தன்மையுடைய உன் பெரிய கற்பேயாகும் என்று; காவேரி - காவேரியே; அறிந்தேன் வாழி - நான் அறியலானேன் நீ வாழ்வாயாக; ஓச்சுதல் - செலுத்துதல்;]

**மன்னும் மாலை வெண்குடையான்,**
**வளையாச் செங்கோல் அது ஓச்சிக்,**
**கன்னி தன்னைப் புணர்ந்தாலும்,**
**புலவாய் வாழி! காவேரி!**
**கன்னி தன்னைப் புணர்ந்தாலும்,**
**புலவாது ஒழிதல், கயற்கண்ணாய்!**
**மன்னு மாதர் பெருங்கற்பு என்று**
**அறிந்தேன் வாழி! காவேரி!**

[மன்னும் மாலை வெண்குடையான் - நிலை பெற்ற முத்துமாலை கட்டிய வெண் கொற்றக் குடையுடைய சோழ மன்னன்; வளையாச் செங்கோல் அது ஓச்சி - வளையாத செங்கோலைச் செலுத்தி; கன்னி தன்னைப் புணர்ந்தாலும் - குமரியாற்றைக் கூடினாலும்; காவேரி - காவிரியே; புலவாய் - நீ வெறுத்துப் பிணங்கமாட்டாய்; வாழி - (ஆதலால்) நீ வாழ்வாயாக.

கன்னி தன்னைப் புணர்ந்தாலும் - குமரியை அவன் சேர்ந்தாலும்; புலவாது ஒழிதல் - நீ வெறுத்துப் பிணங்காமல் இருத்தல்; கயல் கண்ணாய் - கயல் மீன்களாகிய கண்களையுடையோய்; மன்னும் மாதர் பெருங் கற்பு என்று அறிந்தேன் - நிலைபெற்ற அழகிய உன் உறுதியான கற்புத்தன்மை என்று அறிந்து கொண்டேன்; வாழி காவேரி - நீ வாழ்வாயாக!

முன் பாட்டில் கங்கை என்றதற்கு மாருக இப்பாட்டில் கன்னி என்ருர். கன்னி – குமரியாறு. இது தெற்கில் குமரிமலைப் பக்கத்தில் ஓடிய ஒரு ஆறு. அம்மலையோடு, அதனையும் கடல் கொண்டதாக வரலாறு உண்டு.]

**உழவர் ஓதை, மதகு ஓதை, உடைநீர் ஓதை, தண்பதம்கொள்**
**விழவர் ஓதை, சிறந்து ஆர்ப்ப நடந்தாய் வாழி! காவேரி!**
**விழவர் ஓதை சிறந்து ஆர்ப்ப நடந்த எல்லாம், வாய்காவா**
**மழவர் ஓதை வளவன்தன் வளனே வாழி! காவேரி!**

[உழவர் ஓதை – உழவர்களின் ஓசையும்; மதகு ஓதை – மதகுகளில் உண்டாகும் ஓசையும்; உடைநீர் ஓதை – நீர் உடைத்துக் கொண்டு ஓடுவதால் உண்டாகும் ஓசையும்; தண்பதம்கொள் – புது நீர் விழாவில் நீராடுகின்ற; விழவர் ஓதை – விழாக் கொண்டாடுவோர் ஓசையும்; சிறந்து ஆர்ப்ப – சிறப்போடு ஆரவாரிக்கும்படி; காவேரி–; நடந்தாய் – நீ சென்ருய்; வாழி – நீ வாழ்வாயாக!

விழவர் ஓதை சிறந்து ஆர்ப்ப – விழாக் கொண்டாடுவோர் ஓசை சிறந்து ஆரவாரிக்கும்படி; நடந்தவெல்லாம் – நீ ஓடிய ஓட்டத்திற்கெல்லாம்; வாய்காவா – மதில் வாயிலைக் காவல் செய்ய வேண்டாத; மழவர் ஓதை – வீரர்களின் ஓசையையுடைய; வளவன் தன் – சோழனுடைய; வளனே – வளமான செங்கோலாட்சியே (காரணம் ஆதலால்) காவேரி –; வாழி – நீ நெடிது வாழ்வாயாக!

மதிலைக் காவல் செய்ய வேண்டாதபடி, வீரர்கள் ஆரவாரிப்பு எங்கும் நிறைந்திருப்பதை, வாய்காவா மழவர் ஓசை என்ருர். தண்பதங் கொள்ளுதல் – புது நீராடுதல்.]

## புகார் நகரத்தைப் பற்றிய பாடல்கள்

நாட்டின் வளமைக்குக் காரணமான காவிரியின் சிறப்பை முதலில் பாடிவிட்டுப், பின்னர் தலைநகரான புகார் நகரத்தின் சிறப்பைப் பாடுகின்ருர்.

(5)

தலைவன் தன் காதலியை விட்டுப் பிரியும் போது, மீண்டும் விரைவில் திரும்பி வருவதாகச் சொன்னவன், வெகு நாள் கழித்து வந்தான். தலைவியின் தோழி அவனைப் பார்த்து, வேறொருவனைப் பற்றிச் சொல்வதுபோல் சொல்லுகிருள்,

"கடற்கரையோரத்தில், தலைவர் தன் தலைவியை விட்டுப் பிரியும்போது, கடல் தெய்வத்தைச் சுட்டிக்காட்டி, அதன் மேல் பல முறை ஆணையிட்டு, வெகு சீக்கிரத்தில் திரும்பி வருவதாக உறுதி மொழிகளைச் சொல்லிப் பிரிந்தார். இவ்வளவு ஆணை மொழிகளைச் சொல்லியும், அவர் தலைவியை வஞ்சித்து விட்டார். நாங்கள் தலைவரைப் பற்றிப் பெருமையாக நினைத்திருந்தோம். இம்மாதிரி வஞ்சிக்கும் குணம் உள்ளவரென்று ஏழையாகிய நாங்கள் தெரிந்துகொள்ளவில்லை. மெய்பேசுவதுபோல, ஒருவர் பேசினால், நாங்கள் அவரை எளிதில் நம்பி விடுவோம். புகார் நகரமாகிய எங்கள் ஊரிலுள்ள ஆம்பற் பூக்களும்கூட, இப்படி ஏமாந்து விடும். கடற்கரையில் உள்ள வெண்ணிறமுள்ள சங்குகளையும், முத்துக்களையும் சந்திரனும் அதனைச் சுற்றிய நட்சத்திரங்களும் ஆகும் என்று ஏமாந்து நினைத்து, இந்த ஆம்பற் பூக்கள் கட்டவிழ்ந்து மலர்ந்து விடும். இவ்விதமாக, வஞ்சனை என்பதே அறியாத காவிரிப்பூம் பட்டினமே எங்கள் ஊராகும்"

(6)

தோழி, பின்னும் சொல்லுகின்றாள். "நானும் தலைவியும் உப்பங்கழிச்சோலையில் இருக்கும் போது, அயலார் ஒருவர் வந்து, என் கையில் சில பொருள்களைத் தந்து, தலைவிக்குக் கொடுக்கும்படிச் சொன்னார். பலதடவைகளிலும், என்னைத் தேடி வந்த அவர், இப்போது வருவதில்லை. அவருடைய காரியமோ நிறைவேறி விட்டது. இப்பொழுது, நாங்கள் அவரைத் தேடிப் போகும்படியா யிருக்கின்றது. இந்த நிலைமைக்கு நாங்கள் வருவோமென்று நாங்கள் நினைக்கவே யில்லை. எங்கள் ஊரில் இவ்விதமான வஞ்சகங்கள் நடப்பது வழக்கமில்லை. எங்கள் ஊரிலுள்ள வண்டுகளும்கூடப் பெண்களின் கண்களுக்கும், தாமரைப் பூவுக்கும் வேறுபாடு தெரியாமல் தடுமாறுவதுண்டு. அப்படிப்பட்ட ஊராகிய காவிரிப்பூம் பட்டினமே எங்கள் ஊர்."

(7)

தோழி மேலும் கூறுகின்றாள். "எங்கள் ஊரில் வஞ்சகமென்பதே இல்லையாதலால், உண்மைக்கும், வஞ்சகத்திற்கும் வேறுபாடு தெரிந்து கொள்ளக் கூடாதவர்களாக நாங்கள் இருக்கின்றோம். இக் காரணத்தால் தான், அந்தத் தலைவருடைய வஞ்சகத்தை நாங்கள் தெரிந்துகொள்ள முடியவில்லை.

எங்கள் ஊரில் கடற்கரையோரத்தில், சிறு பெண்கள், வண்டல் மண்ணினால் பொம்மைகளைச் செய்து விளையாடிக்கொண்டிருப்பார்கள். அலைவீசும் போது, கரையில் வந்து மோதுகின்ற சங்குகள், இப்பொம்மைகளின் மீது விழுந்து அவைகளை அழித்துவிடும். இதைக்காணும் இச்சிறுமிகள் தம்மார்பில் அணிந்திருக்கும் பூமாலைகளைக் கழற்றி, அலைகளைத் தடுத்து விடலாம் என்றெண்ணி அம்மாலைகளை வீசி, அலைகளை யடிப்பார்கள். மாலைகளிலுள்ள பூக்கள் எங்கு பார்த்தாலும் சிதைந்து கிடக்கும். அவ்வழியில் வருபவர்கள் நிலத்தில் கிடக்கும் இப் பூக்களைப் பார்த்து, இவை அழகிய பெண்களின் கண்களே என்று நினைத்து, நின்று விடுவார்கள். இத்தகைய வஞ்சகமில்லாத புகார் நகரே எங்கள் ஊராகும்.

**கரிய மலர் நெடுங்கண் காரிகை முன்,**
**கடல் தெய்வம் காட்டிக் காட்டி**
**அரியசூள் பொய்த்தார், அறன் இலர், என்று**
**ஏழையம் யாங்கு அறிகோம் ஐய ?**
**விரிகதிர் வெண்மதியும் மீன்கணமும்**
**ஆமென்றே, விளங்கும் வெள்ளைப்**
**புரிவளையும், முத்தும் கண்டு, ஆம்பல்**
**பொதி அவிழ்க்கும் புகாரே எம்மூர்.**

[கரியமலர் நெடுங்கண் - மலர்போன்ற அழகிய நீண்ட கண்களை யுடைய; காரிகை முன் - தலைவி முன்பாக; கடல் தெய்வம் காட்டிக் காட்டி - கடலில் வாழுகின்ற வருணனாகிய கடல் தெய்வத்தைப் பல முறை காட்டிக் காட்டி; அரியசூள் - அருமையான ஆணைமொழிகளைக் கூறி; பொய்த்தார் - பின் வஞ்சித்து விட்டார். அறன் இலர் என்று - அவர் அறக்குணம் இல்லாதவர் என்று; ஐய -; ஏழையம் - ஏழையாகிய நாங்கள்; யாங்கு அறிகோம் - எவ்வாறு அறிவோம்!

விளங்கும் வெள்ளைப் புரிவளையும் முத்தும் கண்டு - ஒளி வீசுகின்ற வெள்ளை நிறமான கோடுகளையுடைய சங்குகளையும், முத்துக்களையும் பார்த்து; விரிகதிர் வெண்மதியும் மீன் கணமும் ஆம் என்றே - இவை விரிந்த கதிர்களையுடைய வெண்ணிறமான சந்திரனும், அதனைச் சுற்றிய நட்சத்திரங்களும் ஆகுமென்று தவறாகக் கருதி; ஆம்பல் - ஆம்பல் பூ; பொதி அவிழ்க்கும் - கட்டு அவிழ்கின்ற; புகாரே - காவிரிப்பூம் பட்டினமே; எம்மூர் - எமது ஊராகும்; (ஆதலால் நாங்களும் பிழையாக உணரும் அறிவுடையோம்.)

பொதி - கட்டு. புரி - வரி, கோடு.]

காதல ராகிக் கழிக்கானல்
கையுறை கொண்டு எம்பின் வந்தார் ;
ஏதிலர் தாமாகி, யாம் இரப்ப
நிற்பதை யாங்கு அறிகோம் ஐய ?
மாதரார் கண்ணும் மதிநிழல் நீர்
இணை கொண்டு மலர்ந்த நீலப்
போதும் அறியாது வண்டு ஊசல்
ஆடும் புகாரே எம்மூர்.

[காதலர் ஆகி – என் தலைவிமேல் காதல் உடையவராகி ; கழிக் கானல் – உப்பங்கழியின் சோலையில், கையுறை கொண்டு–கை யுறை யாகச் சில பொருள்களைக் கொண்டு; எம்பின் – எம்மைப் பின் தொடர்ந்து; வந்தார் – அன்று ஒருவர் வந்தார்; ஏதிலர் தாமாகி யாம் இரப்ப - இப்பொழுது அயலார் போலாகி நாங்கள் அவரைக் கெஞ்சும்படி ; நிற்பதை – நிற்கவேண்டி வருவதை ; யாங்கு அறி கோம் ஐய – நாங்கள் முன்பே எவ்வாறு அறிவோம் ஐயா ?

மாதரார் கண்ணும் – பெண்களின் கண்களையும்; மதிநிழல் - சந்திரனின் ஒளியால்; நீர் இணைகொண்டு மலர்ந்த - தண்ணீரின் அளவாக மலர்ந்த; நீலப் போதும் – நீலோற்பலப் பூவையும்; அறி யாது - வேறுபாடு தெரியாமல்; வண்டு ஊசலாடும் புகாரே – வண்டு கள் தடுமாறுகின்ற காவிரிப்பூம் பட்டினமே; எம்மூர் - எமது ஊராகும்.

கையுறை – கைப்பொருள். ஏதிலர் – பகையும் நட்பும் இல்லாத அயலார். நீர் இணைகொண்டு–தண்ணீர் உயரும் அளவாகத் தானும் உயர்ந்து வளர்ந்து.]

மோது முதுதிரையான் மொத்துண்டு,
போந்து, அசைந்த முரல்வாய்ச் சங்கம்
மாதர் வரிமணல்மேல் வண்டல்
உழுது அழிப்ப மாழ்கி, ஐய,
கோதை பரிந்து அசைய, மெல்விரலால்
கொண்டு ஓச்சும் குவளைமாலைப்
போது சிறங்கணிப்பப் போவார்கண்
போகாப் புகாரே எம்மூர்.

[மோது முது திரையால் – கரையை மோதுகின்ற பழைய பெரிய அலைகளால்; மொத்துண்டு – தாக்கப்பட்டு; போந்து – கரையில் வந்து; அசைந்த – அந்நீரால் அசைந்து கொண்டிருந்த;

முரல்வாய்ச் சங்கம் – ஒலிக்கின்ற வாயையுடைய சங்குகள் ; மாதர்-பெண்கள் ; வரி மணல்மேல் வண்டல் உழுது அழிப்ப – அழகிய மணல் மீது செய்து விளையாடும் வண்டற் பொம்மையைப் பேர்த்து அழித்து விடுதலால் ; மாழ்கி – அப்பெண்கள் மனங்கலங்கி ; கோதை - தம் மார்பில் அணிந்த மாலை ; பரிந்து அசைய - அறுந்து அசையும்படி ; மெல்விரலால் – மெல்லிய விரல்களால் ; கொண்டு ஓச்சும் – கையில் கொண்டு வீசுகின்ற ; குவளை மாலை – குவளைப் பூக்களாலாகிய மாலையின் ; போது - உதிர்ந்த பூக்கள் ; சிறங்கணிப்ப - கண்களைச் சிறங்கணித்துப் பார்த்தாற்போலக் கிடப்ப ; போவார்கள் - அவ்வழியே போவோர் ; கண்போகா – அவற்றைக் கண் என்று கருதி அப்பால் போகாத ; புகாரே - காவிரிப் பூம் பட்டினமே ; ஐய – தலைவ ! ; எம்மூர் – எமது ஊராகும்.

முரல்வு - சங்குகள் தம்முள் இருக்கும் முத்துக்களை ஈனுதற்கு வருந்தும் வருத்தத்தால் செய்த ஒலி. சிறங்கணித்துப் பார்த்தல் – ஒரு வகையாச் சாய்த்துப் பார்க்கும் கடைக்கண் பார்வை.]

## தலைவன் தோழனுக்குச் சொல்வது

## (8–10)

ஒருநாள் தலைவன் கடற்கரைக்குப் போனான். அங்குப் புன்னை மரத்தின் பூக்கள் உதிர்ந்து கிடக்கும் அழகிய சோலை ஒன்று இருந்தது. அந்தச் சோலையில் நின்று கொண்டிருந்த செம்படவப் பெண்ணைப் பார்த்து அவள் மீது அடங்காத காதலைக் கொண்டு விட்டான். எப்பொழுது பார்த்தாலும், அவளுடைய நினைவாகவே இருக்கிறது அவனுக்கு. இந்த நிலைமையில் தன் தோழனைப் பார்த்துச் சொல்லுகிறான்.

"கடற்கரைச் சோலையில், நான் கண்ட பெண்ணின் முகம் முழுச்சந்திரனைப் போல் ஒளி பொருந்தியது. கயல் மீன் போன்ற அவளுடைய நீண்ட கண்கள், எனக்கு நோயை உண்டு பண்ணி விட்டன. இந்த நோயை எந்த மருந்தாலும் தீர்க்க முடியாது. அழகுத் தேமல் படர்ந்த அவளுடைய மார்புகளால் தான் எனக்கு இது தீரவேண்டும்.

"சோலையின் அருகில் கருவாடு உலர்ந்து கொண்டிருந்தன. அவைகளைப் பறவைகள் தின்று விடாதபடி ஒரு தாழம் பூக்கொம்பைக் கையில் பிடித்துக் கொண்டு, அவள் பறவைகளை

ஓட்டிக் கொண்டிருந்தாள். அவள் பிடித்திருந்த கொம்பில் வண்டுகளும் மொய்த்துக் கொண்டிருந்தன. சோலையில் பூக்களின் மணம் வீசிக்கொண்டிருந்தது. அந்தச் சோலை, ஒரு பெண் தெய்வம் வாழுமிடம் என்று எனக்குத் தெரியவில்லை. தெரிந்திருந்தால் அங்குச் சென்றிருக்க மாட்டேன். தவறி அங்கு சென்ற காரணத்தால் தான் இப்பொழுது வருந்த வேண்டியிருக்கிறது.

"சோலையின் அருகில், செம்படவர்கள் வாழும் சேரியில், கருவாட்டைப் பாதுகாப்பதற்குக் கையில் மலர்க் கொம்பைப் பிடித்து, ஒரு பெண்ணுருவாக எமன் தான் வந்திருக்க வேண்டும். குளிர்ந்த கடற்கரைச் சோலையில், கொடிய எமன் நடமாடுவான் என்று எனக்குத் தெரிந்திருந்தால், நான் அங்கே சென்றிருக்க மாட்டேன். அங்கே சென்ற குற்றத்தால் தான் நான் இவ்வாறு வருந்த வேண்டியிருக்கிறது" என்று இவ்விதமாகத் தலைவன் தன் காம நோயைப் பற்றித் தோழனிடம் முறையிட்டான்.

**துறைமேய் வலம்புரி,**
**தோய்ந்து, மணல் உழுத தோற்றம், ஆய்வான்**
**பொறைமலி பூம்புன்னைப்**
**பூவுதிர்ந்து நுண்தாது போர்க்கும் கானல்,**
**நிறைமதி வாள்முகத்து நேர்கயற்கண் செய்த**
**உறைமலி உய்யா நோய்,**
**ஊர்சுணங்கு மென் முலையே தீர்க்கும் போலும்!**

[துறை மேய் வலம்புரி - கடல் துறையில் ஊறுகின்ற வலம்புரிச் சங்கு; தோய்ந்து மணல் உழுத தோற்றம்–படிந்து மணலில் உழுத தோற்றத்தை; ஆய் வான் பொறை மலி பூம் புன்னை – அழகியவான மளாவிய சுமையான மிக்க பூக்களையுடைய புன்னை மரத்தின்; பூ உதிர்ந்து - பூக்களிலிருந்து உதிர்ந்து; நுண் தாது – நுண்ணிய தாதுக்கள்; போர்க்கும் - மறைக்கின்ற; கானல்-கடற்கரைச் சோலையில்; நிறைமதி வாள் முகத்து - முழுச் சந்திரனைப் போன்ற ஒளி பொருந்திய முகத்திலுள்ள; நேர் கயல் கண் – நீண்ட கயல் மீன் போன்ற இவள் கண்கள்; செய்த – உண்டு பண்ணின; மலி உறை உய்யா – மிகுந்த மருந்தாலும் தீர்க்க முடியாத; நோய்–என் காதல் நோயை; ஊர் சுணங்கு மென் முலையே – அழகிய தேமல் பரவிய மெல்லிய அவள் மார்பே; தீர்க்கும் போலும் - தீர்க்க வல்லவை போலும்.

சங்கு மணலில் உழுத தோற்றமாவது, அது மணலில் ஊர்ந்து சென்றதால் விளைந்த கோடுகள். அவற்றின் மேல் புன்னை மரத்தின் தாதுக்கள் விழுந்து மூடிவிடும். அவ்வளவு பூ மலிந்த சோலை என்பது கருத்து. சங்கு உழுத கோடுகளைப் புன்னை மரத்து நுண்ணிய தாதுக்கள் விழுந்து மூடி விட்டன என்றதனால், இம் மெல்லிய சாயலையுடைய தலைவி, தலைவனுடைய அறிவும் திடமுமுள்ள நெஞ்சைக் கலக்கி விட்டாள் என்னும் கருத்து, குறிப்பாகச் சொல்லப் பட்டது. உறை – மருந்து]

**நிணம் கொள் புலால் உணங்கல்**
**நின்று, புள் ஓப்புதல் தலைக்கீடாகக்,**
**கணம் கொள் வண்டு ஆர்த்து உலாம்**
**கன்னி நறும் ஞாழல் கையில் ஏந்தி,**
**மணம் கமழ் பூங்கானல் மன்னி, மற்று ஆண்டு ஓர்**
**அணங்கு உறையும் என்பது,**
**அறியேன்; அறிவேனேல் அடையேன் மன்னோ!**

[நிணம் கொள் புலால் உணங்கல் – கொழுப்போடு கூடிய தசைகளின் வற்றலாகிய கருவாடுகளுக்கு; நின்று – காவலாக நின்று; புள் ஓப்புதல் – அவற்றில் படியும் பறவைகளை ஓட்டி விடுவதை; தலைக்கீடாக – ஓர் காரணமாகக் கொண்டு; கணம் கொள் – கூட்டமாக இருக்கின்ற; வண்டு ஆர்த்து உலாம் – வண்டுகள் ஒலித்துத் திரிகின்ற; கன்னி நறும் ஞாழல் – அழியாத நறுமணத்தையுடைய தாழம் பூவை; கையில் ஏந்தி – கையில் பிடித்துக் கொண்டு; மணம் கமழ் பூங் கானல் – மணம் வீசுகின்ற பூக்களையுடைய கடற்கரைச் சோலையில்; மன்னி – நிலை பெற்று; ஆண்டு ஓர் அணங்கு உறையும் என்பது அறியேன் - அங்கு ஒரு பெண் தெய்வம் வாழும் என்பதை நான் அறியேன்; அறிவேனல் – அறிந்திருந்தால்; அடையேன் – அங்குச் சென்றிருக்க மாட்டேன்; மன் - ஆனால் தவறிச் சென்று இப்பொழுது வருந்துகிறேன்.

உணங்கல் – வற்றல்; தலைக்கீடு – பொய்யாகத் தன்மேல் ஒரு காரணத்தை இட்டுக் கொள்வது; கன்னி – அழியாத் தன்மை; கன்னி ஞாழல் என்பது மடல் அவிழாத புதுப் பூக்களைக் கொண்ட தாழை. மற்று – அசை; மன் என்னும் சொல், நடக்க வேண்டாத ஒரு தொழில் நடந்து விட்டால், "நடந்து விட்டது; என் செய்வது" என்ற கருத்துடைய இடங்களில் வரும்.]

**வலைவாழ்நர் சேரி வலை உணங்கும்**
**முன்றில் மலர்கை ஏந்தி,**
**விலைமீன் உணங்கல் பொருட்டாக**

**வேண்டு உருவம் கொண்டு, வேறோர்**
**கொலை வேல் நெடுங்கண் கொடுங் கூற்றம் வாழ்வது,**
**அலைநீர்த் தண் கானல்**
**அறியேன்; அறிவேனேல் அடையேன் மன்னோ!**

[வலை வாழ்நர் சேரி – வலை வீசி வாழ்கின்ற வலைஞர்களின் சேரியில்; வலை உணங்கு முன்றில் – மீன் வலை காய்கின்ற வீட்டு வாயிலில்; மலர் கை ஏந்தி – கையில் மலரை ஏந்தி; விலை மீன் உணங்கல் பொருட்டாக – விற்கின்ற மீன் வற்றலின் (கருவாடு) காரணமாக; வேண்டு உருவம் கொண்டு – தாம் விரும்பிய வேற்றுருவத்தோடு; வேறோர் – வேறொரு; கொலை வேல் நெடுங்கண் – கொல்லும் வேல் போன்ற நீண்ட கண்ணையுடைய; கொடுங் கூற்றம்– கொடிய எமன்; வாழ்வது – வாழ்கின்ற இடம்; அலை நீர் தண் கானல் – அலை புரளும் நீரையுடைய குளிர்ந்த கடற்கரைச் சோலையில் என்று; அறியேன் – யான் முன்பு அறியேன்; அறிவேனேல் – அறிந்திருப்பேனாயின்; அடையேன் – அங்குச் சென்றிருக்க மாட்டேன்; மன் – அது தவறி மாறாக முடிந்தது.]

## தலைவியின் அழகு

## (11–13)

தலைவியின் அழகைத் தலைவன் பலவாறாகப் புகழ்ந்து பேசுகிறான். அவளுடைய முகம் சந்திரனைப் போன்று இருக்கிறது. அவளுடைய கண்கள் கயல் மீனை எழுதினாற் போல் இருக்கின்றன. மேகத்தைப் போல் கருமையாய் இருக்கிறது அவள் கூந்தல். காமனுடைய தொழில் முழுவதையும், அவள் முகத்தில் ஓவியன் எழுதி விட்டானோ என்று, எல்லோரும் வியப்படைய வேண்டும். அவளுடைய முகத்தைப் பார்த்தால், சந்திரன் தன்னை விழுங்கும் பாம்பிற்குப் பயந்து வானத்தை விட்டுச், செம்படவர் வாழும் இந்தச் சிறிய ஊருக்கு ஓடிவந்து விட்டானோ என்று தோன்றுகிறது.

கடற்கரையில் அலைகள் சங்குகளை வீசி எறியும் ஆரவாரம் நிறைந்திருக்கிறது. இந்த வேடிக்கையைப் பார்த்துக் கொண்டு இரண்டு பக்கமும் மருண்டு ஓடுகின்ற இவள் கண்கள் கொடிய எமனைத் தோன்றுகின்றனவே! செம்படவர்கள் வசிக்கும் இந்தச் சிறிய ஊரில், எமனே, ஒரு இளம்பெண் உருவாக வந்து விட்டானோ! இது என்ன வியப்பு!

தலைவியை எமனுக்கு உவமையாகச் சொல்லி விட்டோமே என்று தலைவன் சிந்திக்கிறான். இவ்வளவு அழகான ஒரு இளம் பெண்ணை எமனுக்கு ஒப்பாகவா சொல்வது? இல்லை, இவள் ஒரு தெய்வப் பெண்ணாகவே இருக்க வேண்டும். ஒரு தேவதைதான், அழகிய கூந்தலையுடைய ஒரு பெண்வடிவு கொண்டு, புலால் மீது படுகிற பறவைகளை ஓட்டிக் கொண்டிருக்கிறது. என்ன இந்த வியப்பு!

**கயல் எழுதி, வில் எழுதிக், கார் எழுதிக், காமன்**
**செயல் எழுதித், தீர்ந்த முகம் திங்களோ காணீர்!**
**திங்களோ காணீர்! திமில் வாழ்நர் சீறூர்க்கே,**
**அங்கண் வானத்து அரவு அஞ்சி வாழ்வதுவே.**

[கயல் எழுதி – கயல் மீனை எழுதி; வில் எழுதி - வில்லின் உருவத்தையும எழுதி; கார் எழுதி – கரிய மேகத்தையும் எழுதி; காமன் செயல் எழுதி – காமனுடைய தொழிலையும் எழுதி; தீர்ந்த முகம் – ஆக எல்லா வேலைப்பாடுகளும் நிறைந்த முகம்; திங்களோ காணீர் – சந்திரனோ என்று வியக்கும்படி இருக்கின்றது, இதனைக் காண்பீராக! திங்கள் - சந்திரன்; அம் கண் நேர் வானத்து – அழகிய இடத்தையுடைய நீண்ட வானத்தில்; அரவு அஞ்சி – தன்னைப் பிடிக்கும் பாம்பிற்கு அஞ்சி; திமில் வாழ்நர் – மீன் படகில் மீன் பிடித்து வாழுவோரின்; சிறூர்க்கு – சிறிய ஊரில்; வாழ்வது - வாழ்கின்றது; காணீர் – ;]

**எறிவளைகள் ஆர்ப்ப இருமருங்கும் ஓடும்**
**கறைகெழு வேல் கண்ணோ, கடுங்கூற்றம் காணீர்!**
**கடுங்கூற்றம் காணீர்! கடல்வாழ்நர் சீறூர்க்கே,**
**மடம் கெழு மென் சாயல் மகளாயதுவே.**

[எறிவளைகள் ஆர்ப்ப – கரையில் அலைகள் வீசி எறியும் சங்குகள் ஆரவாரிப்பதைப் (பார்த்து): இரு மருங்கும் ஓடும் – இரண்டு பக்கமும் மருண்டு மருண்டு ஓடுகின்ற; கறைகெழு வேல் – இரத்தக்கறையுடைய வேலைப் போன்ற; கண்ணோ – கண்களோ; கடும் கூற்றம் – கொடிய எமனாக இருக்கின்றது; காணீர் – ; கடுங் கூற்றம் - எமனே; கடல் வாழ்நர் சீறூர்க்கு - கடலில் வலை வீசி வாழுகின்றவர்களுடைய இச்சிறிய ஊருக்கு; மடம் கெழு – இளமை பொருந்திய; மென் சாயல் – மெல்லிய தன்மையுடைய; மகள் ஆயது – பெண்ணுருவாக வந்துள்ளது; காணீர் - ;]

**புலவு மீன் வெள் உணங்கல் புள் ஓப்பிக், கண்டார்க்கு**
**அலவ நோய் செய்யும் அணங்கு இதுவோ காணீர்,**

அணங்கு இதுவோ காணீர்! அடும்பு அமர் தண்கானல்,
பிணங்கு நேர் ஐம்பால் ஓர் பெண் கொண்டதுவே.

[புலவு மீன் வெள் உணங்கல் – புலால் நாற்றம் வீசும் மீனின் வெள்ளை நிறமான கருவாடுகளில், புள் ஓப்பி - படுகின்ற பறவைகளை ஓட்டி; கண்டார்க்கு – பார்ப்பவர்களுக்கு; அலவ நோய் செய்யும் – தடுமாற்றமாகிய காமநோயைச் செய்கின்ற; அணங்கு இது – தெய்வப் பெண்ணாகிய இவளை; காணீர் –; அணங்கு – தீண்டி வருத்தும் தெய்வமே; அடும்பு அமர் தண் கானல் – அடும்ப மரம் அடர்ந்த குளிர்ந்த கடற்கரைச் சோலையில்; பிணங்கு – நெருங்கிய; நேர் ஐம்பால் – நீண்ட ஐந்து பிரிவாக்கப்பட்ட கூந்தலையுடைய; ஓர் பெண் கொண்டது – ஒரு மானிடப் பெண்ணாகி வந்திருக்கிறாள்; இதுவோ காணீர் –;]

## தலைவன் தன் தோழனிடம் தன் நோய்க்குக் காரணம் கூறுவது

## (14–16)

தலைவியைக் கண்டு காதல் கொண்ட தலைவன், ஒரே கவலையால் நோய் பிடித்தவன் போல் இருந்தான். இதைப் பார்த்த அவன் தோழன், உன்னை வருத்துகின்ற நோய் என்ன என்று கேட்டான். அதற்குத் தலைவன் சொல்லுகிறான்; "தோழனே! என் நோய்க்குக் காரணம் சொல்லுகிறேன் கேள். புதிய மணல் நிறைந்து நறுமணம் வீசும் மலர்ச் சோலையில், அலைகள் பரந்து ஓடுகின்ற கடலோரத்தில், சங்குகள் நிறைந்த நீர்த் துறையில், தன்னந் தனியாக ஒரு பெண் திரிந்து கொண்டிருந்தாள். அவளுடைய இனிய மொழிகளும், பருத்த வனப்பு மிக்க மார்பும் முழுநிலாவைப் போன்ற முகமும், வளைந்த புருவங்களும் நுண்ணிய இடையும், நறுமணம் நிறைந்த கூந்தலும், கயல் மீன்கள் போன்ற கண்களும், இளம் பற்களும் ஆகிய இவைகள் தாம், என்னை வருந்தச் செய்து எனக்கு நோயைக் கொடுத்தன. இதுவே, எனது நோய்."

பொழில்தரு நறுமலரே, புதுமணம் விரிமணலே,
பழுது அறு திருமொழியே, பணை இள வனமுலையே,
முழுமதி புரை முகமே, முரி புரு வில் இணையே,
எழுது அரும் மின் இடையே எனை இடர் செய்தவையே

[பொழில் தரு நறுமலரே – சோலையில் பூத்த மணம் நாறுகின்ற மலர்களும்; புது மணம் விரி மணலே - புதிய மணம் வீசப் பரந்த மணலும்; பழுது அறு திருமொழியே – குற்றமற்ற இனிய மொழிகளும்; பணை இளவன முலையே - பருத்த வனப்பு மிக்க இளம் முலைகளும்; முழுமதி புரை முகமே – முழுநிலாப் போன்ற அழகிய முகமும்; முரி புரு வில் இணையே – வளைந்த புருவங்களாகிய இரண்டு வில்களும்: எழுது அரும் மின் இடையே – படத்தில் எழுதுவதற்கு அரிய மின்னல் போன்ற மெல்லிய இடையும் (ஆகிய இவையே): எனை இடர் செய்தவையே – என்னை வருந்தச் செய்தவை.]

**திரைவிரி தருதுறையே, திருமணல் விரி இடமே,**
**விரைவிரி நறுமலரே, மிடைதரு பொழிலிடமே,**
**மருவிரி புரிகுழலே, மதிபுரை திருமுகமே,**
**இருகயல் இணைவிழியே எனை இடர் செய்தவையே**

[திரை விரிதரு துறையே – அலைகள் பரந்தோடுகின்ற கடலின் துறைகளும்; திருமணல் விரியிடமே – அழகிய மணல் பரந்த இடமும்; விரைவிரி நறுமலரே – மணம் வீசுகின்ற நல்ல மலர்களும்; மிடைதரு பொழிலிடமே – அடர்ந்த சோலையின் இடங்களும்; மருவிரி புரிகுழலே – மணம் வீசுகின்ற ஐந்து வகையாகப் பிரித்த கூந்தலும்; மதிபுரை திருமுகமே – திங்களைப் போன்ற அழகிய முகமும்; இரு கயல் இணை விழியே – இரு கயல் மீன்களைப் போன்ற இரட்டையான விழிகளும் (ஆகிய இவையே); எனை இடர் செய்தவையே – என் உள்ளத்தை வருத்தம் செய்தவை,

மிடைதல் – நெருங்குதல். மரு - மணம்.]

**வளைவளர் தரு துறையே, மணம் விரிதரு பொழிலே,**
**தளை அவிழ் நறுமலரே, தனியவள் திரியிடமே,**
**முளை வளர் இள நகையே முழுமதி புரைமுகமே**
**இளையவள் இணை முலையே எனை இடர் செய்தவையே.**

[வளைவளர் தருதுறையே - சங்குகள் நிறைகின்ற நீர்த் துறைகளும்; மணம் விரிதரு பொழிலே - நறுமணம் வீசுகின்ற சோலைகளும்; தளை அவிழ் நறுமலரே – கட்டவிழ்ந்த நறுமணம் வீசும் மலர்களும்; தனி அவள் திரி இடமே - தனியாக அவள் திரிகின்ற இடமும்; முளை வளர் இளநகையே - முளைத்து வளரும் அவள் இளம் பற்களும்; முழுமதி புரைமுகமே - முழுநிலாவைப் போன்ற அழகிய முகமும்; இளையவள் இணைமுலையே - அம்மங்கையின் ஒன்றுக் கொன்று எதிராக வளர்ந்த மார்புகளும் (ஆகிய இவையே); எனை இடர் செய்தவையே - என்னை வருந்தச் செய்தவை.]

## காதலன் மாதவியிடம் தன் காதலைக் கூறுவது

(17–19)

பல தடவைகளில், கடற்கரைச் சோலையில், தலைவியைக் கண்டு, அவள் அழகில் மயங்கிய தலைவன், கடைசியில் அவளை அடைந்து விட்டான். இருவருக்கும், நல்ல நேசம் உண்டாகி விட்டது. இதுவரையில், அவளை எமனென்றும், கொலைத் தொழிலுள்ள வேலென்றும் பலவிதமாகத் தோழனிடம் கூறி னான். ஆனால், இப்பொழுது காதலியிடம் விளையாட்டாய்ப் பேசுகிறான்.

"கடலுக்குள் புகுந்து அங்கிருக்கும் மீன்களைக் கொன்று, உன்தமையன்மார் வாழ்கின்றார்கள். நீயோ, என் நெஞ்சில் புகுந்து என் உயிரை வருத்தி வாழ்கின்றாய். உன்னுடைய தந்தை கொடிய கண்களையுடைய வலையினால், மீன்களைப் பிடித்து, அவற்றின் உயிர்களைக் கொல்வான். நீயோ நீண்ட கண்களாகிய வலையால் என்னைப் பிடித்து என் உயிரைக் கொல்லு கின்றாய். கடல் நீரைக் கிழித்து ஓடுகின்ற படகினால், உன் தமையன்மார், மீன்களின் உயிரைக் கொல்லுவார்கள். நீயோ வளைந்த உன் புருவத்தால், என் நெஞ்சைக் கிழித்து என்னைக் கொல்லுகிறாய். நீ செய்யும் இந்தக் கொடுமையான தொழிலுக்கு உனக்குத் தண்டனை உண்டாகும். என்னவென்றால், கட்டுக் கடங்காது பெருத்த உன் மார்பின் கனத்தை தாங்காமல், மின்னலைப் போன்ற உனது நுண்ணிய இடை முறிந்து விடும். ஆகையால் என்னை வருத்தாதே."

**கடல்புக்கு உயிர் கொன்று வாழ்வர் நின் ஐயர் ;**
**உடல்புக்கு உயிர் கொன்று வாழ்வைமன் நீயும் ;**
**மிடல்புக்கு அடங்காத வெம் முலையோ பாரம் !**
**இடர்புக்கு இடுகும் இடை இழவல் கண்டாய் !**

[கடல் புக்கு – கடலில் சென்று, உயிர் கொன்று – அங்குள்ள மீன்களின் உயிரைக் கொன்று; வாழ்வர் நின் ஐயர் - உன் தமையன் மார் உயிர் வாழ்வர்; நீயும் –, உடல் புக்கு – என்னுடைய உடலில் புகுந்து (நெஞ்சில்புகுந்து); உயிர் கொன்று வாழ்வை – என் உயிரை வருத்தி வாழ்கின்றாய்; மன் - இது இரங்கத்தக்கது; மிடல் புக்கு அடங்காத - செருக்குப் புகுந்து அடங்காது வளர்ந்த; வெம் முலையோ – விருப்பந்தரும் உனது மார்புகளோ; பாரம் – மிகச்

சுமையுடையன; இடர்புக்கு - துன்பத்திலே உழந்து; இடுகும் இடை - வருந்துகின்ற இடுப்பை; இழவல் கண்டாய் - நீ இழந்து விடாதே;

வெம்மை - விருப்பம். இடுகும் - வருந்தும்.]

**கொடும்கண் வலையால் உயிர் கொல்வான் நுந்தை;**
**நெடும்கண் வலையால் உயிர் கொல்வைமன் நீயும்;**
**வடம்கொள் முலையால் மழை மின்னுப் போல,**
**நுடங்கி உகும் மென் நுசுப்பு இழவல் கண்டாய்;**

[கொடும் கண் வலையால் - கொடிய கண்களையுடைய வலையினால்; நுந்தை - உன் தந்தை; உயிர் கொல்வான் - மீனின் உயிரைக் கொல்வான்; நீயும்-; நெடும் கண் வலையால் - நீண்ட கண்களாகிய வலையினால்; உயிர் கொல்வை-என்னுடைய உயிரைக்கொல்லுவாய்; மன் - இது இரங்கத்தக்கது; வடம் கொள் முலையால் - முத்தாரம் புரளும் மார்பின் சுமையால்; மழை மின்னுப்போல-மேகத்தினிடத்தில் மின்னல் போல்; நுடங்கி உகும்-அசைந்து விழுகின்ற; மெல் நுசுப்பு-மெல்லிய இடுப்பினை; இழவல் கண்டாய்-இழந்து விடாதே;]

**ஓடும் திமில் கொண்டு உயிர் கொல்வர் நின் ஐயர்;**
**கோடும் புருவத்துஉயிர் கொல்வை மன் நீயும்;**
**பீடும் பிறர் எவ்வம் பாராய்; முலை சுமந்து**
**வாடும் சிறு மென் மருங்கு, இழவல் கண்டாய்!**

[ஓடும் திமில் கொண்டு - நீரைக்கிழித்து ஓடுகின்ற மீன் படகினால்; நின் ஐயர் - உன் தமையன் மார்; உயிர் கொல்வர் - மீனின் உயிரைக் கொல்லுவர்; நீயும்-; கோடும் புருவத்து உயிர் கொல்வை - வளைந்த உன் புருவத்தால் காண்பார் உயிரைக் கொல்லுகின்றாய்; மன் - இது இரங்கத்தக்கது; பீடும் - உனது பெருமை என்பதையும்; பிறர் எவ்வம் - பிறர் துன்பத்தையும்; பாராய் -; முலை சுமந்து வாடும் சிறு மென் மருங்கு - நின் முலைகளைச் சுமந்து வாடும் சிறிய மெல்லிய உன் இடுப்பினை; இழவல் கண்டாய் - இழந்து விடாதே!]

## தலைவியைப் பற்றித் தலைவன் தானே பேசிக் கொள்வது

### (20-22)

கடற்கரைச் சோலையில் காதலித்த செம்படவப் பெண்ணின் மீது அடங்காத ஆசையைக் கொண்டு விட்டான் தலைவன். அவளை விட்டுப் பிரிய மனம் வரவில்லை. இந்த நிலைமையில், தனக்குத்தானே சொல்லுகின்றான்.

"பவளத்தாலாகிய உலக்கையைக் கையில் பிடித்து, வெண்ணிறமான முத்துக்களாகிய அரிசியை இவள் குத்துவாள். புலால் வீசுகின்ற கடற்கரையில், புன்னை மரத்து நிழலில், அன்ன நடை நடப்பாள். தேன் நிறைந்த நீலோற் பலப் பூவின் தண்டுகளைக் கையில் ஏந்திப் புலாலை உண்ணவரும் பறவையை வெருட்டுவாள். ஆனால், இவளுடைய வேல் போன்ற கண்களோ, மிகவும் கொடியன" என்று இவ்விதமாகத் தனக்குள்ளே நினைத்துக் கொண்டு சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறான்.

**பவள உலக்கை கையால் பற்றித்,**
**தவள முத்தம் குறுவாள் செங்கண்**
**தவள முத்தம் குறுவாள் செங்கண்**
**குவளை அல்ல, கொடிய கொடிய;**

[பவள உலக்கை – பவளத்தாலாகிய உலக்கையை; கையால் பற்றி – கையால் பிடித்துக்கொண்டு; தவளமுத்தம் – வெண்ணிறமான முத்துக்களாகிய அரிசியை; குறுவாள் – குத்துகின்ற இவளுடைய; செங்கண் – சிவந்த கண்கள்; தவளமுத்தம் குறுவாள் செங்கண் –; குவளை அல்ல கொடிய கொடிய – குவளை மலர்கள் அல்ல, அவை கொடியன, கொடியன.]

**புன்னை நீழல் புலவுத் திரைவாய்,**
**அன்னம் நடப்ப நடப்பாள் செங்கண்**
**அன்னம் நடப்ப நடப்பாள் செங்கண்**
**கொன்னே வெய்ய, கூற்றம் கூற்றம்:**

[புன்னை நீழல் - புன்னை மரத்து நிழலில்; புலவுத் திறவாய் – புலால் வீசுகின்ற அலை வீசும் கரையில்; அன்னம் நடப்ப – அன்னம் இவள் நடையைப் பார்த்து நடக்கும்படி; நடப்பாள் - அழகாக நடக்கின்ற இவளின்; செங்கண் – சிவந்த கண்கள்; அன்னம் நடப்ப நடப்பாள் செங்கண் –; கொன்னே வெய்ய – மிகவும் கொடியன; கூற்றம் கூற்றம் – எமன், எமன்!]

**கள்வாய் நீலம் கையின் ஏந்திப்;**
**புள்வாய் உணங்கல் கடிவாள் செங்கண்**
**புள்வாய் உணங்கல் கடிவாள் செங்கண்**
**வெள்வேல் அல்ல, வெய்ய வெய்ய;**

[கள்வாய் நீலம் - தேன் வாய்ந்த நீலோற்பலப் பூவை; கையில் ஏந்தி – கையில் பற்றிக்கொண்டு; புள் வாய் உணங்கல் – கருவாட்டின் மீது வருகின்ற பறவையை; கடிவாள் செங்கண் – வெருட்டு

பவளின் சிவந்த கண்கள் ; புள்வாய் உணங்கல் கடிவாள் செங்கண் – ; வெருட்டுபவளின் சிவந்த கண்கள் ; வெள் வேல் அல்ல – வெள்ளை நிறமான வேல்கள் அல்ல; வெய்ய வெய்ய – அவை கொடியன, கொடியன,]

## தலைவியின் நடை யழகு

(23)

இப்படித் தன் காதலன் சிந்தித்துக் கொண்டிருப்பதைப் பார்த்துத் தலைவி, விளையாட்டாக ஓடுகிறாள். தலைவன் அதைக் கண்டு, சொல்லுகிறான்.

" அழகிய அன்னமே! இந்தக் கடற்கரையில், ஒரு பெண் விளையாடித் திரிகிறாள். நீ அவளுடன் சேராதே"

**சேரல் ; மட அன்னம் ! சேரல் ; நடை ஒவ்வாய் ;**
**சேரல் ; மட அன்னம் ! சேரல் ; நடை ஒவ்வாய் ;**
**ஊர் திரை நீர் வேலி உழக்கித் திரிவாள் பின்,**
**சேரல்; மட அன்னம் ! சேரல்; நடை ஒவ்வாய்.**

[சேரல் மட அன்னம் – அழகிய அன்னமே நீ அவளுடன் சேராதே ; சேரல் – சேராதே ; நடை ஒவ்வாய் – அழகிய நடையில் நீ அவளைப் போல் ஆகமாட்டாய் ; சேரல் மட அன்னம் சேரல் நடை ஒவ்வாய் – ; ஊர் திரை நீர் வேலி – அலைகள் புரளும் கடலை வேலி யாகக் கொண்ட இவ்வுலகத்தாரை ; உழக்கி – வருத்தி ; திரிவாள் பின் – திரிகின்ற இவள் பின் ; சேரல் மட அன்னம் – அழகிய அன்னமே சேராதே ; சேரல் – நீ சேராதே ; நடை ஒவ்வாய்–அவள் நடைக்கு உன் நடை ஒப்பாகாது.]

## மாதவி யாழை வாங்கிப் பாடுதல்

(24)

### கட்டுரை

இதுவரையில் கோவலன் பாடிய பாட்டுக்கள், காதலில் மூழ்கி இருந்த ஒருவன், தான் காதலிக்கும் ஒரு பெண்ணைப் பார்த்துப் பாடுவதுபோல் இருந்தன. உண்மையில், மாதவி யின் மேல் இருக்கும் மையலால், அவன் இப்படிப் பாடினான். இப்பாட்டுக்களைக் கேட்ட மாதவிக்குச் சந்தேகம் உண்டாகி விட்டது. இவன் வேறொரு பெண்ணை மனதில் எண்ணி

இப்படிப் பாடுகிறான் என்று அவள் நினைத்து விட்டாள். வீம்புக்கென்றே தானும் இம்மாதிரிக் குறிப்பைக் காட்ட வேண்டுமென்று நினைத்து, வெளிப்பார்வைக்கு, மகிழ்ச்சி யடைந்தவள் போல் பாசாங்கு செய்து, யாழைத் தன்கையில் வாங்கினாள். தானும் வேறொரு காதலனை நினைத்தது போல், கானல் வரிப் பாட்டுக்களைப் பாடத் தொடங்கினாள். மாதவியின் இனிய இசையைக் கேட்டு, நிலமகளும் வியப்படைந்தாள். மக்களின் உள்ளமும் புளகாங்கிதம் அடைந்தன. யாழின் இசையோடு சேர்ந்த இவளுடைய குரல், அவ்வளவு இனிமையாக இருந்தது.

**ஆங்குக்,**
**கானல்வரிப் பாடல் கேட்ட மான்நெடுங்கண் மாதவியும்,**
**'மன்னும் ஓர் குறிப்பு உண்டு; இவன் தன் நிலை மயங்கினன்' [எனக்**
**கலவியால் மகிழ்ந்தாள் போல் புலவியால் யாழ் வாங்கித்**
**தானும் ஓர் குறிப்பினள் போல், கானல்வரிப் பாடல் பாணி**
**நிலத் தெய்வம் வியப்பு எய்த, நீள் நிலத்தோர் மனமகிழக்,**
**கலத்தொடு புணர்ந்தமைந்த கண்டத்தால் பாடத் தொடங்கும் [மன்.**

[ஆங்கு – அவ்விடத்தில்; கானல்வரிப்பாடல் கேட்ட – கோவலன் பாடிய கானல்வரிப் பாடல்களைக் கேட்ட; மான்நெடுங்கண் மாதவியும்–மான்போன்ற பெரிய நீண்ட கண்ணையுடைய மாதவியும்; இவன் தன் நிலை மயங்கினன் – இவன் தனது நிலையினின்று கலங்கி மாறினன்; மன்னும் ஓர் குறிப்பு உண்டு என – நிலையான வேறோர் குறிப்பும் இவன் உள்ளத்தில் உண்டு என்று கருதி; (வேறொருத்தி மீது விருப்பம் சென்றது என்று) கலவியால் மகிழ்ந்தாள் போல் – புணர்ச்சியால் களித்தவளைப் போல; புலவியால் யாழ்வாங்கி – ஊடல் வெறுப்போடு யாழைத் தன் கையில் வாங்கி; தானும் ஓர் குறிப்பினள் போல் – தானும் வேறொரு குறிப்புடையவள் போல; கானல்வரிப் பாடல் பாணி – கானல் வரிப் பாடலாகிய பாட்டை; நிலத்தெய்வம் வியப்பெய்த – நிலமகள் வியக்கும்படியும்; நீள் நிலத்தோர் மனம் மகிழ – நீண்ட உலகத்து மக்கள் உள்ளங்குளிரவும்; கலத்தோடு – யாழின் இசையோடு, புணர்ந்து அமைந்த– சேர்ந்து பொருந்திய; கண்டத்தால் பாடத் தொடங்குமன் – குரலோடு பாடத் தொடங்கினாள்.

மாதவியைக் கோவலன் பிரியப் போவதால் கண்ணகிக்கு நலம் உண்டாகும் என உலகோர் மகிழவும், பிரியாத இருவர் பிரிவது கண்டு நிலமகள் வியப் பெய்தவும் பாடத்தொடங்கினாள் மாதவி

என்று சொல்லலாம். இன்னும் உலக முழுமையும் இதுவரை கேட்டிராத அவ்வளவு இனிமையாகப் பாடினளாதலால், நிலமகள் வியப்பெய்தினள் என்றும், உலகோர் கேட்டுக் கேட்டு மகிழ்ந்து திளைக்குமாறு பாடினதால், அவர்கள் மனம் மகிழ்ந்தனர் என்றும் பொருள் செய்யலாம், மன் – அசை.]

## காவிரியாற்றின் சிறப்பு

(25–27)

கோவலன் பாடத் தொடங்கியபோது முதலில் காவேரி ஆற்றின் சிறப்பைப் பற்றிப் பாடினன். அது போலவே மாதவியும் காவேரியின் மகிமையை முதலில் பாடுகின்றாள். காவேரியை ஒரு பெண்ணாகக் கூறினாள். ஆற்றங்கரையில் வண்டுகள் ஒலிப்பது, கைவளையல்களின் ஒலி போல் இருந்தது. நீரில் மிதந்து வந்த பூக்கள் பெண்களின் ஆடைபோல் விளங்கின. ஆற்றில் உள்ள கயல் மீன்கள், பெண்களின் விழிகள் போலப் பிரகாசித்தன. இந்தக் கோலத்துடன் ஆறு ஓடுவது ஒரு பெண் எக்களிப்புடன் அசைந்து நடப்பது போல இருந்தது. இப்படி இவள் களித்து நடப்பதற்கு, அவள் கணவனான சோழ மன்னனின் செங்கோல்தான் காரணம்.

**மருங்கு வண்டு சிறந்து ஆர்ப்ப,**
**மணிப்பூ ஆடை அது போர்த்துக்,**
**கரும் கயல் கண் விழித்து ஒல்கி,**
**நடந்தாய் வாழி ! காவேரி !**
**கரும் கயல் கண் விழித்து ஒல்கி,**
**நடந்த வெல்லாம் நின்கணவன்**
**திருந்து செங்கோல் வளையாமை**
**அறிந்தேன் வாழி ! காவேரி!**

[மருங்கு வண்டு சிறந்து ஆர்ப்ப – பக்கங்களில் வண்டுகள் சிறப்பாக ஆரவாரிக்க; மணிப்பூ ஆடை அது போர்த்து – அழகிய பூக்களால் ஆகிய ஆடையை அது போர்த்தி; கரும் கயல் கண் விழித்து ஒல்கி – கயல் மீன்களாகிய கண்களால் பார்த்து நுடங்கி நுடங்கி; நடந்தாய் வாழி காவேரி–; கரும் கயல் கண் விழித்து ஒல்கி – கரிய கயல் மீன்களாகிய கண்களால் பார்த்து நுடங்கி; நடந்த எல்லாம் –; நின் கணவன்–; திருந்து செங்கோல் வளையாமை– முறை மாறு படாமைதான் காரணமென்று; அறிந்தேன் வாழி காவேரி–;]

ஆற்றின் இரு பக்கங்களிலுமுள்ள பூஞ்சோலைகளில் மயில்கள் ஆடவும், குயில்கள் இசை பாடவும், ஆற்றில் மிதந்து போகும் அழகான மாலைகள் அசையவும் நீ களிப்புற்று நடப்பது உன் கணவனுடைய வேலின் திறமையால்தான்.

**பூவர் சோலை மயில் ஆலப், புரிந்து குயில்கள் இசை பாடக்,**
**காமர் மாலை அருகு அசைய, நடந்தாய் வாழி காவேரி !**
**காமர் மாலை அருகு அசைய, நடந்த வெல்லாம், நின் கணவன்**
**நாம வேலின் திறம் கண்டே அறிந்தேன் வாழி காவேரி!**

[பூவர் சோலை – பூக்கள் நிறைந்த சோலையில்; மயில் ஆல– மயில் கூவ; புரிந்து குயில்கள் இசைபாட – விரும்பு குயில்கள் இன்னிசையுடன் பாட; காமர் மாலை அருகு அசைய – அழகிய பூமாலை பக்கத்திலே புரள; நடந்தாய் வாழி காவேரி –; காமர் மாலை அருகு அசைய –; நடந்தவெல்லாம்–; நின் கணவன்–; நாம வேலின் திறம் கண்டே – அச்சம் தருகின்ற வேற்படையின் திறமையைக் கண்டுதான் என்று; அறிந்தேன் – நான் அறிந்து கொண்டேன்; வாழி காவேரி–;]

சூரியன் கடல் ஆவியை இழுத்து மேகமாக்கி மழை பெய்வதால் நீ வெள்ளமாகப் பெருகுகின்றாய். அந்தச் சூரிய குலத்தில் தோன்றிய சோழ மன்னனின் செங்கோல் வலிமையால் நீ எந்நாளும் வற்றாமல் ஊழிக்காலம் அளவும் மக்களைப் பாதுகாக்கின்ற பேருதவியைச் செய்வாயாக. உன் கணவனான சோழ மன்னனின் அருளால் அவன் குடிகளுக்கு நீ தாயாகிப் பேருதவி செய்து வாழ்வாயாக! என்று இவ்வாறெல்லாம் காவேரி யாற்றின் சிறப்பை எடுத்துப் பாடினாள். கோவலன் இதே விஷயத்தைப் பாடியபோது காவேரியின் கணவனாகிய சோழன் கங்கை குமரி என்னும் மற்றப் பெண்கள் வசிக்கும் நாடுகளை நாடிப்போன போதிலும் அவள் பிணங்காமலிருந்தாள்; அது கற்புடைய மாதின் மேன்மையான குணம் என்று காவேரியைப் புகழ்ந்தான். மாதவியோ காவேரியின் சிறப்பெல்லாம் அவள் கணவனுடைய புகழாலும் வலிமையாலுந் தான் என்று கணவனுடைய மேம்பாட்டைக் குறித்துக் காட்டினாள்.

**வாழி அவுன் தன் வளநாடு, மகவாய் வளர்க்கும் தாயாகி,**
**ஊழி உய்க்கும் பேர் உதவி ஒழியாய் வாழி காவேரி !**

**ஊழி உய்க்கும் பேர் உதவி ஒழியாது ஒழுகல், உயிர் ஓம்பும்**
**ஆழி ஆள்வான் பகல் வெய்யோன் அருளே, வாழி ! காவேரி !**

[வாழி-; அவன் தன் வளநாடு – தன் கணவனான சோழனுடைய வளம் மிகுந்த நாட்டை; மகவாய் வளர்க்கும் தாயாகி – தன்னுடைய பிள்ளைகள் போலக் கருதி வளர்க்கின்ற தாயுமாகி; ஊழி உய்க்கும் – ஊழிக் காலம் வரை காப்பாற்றுகின்ற; பேர் உதவி ஒழியாய் – பெரிய உதவியை நீ நீக்கமாட்டாய்: வாழி காவேரி–; ஊழி உய்க்கும் பேர் உதவி – ஊழிக்காலம் அளவும் பாதுகாக்கின்ற பேர் உதவியை; ஒழியாது ஒழுகல் – நீக்காமல் நடப்பதற்கு; உயிர் ஓம்பும் – உயிர்களைக் காக்கின்ற; ஆழி ஆள்வான் – ஆணைச் சக்கரத்தை ஆள்கின்றவனாகிய; பகல் வெய்யோன் – சூரியனுடைய குலத்தில் தோன்றியவனின்; அருளே – அருள் தான் காரணம்; வாழி காவேரி-;

ஆலுதல் – மயில் குயில்கள் கூவுதலுக்கு ஒரு பெயர்; ஆழி – தேரின் உருளை அல்லது அரசன் ஆணைச் சக்கரம்; வெய்யோன் – சூரியன்.]

## புகார் நகரின் சிறப்பு

## (28–30)

மாதவி காவிரிப்பூம் பட்டினத்தின் சிறப்பைப் பாடுகின்றாள். நகரின் சிறப்பை எடுத்துச் சொல்லும்போது இந் நகரிலுள்ள பெண்கள் கபடமற்றவர் என்றும் அவர்களைத் தேடி வரும் தலைவர்கள் எளிதில் அவர்களை ஏமாற்றி விடுகிறார்கள் என்றும் கருத்துக் காணும்படிப் பாடுகின்றாள். புகார் நகரத்தின் செல்வ வளத்தை முதலில் எடுத்துச் சொல்லுகிறாள். கடலின் அலைகள் வெண் முத்துக்களைக் கரையில் கொண்டு வந்து சேர்த்து விட்டுக் கடற்கரைச் சோலையிலுள்ள பூக்களை எடுத்துக் கொண்டு போய் விடுகின்றது. அதாவது புகார் நகரத்தின் கடற்கரை யோரத்தில் எங்குபார்த்தாலும் விலையுயர்ந்த வெண் முத்துக்கள் சிந்திக்கிடக்கும்.

சோலைகளிலுள்ள புன்னை மரங்களில், பூக்கள் பூத்து மலர்ந்து நிறைந்திருக்கின்றன. அன்னப் பறவை ஒரு புன்னை மரத்தில் ஏறி உட்கார்ந்திருக்கிறது. அந்தத் தோற்றத்தைப் பார்த்தால் அன்னப் பறவை முழு நிலாவைப்போலவும், பூக்கள் வானத்திலுள்ள மீன்களைப் போலவும் இருக்கின்றன. இந்தத்

தோற்றத்தைக் கண்டு உண்மையிலேயே ஆகாயத்தில் நிலாத் தோன்றிற்று என்று நினைத்து ஆம்பல் பூத்துவிட்டது. முழு நிலாக் காலத்தில் ஆம்பல் பூப்பது வழக்கம். புன்னை மரத்தின் மேல் இருக்கும் அன்னப் பறவையை முழு நிலா என்று நினைத்து ஆம்பல் பூத்துவிட்டது. இத்தகைய அறியாமை உள்ள ஊர்தான் புகாராகிய எங்கள் ஊர்.

கடற்கரை யோரத்தில் சிறு குழந்தைகள் வண்டலில் பாவை செய்து வைத்து விளையாடிக் கொண்டிருக்கின்றன. அலைகள் வந்து மோதிப் பாவைகளை அழித்துவிட்டன. இதைக் கண்டு குழந்தைகளுக்கு அலையின்மேல் வெகு கோபம். அலைகள் மோதுவதைத் தடுக்க மண்ணை வாரி அலையின்மேல் வீசுகின்றார்கள் குழந்தைகள். கடலைக் கைமணலால் தடுக்க முடியும் என்று எண்ணும் பேதைக் குழந்தைகளை உடைய புகார் தான் எங்கள் ஊர்.

தலைவியைத் தேடி வரும் தலைவனைப் பரிகாசம் செய்யும் விதத்தில் பாடுகின்றாள். தலைவனைப் பார்த்துச் சொல்லு கின்றாள். "நீர் எங்கள் தலைவியை உண்மையான காதலோடு தேடி வரவில்லை. எங்கள் தலைவியின் பற்கள் முத்துக்களைப் போல இருக்கும். அப் பற்களை உண்மையான முத்துக்கள் என்று கருதி அவைகளை விலைக்கு வாங்கும் வர்த்தகன் போல் நீர் அவளிடம் வந்தீர். இப்படி வந்து அவளைக் களவு மணமும் செய்து கொண்டீர். ஏனென்றால் எங்கள் தலைவியின் உடல் மெலிந்து அவள் கை வளையல்கள் கழன்று விழுகின்றன. முறைப்படி மணம் செய்த ஒரு பெண்ணுக்குக் கை வளையல்கள் இவ்விதம் கழன்று விழும் என்று நாங்கள் எப்படி அறிவோம்? கள் குடித்தவர் குடியாததைப்போல் எவ்வளவு மறைத்தாலும் அவர் அறிவையும் கடந்து அவர்கள் கள் குடித்தது வெளி யாகும். களவில் கூடிய எங்கள் தலைவி கூடாததுபோல் எவ்வளவு நடித்தாலும் அவள் உடலின் வேறுபாடு அவளை அறியாமல் களவு மணத்தை வெளிப்படுத்துகின்றது. இவ்வித மான நிலையில் எங்கள் கபடமற்ற தலைவியை ஏமாற்றி விட்டுப் போய்விட்டீரே."

**தீம் கதிர் வாள் முகத்தாள் செவ்வாய்**
**மணி முறுவல் ஒவ்வா வேனும்,**
**வாங்கு நீர் முத்து என்று, வைகலும்**

**மால் மகன் போல் வருதிர் ஐய !**
**வீங்கு ஓதம் தந்து விளங்கு ஒளிய**
**வெண் முத்தம் விரை சூழ் கானல்**
**பூங்கோதை கொண்டு, விலைஞர் போல்**
**மீளும் புகாரே எம்மூர்.**

[தீம் கதிர் – இனிய கதிர்களை உடைய, வாள் முகத்தாள்– ஒளி பொருந்திய முகத்தினை உடைய என் தலைவியின்; செவ்வாய் மணி முறுவல் – சிவந்த வாயிலுள்ள அழகிய வெண் பற்களை; ஒவ்வாவேனும் – முத்துக்கள் ஒத்திருக்க மாட்டா வாயினும்; வாங்கு நீர் முத்து என்று – கடலில் விளைந்த முத்துக்கள் என்று அவற்றைப் புகழ்ந்து; வைகலும் – நாள் தோறும்; மால் மகன் போல் – மயக்கம் கொண்ட ஒருவனைப் போல; வருதிர் ஐய – ஐயனே நீர் வருகின்றீர்; வீங்கு ஓதம் – பெரிய அலைகள்; விளங்கு ஒளிய வெண் முத்தம் தந்து – விளங்குகின்ற ஒளியை உடைய வெள்ளிய முத்துக்களைக் கொண்டு வந்து கரையில் சேர்த்து; விரை சூழ் கானல் – மணம் நிறைந்த சோலையிலுள்ள; பூங்கோதை கொண்டு – பூ மாலைகளைப் பெற்றுக்கொண்டு; விலைஞர் போல் மீளும் – பொருள் விலை செய்வோர் போல மீண்டு போகின்ற; புகாரே எம்மூர் –;]

**மறையின் மணந்தாரை வன் பரதர்**
**பாக்கத்து மடவார் செங்கை**
**இறை வளைகள் தூற்றுவதை, ஏழையம்**
**எங்ஙனம் யாங்கு அறிகோம் ஐய !**
**நிறை மதியும் மீனும் என அன்னம்,**
**நீள் புன்னை அரும்பிப் பூத்த**
**பொறை மலி பூங் கொம்பு ஏற, வண்டு**
**ஆம்பல் ஊதும் புகாரே எம்மூர்**

[மறையின் மணந்தாரை – வேத முறைப்படி மணந்த தலைவனை; வன் பரதர் பாக்கத்து – வலிமையுள்ள வலைஞர்கள் வாழும் சேரியிலிருக்கும்; மடவார் செம் கை – பெண்களின் சிவந்த கையாகிய; இறைவளைகள் – முன் கையிலுள்ள வளையல்கள்; தூற்றுவதை – பழி தூற்றுவதை; ஏழையம் – இப்படித் தூற்றுமென்று ஏழையாகிய நாங்கள்; எங்ஙனம் யாங்கு அறிகோம் ஐய – எப்படி நாங்கள் தெரிந்து கொள்வோம்; நிறைமதியும் மீனும் என – முழு நிலாவும் விண் மீன்களும் என்று; அன்னம் – அன்னப் பறவையானது; நீள் புன்னை – நீண்ட புன்னை மரத்தில்; அரும்பிப் பூத்த – தோன்றி மலர்ந்த; பொறை மலி பூங் கொம்பு ஏற – சுமை நிறைந்த பூக்களையுடைய கொம்புகளில் ஏற; வண்டு ஆம்பல் ஊதும் – வண்டு ஊத ஆம்பல் மலர்கின்ற; புகாரே எம்மூர் –;

வண்டு ஆம்பலில் ஊதிற்று என்றால் ஆம்பல் மலர்ந்தது என்பதாகும்.

ஒரு பெண்ணைக் களவு மணம் செய்து கொண்டு, அவள் கணவன் பிரிந்து போய் விட்டால், பிரிவாற்றாமையால் அவள் உடல் மெலிந்து அவளுடைய கைவளையல்கள் கழன்று வீழ்ந்து ஒலி செய்யுமென்றும், அப்படி உண்டாகும் ஒலி, களவு மணம் நிகழ்ந்ததை எல்லோரும் அறியும்படித் தூற்றுமென்றும் தமிழ் இலக்கியங்களில் சொல்வது வழக்கம்.]

**உண்டாரை வெல் நறா ஊண் ஒளியாப்**
**பாக்கத்துள் உறை ஒன்று இன்றித்**
**தண்டா நோய் மாதர் தலைத் தருதி என்பது**
**யாங்கு அறிகோம் ஐய!**
**வண்டால் திரை அழிப்பக், கையால்**
**மணல் முகந்து, மதிமேல் நீண்ட**
**புண்தோய் வேல் நீர்மல்க, மாதர்**
**கடல் தூர்க்கும் புகாரே எம்மூர்.**

[உண்டாரை வெல் நறா—குடித்தவர்களின் அறிவை வெல்லுகின்ற கள்; ஊண் ஒளியாப் பாக்கத்துள்—அவ்விதம் கள் உண்டதை மறைக்காத அச்சேரியில்; உறை ஒன்று இன்றி—தீர்க்கும் மருந்து ஒன்று இல்லாமல்; தண்டா நோய்—தணியாத காமநோயை; மாதர் தலைத் தருதி என்பது—என் தலைவிக்குத் தருகின்றீர் என்பதை; யாங்கு அறிகோம் ஐய—எப்படி நாங்கள் அறிவோம்; வண்டால்—குழந்தைகள் செய்யும் வண்டற் பாவைகளை; திரை அழிப்ப - கடல் அலை வந்து மோதி அழிக்க; கையால் மணல் முகந்து—கைகளால் மணலை அள்ளி; மதிமேல்—தங்கள் முகத்தின் மேல்; நீண்ட புண் தோய் வேல்—நீண்டு ஓடியிருக்கின்ற புண்ணின் கறைபடிந்த வேல் போன்ற கண்கள்; நீர் மல்க—கண்ணீரைச் சொரிய; மாதர் கடல் தூர்க்கும் - குழந்தைகள் கடலைத் தூர்க்கின்ற; புகாரே எம்மூர்—;

மண் பொம்மைகளைக் கடல் அலை அழிக்கும்போது, குழந்தைகளுக்குக் கோபமும், துக்கமும் உண்டாகின்றன. துக்கத்தால் அவர்களுடைய கண்கள் சிவந்து, கண்ணீர் பெருகுகின்றது. கோபத்தால் மண்ணை வாரி அலைகளின் மேல் வீசுகின்றார்கள்.]

## தலைவன் பிரிவாற்றாமல் தலைவி வருந்துவது

## (31–36)

கடற்கரை யோரத்திலுள்ள சோலையில் தலைவி ஒரு நெய்தல் நிலத் தலைவனைச் சந்தித்தாள். களவு மணம்

ஏற்பட்டு விட்டது. போனதலைவன் திரும்பி வரவில்லை. அவன் வராதகாரணமும் புரியவில்லை. இந்த நிலைமையில் அதே கடற்கரைச் சோலைக்குத் தலைவி தன் தோழியை அனுப்புகிறாள். சோலைக்குத் தலைவன் வருவானோ என்று எதிர்பார்த்துத் தோழியும் பல நாட்களாகச் சோலையில் காத்திருந்தாள். ஒரு நாள் தலைவன் அவ்விடம் வந்தான். ஆனால் தோழியிடம் ஒன்றும் பேசவில்லை. தோழி வீட்டிற்குத் திரும்பிய வுடன், ஆவலோடு காத்துக்கொண்டிருந்த தலைவி என்ன நடந்ததென்று கேட்டாள். அந்தக் கேள்விக்குத்தோழிபதில் சொல்லுகின்றாள். "நீ ஆணையிட்டபடி நானும் சோலையின் அருகே காத்துக் கொண்டிருந்தேன். இன்று யாரோ ஒருவர் வந்தார். கடற்கரை யோரத்தில் கூடி விளையாடிக் கொண்டிருந்த நண்டுகளையும், பூக்கள் நிறைந்த சோலையில் நின்று கொண்டிருந்த என்னையும் கண்டார். ஆனால் என்னிடம் ஒன்றும் பேசவில்லை. தன் உணர்வு அழிந்தவர் போல் தோன்றினர். அவர் ஒன்றும் பேசாமலே கடைசியில் போய்விட்டார். அவரை நன்றாய்ப் பார்க்கவும்கூட இல்லை. அவருடைய நிறம் இன்னதென்று கூட நான் பார்க்கவில்லை" என்றிவ்வாறு தோழியின் வார்த்தைகளைக் கேட்டுத் தலைவியின் மனம் உடைந்து விட்டது. தனக்கு நேர்ந்த துன்பத்தைக் குறித்துச் சிந்தித்தாள்.

"என்னை மீண்டும் கூடிய சீக்கிரம் சந்திக்கிறேன் என்று சொல்லி விட்டுப் போனாரே, அவர்தான் என்னை மறந்து விட்ட போதிலும், அவருடைய தேரும் என்னை நாடி வர மறந்து விட்டதே. அன்னங்களே! பூங்கொத்துக்கள் நிறைந்த கொடிகளே! என்னை அவர் மறந்தாலும் நான் ஒருக்காலும் அவரை மறவேன்"

"மாலைப் பொழுது ஆகிவிட்டது. பறவைகளின் பாட்டும் அடங்கியது. சோலையிலுள்ள பூக்கள் அசையாமல் தூங்குவது போலத் தோன்றின. ஒரு நெய்தற் பூவைப் பார்த்துத் தலைவி தனக்குள்ளே பேசுகிறாள். "இனிய தேன் நிறைந்த நெய்தற்பூவே! துன்பத்தை அதிகப்படுத்தும் இந்த மாலைக் காலத்தில் நான் தனித்து வருந்தி நிற்கின்றேன். நீயோ அசைவற்றுத் தூங்குகின்றாய். தூங்கும்போது உன்னுடைய கனவில் என் காதலன் இந்தக் கடற்கரைச் சோலையில் வருவதை நீ கண்டதுண்டோ?"

நெய்தல் பூவோ தலைவியின் கேள்விக்குப் பதில் சொல்ல வில்லை. கரையோரத்தில் தன் காதலன் ஏறி வந்த தேர்ச் சக்கரங்களின் அடையாளமாவது இருந்தால் அதைப் பார்க்க லாமென்று மணல் நிறைந்த கரையோரத்திற்குப் போனாள். சக்கரத்தின் சுவடுகள் ஒன்றையும் காணோம். கடல் அலைகளை நொந்து கொள்ளுகின்றாள். "தெளிந்த நீரை யுடைய அலையே! நீயும்கூட எனக்கு இந்தவிதமான பழியைச் செய்யவேண்டுமா? என் காதலரின் தேர்ச் சக்கரங்கள் சென்ற வழிகளை யெல்லாம் அழித்து விட்டாயே. நான் என்ன செய்வேன்? என் துன் பத்தை உணராமல் அலர் தூற்றுவாரோடு சேர்ந்து நீயும் எனக்கு விரோதியாய் விட்டாயே"

தேர் அடையாளங்களைக் காணாமல் மனம் நொந்து அவ்விடமுள்ள குளிர்ந்த சோலையையும் அன்னப் பறவை களையும் பார்த்துத் தலைவி முறையிடுகிறாள். "பூக்கள் நிறைந்த குளிர்ந்த சோலையே! கூடியாடி விளையாடுகின்ற அன்னங் களே! நீர்த்துறையே! நீங்களாவது என்மேல் கருணை வைத்துத் தேர்ச்சுவடுகளை அழிக்க வேண்டாமென்று அலைகளுக்குச் சொல்லக் கூடாதா? உங்களுக்கும் என்னுடைய துன்பம் தெரி யாதா?"

இவ்வாறு பலவிதமாக நொந்துகொண்டு வீட்டுக்குத்திரும் பும் சமயத்தில் கடல் அலைகளைப் பார்த்துச் சொல்லுகிறாள். "நானோ இந்த நெய்தல் நிலத்தில் பிறந்தவள். கடல் அலையில் தவழ்ந்து விளையாடி வளர்ந்தவள். கடல் அலைகளை என் னுடைய உறவினர் போல் கருதி வந்தேன். அப்படியிருந்தும் என்மேல் கருணை வைக்காமல் "உறவாடிக் கெடுத்தது" போல் எனக்குத் துன்பம் விளைத்து விட்டீர்களே. கடல் அலையே! நீ சுகமாக வாழ்வாயாக" என்று கடல் அலையை நொந்து கொண்டு மனவருத்தத்துடன் வீடு திரும்பினாள்.

**புணர் துணையோடு ஆடும் பொறி அலவன் நோக்கி,**
**இணர் ததையும் பூங்கானல் என்னையும் நோக்கி,**
**உணர்வு ஒழியப் போன ஒலி திரை நீர்ச் சேர்ப்பன்,**
**வணர்சுரி ஐம்பாலோய்! வண்ணம் உணரேனால்.**

[புணர் துணையோடு – தன்னோடுகூடிய பெட்டை நண்டோடு; ஆடும் – விளையாடுகின்ற; பொறி அலவன் நோக்கி – புள்ளிகளை

யுடைய ஆண் நண்டுகளைப் பார்த்து; இணர்ததையும் – பூங்கொத்துக்கள் நெருங்கியிருக்கின்ற; பூங்கானல் என்னையும் நோக்கி – பூக்கள் நிறைந்த கடற்கரைச் சோலையில் என்னையும் கண்டு; உணர்வு ஒழியப் போன – தன் உணர்வு அழியுமாறு போன; ஒலி திரை நீர்ச்சேர்ப்பன் – ஒலிக்கின்ற நீரையுடைய நெய்தல் நிலத் தலைவனின்; வண்ணம் – நிறத்தையும்; வணர் சுரி ஐம்பாலோய் – வளைந்து சுருண்ட ஐந்து வகையான கூந்தலையுடைய தோழி; உணரேன் – நான் அறியேன்.]

தம்முடைய தண்ணளியும், தாமும் தம் மான்தேரும்
எம்மை நினையாது விட்டாரோ! விட்டு அகல்க;
அம் மென் இணர அடும்புகாள்! அன்னங்காள்!
நம்மை மறந்தாரை நாம் மறக்க மாட்டேமால்.

[தம்முடைய தண்ணளியும் – தமது அருளும்; தாமும் தம் மான்தேரும் – தம்முடைய குதிரை பூட்டிய தேரும்; எம்மை நினையாது விட்டாரோ – எம்மை நினையாமல் விட்டாரோ; விட்டு அகல்க – விட்டுப் பிரியட்டும்; அம் மென் இணர அடும்புகாள் – அழகிய மெல்லிய பூங்கொத்துக்களை யுடைய அடும்பங்கொடிகளே!; அன்னங்காள் – ; நம்மை மறந்தாரை – ; நாம் மறக்க மாட்டேமால் – நாம் ஒருக்காலும் மறக்கமாட்டோம்.]

புன் கண் கூர் மாலைப் புலம்பும் என் கண்ணேபோல்,
துன்பம் உழவாய் துயிலப் பெறுதியால்.
இன் கள் வாய் நெய்தால்! நீ எய்தும் கனவினுள்,
வன்கணார் கானல் வரக்கண்டு அறிதியோ?

[புன் கண் கூர்மாலை – துன்பம் அதிகமாகும் மாலைக் காலத்தில்; புலம்பும் – தனித்து வருந்துகின்ற; என் கண்ணே போல் – என் கண்களைப் போல; துன்பம் உழவாய் – துன்பத்தால் வருந்தாமல்; துயிலப் பெறுதியால் – நல்ல தூக்கத்தை நீ பெறுகிறாய்; இன் கள் வாய் நெய்தால் – இனிய தேன் வாய்ந்த நெய்தற் பூவே!; நீ எய்தும் கனவினுள் – நீ காணுகின்ற கனவினுள்; வன்கணார் – வன் கண்மை யுடைய எனது தலைவர்; கானல் வர – இக் கடற்கரைச் சோலையில் வருவதை; கண்டு அறிதியோ – நீ கண்டதுண்டோ!]

புள் இயல் மான் தேர் ஆழி போன வழி எல்லாம்
தெள்ளுநீர் ஓதம்! சிதைத்தாய்; மற்று என் செய்கோ?
தெள்ளுநீர் ஓதம்! சிதைத்தாய்; மற்று எம்மோடு ஈங்கு
உள்ளாரோடு உள்ளாய், உணராய் மற்று என் செய்கோ?

[புள் இயல் மான் – பறவை போல் விரைந்து செல்லக்கூடிய குதிரைகள் பூட்டிய; தேர் ஆழி – என் காதலனின் தேர் உருளை; போன வழியெல்லாம் – சென்ற வழிகளையெல்லாம்; தெள்ளு நீர் ஓதம் – தெளிந்த நீரையுடைய அலையே; சிதைத்தாய் – நீ அழித்தனை; என் செய்கோ – நான் என்ன செய்வேன்; தெள்ளு நீர் ஓதம் – தெளிந்த நீரையுடைய அலையே!: சிதைத்தாய் – நீ அழித்தனை; எம்மோடு ஈங்குள்ளாரோடு – எனக்குத் (துன்பந்தருகின்ற) இங்குள்ள அலர் தூற்றுகிறவர்களோடு; உள்ளாய் – நீ சேர்ந்து உள்ளாய்; (என்றது, அவர்கள் சார்பாக இருக்கின்றாய்); உணராய் – என் துயரத்தை உணராய்; என் செய்கோ – நான் என்ன செய்வேன்.

தலைவனைப் பிரிந்து தலைவி வருந்த, தலைவன் நெடுநாள் வராது போனான். பல நாள் களவிலேயே கூடிச்சென்று, திருமணம் செய்து தலைவியைத் தன்னுடன் வைத்து இல்லறம் நடத்தவில்லை. இதனை எவ்வாறோ அறிந்த ஊரார், இவர் ஒழுக்கங்களைக் குறித்துப்பல படப் பேசிக் கொண்டனர். இங்ஙனம் நடப்பதை அகப்பொருளில் 'அலர்' என்பர். மற்று – அசை.]

**நேர்ந்த நம் காதலர் நேமி நெடும் திண்தேர்,**
**ஊர்ந்த வழி சிதைய ஊர்கின்ற ஓதமே;**
**பூந் தண் பொழிலே! புணர்ந்து ஆடும் அன்னமே!**
**ஈர்ம் தண் துறையே! 'இது தகாது' என்னீரே?**

[நேர்ந்த – அன்பு செய்த: நம் காதலர் – நமது காதலரின்; நேமி – சக்கரத்தையுடைய; நெடும் திண் தேர் – நெடிய திண்ணிய தேர்; ஊர்ந்த – சென்ற; வழி சிதைய – வழியிலுள்ள சுவடுகள் அழியும்படி; ஓதம் ஊர்கின்ற – அலைகள் மேல் எழுந்து வருகின்றன; பூந்தண் பொழிலே – பூக்களையுடைய குளிர்ந்த சோலையே!; புணர்ந்து ஆடும் அன்னமே – கூடி ஆடுகின்ற அன்னமே!; ஈர்ம் தண் துறையே – மிக்க குளிர்ச்சியுடைய குளிர்ந்த நீர்த்துறையே! – இது தகாது என்னீரே – இது தகாது என்று (அலைகளுக்குக்) கூற மாட்டீர்களா?

நேர்ச்சி – அன்பு]

**நேர்ந்த நம் காதலர் நேமி நெடும் திண்தேர்**
**ஊர்ந்த வழி சிதைய ஊர்ந்தாய் வாழி! கடல் ஓதம்!**
**ஊர்ந்த வழி சிதைய ஊர்ந்தாய், மற்று எம்மோடு**
**தீர்ந்தாய் போல் தீர்ந்திலையால் வாழி! கடல் ஓதம்!**

[நேர்ந்த நம் காதலர் – அன்பு செய்த நமது தலைவரின்; நேமி நெடும் திண்தேர் – உருளையையுடைய நெடிய திண்ணியதேர்;

ஊர்ந்த வழி சிதைய – சென்ற வழி அழியும்படி ; கடல் ஓதம் – கடல் அலையே ! ; ஊர்ந்தாய் – நீ மேலேறி வந்தாய் ; வாழி – ; ஊர்ந்த வழி சிதைய – தேர் ஊர்ந்த வழி சிதையும்படி ; ஊர்ந்தாய்–; எம்மோடு தீர்ந்தாய் போல் – என்னோடு உறவாடிக் கூடியது போல் இருந்து ; தீர்ந்து இலையால் – உண்மையில் எதிரியாய் இருந்து விட்டாய் ; வாழி கடல் ஓதம் – கடல் அலையே நீ வாழ்வாயாக !]

## அவள் தலைவனை நொந்து கொள்வது

(37–39)

மாலைப் பொழுதை எல்லாம் சோலையில் கழித்து விட்டு மன வருத்தத்துடன் தலைவி தன் வீட்டிற்குத் திரும்பினாள். தன்னுடைய நிலைமையை அன்னை கண்டு உண்மையை அறிந்து கொண்டால் என்ன செய்வதென்று தெரியாமல் தலைவனை நினைத்து வருந்தினாள்.

"நெய்தல் நிலத்தலைவனே ! உன்னுடைய வளப்பமான நாட்டில் நெல்விளைகின்ற நன்செய் நிலமான வயல்கள், எங்கும் பரவி இருக்கின்றன. கடல் அலைகள் வெண் முத்துக்களான ஆபரணங்களை அணிந்து சிவந்த பவளங்களான ஆடையை உடுத்து வயல்களில் மோதி உலாவுகின்றன. உன்னுடைய நாட்டில், கடல் அலையும் இவ்வளவு அழகாகத் திரியும் போது என்னுடைய நிலைமையோ வென்றால் காம நோயால் உண்டான புண்கள் என் உடலையே மறைத்து விட்டன. புன்னைமரச் சோலையில் உன்னை நினைத்து வருந்தும்போது மன்மதன் என் மேல் ஏவிய பாணங்களால் உண்டான புண்கள்தான் இவை. இந்தக் கோலத்தில் என்னைத் தாய் கண்டால் நான் என்ன செய்வேன்?"

**நன் நித்திலத்தின் பூண் அணிந்து,**
**நலம் சார் பவளக்கலை உடுத்துச்**
**செந்நெல் பழனக் கழனி தொறும்**
**திரை உலாவு கடல் சேர்ப்ப!**
**புன்னைப் பொதும்பர் மகரத் திண்**
**கொடியோன் எய்த புதுப் புண்கள்**
**என்னைக் காணு வகை மறைத்தால்,**
**அன்னை காணின்என் செய்கோ ?**

[நன் நித்திலத்தின் பூண் அணிந்து - நல்ல முத்துக்களான பூண்களை அணிந்து; நலம் சார் பவளக் கலை உடுத்து; – அழகு பொருந்திய பவளம் போலச் சிவந்த உடையினை உடுத்து; செந் நெல் பழனம் – செந்நெல் விளைகின்ற நன் செய் நிலமாகிய; கழனி தொறும் – வயல்கள் தோறும்: திரை உலாவு கடல் சேர்ப்ப – அலை வந்து மோதுகின்ற கடற்கரையை யுடைய தலைவ!; புன்னைப் பொதும்பர் – புன்னை மரச்சோலையில்; மகரத் திண் கொடியோன் எய்த – மீன் எழுதிய வலிய கொடியினையுடைய மன்மதனால் எய்யப் பட்ட; புதுப்புண்கள் – புதிய புண்கள்; என்னைக் காணுவகை மறைத்தால் – என் உருவைக் காணாதபடி மறைத்தால்; அன்னை காணின் – அதை என் அன்னை கண்டால்; என் செய்கோ – நான் என் செய்வேன்.

புண்களாவது, உடல் காம நோயால் மாறுபடுதல்.]

“உன்னுடைய நாட்டின் கடற்கரை யோரத்திலுள்ள, வலைஞர்களின் வீட்டு வாயிலில் அலைகள் முத்துக்களாகிய பற்களால் நகைத்துப் பவளங்களாகிய சிவந்த வாயைத் திறந்து திரிகின்றன. உன்னுடைய நாட்டில் அலைகளும்கூட இவ்வளவு களிப்புடன் திரியும்போது என்னுடைய நிலைமையோ வென்றால், என் உடல் பீர்க்கம்பூவைப் போல வெளுத்து விட்டது. உன்னால் எனக்கு உண்டான காம நோய்தான் இதற்குக் காரணம். இந்தக் கோலத்தை என் தாய் கண்டு, குறி கேட்டுக் காரணத்தை அறிந்துகொண்டால், நான் என்ன செய்வேன்”?

**வாரித் தரள நகை செய்து,**
**வண் செம்பவள வாய் மலர்ந்து,**
**சேரிப் பரதர் வலை முன்றில்**
**திரை உலாவு கடல் சேர்ப்ப !**
**மாரிப் பீரத்து அலர் வண்ணம்**
**மடவாள் கொள்ளக் கடவுள் வரைந்து,**
**ஆர் இக்கொடுமை செய்தார்? என்று**
**அன்னை அறியின் என் செய்கோ?**

[வாரித் தரள நகை செய்து – கடலில் விளையும் முத்துக்களாகிய சிரிப்பைச் செய்து; வண் செம்பவள வாய் மலர்ந்து–வளப்பமான சிவந்த பவளமாகிய வாயைத் திறந்து; சேரிப் பரதர் வலை முன்றில் – சேரியில் வாழும் வலைஞர்களின் வலை கிடக்கும் வீட்டு வாயிலில்; திரை உலாவு – அலைகள் வீசுகின்ற; கடல் சேர்ப்ப –

கடற்கரையையுடைய தலைவ!; மாரிப்பீரத்து அலர் வண்ணம் - மாரிக் காலத்துப் பூத்த பீர்க்கு மலர் போன்ற நிறத்தினை ; மடவாள் கொள்ள - என் மகள் இங்ஙனம் கொள்ளும்படி ; கடவுள் வரைந்து - தெய்வத்தை வழிபட்டு; ஆர் இக் கொடுமை செய்தார் - இக் கொடுமை செய்தவர் யார் ? ; என்று -; அன்னை அறியின் - அன்னை ஆராய்ந்து அறிந்து விட்டாளாயின் ; என் செய்கோ - யான் என்ன செய்வேன் ?

அலைகள் முத்துக்களாகிய பற்களால் நகைத்து, பவளங்களாகிய வாயைத் திறந்து, வீட்டு வாயிலில் வந்து திரிகின்றன. பீர்க்க மலரின் நிறம், அதாவது மகளிர் கணவரைப் பிரிந்து வருந்தும்போது உண்டாகின்ற ஒரு வகை வெளுப்பு நிறம். கடவுளைக் குறி கேட்டுக் களவுக் கணவன் இன்னான் என்று அன்னை தெரிந்து கொள்வாளென்று தலைவி அஞ்சுகின்றாள்.

தரளம் - முத்து. பீரம் - பீர்க்கு. அலர் - பூ.]

"உன்னுடைய நாட்டில் கடற்கரையில் வலைஞர்கள் கொண்டு வந்து சேர்த்த மீன்களால் புலால் நாற்றம் வீசுகின்றது. ஆனால் அலைகள் பூஞ்சோலைகளில் வீழ்ந்து அங்கேயுள்ள பல பூக்களைக் கரையோரத்தில் சேர்ப்பதால் புலால் நாற்றம் நீங்கி நறுமணம் எங்கும் கமழ்கின்றது. பூக்களின் நறுமணத்தால் புலால் நாற்றமும் நீங்கி விட்ட போதிலும் எந்த மருந்தாலும் என் காம நோய் நீங்காது. பிறர் அறியக் கூடாத இந்த நோயின் காரணத்தை அன்னை அறிந்தால், நான் என்ன செய்வேன்?"

**புலவு உற்று இரங்கி இது நீங்கப்**
**பொழில் தண்டலையில் புகுந்து உதிர்ந்த**
**கலவைச் செம்மல் மணம் கமழத்**
**திரை உலாவு கடற் சேர்ப்ப!**
**பல உற்று ஒரு நோய் துணியாத,**
**படர் நோய் மடவாள் தனி உழப்ப,**
**அலவு உற்று இரங்கி அறியா நோய்,**
**அன்னை அறியின் என் செய்கோ?**

[புலவு உற்று இரங்கி - புலால் நாற்றம் பெற்று வருந்தி; அது நீங்க - அந்த நாற்றம் நீங்கும்படி ; பொழில் தண்டலையில் புகுந்து - சோலையில் குளிர்ந்த இடத்தில் நுழைந்து ; உதிர்ந்த கலவைச் செம்மல் - (அங்கு) உதிர்ந்து கிடக்கும் பலவும் ஒன்றாகக் கலந்த பழைய

பூக்களின்; மணம் கமழ - நறுமணம் கமழும்படி; திரை உலாவு-, அலைகள் வீசுகின்ற; கடற் சேர்ப்ப - கடற்கரையை யுடையவனே! பல உற்று - பலவாகிய வருத்தங்களைப் பொருந்தி; ஒரு நோய் துணியாத - ஒரு நோயாகவும் துணியமுடியாத; படர்நோய் - நினைவாகிய காம நோயினால் (என்றது, நினைவு விட்டு நீங்காத காம நோயினால்); மடவாள் தனி உழப்ப - தலைவி தனித்து வருந்த; அலவு உற்று இரங்கி - துன்பமுற்று வருந்தி; அறியா நோய் - பிறர் ஒருவர் அறிய முடியாத இந்நோயை; அன்னை அறியின் - அன்னை அறிவாளானால்; என் செய்கோ - யான் என்ன செய்வேன்.

செம்மல்-உதிர்ந்த பழைய பூ. அலவு - துன்பம். ஒரு நோயாகத் துணியப் படாத நோய் என்றது, பல காரணங்களால் பல விதமாக வந்து, ஒரு மருந்திலும் பிடிபடாமல் வருத்துகின்ற காம நோய். படர் - நினைவுத் துன்பம்.]

## தலைவியின் வருத்தம்

## (40-42)

மாலைப் பொழுதில் தன் வீட்டில் தன்னந்தனியாய் உட்கார்ந்து கொண்டு இவ்விதமாய்த் தன் காதலனை நினைத்துத் தலைவி நொந்துகொண்டிருக்கும் போது, மாலைப் பொழுது நீங்கி, இருள் சூழ்ந்து விட்டது. தலைவி என்ன செய்துகொண்டிருக்கிறாளென்று பார்க்கத் தோழியும் அங்கே வந்தாள். தோழியைக் கண்டவுடன் தலைவியின் துக்கம் அதிகமாய்விட்டது. தோழியிடம் தலைவி முறையிடுகிறாள். "நறு மலர் அணிந்த கூந்தலையுடைய என் தோழியே! சூரியனும் மறைந்துவிட்டான். கரிய இருள் எங்கும் பரவி விட்டது. பறவைகளின் பாட்டும் அடங்கி விட்டது. மையுண்ட கண்களிலிருந்து நீர் பெருகுகின்றது; மயக்கம் தருகின்ற மாலைப் பொழுதும், காம நோயை மிகப்படுத்தும் முழு நிலாவும் என்னைப் பிரிந்து போனவருடைய நாட்டிலும் உண்டோ?"

மாலைப் பொழுதிலும், முழுநிலாக் காலத்திலுமாவது தலைவன் தன்னை நினைக்க மாட்டானா என்று தலைவி வருந்துகிறாள்.

**இளை இருள் பரந்ததுவே;**
**எல் செய்வான் மறைந்தனனே:**

களைவு அரும் புலம்பு நீர்
கண் பொழீஇ உகுத்தனவே,
தளை அவிழ் மலர்க் குழலாய்!
தணந்தார் நாட்டு உளதாம் கொல்?
வளைநெகிழ எரிசிந்தி
வந்த இம் மருள்மாலை.

[இளை இருள் – இளைய இருள்; பரந்ததுவே – எங்கும் நிறைந்தது; எல் செய்வான் – பகற் பொழுதைச் செய்கிற சூரியனும்; மறைந்தனனே – மறைந்தனன்; களைவு அரும் புலம்பு நீர் - களைதற்கரிய வருத்தத்தால் உண்டான நீரை; கண் பொழீஇ உகுத்தனவே – கண்கள் சிந்திச் சிதறின; தளை அவிழ் மலர்க் குழலாய் – கட்டு அவிழ்கின்ற மலரணிந்த கூந்தலையுடைய தோழீ; தணந்தார் நாட்டு – நம்மைப் பிரிந்து போனவர் நாட்டில்; வளை நெகிழ – கை வளைகள் கழலும்படி; எரி சிந்தி – காமத் தீயைச் சிதறி; வந்த – வந்தடைந்த; இம் மருள் மாலை – இந்த மயக்கந்தரும் மாலைப் போது; உளதாங் கொல்? – உண்டாகி இருக்குமோ.]

கதிரவன் மறைந்தனனே;
கார் இருள் பரந்ததுவே;
எதிர் மலர் புரை உண் கண்
எவ்வ நீர் உகுத்தனவே;
புதுமதி புரை முகத்தாய்!
போனார் நாட்டு உளதாங்கொல்?
மதி உமிழ்ந்து கதிர் விழுங்கி
வந்த இம் மருள் மாலை.

[கதிரவன் மறைந்தனனே – சூரியன் மறைந்தான்; கார்இருள் பரந்ததுவே – கரிய இருள் எங்கும் பரவியது; எதிர் மலர் புரை உண் கண் – ஒன்றற்கொன்று எதிரெதிராக இருக்கும் மலர்களைப் போன்ற மையுண்ட கண்கள்; எவ்வ நீர் உகுத்தனவே - துன்பமாகிய கண்ணீரைச் சிந்தின; புது மதி புரை முகத்தாய் – புதிய நிலாப்போன்ற அழகிய முகத்தினை உடையவளே; போனார் நாட்டு – என்னைப் பிரிந்து போனவருடைய நாட்டில்; மதி உமிழ்ந்து – நிலாவை வெளிப்படுத்தி; கதிர் விழுங்கி – கதிரவனை மறைத்து; வந்த – தோன்றிய; இம் மருள் மாலை – இம் மயக்கந்தருகின்ற மாலைப் போது; உளதாங்கொல் - உண்டாகி இருக்குமோ?]

பறவை பாட்டு அடங்கினவே;
பகல் செய்வான் மறைந்தனனே;

நிறை நிலா நோய்கூர
நெடுங்கண் நீர் உகுத்தனவே ;
துறு மலர் அவிழ் குழலாய்!
துறந்தார் நாட்டு உளதாங்கொல் ?
மறவையாய் என்னுயிர் மேல்
வந்த இம் மருள் மாலை.

[பறவை பாட்டு அடங்கினவே – பறவைகளின் பாட்டுக்கள் அடங்கின ; பகல் செய்வான் மறைந்தனனே – பகற் பொழுதைச் செய்கின்ற கதிரவன் மறைந்தனனே ; நிறை நிலா நோய்கூர – முழு நிலா காம நோயை மிக வைத்தலால்; நெடும் கண் நீர் உகுத்தனவே– நீண்ட கண்கள் நீரைச் சிந்தின ; துறு மலர் அவிழ் குழலாய் – நெருங்கிய மலர்கள் விரிந்த கூந்தலை உடைய தோழி! ; மறவையாய் – கொடுமையை உடையதாய் ; என் உயிர் மேல் வந்த – எனது உயிரைப் பற்றித் தோன்றிய ; இம் மருள் மாலை – இந்த மாலைப் பொழுது ; துறந்தார் நாட்டு – என்னைத் துறந்து சென்றவர் நாட்டில் ; உளதாம் கொல் ? – உண்டாகி இருக்குமோ ;

கூர்தல் – மிகுதல் ; துறு – நெருங்கிய ; மறம் – கொடுமை.]

## என் காதலனை எந்நாளும் மறவேன்

## (43–45)

காதலன் தன்னை மறந்து விட்டதைப் பற்றித் தோழியிடம் வருத்தத்துடன் சொன்னதிலிருந்து, தானும் காதலனை மறந்து விடுவாள் என்று தோழி நினைத்து விடுவாளோ என்று கருதி, "அவரை நான் எப்பொழுதும் மறக்க முடியாது" என்று சொல்லி மேலும் பேசுகிறாள்.

"தாழை சூழ்ந்த உப்பங்கழியில் நான் விளையாடிக் கொண்டிருந்தேன். அப்போது என் காதலர் வந்தார். நான் விளையாட்டையும் மறந்தேன். ஆனால் அவருடைய நினைவு என் நெஞ்சை விட்டு அகலாது. கடற்கரைச்சோலையிலுள்ள உப்பங்கழியில் என்னைப்பார்த்து, என் காதலை விரும்பினார் ஒருவர். அவருடைய தோற்றம் என் கண்களை விட்டு அகலாது. அந்தச் சோலையில் நாங்கள் இருவரும் களிப்புற்றிருக்கும் போது ஒரு அன்னப் பறவை தன் பெட்டை அன்னத்தோடு விளையாடிக் கொண்டிருந்தது. அந்த விளையாட்டைப் பார்த்துக் கொண்டே நின்றார் அவர். இப்போது அவர் என்னை விட்டுப்

பிரிந்திருந்தாலும், நாங்கள் இருவரும் ஒன்ருகி விட்டோம். என் மார்பில் படர்ந்திருக்கும் தேமல் எப்படி என்னைப் பிரியா மலிருந்து அழகு செய்கின்றதோ, அப்படியே அவரும் என் நெஞ்சை விட்டுப் பிரியாமல் எனக்கு இன்பம் தருகின்ருர்.''

**கைதை வேலிக் கழிவாய் வந்து, எம்**
**பொய்தல் அழித்துப் போனுர் ; ஒருவர்,**
**பொய்தல் அழித்துப் போனுர் ; அவர் நம்**
**மையல் மனம்விட்டு அகல்வார் அல்லர்.**

[கைதை வேலி – தாழையை வேலியாகவுடைய; கழிவாய் வந்து – உப்பங்கழியிடத்தில் வந்து ; ஒருவர் –; எம் பொய்தல் அழித்துப் போனுர் – என் விளையாட்டை மறக்கச் செய்து போனுர் ; ஒருவர் பொய்தல் அழித்துப் போனுர் –; அவர் –; நாம் மையல் மனம் விட்டு– நமது மயக்கம் பொருந்திய நெஞ்சை விட்டு; அகல்வார் அல்லர் – நீங்குவாரில்லை.

பொய்தல் – மகளிர் விளையாட்டு]

**கானல் வேலிக் கழிவாய் வந்து,**
**நீ நல்கு என்றே நின்ருர் ஒருவர் ;**
**நீ நல்கு என்றே நின்ருர் ; அவர் நம்**
**மான் நேர் நோக்கம் மறப்பார் அல்லர்.**

[கானல்வேலி–கடற்கரைச் சோலையை வேலியாக வுடைய; கழிவாய் வந்து - உப்பங்கழியில் வந்து ; நீ நல்கு என்றே நின்ருர் – நீ சிறிது அருள் செய்வாயாக என்று நின்ருர் ; ஒருவர், நீ நல்கு என்றே நின்ருர் - நீ அருள் செய்வாயாக என்று நின்ருர் ; அவர் –; நம் மான் நேர் நோக்கம் - நமது மானை யொத்த விழிகளால்; மறப்பார் அல்லர் – மறக்கப் படுவாரல்லர்.]

**அன்னம் துணையோடு ஆடக்கண்டு,**
**நென்னல் நோக்கி நின்ருர் ஒருவர்,**
**நென்னல் நோக்கி நின்ருர் ; அவர் நம்**
**பொன்நேர் சுணங்கின் போவார் அல்லர்.**

[அன்னம் துணையோடு ஆட - அன்னம் தன் பெட்டை அன்னத்துடனே விளையாட; கண்டு– அதனைப் பார்த்து ; நென்னல் – நேற்று ; நோக்கி நின்ருர் – பார்த்து நின்ருர் ; ஒருவர் –; நென்னல் நோக்கி நின்ருர் – நேற்றுப் பார்த்து நின்ருர் ; அவர் நம் பொன் நேர் சுணங்கின் – அவர் நமது பொன்னை யொத்த சுணங்கு போல ; போவாரல்லர் – பிரிந்து போவாரல்லர்.

சுணங்கு – மகளிர் தோள், மார்பு முதலிய உறுப்புக்களில் அழகு படப் பூக்கும் தேமல். அது எப்படிப் பிரியாதிருந்து அழகு செய்கின்றதோ, அப்படியே, தலைவரும் நெஞ்சில் பிரியாதிருந்து இன்பம் தருகிறார் என்றாள்.]

(46)

காதலனும் தானும் சோலையில் இன்புற்றிருக்கும் போது அன்னப் பறவை விளையாடிக் கொண்டிருந்த நினைவு வந்தது. அந்த அன்னத்தின் மேல் கோபம் உண்டாகின்றது. "எங்கள் இன்பத்தைக் கண்ட நீயாவது என் தலைவனிடம் தூது சென்று என் குறையைச் சொல்லாமல் விட்டு விட்டாயே! ஏ அன்னமே! என் பூஞ்சோலைக்குள் இனிமேல் நீ நுழையாதே" என்றாள் அன்னப் பறவையைப் பார்த்து. காதலருக்கிடையே அன்னப் பறவை தூது போவதாகச் சொல்வது இலக்கிய வழக்கம்.

**அடையல் குருகே! அடையல் எம் கானல்;**
**அடையல் குருகே! அடையல் எம் கானல்;**
**உடைதிரை நீர்ச் சேர்ப்பற்கு உறு நோய் உரையாய்;**
**அடையல் குருகே! அடையல் எம் கானல்.**

[அடையல் குருகே – அன்னமே இங்கு வாராதே: எம் கானல் அடையல் – எமது சோலையை அடையாதே; அடையல் குருகே அடையல் எம் கானல் –; உடை திரை நீர்ச் சேர்ப்பற்கு – சிதறும் அலைகளையுடைய கடல் நீர் மோதும் கடற்கரையையுடைய தலைவனுக்கு; உறு நோய் – (எனக்கு) உற்ற நோயை; உரையாய் – நீ உரைக்காது போனாய்; (ஆதலால்) அடையல் குருகே அடையல் எம் கானல் –;

சேர்ப்பன் – கடற்கரைத் தலைவன்.]

(47)

கோவலன் பாடும் பொழுது முதலில் காவேரி ஆற்றின் சிறப்பையும், பின்னர்ப் புகார் நகரத்தைப் பற்றியும், அதன் பின் தான் காதலித்த பெண்ணால் உண்டான காம நோயைப் பற்றியும் பாடினான். அதே முறையில் மாதவியும் பாடியான பின், மீண்டும் யாழைக் கையிலேந்திப் பாடத் தொடங்கினாள்.

## மாதவி மேலும் பாடத் தொடங்குதல்

**ஆங்கனம் பாடிய ஆய் இழை, பின்னரும்**
**காந்தள் மெல்விரல் கைக்கிளை சேர்குரல்**

*தீந் தொடைச் செவ்வழிப் பாலை இசை எழீஇப்,*
*பாங்கினில் பாடி ஓர் பண்ணும் பெயர்த்தாள்.*

[ஆங்கனம் பாடிய – கோவலன் பாடியது போல் பாடிய; ஆய் இழை – அழகிய அணிகலையுடைய மாதவி; பின்னரும் - மேலும்: காந்தள் மெல் விரல் - காந்தள் மலர் போன்ற மெல்லிய விரல்களால்; கைக்கிளை சேர்குரல் தீந்தொடை – கைக்கிளை என்னும் இசையைத் தருகின்ற, நரம்போடு குரல் என்னும் இனிய நரம்பிலும்; செவ்வழிப் பாலை இசை - செவ்வழி என்னும் இசை பொருந்திய பாலைப் பண்ணை; எழீஇ - எழுப்பி; பாங்கினில் பாடி - அவ்விசையோடு இனிது பொருந்தும்படி பாடி; ஓர் பண்ணும் பெயர்த்தாள் – வேறொரு இசையைப் பாடினாள்.

ஆங்கனம் - அதுபோல; (என்றது கோவலன் பாடியதுபோல;) ஆய் - அழகு. இழை – கற்களும், மணிகளும் வைத்து இழைக்கப் பட்ட அணிகலன். தொடை - நரம்பு. கைக்கிளை, குரல் என்ற நரம்புகளை ஒன்றோடொன்று இசை பொருந்த இசைத்து, அவற்றுள் செவ்வழிப் பாலையாகிய இசையை எழுப்பினாள். எழுப்பி, அதனோடு பொருந்தத் தன் குரலில் இனியதொரு பாடலும் பாடினாள். பண் – இசைப் பாடல்.]

## தலைவி மாலைப்பொழுது கண்டு இரங்குவது

## (48–50)

கடலைச் சேர்ந்த இடம் நெய்தல் நிலம் என்று சொல்லப் படும். நெய்தல் நிலத்தில் வாழ்பவர் "நுளையர்" என்று சொல்லப் படுவார்கள். நெய்தல் நிலத்தில் வாழும் மக்கள் தங்கள் மனைவிகளைப் பிரிந்து அடிக்கடி, கடல் கடந்து அயல் நாட்டுக்குப் போய் விடுவார்கள். ஆகையால் இந்த நிலத்தில் வாழும் பெண்கள், தங்கள் காதலருடைய பிரிவாற்றுமையால் சோக ரசம் பொருந்திய இசைகளைத்தான் பாடுவது வழக்கம். "விளரிப்பாலை" என்னும் பண், சோக ரசத்துக்குப் பொருந்திய ஒரு பண்.

ஒரு நாள் மாலைக்காலம். நெய்தல் நிலப் பெண் ஒருத்தி தன்னை விட்டுப் பிரிந்து போன காதலனை நினைத்துக்கொண்டு, 'விளரிப்பாலை' என்னும் பண்ணை வாசிப்பதற்கு யாழை எடுத்து இளி என்னும் நரம்பில் இசை எழுப்ப ஆரம்பித்தாள். காதலன்

நினைவால் தன்னை யறியாமல் அந்த இசைக்கு நேர் விரோதமான கிளை என்னும் நரம்பில் கை சென்று தடவிற்று. இசையில் இது ஒரு பெரிய குற்றம். இதற்குக் காரணம் மயக்கம் தரும் மாலைப் பொழுது தான். இத்தகைய குற்றத்தை நிகழும்படி செய்த மாலைப் பொழுது, அவளது உயிரையும் கொள்ளவல்லது. "இவ்வளவு கொடுமையான மாலைப் பொழுதே! நீ வாழ மாட்டாய்" என்று மாலைப் பொழுதை நொந்து கொள்கிருள்.

**நுளையர் விளரி நொடிதரு தீம்பாலை**
**இளி கிளையில் கொள்ள இறுத்தாயால் மாலை!**
**இளி கிளையில் கொள்ள இறுத்தாய் மன் நீயேல்,**
**கொளை வல்லாய் என் ஆவி; கொள் வாழி! மாலை!**

[நுளையர் – நெய்தல் நிலத்து மக்கள்; விளரி நொடிதரு தீம் பாலை - விளரிப்பாலை என்னும் பண்ணைப் பாடும்போது; இளி கிளையில் கொள்ள - இளி என்னும் நரம்பு (அதற்குப் பகையான) கைக் கிளை என்னும் நரம்பில் பொருந்தும்படி; மாலை - மாலையே; இறுத்தாயால் – நீ வந்து தங்கினை; இளி கிளையில் கொள்ள - இளி என்ற நரம்பு கிளை என்னும் நரம்பில் பொருந்தும்படி; இறுத்தாய் மன் நீயேல் - நீ வந்து சேர்ந்தனை யாயின்; என் ஆவி கொளை வல்லாய் - என் உயிரைக் கொள்ள வல்லாய்; மாலை – ஏ மாலையே; கொள் வாழி - (என் உயிரைக்) கொண்டு வாழ்வாயாக.]

வலிமையற்ற ஒரு மன்னன் தன் கோட்டையில் துன்புற்று இருக்கிருன். அகம்பாவம் கொண்ட பகை மன்னன் ஒருவன் அந்தக் கோட்டையை முற்றுகை போட்டு வீம்புப் போர் செய்கிருன். இது என்ன கேவலமான செய்கை! தலைவியோ, தன்னை விட்டுப் பிரிந்த காதலனின் அன்பான வார்த்தைகளை நினைத்துக் கொண்டு ஏங்கி இரக்க முற்றுத் துணையில்லாமல் வருந்திக்கொண்டிருக்கிருள். இப்படியிருக்கும் ஒரு பெண்ணை மாலைக்காலம் துன்புறுத்துகின்றது. அந்த மாலைப் பொழுதை நோக்கி "இது முறையோ? அகம்பாவம் கொண்ட அந்தப் பகை மன்னனுடைய செய்கைக்கும் உன் செய்கைக்கும் என்ன வித்தியாசம்?", என்று நொந்து கொள்கிருள்.

**பிரிந்தார் பரிந்து உரைத்த பேர் அருளின் நீழல்,**
**இருந்து ஏங்கி வாழ்வார் உயிர்ப் புறத்தாய் மாலை!**
**உயிர்ப் புறத்தாய் நீயாகில், உள் ஆற்ரு வேந்தன்,**
**எயில் புறத்து வேந்தனேடு என் ஆதி மாலை?**

[பிரிந்தார் பரிந்து உரைத்த - விட்டுப் பிரிந்த தலைவர் அன்போடு உரைத்த; பேர் அருளின் நீழல் - பெரிய அருள் மொழியாகிய நீழலிலே; இருந்து ஏங்கி வாழ்வார் - தனித்திருந்து இரக்கமுற்று வாழும் மகளிரின்; உயிர்ப் புறத்தாய் மாலை - உயிரைச் சூழ்ந்து நிற்கின்றாய் மாலையே; உயிர்ப் புறத்தாய் நீயாகில் - உயிரைச் சூழ்ந்து நிற்பது நீயானால்; உள் ஆற்றா வேந்தன் - (மதிலின்) உள்ளே இருக்கும் வலிமையில்லாத மன்னனின்; எயில் புறத்து - மதிலின் வெளியில் உள்ள; வேந்தனோடு - அம்மதிலை அழிக்கும் வேந்தனுக்கு; மாலையே; என் ஆதி - நீ என்ன உறவு ஆவாய்?

ஆற்றா வேந்தன் – எதிரியின் படையை எதிர்த்து நிற்க மாட்டாத மன்னன். எயில் புறத்து மன்னன் - மதிலின் வெளியில் அதனைத் தகர்க்கும் மன்னன். எயில் - மதில். என் ஆதி - என்ன ஆகுவாய்.]

"சூரியனும் மறைந்தான். எல்லோரும் உறங்கும் நேரம். என் கணவரோ என்னை விட்டுப் பிரிந்து போயிருக்கிறார். இந்தச் சமயத்தில் மாலைப் பொழுதே! ஏன் என்னை இப்படித் துன்புறுத்துகிறாய்? உலகத்தையே துயரமடையும்படிச் செய்வதுதானா உன் தொழில்? இப்படிக் கொடுமை செய்தால் நீ வாழ மாட்டாய்."

**பையுள் நோய் கூரப் பகல் செய்வான் போய் வீழ,**
**வையமோ கண்புதைப்ப வந்தாய் மருள் மாலை!**
**மாலை நீ ஆயின், மணந்தார் அவராயின்,**
**ஞாலமோ நல்கூர்ந்தது வாழி மாலை.**

[பையுள் நோய் கூர - துன்பமாகிய காதல் நோய் மிகும்படி; பகல் செய்வான் போய் வீழ - பகற் பொழுதைத் தரும் சூரியன் போய் மறைய; வையமோ கண் புதைப்ப – உலகத்தார் கண்ணை மூடி உறங்க; மருள் மாலை - மயக்கந்தரும் மாலையே; வந்தாய் - நீ வந்தனை; மாலை நீ ஆயின் - மாலைப் பொழுது நீ யானால்; மணந்தார் அவராயின் - என்னைக் கூடியவர் அவரானால்; ஞாலமோ நல் கூர்ந்தது - உலகம் துயரமடைந்தது; மாலையே –; வாழி –;

பையுள் - துன்பம். ஞாலம் - உலகம். நல் கூர்தல் - துன்பமடைதல். அவர் என்னை விட்டுப் பிரிய, நீயும் வருத்தினையாயின் யான் என் செய்வேன் என்றாள். தனக்கு வரும் துயரின் மிகுதியால் உலகமும் துயரமடைவதாக அவள் கண்ணிற் பட்டது. வாழி என்றது வாழாய் என்ற குறிப்பு.]

கடற்கரை ஓரத்திலுள்ள பூஞ்சோலையில் முதல் முதலாகத் தலைவனைச் சந்தித்தபோது அவன் தலைவிக்குப் பல நய மொழிகளைச் சொல்லி "உன்னைக் கூடிய சீக்கிரம் ஊரார் அறியும்படி மணம் செய்து கொள்வேன்'' என்று உறுதி வாக்கு அளித்தான். அப்போது மாலைப்பொழுது. அவனுடைய நயவார்த்தைகளும், மாலைப்பொழுதும் சேர்ந்து தலைவிக்கு மயக்கம் உண்டாகும்படி செய்து விட்டன. அந்த நிலையில் எதையும் ஆராயாமல் அவள் களவு மணத்திற்கு ஒப்புக் கொண்டாள். அன்று போன அவன் திரும்பி வரவில்லை. அவன் ஆணையும் பொய்ச் சத்தியமாய் விட்டது. இவர்களுடைய களவு மணத்திற்குக் கடல் தெய்வம் ஒன்றைத் தவிர வேறு சாட்சியமில்லை. தன் முன்னிலையில் இவ்வாறு பொய்ச் சத்தியம் இவன் செய்தானே என்று கோபமுற்று, கடல் தெய்வம் தன் கணவனைத் தண்டித்து விடுமோ என்று பயந்து, "கடலின் தெய்வமே! என் கணவன் செய்த மோசத்தை மன்னிக்க வேண்டும்'' என்று தலைவி வணங்குகிறாள்.

**தீத்துழைஇ வந்த இச்செல்லல் மருள் மாலை,**
**தூக்காது துணிந்த இத்துயர் எஞ்சு கிளவியால்,**
**பூக்கமழ் கானலில் பொய்ச் சூள் பொறுக்க என்று**
**மாக்கடல் தெய்வம் ! நின் மலர் அடி வணங்குதும்.**

[தீத்துழைஇ வந்த – தீயைப் பரப்பி வந்த; இச்செல்லல் மருள், மாலை – இந்தத் துன்பத்தைத் தரும் மயங்கிய மாலைப் பொழுதில்; தூக்காது துணிந்த - நான் ஆராயாமல் துணிந்ததற்குக் காரணமான; இத்துயர் எஞ்சு கிளவியால் - என் துயரத்தை நீக்கும் நல்ல மொழிகளால்; பூக்கமழ் கானலில் - பூக்களின் மணம் வீசுகின்ற சோலையில்; (செய்த) பொய்ச் சூள் பொறுக்க - பொய்யான ஆணைச் சொல்லைப் பொறுப்பாயாக என்று –; மா கடல் தெய்வம் – பெரிய கடலின் தெய்வமே !; நின் மலர் அடி வணங்குதும் – ;

செல்லல் - துன்பம், துயர் எஞ்சு கிளவி - துயரத்தைப் போக்கும் மொழி, அதாவது நன்மொழி ; கிளவி – சொல், மொழி.]

## கோவலன் மாதவியைப் பிரிவது

### (52)

ஒரு காதலன்மேல் மனம் வைத்தது போல், மாதவி பாடினதைக் கேட்ட கோவலனுக்குக் கோபம் வந்து விட்டது.

வீம்புக் கென்று மாதவி இப்படிப் பாடினளே ஒழிய, உண்மையில் அவள் வேறு எவனையும் காதலிக்கவில்லை. இருந்த போதிலும் இவர்கள் இருவருடைய ஊழ்வினை வந்து உருத்துங் காலம் நெருங்கி விட்டது. வினைப் பயன் இங்கு நடைபெறுவதற்கும் ஓர் காரணம் வேண்டும். இந்தச் சமயத்தில், மாதவி யாழை வாசித்ததே, அந்தக் காரணமாக நேர்ந்தது. விலைமகளாகிய மாதவி இவ்வளவு காலம் பொய் வார்த்தைகளால் தன்னை ஏமாற்றி விட்டாள் என்று கோவலனுக்கு வெறுப்பு உண்டாகி விட்டது. தன் ஏவலாளரைக் கூட்டிக் கொண்டு கோபத்துடன் புறப்பட்டு விட்டான். கோவலனுக்கு உண்மையிலேகோபம் உண்டானது மாதவிக்குத் தெரியவில்லை. ஆகையால் அவனைப் போகாமல் தடுக்கவும் அவள் முயற்சி செய்யவில்லை. ஊடலால் தன் காதலன் போய் விட்டான் என்று நினைத்துத் தானும் தன் தோழியர் சூழ வண்டியில் ஏறி வீட்டிற்குத் திரும்பினள். விழாக் காலமான தினலே தன் வீட்டை யடைந்ததும், அரசனை வாழ்த்தி விட்டு மாதவி தன் அறையை அடைந்தாள்.

**எனக் கேட்டு,**
**கானல்வரி யான் பாடத், தான் ஒன்றின் மேல் மனம் வைத்து,**
**மாயப்பொய் பல கூட்டும் மாயத்தாள் பாடினள் என,**
**யாழிசை மேல் வைத்துத் தன் ஊழ் வினை வந்து உருத்தது; ஆக**
**உவவு உற்ற திங்கள் முகத்தாளைக் கவவுக்கை ஞெகிழ்ந் [லின்,**
**பொழுது ஈங்குக் கழிந்தது; ஆகலின் எழுதும் [தனளுய்ப்,**
**ஏவலாளர் உடன் சூழ்தரக் கோவலன் [என்று உடன்எழாது,**
**தாது அவிழ் மலர்ச் சோலை ஓதை [தான் போன பின்னர்த்,**
**கையற்ற நெஞ்சினளாய், [ஆயத்து ஒலி அவித்துக்**
**காதலனுடன் அன்றியே [வையத்தின்உள்புக்குக்,**
**ஆங்கு, [மாதவிதன் மனைபுக்காள்;**
**மா இரு ஞாலத்து அரசு தலை வணக்கும்**
**சூழி யானைச் சுடர் வாள் செம்பியன்**
**மாலை வெண்குடை கவிப்ப**
**வாழி மால்வரை அகவையா எனவே.**

[எனக் கேட்டு – என்று மாதவி பாடக் கேட்டு (கோவலன்); கானல் வரி யான் பாட – கானல் வரிப் பாட்டுக்களை நான் பாட; தான் ஒன்றின்மேல் மனம் வைத்து – தான் ஒரு குறிப்பின் மேல் உள்ளத்தைச் செலுத்தி: மாயப்பொய் பல கூட்டும் – மாயமான பல பொய்களைக் கூட்டிச் சொல்லுகின்ற; மாயத்தாள் – மாயத்தினை

உடையவளாகிய இவள்; பாடினுள் என - இவ்வாறு பாடினுள் என்று; யாழ் இசை மேல் வைத்து - யாழின் இசையைக் காரண மாக வைத்து; தன் ஊழ்வினை - தனது பழைய வினை; வந்து உருத் தது ஆகலின் - வந்து வருத்தத் தொடங்கியது ஆதலால்;

உவவு உற்ற திங்கள் முகத்தாளை - முழு நிலாப் போன்ற முகத் தினையுடைய மாதவியை; கவவுக் கை ஞெகிழ்ந்தனனாய் - தழுவிய கையைத் தளர விட்டவனாய்; பொழுது இங்குக் கழிந்தது ஆகலின்- இவ்விடத்தில் பொழுது மறைந்து விட்டது ஆதலால்; எழுதும் என்று உடன் எழாது - எழுந்து செல்வோம் என்று மாதவியுடன் சொல்லி எழாமல்; ஏவலாளர் உடன் சூழ்தர - தன் ஏவல் மக்கள் தன்னைச் சூழ்ந்து வரும்படி; கோவலன் தான் போன பின்னர் - கோவலன் போன பிறகு; தாது அவிழ் மலர்ச் சோலை - தாதுப் பொடியை உதிர்க்கின்ற பூக்களையுடைய சோலையில் உள்ள; ஓதை ஆயத்து ஒலி அவித்து - ஆரவாரத்தை யுடைய தோழியர் கூட்டத் தின் ஒலியை அடக்கி; கையற்ற நெஞ்சினளாய்-செயலற்ற நெஞ்சினை உடையவளாய்; வையத்தின் உள் புக்கு - தான் வந்த வண்டியில் ஏறி; காதலனுடன் அன்றியே-காதலனோடில்லாமல்; மாதவி தன் மனை புக்காள் - மாதவி தனிமையாகத் தனது மனையில் சென்று நுழைந்தாள்.

மா இரு ஞாலத்து அரசு - மிகப் பெரிய உலகத்து மன்னர் களின்; தலை வணக்கும் - தலைகளை வணங்கச் செய்கின்ற; சூழி யானை - நெற்றிப் பட்டம் அணிந்த யானைகளையும்; சுடர் வாள் - ஒளி வீசும் வாளையும் உடைய; செம்பியன் - சோழனுடைய; மாலை வெண் குடை - முத்து மாலைகள் சூழ்ந்த வெண் கொற்றக் குடை; மால் வரை அகவையா - பெரிய இமய மலையும் உட்பட; கவிப்ப - நிழல் செய்யும் வண்ணம்; வாழி என - வாழ்வானாக என்று கூறி.]

கானல்வரி முற்றிற்று

# வேனிற் காதை

## இளவேனில் வருகை

வடக்கே திருவேங்கட மலையையும் தெற்கே குமரியையும் எல்லையாகக் கொண்ட தமிழ் நாட்டில் மூன்று பெரிய மன்னர்கள் அரசாட்சி செய்துவந்த போதிலும், இவர்கள் எல்லோருக்கும் மேலாக ஒரு வேந்தன் அரசனாக அமர்ந்திருந்தான். அவன் தான் மன்மதன். இளவேனில் என்னும் இளவரசன் மன்மதனுடைய மகிழ்ச்சிக்குரிய துணைவன். இளவேனில் வந்து விட்டான் என்று தென்றற் காற்றாகிய தூதன் தெரிவிக்கவே, பூஞ்சோலைகளிலுள்ள குயில்கள் பாடத் தொடங்கிவிட்டன. குயில்கள் பாடுவது, "இளவரசனான இளவேனிலை எதிர்கொண்டழைக்க, மன்மதனின் சேனையிலுள்ள மகளிர் எல்லோரும் அலங்காரம் செய்து கொள்ளுங்கள்" என்று கொம்பு ஊதித் தெரிவிப்பது போலிருந்தது. மன்மதன் தமிழ் நாட்டு மன்னன்; இளவேனிற் காலம் அவனுடைய தோழன்; தென்றல் காற்று தூதன்; குயில், கொம்பு ஊதுவோன்; மகளிர், மன்மதனுடைய படை வீரர்கள்.

**நெடியோன் குன்றமும், தொடியோள் பௌவமும்**
**தமிழ் வரம்பு அறுத்த தண்புனல் நன்னாட்டு:**
**மாட மதுரையும், பீடு ஆர் உறந்தையும்,**
**கலிகெழு விஞ்சையும், ஒலி புனல் புகாரும்**
**அரைசு வீற்றிருந்த உரைசால் சிறப்பின்,**
**மன்னன் மாரன் மகிழ்துணை யாகிய,**
**இன் இளவேனில் வந்தனன் இவண் என,**
**வளங்கெழு பொதியில் மாமுனி பயந்த**
**இளங்கால் தூதன் இசைத்தனன்; ஆதலின்**
**'மகர வெல்கொடி மைந்தன் சேனை!**
**புகர் அறு கோலம் கொள்ளும்' என்பது போல்,**
**கொடிமிடை சோலைக் குயிலோன் என்னும்**
**படையுள் படுவோன் பணி மொழி கூற;**

[நெடியோன் குன்றமும்–திருமால் நின்ற திருவேங்கட மலையும்; தொடியோள் பௌவமும் – குமரிக் கடலும் என்று; தமிழ் வரம்பு அறுத்த – தமிழுக்கு எல்லை அறுக்கப்பட்ட; தண் புனல் நன்னாட்டு - குளிர்ந்த நீர் வளமுள்ள அழகிய தமிழ் நாட்டில்; மாட மதுரையும்

மாளிகைகளை யுடைய மதுரையும்; பீடு ஆர் உறந்தையும் - பெருமை மிக்க உறையூரும்; கலி கெழு வஞ்சியும் - ஆரவாரம் மிக்க வஞ்சி நகரும்; ஒலி புனல் புகாரும்—ஒலிக்கும் புனல் மிக்க காவிரிப் பூம் பட்டினமும் (என்னும் இந் நான்கு நகருள்); அரைசு வீற்றிருந்த - அரசனாக அமர்ந்திருந்த; உரைசால் சிறப்பின் - புகழ் மிக்க சிறப்பினை யுடைய; மன்னன் மாரன் மகிழ் துணையாகிய - மன்னனாகிய காமனின் மகிழ்ச்சிக்குரிய துணைவனாகிய; இன் இளவேனில் - இனிய இளவேனில்; இவண் வந்தனன் என - இங்கு வந்து விட்டான் என்று;

வளங் கெழு பொதியில் மாமுனி - வளம் நிறைந்த பொதிகை மலையில் இருக்கும் சிறந்த முனிவனாகிய அகத்தியன்; பயந்த - அனுப்பிய; இளங்கால் தூதன் - இளைய தென்றல் காற்றாகிய தூதன்; இசைத்தனன் ஆதலின் - அறிவித்தான் ஆதலால்; மகர வெல் கொடி மைந்தன் சேனை—மீன் எழுதப்பட்ட கொடியை யுடைய மன்மதனின் சேனையிலுள்ளவர்கள் எல்லாரும்; புகர் அறும் கோலம் கொள்ளும் - குற்றமற்ற கோலத்தைப் புனைந்து கொள்ளுங்கள்; என்பது போல் - என்பது போல; கொடிமிடை சோலை - கொடிகள் அடர்ந்த சோலையிலுள்ள; குயிலோன் என்னும் படையுள் பாடுவோன் - குயில் என்னும் கொம்பு ஊதுவோன்; பணிமொழி கூற - காற்றாகிய தூதன் கூறிய கட்டளை மொழிகளை அவருக்கு அறிவிக்க.

"இளவேனிலாகிய இளவரசன் வந்தா"னென்றுமுனியால் அனுப்பப்பட்ட தென்றற் காற்றாகிய தூதன், குயிலாகிய கொம்பு ஊதுவோனுக்குத் தெரிவிக்க, அவன் மன்மதன் படை வீரராகிய மகளிர்களுக்குப் போர்க்கோலங் கொள்ளுமாறு அறிவித்தான்.]

## மாதவி அலங்கரித்துக்கொண்டு இசை பாடுவது

கடற்கரைச் சோலையிலிருந்து கோவலன் கோபத்தோடு போய்விட்டான். மாதவி தனியாய்த் தன் வீடு வந்து சேர்ந்தாள். இளவேனிற் காலமாகையினாலே, காதலனின் பிரிவாற்றாமையைப் பொறுக்க முடியவில்லை. தன் வீட்டின் ஏழாவது மாடியிலுள்ள நிலா முற்றத்தை அடைந்தாள். மார்பில் நல்ல மணம் கமழும் சந்தனத்தைப் பூசிக்கொண்டாள். இளவேனிற் காலத்திற்குப் பொருத்தமான வெண்முத்தாரத்தைக் கழுத்தில் அணிந்து, தன்னை அலங்காரம் செய்துகொண்டாள். மனக் கவலையைப் போக்குவதற்கு இதைவிட வேறு என்ன வழி இருக்கின்றது? யாழைக் கையில் எடுத்து, உருக்கத்துடன் இசை பாடத் தொடங்கினாள்.

*மடல் அவிழ் கானல் கடல் விளையாட்டினுள்,*
*கோவலன் ஊடக் கூடாது ஏகிய*
*மாமலர் நெடுங்கண் மாதவி விரும்பி,*
*வான் உற நிவந்த மேல் நிலை மருங்கின்*
*வேனில் பள்ளி ஏறி, மாண் இழை*
*தென் கடல் முத்தும், தென் மலைச் சந்தும்*
*தன் கடன் இறுக்கும் தன்மைய ஆதலின்*
*கொங்கை முன்றில் குங்கும வளாகத்து*
*மையறு சிறப்பின் கையுறை ஏந்தி,*
*(அதிரா மரபின் யாழ்கை வாங்கி,*
*மதுர கீதம் பாடினள் மயங்கி;)*

[மடல் அவிழ் கானல் கடல் விளையாட்டினுள் – தாழை மடல் அவிழ்கின்ற கடற்கரைச் சோலையில் கடலாடுதலாகிய விளையாட்டினுள்; கோவலன் ஊட – கோவலன் மாதவியோடு ஊடல் கொண்டதால்; கூடாது ஏகிய – அவனுடன் கூடாது பிரிந்து போன; மாமலர் நெடுங்கண் மாதவி – கரிய மலர் போன்ற நீண்ட கண்களை யுடைய மாதவி; விரும்பி – அக்கட்டளையை விரும்பி; வான் உற நிவந்த – வானத்தை அளாவி உயர்ந்த; மேல் நிலை மருங்கின் – மேலே நிலை பெற்ற இடத்தில்; (என்றது ஏழாவது மாடியில்.) வேனிற் பள்ளி ஏறி – வேனிற் காலத்தில் பள்ளி கொள்ளும் இடமான நிலா முற்றத்திற் சென்று;

மாண் இழை – மாட்சிமை பொருந்திய அணிகலங்களை யுடைய மாதவி; தென் கடல் முத்தும் - தென் கடலில் விளைகின்ற முத்துக்களையும்; தென் மலைச் சந்தும் – தென் மலையாகிய பொதிய மலையில் விளையும் சந்தனத்தையும்; தன் கடன் இறுக்கும் தன்மைய ஆதலின் – மன்மதனுக்குத் தன் கப்பமாகக் கொடுக்கும் தன்மை யுடையவளாதலால்; (அவற்றை) கொங்கை முன்றில் – கொங்கைகளாகிய முற்றத்தில்; குங்கும வளாகத்து – குங்குமம் பூசிய பரந்த இடத்தில்; மை அறு சிறப்பின் – குற்றமற்ற சிறப்பினை யுடைய; கையுறை ஏந்தி – தன் கைப் பொருளாக ஏந்தி; (அதாவது காணிக்கைப் பொருள்களை ஏந்தி.)

அதிரா மரபின் யாழ் கை வாங்கி - கெடாத சிறப்பினை யுடைய யாழைக் கையிலே வாங்கி; மதுர கீதம் பாடினள் மயங்கி - இனிமையான இசையை உருக்கத்துடன் பாடினாள்.]

## இசையின் விவரம்

### (25–44)

கீழ் வரும் வரிகளில் மாதவி பாடிய இசையை நூலாசிரியர் விவரமாக எடுத்துச் சொல்லுகிறார். இவ்வரிகளின் பொருள்

சரியாகப் புரியவில்லை. பழையதமிழ் இசை இலக்கணத்தை நன்றாய் ஆராய்ந்தவர்கள் இவைகளின் கருத்தை எடுத்து விளக்கமாகச் சொல்ல வேண்டும். சிலப்பதிகாரத்தில் பல இடங்களில் காணும் குறிப்புக்களிலிருந்து, பண்டைக் காலத்துத்தமிழர் இசையில் மிகவும் முற்போக்கடைந்தவர்களா யிருந்திருக்க வேண்டுமென்று முடிவு செய்யலாம். தமிழ் ஆராய்ச்சியாளர் இவைகளை இன்னும் சரிவர ஆராய வேண்டும்.

*ஒன்பான் விருத்தியுள் தலைக்கண் விருத்தி,*
*நன்பால் அமைந்த இருக்கையள் ஆகி;*
*வலக்கைப் பதாகை கோட்டொடு சேர்த்தி,*
*இடக்கை நால் விரல் மாடகம் தழீஇச்;*
*செம்பகை, ஆர்ப்பே, கூடம், அதிர்வே,*
*வெம்பகை நீக்கும் விரகுளி அறிந்து;*
*பிழையா மரபின் ஈரேழ் கோவையை*
*உழை முதல் கைக்கிளை இறுவாய் கட்டி,*
*இணை கிளை பகை நட்பு என்று இந் நான்கின்*
*இசை புணர் குறிநிலை எய்த நோக்கிக்,*
*குரல் வாய் இளிவாய்க் கேட்டனள்; அன்றியும்,*
*வரன் முறை மருங்கின் ஐந்தினும் ஏழினும்*
*உழை முதலாகவும் உழை ஈறாகவும்,*
*குரல் முதலாகவும் குரல் ஈறாகவும்,*
*அகநிலை மருதமும், புறநிலை மருதமும்,*
*அருகியல் மருதமும், பெருகியல் மருதமும்,*
*நால் வகைச்சாதியும் நலம் பெற நோக்கி;*
*மூவகை இயக்கமும் முறையுளிக் கழிப்பித்*
*திறத்து வழிப் படூஉம் தெள் இசைக் கரணத்துப்*
*புறத்து ஒரு பாணியின் பூங்கொடி மயங்கி;*

## மாதவியின் கடிதம்

(45–73)

கோவலனை விட்டுப் பிரிந்திருப்பது மாதவிக்குச் சகிக்க முடியவில்லை. எப்படியாவது அவன் தன்னிடம் வருமாறு செய்வதற்கு என்ன உபாயம் என்று ஆலோசித்தாள். மன்மதன் ஒருவனுடைய ஆணைக்குத்தான் உலகமெல்லாம் கட்டுப்படுமாகையால், அவன் பேரால் ஒரு கடிதம் அனுப்புவதென்று தீர்மானித்தாள். முதிர்ந்த வெள்ளைத் தாழையின் இதழ்

ஒன்றைக் கடிதமாக எடுத்தாள். பித்திகை என்னும் சிறு செண்பகப் பூவின் கொழுமையான அரும்பை எழுத்தாணியாகக் கொண்டாள். செம்பஞ்சுக் குழம்பாகிய மையில் எழுத்தாணி யைத் தோய்த்து தாழை மடலில் எழுதினாள். "எல்லா உயிர் களையும் அவற்றின் மகிழ்ச்சிக்குரிய துணைகளோடு சேர்ப்பதே இளவேனிலாகிய இளவரசனுடைய வேலை. அந்தியாகிய மாலைப்பொழுதின் கழுத்தின்மேல் வளைந்து தோன்றும் நிலா வாகிய அழகிய செல்வனும் நடுநிலைமை கவனிக்காமல் இள வேனிலோடு சேர்ந்து கொள்ளுகின்றான். கூடி மகிழ்ந்த காதலர் ஊடினாலும், பிரிந்த காதலர் தம் துணைவிகளை மறந்தாலும், நறுமணம் வீசும் பூவாகிய அம்பினால் மன்மதன் அவர்கள் உயி ரைக் கொள்வான். இது அவனுக்கு வழக்கம். இதில் வியப்பு ஒன்றுமில்லை. இதை நீர் அறிவீராக.''

மாதவி அறுபத்துநாலு கலைகளிலும் தேர்ச்சி அடைந்த வள். பண்ணையும், இசையையும் தோல்வி யடையும்படிச் செய் யும் நாவை உடையவள். கடிதம் எழுதும்போது அடங்காத தன் காதற் சொற்களைத் திருப்பித் திருப்பித் தனக்குள்ளே சொல்லிக்கொண்டு எழுதினாள். எழுதி முடித்தவுடன், மாத விப்பூ, சண்பகம், பச்சிலை, கருமுகை, வெண்பூ, மல்லிகை, செங்கழுநீர் முதலிய பூக்களால் ஒரு அடர்த்தியான மாலையைக் கட்டினாள். தாழை மடலான தன் கடிதத்தை இந்த மாலையின் நடுவே வைத்துக் கட்டினாள். சேடி வசந்தமாலையை அழைத்து; அவள் கையில் மாலையைக் கொடுத்து "தூய மலரான இந்த மாலையிலுள்ள பொருளைக் கோவலனுக்குக் கொடுத்து, அவனை இங்கே அழைத்துவா'' என்று சொல்லி அனுப்பினாள். வசந்த மாலை கோவலனைக் கடைவீதியில் கண்டு அவனிடம் மாலையைக் கொடுத்தாள்.

**சண்பகம், மாதவி, தமாலம், கருமுகை,**
**வெண் பூ மல்லிகை, வேரொடு மிடைந்த**
**அம்செம் கழுநீர் ஆய் இதழ்க் கத்திகை**
**எதிர்பூஞ் செவ்வி இடைநிலத்து யாத்த**
**முதிர்பூந் தாழை முடங்கல் வெண் தோட்டு**
**விரை மலர் வாளியின், வியன் நிலம் ஆண்ட**
**ஒருதனிச் செங்கோல் ஒருமகன் ஆணையின்,**
**ஒருமுகம் அன்றி உலகுதொழுது இறைஞ்சும்**

திருமுகம் போக்கும் செவ்வியள் ஆகி
அலத்தகக் கொழுஞ்சேறு அளைஇ, அயலது
பித்திகைக் கொழுமுகை ஆணி கைக்கொண்டு,
''மன்னுயிர் எல்லாம் மகிழ்துணை புணர்க்கும்
இன்னிள வேனில் இளவரசாளன்;
அந்திப் போதகத்து அரும்பிடர்த் தோன்றிய
திங்கட் செல்வனும் செவ்வியன் அல்லன்;
புணர்ந்த மாக்கள் பொழுதுஇடைப் படுப்பினும்
தணந்த மாக்கள் தம்துணை மறப்பினும்,
நறும்பூ வாளியின் நல்லுயிர் கோடல்
இறும்பூது அன்று, இஃது அறிந்தீமின்'' என
எண்ணெண் கலையும் இசைந்து உடன்போகப்
பண்ணும் திறனும் புறங்கூறு நாவின்
தளைவாய் அவிழ்ந்த தனிப்படு காமத்து
விளையா மழலையின், விரித்து உரை எழுதிப்,
பசந்த மேனியள் படர்உறு மாலையின்
வசந்தமாலையை வருக எனக் கூஉய்த்,
'தூமலர் மாலையின் துணிபொருள் எல்லாம்
கோவலற்கு அளித்துக் கொணர்க ஈங்கு' என;
மாலை வாங்கிய வேல் அரி நெடுங்கண்
கூல மறுகின் கோவலற்கு அளிப்ப:

[சண்பகம் -; மாதவி - குருக்கத்திப் பூ; தமாலம் - பச்சிலை; கருமுகை-பிச்சியின் அரும்பு; வெண்பூ மல்லிகை-வெள்ளிய பூவாகிய மல்லிகை. வேரொடு மிடைந்த - ஒன்றற்கொன்று வேரோடு பிணங்கிக் கொண்ட; அம் செங்கழுநீர் - அழகிய சிவந்த கழுநீரின் மலர் (ஆகியவற்றுடன்); ஆய் இதழ்க் கத்திகை - அழகிய இதழ்களால் தொடுக்கப்பட்ட கத்திகை என்னும் மாலையின்; எதிர்பூந்தாமை ஒன்றற்கொன்று எதிரான பூக்களுடைய அழகிய; இடைநிலத்து - அதன் நடுவிடத்தில்; யாத்த - கட்டப்பட்ட; முதிர் பூந்தாழை - முதிர்ந்த அழகிய தாழையின்; முடங்கல் வெண் தோட்டு - வளைந்த வெள்ளிய இதழில்; விரை மலர் வாளியின் - மணமுள்ள மலராகிய அம்பினால்; வியன் நிலம் ஆண்ட - பரந்த இவ்வுலகை ஆட்சி புரிந்த; ஒரு தனிச் செங்கோல் - ஒப்பற்ற செங்கோலையுடைய; ஒரு மகன் ஆணையின் - மன்மதனுடைய ஆணையால்; ஒருமுகம் அன்றி - ஒரு திசை அன்றி; உலகுதொழுது இறைஞ்சும் - உலகமெல்லாம் கீழ்ப் படிந்து போற்றக்கூடிய; திருமுகம் போக்கும் - கடித ஓலையைப் போக்குகின்ற; செவ்வியள் ஆகி - எண்ணத்தை உடையவளாகி;

அலத்தகக் கொழுஞ்சேறு அளைஇ - செம்பஞ்சுக் குழம்பாகிய செழுமையான மையில் தோய்த்து; அயலது பித்திகைக் கொழு

முகை – அயிலில் உள்ள பிச்சி என்னும் பூவின் கொழுமையான அரும்பாகிய; ஆணி கைக்கொண்டு – எழுத்தாணியைக் கையால் பற்றி (எழுதுகிருள்);

மன் உயிர் எல்லாம் - நிலைபெற்ற எல்லா உயிர்களையும்; மகிழ் துணை புணர்க்கும் – அவற்றின் மகிழ்ச்சிக்குரிய துணைகளோடு சேர்க்கின்ற; இன் இளவேனில்–இனிய இளவேனில் என்பவனே; இளவரசாளன் - இளவரசன்; அந்திப் போதகத்து - அந்தியாகிய மாலையின்; அரும்பிடர்த் தோன்றிய – அழகிய பிடரியின் மேல் தோன்றிய; திங்கள் செல்வனும் – நிலாவாகிய அழகிய செல்வனும்; செவ்வியன் அல்லன் – நடுநிலைமை யுடையவன் அல்லன்; புணர்ந்த மாக்கள் - கூடி மகிழ்ந்த காதலர்; பொழுது இடைப் படுப்பினும் – சிறிது பொழுது கூடுதலை மறந்தாலும்; தணந்த மாக்கள் – பிரிந்த காதலர்; தம் துணை மறப்பினும் – தமது துணைவிகளை மறந்தாலும்; நறும் பூவாளியின் – நறுமணம் வீசும் பூவாகிய அம்பினுல்; நல் உயிர் கோடல் – நல்ல உயிரைக் கொள்ளுதல்; (என்றது, நிலாவும் இளவேனிலும் உயிர் கொள்ளுதல்); இறும்பூது அன்று – வியப்புடைய செய்தியன்று; இஃது அறிந்திமின் என - இதனை அறிவீராக என்று: எண் எண் கலையும் - அறுபத்து நான்கு கலைகளும்; இசைந்து உடன்போக - இணங்கித் தன் வழிப்பட்டு வர; பண்ணும் திறனும் – இசையின் பிரிவாகிய பண், திறம் என்ற இரண்டையும்; புறங்கூறு நாவின் – தோல்வி யடையும்படிச் செய்யும் இனிமையான நாவின் சொற்களால்; தளைவாய் அவிழ்ந்த – கட்டுக் குலைந்துபோன; தனிப்படு காமத்து – தனக்கு நிகரில்லாத காம விருப்பத்தால்; விளையா மழலையின் - முற்ருத மழலைச் சொல்லால்; விரித்து உரை எழுதி - விரிவாகத் தன் சொற்களை யெல்லாம் பேசிப் பேசி எழுதி;

பசந்த மேனியள் – காமத்தால் வெளுத்த மேனியளாய்; படர் உறு மாலையின் – துன்பம் மிகுகின்ற அம் மாலைக் காலத்தில்; வசந்த மாலையை –; வருக எனக் கூஉய் – இங்கு வருக என அழைத்து; தாமலர் மாலையின் – தூயமலரான இம் மாலையில் உள்ள; துணி பொருள் எல்லாம் – ஆராய்ந்து கூறப்பட்ட எல்லாச் செய்திகளையும்: கோவலற்கு அளித்து – கோவலனுக்கு எடுத்துக் கூறி; கொணர்க ஈங்கு என – இங்கு அவனை அழைத்து வருக என்று சொல்ல; மாலை வாங்கிய - மாலையைக் கையிலே வாங்கிய; வேல் அரி நெடுங்கண் – வேல் போன்ற கோடுகள் பரந்த நீண்ட கண்களையுடைய வசந்த மாலை; கூல மறுகின் – கடைவீதியின் கண்; கோவலற்கு அளிப்ப – கோவலனுக்கு அம் மாலையை அளிப்ப.

தளை - கட்டு. படர் – துன்பம்.]

## கோவலன் மாதவியைப் பழிப்பது

## (74–110)

மாதவி அனுப்பிய மாலையைப் பார்த்தவுடன் கோவலனுக்குக் கோபம் உண்டாய் விட்டது. மாதவி தன்னுடன் கூடியும், ஊடியும் செய்த வித்தைகளைப் பழித்தான். அவளுடைய செய்கைகளை யெல்லாம் எட்டுவகை வரிக் கூத்தாக எடுத்துக் காட்டினான். நாடக உறுப்பில் எட்டு வகையான வரிக்கூத்து உண்டு. 'வரி' என்பது அவரவர் பிறந்த நிலத்தின் தன்மையும், பிறப்பிற்கு ஏற்ற தொழிலின் தன்மையும் தோன்றும்படி நடித்தல். எட்டு வகை வரிகளின் பெயர்கள்; கண்கூடுவரி, காண்வரி, உள் வரி, புற வரி, கிளர் வரி, தேர்ச்சி வரி, காட்சி வரி, எடுத்துக்கோள்வரி. மாதவி விலைமகளாதலாலும், நாட்டியத்தில் தேர்ச்சி பெற்றவளாதலாலும் அவளுடைய பிறப்பை ஒட்டித் தன்னிடம் பொய்யாய் நடந்து கொண்டாள் என்னும் கருத்தோடு அவளுடைய செய்கைகளைப் பின் வருமாறு பழிக்கின்றான்.

"நெற்றிப் பொட்டும், கூந்தலும், வில் போன்ற புருவமும், குவளை மலர் போன்ற கண்களும், குமிழம்பூப் போன்ற மூக்கும், கொவ்வைப் பழம் போன்ற வாயும் உடைய அவள், என் மேல் உண்மையான காதலுடையவள் போல் முகபாவனை செய்து என்னை ஏமாற்றினாள். இந்தக் கண்கூடு வரியை நான் அறிவேன்."

"அவளுடைய கூந்தல் மேகத்தைப் போன்றது. கயல் மீன்கள் போன்ற அவள் கண்கள் நிலாவை ஒத்த முகத்தில் உலவித் திரிவது போலிருக்கும். முகப் பொலிவோடு பவளம் போன்ற வாயைத் திறந்து, முத்தைப் போன்ற பற்களால் புன் முறுவலாகிய இன்பத்தை எனக்குத் தந்தாள். நான் 'வா' என்று சொல்லும் போது வந்தாள். 'போ' என்றால் போனாள். இவ்வாறெல்லாம் என் முன் அவள் நடித்த காண்வரிக் கோலத்தைக் கண்டிருக்கின்றேன்.

"அந்திப் பொழுதில் காதல் மிகுதியால் எனக்கு உண்டாகும் ஆற்றாமையைப் பார்க்கும்போது, அவள் தன் அன்ன

நடையையும் மயிலின் சாயலையும் மறைத்து ஏவற் பெண்ணின் கோலத்தோடு என் முன் பாசாங்கு செய்து நடித்த **உள்வரி யாடலை** நான் அறிவேன்.''

''சில சமயங்களில் அவள் பிரிவாற்றுமையால் நான் வருந்திக் கொண்டிருக்கும்போது, சிலம்பின் வாய் ஒலிக்கவும், மேகலை ஆர்ப்பவும், காதல் மிகுந்த நோக்கத்தோடு என் முன் வந்து, என்னைக் கூடாமல் புறத்தே நின்று நடித்துவிட்டுப் போவாள். இந்தப் **புறவரி** எனக்குத் தெரியாதா?''

''மாலைகளை அணிந்துகொண்டு, கூந்தலைப் பலவிதமாய் முடித்து, முத்துவடம் அணிந்து, மின்னற் கொடி போன்ற இடையை அசைத்துக் கொண்டு என் இருப்பிடம் வருவாள். உள்ளே வராமல் ஏவற் பெண்களிடம் தான் வந்திருக்கும் செய்தியைச் சொல்வாள். நான் ஊடலோடு புணர்ச்சிக் கருத்துடன் சொன்ன பதிலை வேண்டுமென்றே மனம் வேறுபட்டுச் சொன்னதாகக் கொண்டு, சினம் பொங்கி, ஊடலால் மாறுபட்டவள் போல் நடித்துப் போய் விடுவாள். இந்தக் **கிளர்வரிக் கோலம்** எனக்குத் தெரியும்.''

'' நான் அவளைப் பிரிந்திருந்த காலங்களில், மிகவும் வருந்தியவள் போல் என் சுற்றத்தாரிடம் தன் வருத்தத்தைச் சொல்லிச் சொல்லி முறையிடுவாள். இது பாசாங்கு என்றும், **தேர்ச்சிவரி** என்னும் நடிப்பு வகை என்றும் நான் அறிந்திருக்கிறேன்.''

''மாலைக் காலத்தில் மயக்கமடைந்தவள் போல் பார்த்தவரிடமெல்லாம் முறையிட்டாள், அந்த வண்டு அலர் கோதை. அந்தக் **காட்சிவரி**யையும் நான் அறிவேன்.''

''அவர்கள் தன்னை எடுத்தணைத்துத் தேறுதல் சொல்ல வேண்டுமென்று, அவர்கள் முன்னால் மேலும் மயங்கி விழுகின்றவள் போல் நடித்த **எடுத்துக்கோள்வரி**யும் எனக்குத் தெரியும்.''

''வசந்தமாலையே! மாதவி ஒரு நாடகப் பெண். ஆதலால் இப்படியெல்லாம் பாசாங்கு செய்து நடிப்பது அவளுடைய இயல்பு அல்லவா? இனி நான் ஏமாற மாட்டேன். அவள்

அனுப்பிய கடிதத்தையும் பெற்றுக் கொள்ள மாட்டேன்'' என்று சொல்லி விட்டான்.

''திலகமும், அளகமும், சிறுகரும் சிலையும்,
குவளையும், குமிழும், கொவ்வையும் கொண்ட
மாதர் வாள் முகத்து மதைஇய நோக்கமொடு,
காதலின் தோன்றிய கண்கூடு வரியும்;
புயல் சுமந்து வருந்திப் பொழிகதிர் மதியத்துக்
கயல் உலாய்த் திரிதரும் காமர் செவ்வியின்,
பாகு பொதி பவளம் திறந்து, நிலா உதவிய
நாகு இள முத்தின் நகை நலம் காட்டி,
வருக என வந்து போக எனப்போகிய
கருநெடும் கண்ணி காண்வரிக் கோலமும்;
அந்திமாலை வந்ததற்கு இரங்கிச்,
சிந்தை நோய் கூரும் என் சிறுமை நோக்கிக்
கிளிபுரை கிளவியும், மட அன நடையும்,
களிமயில் சாயலும் கரந்தனள் ஆகிச்,
செருவேல் நெடுங்கண் சிலதியர் கோலத்து
ஒருதனி வந்த உள்வரி ஆடலும்;
சிலம்புவாய் புலம்பவும் மேகலை ஆர்ப்பவும்,
கலம்பெரு நுசுப்பினள் காதல் நோக்கமொடு
திறந்து வேறு ஆய என் சிறுமை நோக்கியும்,
புறத்து நின்று ஆடிய புன் புறவரியும்;
கோதையும், குழலும், தாதுசேர் அளகமும்,
ஒருகாழ் முத்தமும், திருமுலைத் தடமும்,
மின்இடை வருத்த நன்னுதல் தோன்றிச்,
சிறுகுறும் தொழிலியர் மறுமொழி உய்ப்பப்,
புணர்ச்சி உள்பொதிந்த கலாம்தரு கிளவியின்
இருபுற மொழிப் பொருள் கேட்டனள் ஆகித்,
தளர்ந்த சாயல் தகைமென் கூந்தல்
கிளர்ந்து வேறு ஆகிய கிளர்வரிக் கோலமும்;
பிரிந்து உறை காலத்துப் பரிந்தனள் ஆகி,
என் உறுகிளைகட்குத் தன்னுறு துயரம்
தேர்ந்து தேர்ந்து உரைத்த தேர்ச்சிவரி அன்றியும்;
வண்டு அலர் கோதை மாலையுள் மயங்கிக்
கண்டவர்க்கு உரைத்த காட்சிவரியும்;
அடுத்தடுத்து அவர்முன் மயங்கிய மயக்கம்
எடுத்து அவர் தீர்த்த எடுத்துக்கோள்வரியும்;
ஆடல் மகளே ஆதலின், ஆய் இழை!
பாடுபெற்றன அப் பைந்தொடி தனக்கு'' என;

[திலகமும் - நெற்றிப் பொட்டும்; அளகமும் - கூந்தலும்; சிறு கரும் சிலையும் - சிறிய கரிய வில்லைப்போன்ற புருவமும்; குவளையும் - குவளை மலர் போன்ற கண்ணும்; குமிழும் - குமிழம் பூப் போன்ற மூக்கும்; கொவ்வையும் கொண்ட - கொவ்வைப் பழம் போன்ற வாயும் ஆகிய இவற்றைக் கொண்ட; மாதர் வாள் முகத்து - அழகிய ஒளி பொருந்திய முகத்தில்; மதைஇய நோக்கமொடு - களித்த பார்வையுடன்; காதலின் தோன்றிய கண்கூடு வரியும் - என்மேல் காதல் உடையவள் போல் தோன்றி முதன் முதல் நடித்த நடிப்பும்;

புயல் சுமந்து வருந்தி - மேகத்தைப் போன்ற கூந்தலைச் சுமந்து வருந்தி; பொழி கதிர் மதியத்து - பொழிகின்ற ஒளியை யுடைய நிலாப் போலும் முகத்தில்; கயல் உலாய்த் திரிதரும் - கயல் மீன்களைப் போன்ற கண்கள் உலாவித் திரிகின்ற; காமர் செவ்வியின் - அழகிய முகப் பொலிவோடு; பாகு பொதி - இனிமை நிறைந்த; பவளம் திறந்து - பவளம் போன்ற வாயைத் திறந்து; நிலா உதவிய - ஒளியைத் தந்த; நாகு இளம் முத்தின் - மிக்க இளமையுடைய முத்தைப் போன்ற பற்களால்; நகை நலம் காட்டி - புன்முறுவலாகிய இன்பத்தைத் தந்து; வருக என வந்து - வா என்றதும் வந்து; போக எனப் போகிய - போக எனக் கூறியதும் போன; கரு நெடும் கண்ணி - கரிய நீண்ட கண்ணையுடைய மாதவியின்; காண்வரிக் கோலமும் - பலகாலும் வந்து நான் காணும்படி நடித்த நடிப்பும்;

அந்திமாலை வந்ததற்கு இரங்கி - அந்தியாகிய மாலைப் பொழுது வந்ததற்கு வருந்தி; சிந்தை நோய் கூரும் - உள்ளத்தில் வருத்தம் மிகுகின்ற; என் சிறுமை நோக்கி - எனது ஆற்றாமையைத்தான் பார்த்து; கிளிபுரை கிளவியும் - கிளியை ஒத்த இனிய மொழிகளும்; மட அன நடையும் - அழகிய அன்னம் போன்ற நடையும்; களி மயில் சாயலும் - களித்து ஆடுகின்ற மயிலின் சாயலும்; கரந்தனள் ஆகி - மறைத்தவளாகி; செருவேல் நெடுங்கண் - போர்த் தொழில் புரியும் நீண்ட கண்ணையுடைய; சிலதியர் கோலத்து - ஏவற் பெண்ணின் கோலத்தோடு; ஒரு தனி வந்த - தானே தனியாக வந்த; உள்வரி யாடலும் - வடிவு மறைத்த நடிப்பும்;

சிலம்பு வாய் புலம்பவும் - சிலம்பின் வாய் ஒலிக்கவும்; மேகலை ஆர்ப்பவும் - மேகலை ஒலி செய்யவும்; கலம் பெரு நுசுப்பினள் - அணிகலங்களின் சுமையைத் தாங்க முடியாத இடுப்பினையுடைய அவள்; காதல் நோக்கமொடு - காதல் மிகவும் உடைய நோக்கத்தோடு; திறத்து வேறு ஆய என் சிறுமை நோக்கியும் - அவளை விட்டுப் பிரிந்த என் வருத்தத்தைக் கண்டும்; புறத்து நின்று ஆடிய - என்னுடன் அணையாமல் புறத்தே நின்று நடித்துவிட்டுப் போன; புன்புற வரியும் - ;

கோதையும் – மாலைகளும்; குழலும் – குழல் என்ற ஒருவகைத் தலை முடிப்பும்; தாதுசேர் அளகமும் – மகரந்தப் பொடி சேர்ந்த அளகம் என்ற ஒருவகைத் தலை முடிப்பும்; ஒரு காழ் முத்தமும் – ஒப்பற்ற முத்துவடமும்; திருமுலைத்தடமும் – அழகிய முலைப் பரப்பும்; (ஆகிய இவை) மின் இடை வருத்த – மின்னல் போல் நுடங்கும் இடுப்பை வருத்த; நன்னுதல் தோன்றி – நல்ல நெற்றியை யுடைய அவள் வந்து; சிறுகுறும் தொழிலியர் – சிறிய குற்றேவல் செய்யும் மகளிர்; மறுமொழி உய்ப்ப – நான் சொல்லும் மறுமொழிகளைப் போய்ச் சொல்லியதும்; புணர்ச்சி உள் பொதிந்த – புணர்ச்சி யாகிய கருத்தை உட்கொண்டிருக்கிற; கலம் தரு கிளவியின் – எனது ஊடல் உண்டுபண்ணும் சொற்களை; இருபுற மொழிப்பொருள் கேட்டனள் ஆகி – நான் இரு பொருள் படும்படியான சொற்களைச் சொல்லி யனுப்பியதாகக் கருதி; தளர்ந்த சாயல் – தளர்ந்த மென்மைத் தன்மையினையும்; தகைமென் கூந்தல்–அழகிய மெல்லிய கூந்தலினையும் உடைய அம்மாதவி; கிளர்ந்து வேறு ஆகிய – சினம் பொங்கி ஊடலால் மாறுபட்டவள் போல் ஆகிய; கிளர்வரிக் கோலமும் – கிளர்வரிக் கோலம் என்னும் நடிப்பும்;

பிரிந்து உறை காலத்து – நான் அவளைப் பிரிந்திருந்த காலத்தில்; பரிந்தனள் ஆகி – தான் மிக வருந்தியவள் போலக் காட்டி; என் உறுகிளைகட்கு – எனது நெருங்கிய சுற்றத்தாருக்கு; தன் உறு துயரம் – தனக்கு உற்ற துயரத்தை; தேர்ந்து தேர்ந்து உரைத்த – நினைத்து நினைத்துக் கூறிய; தேர்ச்சிவரி அன்றியும் – தேர்ச்சிவரி என்ற நடிப்பு வகை அல்லாமல் இன்னும்;

வண்டு அலர் கோதை – வண்டுகள் மலரச் செய்கின்ற மாலையை யுடைய மாதவி; மாலையுள் மயங்கி – மாலைக் காலத்தில் மயக்கமுற்று; கண்டவர்க்கு உரைத்த – தான் கண்டவர்களுக் கெல்லாம் எடுத்துக் கூறிய; காட்சி வரியும் – தன் வருத்தத்தைப் பலரும் காணும்படி நடித்த நடிப்பும்;

அடுத்தடுத்து அவர் முன் மயங்கிய மயக்கம் – மேலும் மேலும் அவர் முன்னால் மயங்கியவள் போல் விழுந்த மயக்கத்தை; எடுத்து அவர் தீர்த்த – அவர் எடுத்துத் தாங்கித் தீர்த்து வைத்த; எடுத்துக் கோள்வரியும் – எடுத்துக்கோள்வரி என்னும் நடிப்பும்; ஆடல் மகளே ஆதலின் – நாடகப் பெண் ஆதலால்; ஆய் இழை – அழகிய அணிகளையுடைய வசந்தமாலையே!; அப்பைந்தொடி தனக்கு – பசுமையான வளையலணிந்த அம்மாதவிக்கு; பாடு பெற்றன என – இந்த நடிப்புக்களெல்லாம் அவளுக்கு இயல்பே யல்லவா என்று கூறி மறுக்க.]

## மாதவியின் வருத்தம்

## (111–118)

அழகிய பொன் தோடணிந்த, திருமுகத்தையுடைய மாதவி அனுப்பிய தாழம்பூக் கடிதத்தைக் கோவலன் மறுத்துவிடவே, தோழி வசந்தமாலைக்கு வருத்தமாய் விட்டது. மனம் வாடியவளாய் மாதவியிடம் நடந்த செய்திகளைச் சொன்னாள். தான் யாதொரு குற்றமும் செய்யவில்லை என்ற நம்பிக்கை அவளுக்கு இருந்தபடியால் "இன்று இரவு வராமற் போனாலும், நாளைக் காலை அவர் வருவார்" என்று தோழியிடம் சொல்லிவிட்டு, மலர் பரப்பிய படுக்கையில் படுத்தாள். செயலற்ற உள்ளத்தோடு படுக்கையில் புரண்டு கொண்டிருந்தாள். இந்த மன நிலைமையில் எப்படித் தூக்கம் வரும்?

**அணித்தோட்டுத் திருமுகத்து ஆய்இழை எழுதிய**
**மணித்தோட்டுத் திருமுகம் மறுத்ததற்கு இரங்கி,**
**வாடிய உள்ளத்து வசந்தமாலை,**
**தோடு அலர் கோதைக்குத் துனிந்துசென்று உரைப்ப,**
**மாலை வாரார் ஆயினும் மாண்இழை !**
**காலை காண்குவம் எனக், கையறு நெஞ்சமொடு**
**பூமலர் அமளி மிசைப் பொருந்தாது வதிந்தனள்;**
**மாமலர் நெடுங்கண் மாதவிதானென்.**

[அணித் தோட்டுத் திருமுகத்து – அணிகலமாகிய பொன் தோட்டினை யுடைய அழகிய முகத்தினையும்; ஆய் இழை – அழகிய அணிகளையும் உடைய மாதவியால் எழுதப்பட்ட; மணித் தோட்டுத் திருமுகம் – அழகிய தாழை மடலாகிய கடிதத்தை; மறுத்ததற்கு இரங்கி - கோவலன் மறுத்துவிட்டமைக்கு வருந்தி; வாடிய உள்ளத்து - அழிந்த உள்ளத்தையுடைய; வசந்தமாலை –; தோடு அலர் கோதைக்கு - இதழ்கள் மலர்ந்த மாலையணிந்த மாதவிக்கு; துனிந்து சென்று உரைப்ப – வருந்திச் சென்று கூற; மாலை வாரார் ஆயினும் – இன்று இரவு வாராராயினும்; மாண் இழை–மாட்சிமையுள்ள அணிகளை யணிந்த தோழீ !; காலை காண்குவம் என – நாளைக் காலையில் நாம் காணப்பெறுவோம் என்று; கையறு நெஞ்சமோடு – செயலற்ற உள்ளத்தோடு; பூ மலர் அமளிமிசை – அழகிய மலர் பரப்பிய படுக்கை மீது; மாமலர் நெடுங்கண் – கரிய மலர் போன்ற நீண்ட கண்களையுடைய; மாதவி தான் –; பொருந்தாது வதிந்தனள் – அதனோடு ஒட்டியும் ஒட்டாதும் கிடந்தாள்.

(வெண்பா)

செந்தாமரை விரியத் தேமாங் கொழுந்து ஒழுக
மைந்து ஆர் அசோகம் மடல் அவிழக்—கொந்து ஆர்
இள வேனல் வந்ததால்; என்னுங்கொல் இன்று
வள வேல் நல் கண்ணி மனம்

[செந்தாமரை விரிய – செந்தாமரை மலர்கள் மலர; தேமாங் கொழுந்து ஒழுக – இனிய மாமரத்தின் கொழுந்துகள் தழைத்துத் தொங்க; மைந்து ஆர் அசோகம் மடல் அவிழ – அழகு நிறைந்த அசோகம் பூவின் இதழ்கள் அவிழ; கொந்து ஆர் இளவேனல் வந்தால் – பூங்கொத்துக்கள் மலிந்த இளவேனிற் காலம் வந்துவிட்டதே; இன்று வளவேல் நல் கண்ணி மனம் – இன்று வளமான வேலைப் போன்ற கண்களையுடைய மாதவியின் மனம்; என்னுங்கொல் – என்னுகுமோ? (என்று ஓலை கொண்டு போன கூனி கோவலனுக்குக் கூறினாள்.)

(வெண்பா)

ஊடினீர் எல்லாம் உருவிலான்தன் ஆணை
கூடுமின் என்று குயில் சாற்ற—நீடிய
வேனற் பாணிக் கலந்தாள் மென் பூந் திருமுகத்தைக்
கானல் பாணிக்கு அலந்தாய்! காண்

[ஊடினீர் எல்லாம் – ஊடல் செய்தவர்களே!; உருவிலான் தன் ஆணை - மன்மதனுடைய ஆணையைச் சொல்லுகிறேன்; கூடுமின் - நீங்கள் உங்கள் காதலருடன் கூடுங்கள்; என்று – என்று சொல்வன போல; குயில் சாற்ற – குயில்கள் கூவ; நீடிய – நீண்ட; வேனற் பாணிக் கலந்தாள் – இளவேனிற் பொழுதில் உன்னோடு கலந்தவளாகிய மாதவியின்; மென் பூந்திருமுகத்தை – மெல்லிய பூவில் எழுதிய இத் திருமுகத்தை; கானல் பாணிக்கு – கடற்கரைச் சோலைப் பாட்டிற்கு; அலந்தாய் – மனம் வாடிய கோவலனே; காண் - காண்பாயாக!

கடற்கரைப் பாடலில் மாதவியை ஐயப்பட்டு வெறுத்த கோவலனே! மாதவியின் வருந்திய இக் காதற் கடிதத்தைப் பார்ப்பாயாக! என்று கூனி ஓலையை நீட்டினாள்]

வேனிற் காதை முற்றிற்று

# கனாத்திறம் உரைத்த காதை

கண்ணகியின் பார்ப்பனத் தோழியாகிய தேவந்தியின் வரலாறும், கண்ணகி தான் கனாக்கண்ட விதத்தைத் தேவந்திக்கு எடுத்துச் சொல்வதும், கோவலனும் கண்ணகியும் புகார் நகரைவிட்டு மதுரைக்குப் புறப்படுவதும் இக்காதையில் சொல்லப்படுகின்றன.

## தேவந்தியின் வரலாறு

## (1–40)

காவிரிப்பூம் பட்டினத்தில் மாலை நேரத்திலே வீடுதோறும் மலர்ந்த முல்லையும் நெல்லும் தூவி, மணி விளக்கேற்றி, மகளிர் தங்கள் கணவருக்கு மகிழ்ச்சி யுண்டாகும்படி அழகு செய்து கொண்டிருக்கிறார்கள். இத்தகைய வீடு ஒன்றில் ஒரு பார்ப்பனன் தன் இரண்டு மனைவிகளோடு வாழ்க்கை நடத்தினான். அவனுடைய மூத்த மனைவியின் பெயர் மாலதி. இவளுக்குக் குழந்தைகள் இல்லை. இளைய மனைவிக்கு ஓர் ஆண் குழந்தை உண்டு. ஒரு நாள் பார்ப்பனனும் அவன் இளைய மனைவியும் குழந்தையை வீட்டில் விட்டு வெளியில் போயிருந்த போது குழந்தை பசியால் அழுதது. மாலதி குழந்தைக்குப் பால் ஊட்டும் போது பால் விக்கிக் குழந்தை இறந்துவிட்டது.

மாலதிக்குச் சொல்ல முடியாத துக்கம். குழந்தையை வேண்டுமென்றே தான் கொன்று விட்டதாகத் தன்மேல் கணவனும், மாற்றாளும் பழி சுமத்துவார்கள் என்று ஏங்கிக் குழந்தையைக் கையில் எடுத்துக்கொண்டு கற்பகம் நிற்கும் கோயில், ஐராவதக் கோயில், பலராமன் கோயில், சூரியன் கோயில், சிவன் கோயில், முருகன் கோயில், வச்சிரக் கோயில், சாதவாகனன் கோயில், அருகன் கோயில், சந்திரன் கோயில், ஆகிய கோயில்களிலெல்லாம் போய், "தெய்வங்களே! என் துயரத்தை நீங்கள்தான் தீர்க்க வேண்டும்" என்று முறையிட்டாள். இவள் என்ன முறையிட்டும் குழந்தை உயிர் பெறவில்லை. காலமோ நடு ராத்திரி. இந்த நிலையில் சுடுகாட்டுக் கருகே யுள்ள ஐயனார் கோயிலுக்குப் போய் வரம் வேண்டித் தவித்து நின்றாள்.

பிணத்தைத்தின்னும் ஒரு இடாகினிப் பேய், இளம்பெண் உருவமாக இவள் முன் நின்று மாலதியிடம் இரக்கம் காட்டுவது போல் நடித்து "குற்றமற்ற பெண்ணே! நல்ல தவம் செய்தவர்களுக்குத்தான் தேவர்கள் வரம் கொடுப்பார்கள். நான் சொல்வது உண்மை வாக்கு. உன் கையிலுள்ள பிணத்தை என்னிடம் கொடு'' என்று சொல்லி இறந்த குழந்தையைக் கையில் வாங்கி இடாகினிப் பேய் விழுங்கி விட்டது. இடியுண்ட மயில் போல் திகைத்து நின்றாள் மாலதி. ஐயனாரிடம் முறையிட்டாள். அந்தத் தெய்வம் இவளிடம் மனமிரங்கி "அன்னாய்! ஏங்கி அழாதே; நீ திரும்பிப் போ; வழியில் உன் முன்னால் உயிர்க் குழந்தையைக் காண்பாய்'' என்று சொல்லி மறைந்தது. மாலதி வந்த வழியே திரும்பும்போது, குயில்கள் உறையும் ஒரு சோலையில் ஐயனாரே குழந்தை வடிவாகக் கிடந்தார். குழந்தையை மகிழ்வுடன் வீட்டுக்குக் கொண்டுபோய் அதன் தாயிடம் கொடுத்தாள் மாலதி.

இவ்விதம் அந்தணனுக்குக் குழந்தையாய் வந்த ஐயனார், கல்வி கேள்விகளில் பயிற்சி பெற்று வளர்ந்தான். சில காலம் சென்றபின் பெற்றோர் இறந்தனர். அவர்களுக்குச் செய்ய வேண்டிய கடன்களை முறைப்படிச் செய்தபின், தேவந்தி என்ற ஒரு பெண்ணை மணந்தான். தேவந்தியின் கணவனே ஒரு தெய்வம். மக்கள் கண்களுக்குத் தேவர்களின் உடல் புலப்படாதெனினும் பூ விழியாளான தேவந்தி தன் சேர்க்கையைப் பொறுக்கும் திறனைக் கொடுத்து, அவளுடன் கூடிச் சில காலம் இன்புற்றிருந்தான்.

இப்படி இருக்கும் ஒருநாள் ஐயனார் தன்னுடைய மூப்பற்ற உடலைத் தேவந்திக்கு விளக்கி "என் கோயிலுக்கு நீ வா''என்று அவளிடம் சொல்லித் தன் உறவினரிடம் தான் தீர்த்த யாத்திரை செய்யப் போவதாகச் சொல்லிவிட்டு மறைந்தான். ஐயனார் கோவிலில் தேவந்தி வழிபாடு செய்துகொண்டிருந்தாள்.

•

**அகல் நகர் எல்லாம், அரும்பு அவிழ் முல்லை**
**நிகர் மலர், நெல்லொடு தூஉய்ப், பகல் மாய்ந்த**
**மாலை மணி விளக்கம் காட்டி இரவிற்கு ஓர்**
**கோலம் கொடி இடையார் தாம் கொள்ள; மேலோர் நாள்**
**மாலதி, மாற்றாள் மகவுக்குப் பால் அளிக்கப்,**

பால் விக்கிப் பாலகன் தான் சோர மாலதியும்,
''பார்ப்பானொடு மனையாள் என்மேல் படாதன விட்டு
ஏற்பன கூறார்'' என்று ஏங்கி, மகக் கொண்டு,
அமரர் தருக்கோட்டம், வெள்யானைக் கோட்டம்,
புகர் வெள்ளை நாகர்தம் கோட்டம், பகல் வாயில்
உச்சிக்கிழான் கோட்டம், ஊர்க் கோட்டம், வேற் கோட்டம்,
வச்சிரக் கோட்டம், புறம்பணையான் வாழ் கோட்டம்,
நிக்கந்தக் கோட்டம், நிலாக் கோட்டம் புக்கு, ''எங்கும்
தேவிர்காள்! எம் உறுநோய் தீரும்'' என்று, மேவி ஓர்
பாசண்டச் சாத்தற்குப் பாடு கிடந்தாளுக்கு ;
''ஏசும்படி ஓர் இளம் கொடியாய், ஆசு இலாய் !
செய்தவம் இல்லோர்க்குத் தேவர் வரம் கொடார்;
பொய் உரையே அன்று, பொருள் உரையே, கையில்
படுபிணம் தா'' என்று பறித்து, அவள் கைக்கொண்டு
சுடுகாட்டுக் கோட்டத்துத் தூங்கு இருளில் சென்று, ஆங்கு
இடுபிணம் தின்னும் இடாகினிப் பேய், வாங்கி
மடி அகத்து இட்டாள் மகவை ; இடியுண்ட
மஞ்ஞைபோல் ஏங்கி அழுதாளுக்கு அச் சாத்தன்,
''அஞ்ஞை நீ ஏங்கி அழல்'' என்று, முன்னை
உயிர்க்குழவி காணாய்! என்று, அக்குழவியாய் ஓர்
குயில் பொதும்பர் நீழல் குறுக ; அயிர்ப்பு இன்றி
மாயக் குழவி எடுத்து மடித்திரைத்துத்,
தாய்கைக் கொடுத்தாள் அத் தையலாள்; தூய
மறையோன் பின் மாணியாய், வான் பொருள் கேள்வித்
துறை போய், அவர் முடிந்த பின்னர், இறையோனும்
தாயத்தாரோடும் வழக்குரைத்துத் தந்தைக்கும்
தாயர்க்கும் வேண்டும் கடன் கழித்து மேய நாள் ;
தேவந்தி என்பாள் மனைவி ; அவளுக்குப்
பூவந்த உண்கண் பொறுக்க என்று மேவித், தன்
மூவா இள நலம் காட்டி, ''எம் கோட்டத்து
நீ வா'' என உரைத்து நீங்குதலும் ; தூமொழி
''ஆர்த்த கணவன் அகன்றனன்; போய் எங்கும்
தீர்த்தத் துறை படிவேன்'' என்று, அவனைப் பேர்த்து
மீட்டுத் தருவாய் என ஒன்றன் மேல் இட்டுக் [இங்ஙன்
கோட்டம் வழிபாடு கொண்டிருப்பாள்.

[அகல் நகர் எல்லாம் – அகன்ற நகரம் முழுவதும்; அரும்பு அவிழ் முல்லை – அரும்பு மலர்ந்த முல்லையின்; நிகர்மலர் – ஒளியை உடைய மலர்களை ; நெல்லொடு தூஉய் – நெல்லொடு கலந்து தூவி ; பகல் மாய்ந்த மாலை – பகற் பொழுது மறைந்த மாலைக் காலத்தில் ;

மணி விளக்கம் காட்டி – அழகிய விளக்கினை ஏற்றி; இரவிற்கு ஓர் கோலம் – இராப் பொழுதிற்கு ஏற்ற கோலத்தை; கொடி இடையார் தாம் கொள்ள - கொடி போன்ற இடையினை உடைய மகளிர் செய்து கொள்ள; மேல் ஓர் நாள் – முன் ஒரு நாளிலே;

மாலதி - மாலதி என்ற ஒரு பெண்; மாற்றாள் மகவுக்குப் பால் அளிக்க – தன் மாற்றாளுடைய பிள்ளைக்குப் பால் கொடுத்துக் கொண்டிருக்க; பால் விக்கிப் பாலகன் தான் சோர - பால் தொண்டையில் விக்கிக்கொண்டு பிள்ளை இறந்துபோக; மாலதியும் –; பார்ப்பானொடு மனையாள் – தன் கணவனான பார்ப்பானும் அவன் இளம் மனைவியும்; என்மேல் படாதன விட்டு - என்மேல் அடாப்பழி சொல்வதல்லாமல்; ஏற்பன கூறார் என்று ஏங்கி - ஏற்கும் மொழிகளைச் சொல்ல மாட்டார்களே என்று ஏங்கி; மகக்கொண்டு – இறந்த குழந்தையைக் கையில் எடுத்துக்கொண்டு; அமரர் தருக் கோட்டம் – தேவர்களின் கற்பகத்தரு நிற்கின்ற கோயில்; வெள்யானைக் கோட்டம் – ஐராவதம் நிற்கும் கோயில்; புகர் வெள்ளை நாகர் தம் கோட்டம் – அழகிய பலராமன் இருக்கும் கோயில்; பகல் வாயில் உச்சிக் கிழான் கோட்டம் – கீழ்த்திசையில் தோன்றுகின்ற சூரியன் கோயில்; ஊர்க் கோட்டம் – இறைவன் ஊராகிய கைலாயம் நிற்கும் கோயில்: வேல் கோட்டம் – வேலனாகிய முருகன் இருக்கும் கோயில்; வச்சிரக் கோட்டம் – இந்திரனுடைய வச்சிரப் படைக்கருவி இருக்கும் கோயில்; புறம்பணையான் வாழ் கோட்டம் - சாதவாகனன் மேவிய கோவில்; நிக்கந்தன் கோட்டம் – அருகன் கோயில்; நிலாக் கோட்டம் – சந்திரன் கோயில்; புக்கு எங்கும் - ஆகிய இந்தக் கோவில்கள் எல்லாம் நுழைந்து; தேவிர்காள் – தேவர்களே; எம் உறுநோய் – எனக்கு வந்த இந்தத் துன்பத்தை; தீரும் என்று – நீக்குவீர்களாக என்று சொல்லித் திரிந்து (பின்னர்), மேவி ஓர் பாசண்டச் சாத்தற்கு – பாசண்டச் சாத்தன் என்னும் ஐயனார் கோயிலில்;பாடு கிடந்தாளுக்கு- வரம் வேண்டி நின்ற அவளுக்கு;

ஏசும்படி ஓர் இளம் கொடியாய் – பழிப்புக்குரிய ஓர் இளம் கொடி போன்றவளாகி; ஆசு இலாய்-குற்ற மற்றவளே! செய்தவம் இல்லோர்க்கு – வருந்திச் செய்த நல்ல தவம் இல்லாதவர்க்கு: தேவர் வரம் கொடார் –; பொய் உரையே அன்று – அது பொய்யான வார்த்தையே அல்ல; பொருள் உரையே – உறுதியான உண்மைச் சொற்களே ஆகும். (என்று சொல்லி); கையில் படுபிணம் தா என்று பறித்து – உன் கையிலிருக்கும் இறந்த பிணத்தைக் கொடு என்று பிடுங்கி; அவள் கைக்கொண்டு – அப்பேய் மகள் தன் கையிற் கொண்டு; சுடுகாட்டுக் கோட்டத்து தூங்கு இருளில் சென்று – சுடு காட்டுக் கோட்டத்தில் நிறைந்த இருட்டில் போய்; ஆங்கு –; இடு

பிணம் தின்னும் இடாகினிப் பேய் - குழியில் இடப்படுகின்ற பிணங் களைத் தின்னும் இடாகினி என்னும் அப் பேய்மகள்; வாங்கி மகவை மடியகத்து இட்டாள் – அப்பிள்ளையை விழுங்கி விட்டாள்:

இடியுண்ட மஞ்ஞை போல் – இடிக் குரலைக் கேட்ட மயில் போல்; ஏங்கி அழுதாளுக்கு - ஏங்கி அழுதவளை நோக்கி; அச்சாத் தன் – அந்தச் சாத்தன் என்னும் தெய்வம்; அஞ்ஞை நீ ஏங்கி அழல் என்று – அன்னாய் நீ ஏங்கி அழவேண்டாம் என்று சொல்லி; அக் குழவியாய் ஓர் குயில் பொதும்பர் நீழல் குறுக – குயில்களையுடைய ஓர் மரச்செறிவின் நிழலில் அத்தெய்வமே ஓர் குழந்தையாய்க் கிடக்க; அயிர்ப்பு இன்றி – ஐயமில்லாமல்; மாயக் குழவி எடுத்து – அந்த மாயக் குழந்தையைத் தன் கையிலெடுத்து; மடித்திரைத்து – தன் வயிற்றில் அணைத்துக் கொண்டு போய்; தாய் கைக் கொடுத்தாள் அத்தையலாள் – அவள் அக்குழந்தையைத் தாயின் கையில் கொடுத் தாள்;

தூய மறையோன் பின் மாணியாய் - (அந்த தெய்வக் குழந்தை) தூய்மை உடைய பார்ப்பனன் பின்னர் வரும் பிள்ளையாய்; வான் பொருள் கேள்வித் துறை போய் – மிக்க கல்வி கேள்விகளின் பொருள் களை யெல்லாம் நன்கு கற்று; அவர் முடிந்த பின்னர் – தந்தை யும், தாய்மார் இருவரும் இறந்த பிற்பாடு; இறையோனும் - பிள்ளை வடிவாக வந்திருந்த அக்கடவுளும்; தாயத்தாரோடும் வழக்குரைத்து– தாயத்தாரோடு பொருளுக்கு வழக்காடி; தந்தைக்கும் தாயர்க்கும் – தன் தந்தைக்கும் தாய்மார் இருவருக்கும் (அதாவது தந்தைக்கும், தாய்க்கும், மாலதிக்கும்); வேண்டும் கடன் கழித்து மேயநாள் – செய்ய வேண்டிய கடன்களை யெல்லாம் செய்து முடித்து வாழும் நாளிலே;

தேவந்தி என்பாள் மனைவி – அவன் மனைவியாகிய தேவந்தி என் பவள்; அவளுக்கு – அவளை; பூவந்த உண்கண் பொறுக்க என்று – பூப்போன்ற அழகு பொருந்திய மையுண்ட கண்களை யுடைய இவள்; என் கடவுள் இயல்பை பொறுக்கக் கடவாள் என்று; மேவி - அவ ளோடு கூடி; தன் மூவா இள நலம் காட்டி – தனது அழியாத இளமையின் இன்பத்தைக் காட்டி (பின்னர்); எம் கோட்டத்து நீ வா என உரைத்து – எமது கோயிலுக்கு நீ வருக என்று சொல்லி; நீங்குதலும் – அவளை விட்டுப் பிரிதலும்;

தூ மொழி – தூய மொழிகளை உடைய தேவந்தி என்பவள்; ஆர்த்த கணவன் – என் நெஞ்சைப் பிணித்த கணவன்; போய் எங்கும் தீர்த்தத் துறை படிவேன் என்று அகன்றனன் – தீர்த்தத் துறைகள் எங்கும் போய்த் தீர்த்தமாடுவேன் என்று சொல்லி என்னை

விட்டு அகன்ருன் ; அவனைப் பேர்த்து இங்ஙன் மீட்டுத் தருவாய் என — அவனை மறுபடியும் இங்கு மீட்டுக்கொண்டு வந்து கொடுப்பாய் என்று ; ஒன்றன் மேல் இட்டு — ஒரு காரணம் சொல்லி ; கோட்டம் வழிபாடு கொண்டிருப்பாள் — அச்சாத்தன் கோயிலில் வழிபாடு செய்து கொண்டிருப்பவள்.]

## கண்ணகியின் கனவு

## (40–54)

ஐயனுர் கோவிலில் வழிபாடு செய்து கொண்டிருந்த தேவந்தி என்னும் பார்ப்பனப் பெண், கண்ணகியின் நெருங்கிய தோழிகளில் ஒருத்தி. கண்ணகி கணவனைப் பிரிந்து வருந்திக் கொண்டிருப்பது தேவந்திக்குத் தெரியும். தான் வழிபாடுசெய்யும் ஐயனுருக்கு அறுகு, சிறுபூளை, நெல் இவற்றைத் தூவி வழிபாடு செய்து, கண்ணகி தன் கணவனைச் சீக்கிரம் அடைய வேண்டுமென்று தேவந்தி வேண்டினுள். பின் கண்ணகியிடம் சென்று "உன் கணவனை நீ வெகு சீக்கிரம் பெறுவாய்" என்ருள். அதைக் கேட்ட கண்ணகி அவளை நோக்கி, "என் அருமைத் தோழியே! நீ சொன்ன சொல் பலிக்குமாறுலும் என்னுடைய நெஞ்சில் அச்சம் தோன்றுகிறது. ஏனென்ருல் நேற்றிரவு நான் ஒரு கனவு கண்டேன். என் கணவர் திரும்பி வந்து என் கையைப் பிடித்தார். நானும் அவரும் இந்த ஊரை விட்டு ஒரு பெரிய நகருக்குப் போனேம். அந்த ஊரிலே என் கணவர் மீது ஒரு அடாப்பழி சுமத்தினுர்கள். என்மேல் தேளை இட்டதுபோல் இருந்தது அப்பழிச் சொல். கோவலருக்குப் பெருந்தீங்கு விளைந்ததென்று கேட்டு நான் அவ்வூர் அரசனிடம் சென்று முறையிட்டு வழக்காடினேன். அந்த அரசனுக்கும் அவ்வூருக்கும் பெரிய தீங்கு ஏற்பட்டது. நான் கண்ட கனவு தீய கனவாதலால் விரிவாக உன்னிடம் சொல்ல எனக்கு மனமில்லை. தீவினைப் பயனை அடைந்த நான் அதன் பிறகு என் கணவரோடு பெற்ற நலங்களை நீ கேட்டால் சிரிப்புக்கு இடமாகும்" என்ருள்.

**வாட்டு அரும் சீர்க்**
**கண்ணகி நல்லாளுக்கு உற்ற குறை உண்டு என்று**
**எண்ணிய நெஞ்சத்து இனையளாய், நண்ணி,**
**அறுகு சிறு பூளை நெல்லொடு தூஉய்ச், "சென்று**
**பெறுக கணவனோடு" என்ருள்; "பெருகேன்,**
**கடுக்கும் என் நெஞ்சம்! கனவினுல் என்கை**

பிடித்தனன், போய் ஓர் பெரும் பதியுள் பட்டேம்;
பட்ட பதியில் படாதது ஒரு வார்த்தை
இட்டனர் ஊரார், இடு தேள் இட்டு என்தன் மேல்
கோவலற்கு உற்றதோர் தீங்கு என்று; அது கேட்டுக்,
காவலன் முன்னர் யான் கட்டுரைத்தேன்; காவலனோடு
ஊர்க்கு உற்ற தீங்கும் ஒன்று உண்டால், உரையாடேன்;
தீக் குற்றம் போலும், செறி தொடீஇ! தீக்குற்றம்
உற்றேனொடு, உற்ற உறுவனொடு, யான் உற்ற
நல் திறம் கேட்கின் நகை யாகும்.''

[வாட்டு அரும் சீர் - வாடாத புகழை உடைய; கண்ணகி நல்லாளுக்கு - கண்ணகியாகிய பெண்ணிற்கு; உற்ற குறை உண்டு என்று - (கணவன் பிரிதலால்) வந்த ஒரு துன்பம் உண்டு என்று; எண்ணிய நெஞ்சத்து - நினைத்த நெஞ்சத்தோடு; இனையளாய் - வருந்தியவளாய்; நண்ணி - கோயிலை அடைந்து; அறுகு சிறுபூளை - அறுகம்புல், சிறிய எருக்கம்பூ என்ற இவற்றை: நெல்லொடு தூஉய் - நெல்லோடு தூவி (என்றது, கண்ணகி தன் கணவனோடு கூடுவாளாக என்று தூவி வணங்கி); சென்று கணவனொடு பெறுக - போய், நீ உன் கணவனைப் பெறுவாயாக; என்றாள் - என உரைத்தாள் தேவந்தி;

பெறுகேன் (நீ கூறுவது போலக் கணவனைப்) பெறுவேனாயினும்; கடுக்கும் என் நெஞ்சம் - எனது நெஞ்சு ஐயப்படுகின்றது; (ஏனெனில்) கனவினால் - (நேற்றுக் கண்ட) கனவில்; என் கை பிடித்தனன் - என் கையைப் பிடித்துக் கணவன் அழைத்தான்; போய் ஒரு பெரும்பதியுள் பட்டேம் - இருவரும் போய் ஒரு பெரிய நகருக்குள் நுழைந்தோம்; பட்டபதியில் - புகுந்த நகரில்; படாதது ஒரு வார்த்தை - (எங்கள் மீது) கட்டுப்படாத ஒரு பழிச் சொல்லை; என் தன் மேல் இடு தேள் இட்டு - என் மீது தேளை எடுத்து விட்டாற்போல; இட்டனர் ஊரார் - அவ்வூரார் சுமத்தினர்; கோவலற்கு உற்றது ஓர் தீங்கு என்று - கோவலனுக்கு ஒரு தீங்கு விளைந்தது என்று; அது கேட்டு - அந்த வார்த்தையைக் கேட்டு; காவலன் முன்னர் யான் கட்டுரைத்தேன் - அவ்வூர் அரசர் முன்னர் நான் சென்று வழக்குரைத்தேன்; காவலனொடு - அவ்வரசனோடு; ஊர்க்கு உற்ற தீங்கும் ஒன்று உண்டால் - அவ்வூருக்கு வந்த தீங்கு ஒன்று உண்டு; (ஆனாலும்) தீக்குற்றம் போலும் உரையாடேன் - (அது தீய கனவாதலால்) உன்னிடம் சொல்ல மாட்டேன்; செறி தொடீஇ - நன்கு நெருங்கிய வளையல்களையுடைய தோழீ!; தீக் குற்றம் உற்றேனொடு - தீவினைப்பயனை அடைந்தவளாகிய என்னோடு; உற்ற உறுவனொடு - பொருந்திய கணவனுடன்; நான் உற்ற நல் திறம் கேட்கின் - யான் பெற்ற நலங்களை நீ கேட்டால்; நகை யாகும் - அது சிரிப்புக்கு இடனாகும்;

*உறுவன் - மிக்கோன் ; அதாவது கண்ணகியைவிடப் பெரிய வனான கோவலன் ; தொடீஇ - வளையல்களை அணிந்தவளே ! ;]*

## தேவந்தி கண்ணகிக்கு ஆறுதல் சொல்வது

*(54-64)*

*தீய கனவினால் வருத்த மடைந்திருக்கும் கண்ணகியை நோக்கி, "பொற்றொடி! உன் கணவன் உன்னை வெறுத்தான் என்று நினைக்காதே. முற்பிறப்பில் நீ ஒரு நோன்பு செய்யத் தவறியதால், இப்பிறவியில் உனக்கு இத்துன்பம் ஏற்பட்டது. இதற்கு நான் ஒரு பரிகாரம் சொல்லுகின்றேன். காவிரி கடலுடன் சேரும் கடல் முகப்பில் அழகிய நெய்தல் சோலையில் சோமகுண்டம், சூரிய குண்டம் என்ற இரண்டு பொய்கைகள் உண்டு. அவைகளில் நீராடி அருகேயுள்ள காமதேவன் கோயிலில் தொழுதவர் தமது கணவரோடு இவ்வுலகில் இன்பமடைந்து மறு பிறவியில் போக பூமியில் பிறப்பார்கள். நாம் இருவரும் அப்பொய்கையில் படிந்து ஒரு நாள் முழுகுவோம்" என்றாள் தேவந்தி. இதைக் கேட்ட கண்ணகி அவ்வாறு செய்ய மறுத்தாள். ஏனெனில் பத்தினியாகிய தான் தன்னுடைய கற்பின் திறமையால் தான் கணவனின் அன்பைப் பெற வேண்டுமே யொழியப், புண்ணியத் துறைகளில் நீராடி அவ்வன்பைப் பெற முயற்சிப்பது சரியல்ல என்று தீர்மானித்தாள்.*

**" பொன் தொடீஇ!**
**கைத்தாயும் அல்லை கணவற்கு ; ஒரு நோன்பு**
**பொய்த்தாய் பழம் பிறப்பில் ; போய்க் கெடுக ; உய்த்துக்**
**கடலொடு காவிரி சென்று அலைக்கும் முன்றில்,**
**மடல் அவிழ் நெய்தல் அம் கானல் தடம் உள ;**
**சோம குண்டம், சூரிய குண்டம் துறை மூழ்கிக்**
**காம வேள் கோட்டம் தொழுதார், கணவரொடு**
**தாம் இன்புறுவர் உலகத்துத் தையலார் ;**
**போகம் செய் பூமியினும் போய்ப் பிறப்பர் ; யாம் ஒருநாள்**
**ஆடுதும்" என்ற அணி இழைக்கு அவ் ஆய் இழையாள்,**
**'பீடு அன்று' என இருந்த பின்னரே ;**

*[பொன் தொடீஇ - பொன்னாலான வளையலணிந்த தோழீ ! ; கைத்தாயும் அல்லை கணவற்கு - நீ உன் கணவரால் வெறுக்கப்படவும் இல்லை ; ஒரு நோன்பு பழம் பிறப்பில் பொய்த்தாய் - உன் கணவனுக்காக நீ ஒரு நோன்பைப் பழம் பிறப்பில் பிழையாகச் செய்தாய் ;*

போய்க் கெடுக – அந்தத் தீங்கு சென்று அழிவதாக ; உய்த்து – நீரைக் கொண்டுசென்று ; காவிரி கடலொடு சென்று அலைக்கும் – காவிரியாறு கடலோடு சென்று அதன் அலையுடன் தன் அலையையும் எதிர்த்து வீசுகின்ற ; முன்றில் - கடல் முகப்பில் ; மடல் அவிழ் – இதழ்கள் அவிழ்ந்த; நெய்தல் அம் கானல் – நெய்தல் மலர்களுடைய அழகிய கடற்கரைச் சோலையுள் ; சோம குண்டம் சூரிய குண்டம் - சோம குண்டம் சூரிய குண்டம் என்ற; தடம் உள – இரண்டு பொய் கைகள் உள ; துறை மூழ்கி – அவற்றின் நீர்த் துறையில் மூழ்கி ;

காம வேள் கோட்டம்–(அவற்றின் பக்கத்தேயுள்ள) காம தேவனின் கோயிலை ; தொழுதார் – தொழுதாரானால் ; கணவரொடு – தமது கணவரோடு கூடி ; உலகத்துத் தையலார் – இவ்வுலகில் அங்கனம் முழுகிய பெண்கள் ; தாம் இன்புறுவர் – தாமும் இன்பமடைவர் ; போகம் செய் பூமியினும் போய்ப் பிறப்பர் - (மறு பிறவியில்) இன்பமே விளைகின்ற மேல் உலகத்திலும் சென்று பிறப்பார் ; யாம் ஒரு நாள் ஆடுதும் – நாமும் ஓர் நாள் அப்பொய்கையில் படிந்து முழுகுவோம் ; என்ற அணி இழைக்கு – என்று கூறிய அழகிய அணிகளையுடைய தோழியாகிய தேவந்திக்கு ; அவ் ஆய் இழையாள் – அழகிய அணிகளையுடைய கண்ணகி ; பீடு அன்று என இருந்த பின்னர் – அது எனக்கு ஏற்ற காரியமல்ல என்று கூறிப் பேசாதிருந்த பின்னர் ;

கைத்தல் - வெறுத்தல் ; உய்த்தல் – கொண்டு செல்லல் ; பீடு – பெருமை.]

## கோவலன் கண்ணகியிடம் திரும்பி வருவது

## (64–79)

கண்ணகியும் தேவந்தியும் இவ்வாறு பேசிக் கொண்டிருக்கும்போது ஒரு வேலைக்காரி ஓடிவந்து “அம்மா, அரசன் போலும் நம் கோவலர் நமது வீட்டின் முகப்பில் வந்து கொண்டிருக்கிறார்” என்றாள். கோவலனும் வீட்டை அடைந்து படுக்கை அறையில் நுழைந்தான். அதைக்கண்ட கண்ணகியும் அவ்வறைக்குள் புகுந்தாள். மனைவியின் வாடிய மேனியையும் வருந்திய உள்ளத்தையும் பார்த்தான் கோவலன். “கண்ணகி! பொய்க்கோலம் கொண்ட வேசியுடன் நான் ஆடி முன்னோர் சேகரித்து வைத்த எல்லாச் செல்வத்தையும் இழந்தேன். வறுமை நிலை என்னை நாணச் செய்கிறது” என்று சொல்லி வருத்தத்துடன் தலை குனிந்தான்

கோவலன். அச்சமயம் கண்ணகி அவனிடம் கோபிக்கவில்லை. கடுமையான வார்த்தைகளையும் சொல்லவில்லை. மாதவிக்குக் கொடுக்கப் பொருள் இல்லாமல் இப்படித் தன் கணவன் வருத்தமடைகிறான் என்று நினைத்து, "என்னிடம் இருந்த எல்லா அணிகளையும் முன்னமே கொண்டுபோய் விட்டீர்கள்; என்னிடம் மிகுந்திருப்பது கால்சிலம்புதான். அவைகளை யும் பெற்றுக் கொள்ளுங்கள்" என்று புன்னகை முகம் காட்டிச் சொன்னாள். கோவலன் சிலம்பைக் கையில் வாங்கிக் கொண்டு, "சேயிழையே! நான் சொல்வதைக் கேள். இச் சிலம்பைக் கைமுதலாகக் கொண்டு வர்த்தகம் செய்து இழந்த செல்வத்தையும் நகைகளையும் மீண்டும் பெற வேண்டுமென்று தீர்மானித்து விட்டேன். இவ் வறுமையான நிலைமையில் இவ்வூரிலிருப்பது நமக்குப் பெருமையல்ல. பொருள் தேட மதுரைக்குப் போவோம். நீயும் என்னுடன் புறப்பட்டுவா" என்று சொல்லி, அன்று இரவு விடிவதற்குமுன் இருவரும் மதுரையை நோக்கிப் புறப்பட்டார்கள். நெடுங்காலம் காத் திருந்த பழவினை வந்து கூடிவிட்டதால் கண்ணகியும் பதில் சொல்லாமல் கணவனுடன் புறப்பட்டாள்.

நீடிய
**"காவலன் போலும் கடைத் தலையான் வந்து, நம்
கோவலன்" என்றாள் ஓர் குற்றிளையாள் கோவலனும்
பாடு அமை சேக்கையுள் புக்குத், தன் பைந்தொடி
வாடிய மேனி வருத்தங் கண்டு, "யாவும்
சலம் புணர் கொள்கைச் சலதியொடு ஆடிக்
குலம் தரு வான் பொருள் குன்றம் தொலைந்த
இலம்பாடு, நாணுத் தரும் எனக்கு" என்ன;
நலம் கேழ் முறுவல் நகை முகம் காட்டிச்
'சிலம்பு உள கொண்ம்' எனச், "சேயிழை! கேள்; இச்
சிலம்பு முதலாகச் சென்ற கலனோடு,
உலந்த பொருள் ஈட்டுதல் உற்றேன், மலர்ந்த சீர்
மாட மதுரை அகத்துச் சென்று; என்னோடு இங்கு
ஏடு அலர் கோதாய்! எழுக; என்று நீடி,
வினை கடைக் கூட்ட வியம் கொண்டான், கங்குல்
கனை சுடர் கால் சியா முன்.**

[நீடிய காவலன் போலும் - புகழ் நிறைந்த மன்னனைப் போல் வான்; நம் கோவலன் -; வந்து கடைத் தலையான் என்றாள் ஓர் குற் றிளையாள் - வந்து நமது வீட்டுக் கோடியில் உள்ளான் என்றாள் ஒரு

குற்றேவல் பெண் ; கோவலனும் – ; பாடு அமை சேக்கையுள் புக்கு – பெருமை அமைந்த படுக்கை அறையுள் புகுந்து; (அங்கு வந்து நின்ற) தன் பைந்தொடி வாடிய மேனி – பசிய வளை யணிந்த தன் காதலி யின் வாடிய உடலின் ; வருத்தம் கண்டு – வருத்தத்தைப் பார்த்து ; யாவும் சலம் புணர் கொள்கை – எல்லாவற்றிலும் பொய்யே கலந் திருக்கும் இயல்பினையுடைய; சலதியோடு ஆடி – பொய் கூறும் அவளொடு காதலாட்டம் ஆடி ; குலம் தரு வான் பொருள் குன்றம் – எமது குலத்தார் தேடிய நிறைந்த செல்வமாகிய குன்றம்; தொலைந்த – அழிந்து போன ; இலம் பாடு – இவ்வறுமை நிலை ; எனக்கு நாணுத் தரும் என்ன – எனக்கு நாணத்தைத் தருகின்றது என்று கூற ; நலம் கேழ் முறுவல் – அழகிய நிறமுடைய புன் முறுவலால் ; நகை முகம் காட்டி – சிரித்த முகத்துடனே ; சிலம்பு உள கொண்ம் என – இன் னும் இரு சிலம்புகள் உள்ளன, கொள்ளுங்கள் என்று கூற : சே இழை – சிவந்த மணிகளாலான அணிகலங்களை யணிந்த கண்ணகி!, கேள் – நான் கூறுவதைக் கேள் ; இச்சிலம்பு முதலாக – இச்சிலம்பை முதலாகக்கொண்டு ; சென்ற கலனோடு – போன அணிகளுடன் ; உலந்த பொருள் – அழித்த பொருள் எல்லா வற்றையும் ; மலர்ந்த சீர் – விரித்த புகழுடைய ; மாட மதுரை அகத்து சென்று – மாளிகை நிறைந்த மதுரைமா நகரில் சென்று ; ஈட்டுதல் உற்றேன் – தேடக் கருதினேன் ; ஏடு அலர் கோதாய் – இதழ் மலர்ந்த மாலையை யுடைய கண்ணகி ! என்னோடு இங்கு எழுக – என்னுடன் இவ்விடம் விட்டுப் புறப்படுக ; என்று – ; நீடி வினை கடைக் கூட்ட – நெடுங் காலம் காத்திருந்த பழவினை இப்பொழுது வந்து கூட ; வியம் கொண்டான் – அவ்வினையால் ஏவல் கொள்ளப்பட்டான் ; கங்குல் – இருளை ; கனை சுடர் – மிகுந்த ஒளியுடைய கதிரவன் ; கால் சீயா முன் – போக்கு வதற்கு முன்பாக.

[கடைத்தலை – வீட்டின் முகப்பு; சலம்-பொய்; சலதி - பொய்யை உடையவள் ; இலம்பாடு – இல்லாமலிருக்கும் நிலை! அதாவது வறுமை நிலை ; கால் - இடம் ; சீத்தல் - போக்குதல் :]

(வெண்பா)

**காதலி கண்ட கனவு, கரு நெடுங்கண்**
**மாதவி தன் சொல்லை வறிதாக்க ; – மூதை**
**வினை கடைக் கூட்ட வியங் கொண்டான் கங்குல்**
**கனைசுடர் கால்சீயா முன்.**

[காதலி கண்ட கனவு-கண்ணகி கண்ட கனவு; கரும் நெடுங்கண் மாதவி தன் சொல்லை – கரிய நெடிய கண்ணையுடைய மாதவியின்

சொற்களை; வறிதாக்க - வீணாகும்படி செய்ய; முதைவினை - பழவினை; கடைக் கூட்ட - வந்து முதிர்ந்து தலைப்பட; வியம் கொண்டான் - அதன் ஏவலை மேற்கொண்ட கோவலன்; கங்குல் - இராப்பொழுதை; கனைசுடர் - மிக்க ஒளியையுடைய சூரியன்; கால் சீயாமுன் - போக்கிப் பகலை விளக்குவதற்கு முன்பு.]

கனாத்திறம் உரைத்த காதை முற்றிற்று

# நாடுகாண் காதை

கோவலனும் கண்ணகியும் கவுந்தியடிகளுடன் புகார்நகரை விட்டு மதுரையை நோக்கிச் செல்லும்போது சோழ நாட்டிலே வழியில் கண்ட காட்சிகளைப்பற்றி இக்காதையில் சொல்லப் படுகிறது.

## கோவலனும் கண்ணகியும் புறப்படுவது

## (1–10)

விண் மீன்கள் விளங்குகின்ற வானத்தில் வெள்ளிய நிலா அப்போது தான் மறைந்து கொண்டிருந்தது. வானத்தில் இன்னும் சூரியன் தோன்றவில்லை. கரிய இருள் எங்கும் பரவியிருந்தது. அந்த நேரத்தில் கோவலனுடைய பழைய வினை அவனை உந்துகிறது. அவனுடைய வீட்டு வாயிலில் ஒன்றற்கொன்று சேராத ஆட்டுக்கடாவும் கவரிமானும் அன்னமும் ஒன்றாக விளையாடிக் கொண்டிருந்தன. வீட்டு வாயிற் கதவைத் திறந்து எவரும் காணாமல், கோவலனும் கண்ணகியும் வெளியே கிளம்பினார்கள். வழியிலே பல மதத்தோர் வணங்கும் கோயில்கள் இருந்தன. கோவலனும் கண்ணகியும் மத வேற்றுமை பாராட்டாத விசாலமான மனப்பான்மை யுடையவர்கள். ஆதலால், வழியிலேயுள்ள பல கோயில்களுக்கும் சென்று வணங்கிச் செல்லுகிறார்கள். முதல் முதலாக அறிதுயில் அமர்ந்திருக்கும் திருமாலின் கோயிலை வலம் சுற்றி வணங்கி அப்பால் சென்றனர்.

**வான்கண் விழியா வைகறை யாமத்து,**
**மீன் திகழ் விசும்பின் வெண்மதி நீங்கக்,**
**கார் இருள் நின்ற கடைநாள் கங்குல்,**
**ஊழ்வினை கடைஇ உள்ளம் துரப்ப,**
**ஏழகத் தகரும், எகினக் கவரியும்,**
**தூமயிர் அன்னமும் துணை எனத் திரியும்**
**தாளொடு குயின்ற தகை சால் சிறப்பின்**
**நீள் நெடு வாயில் நெடுங்கடை கழிந்து, ஆங்கு**
**அணிகிளர் அரவின் அறிதுயில் அமர்ந்த,**
**மணிவண்ணன் கோட்டம் வலம் செயாக் கழிந்து ;**

[வான்கண் வழியா – சூரியன் தோன்றாத; வைகறை யாமத்து – நாலாஞ் சாமத்தில்; மீன் திகழ் விசும்பின் – விண் மீன்கள் விளங்குகின்ற வானத்தில்; வெண்மதி நீங்க - வெள்ளிய நிலாப் போய் மறைய; கார் இருள் நின்ற – கரிய இருள் பரந்த; கடைநாள் கங்குல் – அந்நாளின் கடைசிப் பகுதியாகிய அவ்விரவில்; ஊழ்வினை கடைஇ – பழ வினையால் உந்தப்பட்டு; உள்ளம் துரப்ப - தனது நெஞ்சம் தன்னைச் செலுத்த; ஏழகத் தகரும் - ஏழகம் எனப்படுகின்ற ஆட்டுக் கடாவும்; எகினக் கவரியும் – எகினம் என்னும் கவரிமானும்; தூமயிர் அன்னமும் - தூய மயிரினையுடைய அன்னமும்; துணை எனத் திரியும் – (தம்முள் ஒன்றற்கொன்று) துணை என்னும்படித் திரிகின்ற; தாளொடு குயின்ற - தாளொடு அமைக்கப்பட்ட; தகை சால் சிறப்பின் – அழகுமிக்க சிறப்பினையுடைய; நீள் நெடு வாயில் – நீண்ட கதவினையுடைய; நெடுங்கடை கழிந்து - நீண்ட கடை வாயில் கடந்து; ஆங்கு – அப்படிக் கடந்த பொழுது; அணி கிளர் – அழகு விளங்குகின்ற; அரவின் - பாம்பின் மேல்; அறிதுயில் அமர்ந்த – தூங்காமல் தூங்குகின்ற; மணிவண்ணன் கோட்டம் – நீலமணி போலும் நிறத்தையுடைய திருமாலின் கோயிலை; வலம் செயாக் கழிந்து – வலப் புறமாக வந்து வணங்கி அப்பால் போய்;]

## புத்தர் கோயில், சமணர் கோயில்

## (11–25)

கௌதம முனியாகிய புத்தர்பிரான் கோவில்கள் இவர்கள் கண்ணுக்குப் படுகின்றன. ஐந்து பெருங் கிளைகளோடு ஓங்கி வளர்ந்த பசுமையான போதி மரத்தின் கீழ் தவமிருந்து புத்தர் ஞானத்தை அடைந்தார். அவருக்குப் புகார் நகரத்திலே இந்திரன் ஏழு கோயில்களை அமைத்தான். இக்கோயில்களில் வானத்தில் உலவும் தருமசித்தர், புத்தருடைய அற உரைகளை மக்களுக்கு விளங்கச் சொல்லுவார்கள். இத்தகைய ஏழு புத்த விகாரங்களையும் கோவலனும் கண்ணகியும் வணங்கினர். பின்னர் சமணர் கோயில்கள் தோன்றுகின்றன. சமணத் துறவிகள் புலால் உண்பதை விட்டுப் பொய் பேசாத விரதத்தோடு இருப்பவர்கள். அவர்கள் இவ்வுலகத்தின் துயரங்களை யெல்லாம் மறந்து, ஐம்புலன்களையும் அடக்கிய சிறந்த கொள்கைகளை யுடையவர்கள். இவர்கள் உண்மையான பொருளை உணர்ந்த பெரியோர்கள். இவர்களெல்லாம் பஞ்ச பரமேட்டிகளான அருகர், சித்தர், ஆசாரியர்கள், உபாத்தியாயர்கள், சாதுக்கள், ஆகிய ஐவர் நிலை பெற்ற

கோவிலில் வந்துகூடி, வணக்கம் செய்வது வழக்கம். ஐந்து சந்துக்கள் சேர்ந்துகூடும் இடத்தில் இந்த ஐவர் நிலை பெற்ற அருகனின் கோவில் ஒன்று உண்டு. இந்தப் பெரிய கோவிலில் பொன் போன்ற பூக்கள் நிறைந்த அசோக மரம் ஒன்று இருந்தது. அம்மரத்தின் கீழ் ஒரு பலி பீடமும் இருந்தது. நீராட்டல் விழாவின் போதும், தேர் விழாவின் போதும் சமண முனிவர் இம்மரத்தின் நிழலில் தங்கி பலி பீடத்தில் வழிபாடு செய்வது வழக்கம். இவ்விதமான அருகன் பலி பீடத்தை, கோவலனும் கண்ணகியும் வலம் வந்து வணங்கினர்.

**பணை ஐந்து ஓங்கிய பாசு இலைப் போதி**
**அணி திகழ் நீழல் அறவோன் திருமொழி**
**அந்தர சாரிகள் அறைந்தனர் சாற்றும்**
**இந்திர விகாரம் ஏழு உடன் போகி;**
**புலவு ஊண் துறந்து, பொய்யா விரதத்து**
**அவலம் நீத்து, அறிந்து, அடக்கிய கொள்கை**
**மெய் வகை உணர்ந்த விழுமியோர் குழீஇய,**
**ஐவகை நின்ற அருகத் தானத்துச்**
**சந்தி ஐந்தும் தம்முடன் கூடி**
**வந்து தலை மயங்கிய வான்பெரு மன்றத்துப்**
**பொலம் பூம் பிண்டி நலம் கிளர் கொழு நிழல்,**
**நீர் அணி விழவினும், நெடுந்தேர் விழவினும்**
**சாரணர் வரூஉம் தகுதி உண்டாம் என,**
**உலக நோன்பிகள் ஒருங்கு உடன் இட்ட**
**இலகு ஒளிச் சிலா தலம் தொழுது வலங்கொண்டு;**

[பணை ஐந்து ஓங்கிய-ஐந்து பெருங் கிளைகளோடு ஓங்கி வளர்ந்த; பாசு இலைப் போதி – பசிய இலைகளையுடைய போதி மரத்தின்; அணி திகழ் நீழல் – அழகு விளங்கும் நிழலில் அமர்ந்த; அறவோன் திருமொழி - புத்தனுடைய அறவுரைகளை: அந்தர சாரிகள் - ஆகாய சாரிகள் (என்றது, வானத்தில் செல்லக் கூடியவர்கள்); அறைந்தனர் சாற்றும் - எடுத்துக்கூறி விளக்குகின்ற; இந்திர விகாரம் ஏழு உடன் போகி – இந்திரனல் செய்யப்பட்ட ஏழு கோயில்களையும் கடந்து; புலவு ஊண் துறந்து – புலால் உண்பதை விட்டு; பொய்யா விரதத்து – பொய் பேசாத விரதத்தோடு இருந்து; அவலம் நீத்து – இவ்வுலகத்துத் துயரங்களைப் போக்கி; அறிந்து அடக்கிய கொள்கை- அந்நூல்களை யெல்லாம் முழுதும் அறிந்து (ஐம்புலன்களை) அடக்கிய சிறந்த கொள்கையினையுடைய; மெய்வகை உணர்ந்த – உண்மையான பொருள் வகைகளை உணர்ந்த; விழுமியோர் - பெரியோர்; குழீஇய-

கூடியிருக்கின்ற; ஐவகை நின்ற - அருகர், சித்தர், ஆசிரியர், உபாத்தியாயர், சாதுக்கள் ஆகிய ஐவர் நிலைபெற்ற; அருக தானத்து - அருகனின் கோயில்களையுடைய; சந்தி ஐந்தும் - ஐந்து சந்துக்களும்; தம்முடன் கூடிவந்து தலை மயங்கிய - எல்லாம் ஒன்றோடொன்று பொருந்தி வந்து ஒன்றாகக் கலந்த; வான்பெரு மன்றத்து - உயர்ந்த பெரிய அம்பலத்திலுள்ள; பொலம் பூம் பிண்டி - பொன் பூக்களையுடைய அசோக மரத்தின்; நலம் கிளர் கொழு நிழல் - அழகு விளங்கும் கொழுமையான நிழலில்; நீர் அணி விழவினும் - நீராட்டு விழாச் செய்யும் பொழுதும்; நெடும் தேர் விழவினும் - நெடிய தேர்களைச் செலுத்தும் விழாவிலும்; சாரணர் வரூஉம் தகுதி - சமண முனிவர்கள் வருகின்ற சிறப்பு; உண்டாம் என - உண்டு என்று; உலக நோன்பிகள் - சமணத் துறவிகள்; ஒருங்கு உடன் இட்ட - எல்லோரும் ஒன்றாகக் கூடியிட்ட; இலகு ஒளிச் சிலாதலம் தொழுது வலம் கொண்டு - விளங்குகின்ற ஒளியையுடைய அருகனின் பலி பீடத்தை வணங்கி, வலம் வந்து;

பணை - பெரிய கிளை. இந்திரன் ஏழு விகாரங்களை அமைத்துப் புத்தரை வழிபட்டான் என்று கதை உண்டு. சிலாதலம் - அருகனின் பலி பீடம். சாரணர் - இடம்தோறும் சென்று சமண மதக் கொள்கைகளை எடுத்துச் சொல்லும் சமண முனிவர்.]

## காவிரியின் சங்கமுகத் துறையை அடைதல்

### (26-33)

இவ்வாறு பல கோயில்களையும் வணங்கிப் பின்னர் ஊருக்கு வெளியே போகும் ஒரு தெருக் கோடிக்கு வந்தனர். அங்கு நின்று அதன் மற்றொரு கோடியில் இருக்கும் ஊர்க் கோபுரத்தைப் பார்த்தால், அக்கோபுரம் பெரிய மலையைப் போலவும், அந்தத் தெரு மலையிலிருந்து உற்பத்தியாகும் பெரிய ஆற்றைப் போலவும் தோன்றும். ஊரின் மதில் வாயில், உலக மக்களெல்லாம் ஒன்றாகத் திரண்டு போகக்கூடிய அவ்வளவு விசாலமானது! கோவலனும் கண்ணகியும் அவ்வாயிலைத் தாண்டினர். வெளியில் வசந்தச் சோலை விளங்கியது. இந்தச் சோலையிலிருந்துதான் தென்றலையும் இளவேனிலையும் மன்மதன் அரசனுக்குத் திறையாகக் கொடுக்கின்றானோ என்று எண்ணும்படி அழகிய மலர்களும், நல்ல மரங்களும் இச்சோலையில் நிறைந்திருந்தன. வசந்தச் சோலையின் மதிற்புறத்தைக் கடந்து சென்றனர். ஊர் மக்களெல்லாம் புது

நீராடுவதற்குக் காவிரி ஆற்றுக்குச் செல்லும் பெரு வழியில் இரு பக்கமும் கனிச் சுமையால் தாழ்ந்த சோலைகள் இருந்த வழியே சென்று, காவிரியின் சங்கமுகத் துறையின் கடைசி இடத்தையும் கடந்து சென்றனர்.

**மலை தலைக் கொண்ட பேர்யாறு போலும்,**
**உலக இடைகழி ஒருங்கு உடன் நீங்கி;**
**கலையி லாளன் காமர் வேனிலொடு**
**மலய மாருதம் மன்னவற்கு இறுக்கும்,**
**பன் மலர் அடுக்கிய நன் மரப் பந்தர்**
**இலவந்திகையின் எயிற் புறம் போகி;**
**தாழ் பொழில் உடுத்த தண்பதப் பெருவழிக்**
**காவிரி வாயின் கடை முகம் கழிந்து;**

[மலைதலைக் கொண்ட - மலையைத் தலையாகக் கொண்ட; பேர் யாறு போலும் - பெரிய யாற்றைப் போன்ற; உலக இடைகழி - உலக மக்கள் அனைவரும் போகக்கூடிய மதில் வாயிலை; ஒருங்கு உடன் நீங்கி - முழுவதும் ஒரு போக்காகப் போய்க் கடந்து; கலையிலாளன் - மன்மதன்; காமர் வேனிலொடு - அழகிய இளவேனிலோடு; மலய மாருதம் - தென்றற் காற்றையும்; மன்னவற்கு இறுக்கும் - அரச னுக்குத் திறையாகக் கொடுக்கின்ற; பன் மலர் அடுக்கிய - பலவாகிய பூக்கள் அடுக்கி மலர்ந்த; நன் மரப் பந்தர் - நல்ல மரங்களாகிய பந்தரின் நிழலையுடைய; இலவந்திகையின் - இலவந்திகை என்னும் சோலையின்; எயில் புறம் போகி - மதிலுக்கு அப்பால் சென்று; தாழ் பொழில் உடுத்த - தாழ்ந்த சோலையை இருபுறத்திலுமுடைய; தண்பதப் பெருவழி - மக்கள் புதுநீர் ஆடுவதற்குச் செல்லும் பெரு வழியையுடைய; காவிரி வாயின் - காவிரித் துறையிலுள்ள வாயி லின்; கடை முகம் கழிந்து - கடைசி யிடத்தையும் கடந்து;

கோபுரங்களை மலைகளாகவும், அங்கிருந்து தொடங்கி வரும் தெருவை ஆறாகவும் சொல்கின்றார். கலை இலாளன் - உடல் இல்லா தவன், அதாவது மன்மதன். தண்பதம் - புது நீர் விழா.]

## கவுந்தியடிகள் இருக்கும் சோலையை அடைதல்

### (34-43)

வளமான நீரையுடைய காவிரியாற்றின் வடகரையில் இருக்கும் அடர்ந்த பூஞ்சோலைக்குள் நுழைந்து, அதன் பின்பு இருவரும் ஒரு காதவழி நடந்து, கவுந்தி என்னும் சமணப்

பெண் துறவி இருக்குமிடத்தை அடைந்தனர். அங்கேயுள்ள சோலையில் சிறிது தங்கினர். அவ்வளவு தூரம் நடந்ததனால் கண்ணகிக்கு, கால் ஓய்ந்துவிட்டது. ஒடிந்து விழும் கொடி போன்ற தளர்ந்த அவளுடைய இடுப்பு வருந்திற்று. வழி நடந்த வருத்தத்தால் 'விரைந்து விரைந்து' மூச்சு விட்டாள். தன் வீட்டை விட்டு எப்போதும் வெளியில் போகாத அவ ளுக்கு மதுரை எவ்வளவு தூரத்தில் இருக்கிறதென்று கொஞ்ச மேனும் தெரியாது. சோலையை அடைந்தவுடன் மதுரைக்குப் பக்கமாக வந்துவிட்டோம் என நினைத்தாள். புன்னகை புரிந்து மழலைச் சொற்களால் "மதுரை மூதூர் எது?" என்று கணவனைக் கேட்டாள். இம்மொழிகளைக் கேட்ட கோவல னுக்குத் துன்பச் சிரிப்பு வந்தது. "நம்முடைய நாட்டிலிருந்து இன்னும் முப்பது காதத்துக்கு அப்பால் தான் மதுரை இருக் கிறது. அருகில்தான்'' என்றான்.

**குடதிசைக் கொண்டு, கொழும் புனல் காவிரி**
**வட பெரும் கோட்டு மலர்ப் பொழில் நுழைந்து ;**
**காவதம் கடந்து கவுந்திப் பள்ளிப்**
**பூமரப் பொதும்பர்ப் பொருந்தி, ஆங்கண்**
**இறும் கொடி நுசுப்போடு இனைந்து அடி வருந்தி,**
**நறும் பல் கூந்தல் குறும் பல உயிர்த்து,**
**முதிராக் கிளவியின் முள் எயிறு இலங்க,**
**'மதுரை மூதூர் யாது?' என வினவ,**
**"ஆறு ஐங் காதம் நம் அகல் நாட்டு உம்பர்,**
**நாறு ஐங் கூந்தல்! நணித்து" என நக்கு ;**

[குடதிசைக்கொண்டு-மேற்குத் திசையை(வழியாகக்)கொண்டு; கொழும் புனல் காவிரி – வளமான நீரையுடைய காவிரி யாற்றின் ; வட பெரும் கோட்டு – வட திசையில் இருக்கும் பெரிய கரையில் உள்ள ; மலர்ப் பொழில் நுழைந்து – மலர்களையுடைய சோலைக்குள் நுழைந்து ; காவதம் கடந்து – (அதன் பின்னர்) ஒரு காவதம் நடந்து போய் ; கவுந்திப் பள்ளி – கவுந்தி என்னும் சமணப் பெண்துறவி இருக்குமிடத்தை அடுத்த ; பூமரப் பொதும்பர் – பூக்களையுடைய மரங்கள் சூழ்ந்த சோலையில் ; பொருந்தி – தங்கி ; ஆங்கண் – அவ்வி டத்தில் ; இறும் கொடி நுசுப்போடு – ஒடிந்து விழும் கொடிபோன்ற தளர்ந்த இடுப்புடன் ; இனைந்து – வருந்தி ; அடி வருந்தி – கால் ஓய்ந்து ; நறும் பல் கூந்தல் – நறுமணம் வீசும் பலவான கூந்தலை யுடைய கண்ணகி ; குறும் பல உயிர்த்து – பலவான குறு மூச்சுக்களை விட்டு; (என்றது வழிவந்த வருத்தத்தால், விரைந்து விரைந்து மூச்சு

விட்டு) முதிராக் கிளவியின் – முழுதும் முற்ருத (மழலைச்) சொற்களால்; முள் எயிறு இலங்க – முள் போன்ற கூறிய பற்கள் விளங்கும்படி; மதுரை மூதூர் யாது என வினவ – மதுரை மா நகரம் எது என்று கேட்க; நம் அகல் நாட்டு உம்பர் – நமது அகன்ற நாட்டிற்கு அப்பால்; ஆறு ஐம் காதம் – முப்பது காதத் தொலைவில் உள்ளது மதுரை; நாறு ஐம் கூந்தல் – மணம் கமழ்கின்ற ஐவகைக் கூந்தலையுடைய கண்ணகி; நணித்து என நக்கு – அது அண்மைதான் என்று கூறித் துன்பச் சிரிப்புச் சிரித்து;]

## கவுந்தியடிகள் கோவலனோடு உரையாடுதல்

## (44–63)

சோலையில் கவுந்தியடிகள் என்னும் சமணத் தவமகள் தவம் செய்து கொண்டிருக்கும் மடம் ஒன்று இருந்தது. அடிகளைக் கண்டு கோவலனும் கண்ணகியும் வணங்கினர். கோவலனைப் பார்த்து கவுந்தியடிகள் சொல்லுகின்ருர்: " உங்கள் இருவரையும் பார்த்தால் பெரிய குலத்தைச் சேர்ந்தவர்கள் போல் தோன்றுகிறது. குலத்திற்கேற்ற நல்லொழுக்கமுடையவர்கள் போல் இருக்கிறீர்கள். ஆனல் யாதோ துன்பமுற்றவர்கள் போலக் காண்கிறீர்கள். உங்கள் வீடு வாசல்களை விட்டு நகரின் எல்லையைத் தாண்டி இப்படி வருவதற்குக் காரணம் என்னவோ?" இப்படிக் கேட்ட கவுந்தியடிகளைப் பார்த்து, கோவலன், "அடிகளே! உங்கள் வினவிற்கு விடை சொல்ல முடியாத நிலைமையில் நான் இருக்கிறேன். ஆனல் ஒரு வார்த்தை மட்டும் சொல்ல விரும்புகிறேன். பொருள் தேடும் விருப்பமுடையவனாக மதுரைமா நகரத்தை நோக்கி நாங்கள் போவதாக இருக்கின்ருேம்" என்ருன். இதைக் கேட்ட கவுந்தியடிகள் "நீங்கள் போகும் வழியில் அடர்ந்தகாடுகள் இருக்கின்றன. உன் மனைவியின் மெல்லிய பாதங்கள் இக்காடுகளைத் தாண்டி நடப்பதற்கு ஏற்றவையல்ல. வழியில் அநேக இடையூறுகளும் உண்டு. வந்த வழியே திரும்பி வீட்டிற்குப் போங்களென்ருலும் போகமாட்டீர்கள் போலத் தோன்றுகிறது. இத்தகைய நிலைமையில் நான் ஒரு வார்த்தை உங்களுக்குச் சொல்லுகிறேன். மதுரையில் இருக்கும் பெரியோர்களைக் கண்டு அவர்களின் அறமொழிகளைக் கேட்கவேண்டுமென்று எனக்கு விருப்பமுண்டு. தென் தமிழ்நாட்டின் புண்ணிய

நகரமாகிய மதுரையிலுள்ள அருகன் கோயிலுக்குச் சென்று வணங்க வேண்டுமென்றும் ஆவலுடையவளாக இருக்கிறேன். ஆதலால் நானும் உங்களுடன் வருகிறேன். எல்லோருமாகப் போவோம்'' என்றார். இம்மொழிகளைக் கேட்ட கோவலனுக்கு அடங்காத மகிழ்ச்சி யுண்டாயிற்று. கவுந்தியடிகளைப் பின்னும் ஓர் முறை தொழுதான். "அடிகளே! தங்கள் அருள் எங்களுக்கு இருக்குமானால் எங்கள் துயரமெல்லாம் பறந்தோடி விடும்'' என்றான் கோவலன்.

தே மொழி தன்னொடும் சிறை அகத்து இருந்த
காவுந்தி ஐயையைக் கண்டு அடி தொழலும்;
"உருவும், குலனும், உயர் பேர் ஒழுக்கமும்,
பெரு மகன் திருமொழி பிறழா நோன்பும்
உடையீர்! என்னோ உறுகணாளரின்
கடை கழிந்து இங்ஙனம் கருதியவாறு?'' என;
"உரையாட்டு இல்லை: உறு தவத்தீர்! யான்
மதுரை மூதூர் வரைபொருள் வேட்கையேன்:''
"பாடகச் சீறடி பரல் பகை உழவா:
காடு இடையிட்ட நாடு நீர் கழிதற்கு,
அரிது இவள் செவ்வி: அறிகுநர் யாரோ?
உரியது அன்று; ஈங்கு ஒழிக என ஒழியீர்;
மற உரை நீத்த மாசு அறு கேள்வியர்
அற உரை கேட்டு, ஆங்கு அறிவனை ஏத்தத்,
தென் தமிழ் நன்னாட்டுத் தீது தீர் மதுரைக்கு
ஒன்றிய உள்ளம் உடையேன்; ஆகலின்
போதுவல் யானும் போதுமின்'' என்ற
காவுந்தி ஐயையைக் கைதொழுது ஏத்தி,
"அடிகள்! நீரே அருளுதிராயின், இத்
தொடிவளைத் தோளி துயர் தீர்த்தேன்'' என;

[தேமொழி தன்னொடும்—இனிய மொழிகளைப் பேசும் கண்ணகியோடும் போய்; சிறை அகத்து இருந்த – தமது மடத்தில் இருந்த; காவுந்தி ஐயையைக் கண்டு – காவுந்தி என்னும் தவமகளைக் கண்டு; அடி தொழலும் – அவள் அடிகளில் விழுந்து வணங்க; உருவும் – சிறந்த தோற்றமும்; குலனும் - நல்ல குடிப் பிறப்பும்; உயர் பேர் ஒழுக்கமும் – அவற்றிற் கேற்ற உயர்ந்த பெரிய நல்ல ஒழுக்கமும்; பெருமகன் திருமொழி – அருகக் கடவுளின் அற உரைகளில்; பிறழா நோன்பும் – மாறுபடாத நல்ல தவமும்; உடையீர் – உடையவர்களே!; உறுகணாளரின் – (யாதோ) துன்பமுற்றவர் போல; கடை

கழிந்து – நகரின் எல்லையைக் கடந்து; இங்ஙனம் கருதியவாறு என – இங்ஙனம் நீவிர் இருவரும் வர நினைத்த காரணம் யாதென்று கேட்க; உறுதவத்தீர் – மிக்க தவத்தினையுடைய அடிகளே; உரை யாட்டு இல்லை – (உங்கள் வினாவிற்கு) யான் விடை கூறுதற்கில்லை; (ஆனால், ஒன்று கூறுவதுடையேன்) மதுரை மூதூர் வரை பொருள் வேட்கையேன் – மதுரைமாநகரம் சென்று பொருள் தேடும் விருப்பமுடையேன் (என்று கூற); பாடகச் சீறடி – சிலம்பணிந்த இவளுடைய சிறிய அடிகள்; பரல் பகை உழவா – பருக்கைக் கற்களின் துன்பத்தைப் பொறுக்க மாட்டா; காடு இடையிட்ட நாடு – காடுகளை இடையிடையே உடைய இந்த நாட்டை; நீர் கழிதற்கு – நீர் கடந்து செல்வதற்கு; அரிது இவள் செவ்வி – இவளுடைய தன்மை ஏற்றதன்று; (கடந்து சென்றால்) அறிகுநர் யாரோ – (வரும் இடர் களை) யார் அறிவார்? (அல்லாமலும்); உரியது அன்று – உங்களுக்கு இச்செய்கை ஏற்றதன்று; ஈங்கு ஒழிக என – இனி மேற்கொண்டு செல்வதை ஒழிப்பீராக எனக் கூறினும்; ஒழியீர் – நீர் அதற்கு ஒருப்பட மாட்டீர்; (நிற்க, யானும்) மற உரை நீத்த – பழிமொழிகளை நீக்கிய; மாசு அறு கேள்வியர் – குற்றமற்ற அறங்களைக் கேட்ட பெரியோர்களின்; அற உரை கேட்டு – புண்ணிய மொழிகளைக் கேட்டு; ஆங்கு அறிவனை ஏத்த – அங்குள்ள அருகக் கடவுளை வணங்க; தென் தமிழ் நன்னாட்டு – தென் திசையிலிருக்கும் நல்ல தமிழ் நாட்டிலுள்ள; தீது தீர் மதுரைக்கு – தீமையற்ற மதுரைமா நகருக்குப் போக; ஒன்றிய உள்ளம் உடையேன் ஆகலின் – பொருந்திய உள்ளத்தை உடையேன் ஆதலால்; போதுவல் யானும் – யானும் உங்களுடன் வருவேன்; போதுமின் – நீங்களும் வாருங்கள்; என்ற காவுந்தி ஐயையை – என்று கூறிய கவுந்தியடிகளை; கை தொழுது ஏத்தி – கையால் வணங்கிப் போற்றி; அடிகள் நீரே அருளுதிராயின் – அடிகளாகிய நீரே அருள் செய்வீரானால்; இத் தொடி வளைத் தோளி – வளைந்த வளையலணிந்த தோளையுடைய இவளின்; துயர் தீர்த்தேன் என – வருத்தத்தைப் போக்கினவனாவேன் என்று கூற.

ஐயை – முதியவள்; உறுகண் – துன்பம்; வரைதல் – தனதாக்குதல். பொருளைத் தனதாக்குதலாவது, அதனைத் தேடிச் சேர்த்தல்; மறவுரை – கொலை, களவு, பொய் முதலிய பழிகளைச் செய்தல்.]

## வழியில் உள்ள இடர்கள்

## (64–97)

"கோவலனே! நாம் செல்லும் வழியில் பலவகையான இடர்கள் உள்ளன. சொல்லுகின்றேன் கேள். இவளுடைய

மெல்லிய உடல் வெய்யிலின் வெப்பத்தைத் தாங்காது. ஆத லால், நிழலான பூஞ்சோலைகள் நிறைந்த வழியில் நாம் போவோம். அச்சோலைகளில் வள்ளிக்கிழங்குகள் தோண்டி எடுக்கப்பட்ட குழிகள் ஏராளமாய் உண்டு. அக்குழிகளின் மேல் சண்பக மலர்கள் உதிர்ந்து குழிகளை மறைத்துக் கொண் டிருக்கும். இதை அறியாமல் நடந்தோமானால் அக்குழிகளில் வீழ்ந்து துன்புறுவோம்.

உதிர்ந்து வாடிய பூக்களால் மூடப்பட்ட அக்குழிகளை விட்டு ஒதுங்கிப் போவோமென்றால், தாழ்ந்த கிளைகளில் தொங்கும் தேன் முதிர்ந்த பலாப்பழங்கள் பகைவர்போல் நம் உடலில் முட்டினாலும் முட்டும். இவற்றையும் விலகிப் போவோமென்றால், மஞ்சளும், இஞ்சியும் ஒன்றோடொன்று கலந்து முளைத்திருக்கும் பாத்திகள் உண்டு. இப்பாத்திகளில் பலாக் கொட்டைகள் சிதறிக் கிடக்கும். இவைகள் நம் கால் களில் குத்தி வருத்தத்தைக் கொடுக்கும்.

சோலைகளிலுள்ள இந்த இடர்களை விலக்கி, வயல் வழியே செல்வோமென்றால், அவ்வழியில் பூமணம் வீசுகின்ற குளங் கள் உள்ளன. அக்குளங்களில் உள்ள கயல் மீன்களை ஓட்டும் வாளை மீன்களை நீர்நாய் கௌவும். அப்போது அவ் வாளை மீன்கள், மலங்குமீன் புரளுகின்ற பக்கத்து வயல்களில் ‘சட்’ டென்று தாவிப் பாயும். அதைக்கண்டு இப் பெண்மணி நடுங்கக் கூடும்.

கரும்பு வயல்களில் உள்ள பெரிய தேன்கூடுகள் உடைந்து அருகிலிருக்கும் பொய்கை நீரில் தேனைக்கொட்டித், தேனும் நீரும் கலந்து நிற்கும். அதுகண்ட இவள் அடங்காத் தாகத் தால் அந்நீரை உள்ளங் கையால் மொண்டு பருகக் கூடும். அப்படிச் செய்து விட்டாளானால், அது பெரும் பாவம். (தேனை உண்பது பாவம் என்று சமணர்கள் கருதுகிறார்கள்.)

களை எடுப்பவர்கள், வயலில் பிடுங்கிய குவளைப் பூவை வரப்புகளின் மேல் குவித்து வைத்திருப்பார்கள். அப்பூவில் வண்டினங்கள் மொய்த்துக் கொண்டிருக்கும். நாம் வரப்பின் மேல் நடக்கும்போது அறியாமல் அவ் வண்டுகளை மிதித்து விட்டால் கொலைப் பழிக்கு உள்ளாவோம்.

வாய்க்கால் வழியே போவோமென்றால், அவ்வழியில் புள்ளிகளின் அழகுடைய நண்டுகளும், நத்தைகளும் ஏராளமாய் இருக்கும். இவற்றைக் கவனியாமல் நடந்தோமானால், அவைகள் நம் காலால் மிதிபட்டு நசுங்கிவிடும்.

நாம் வயல் வழியே போனாலும், சோலை வழியே போனாலும் இரண்டு வழிகளிலும் பல இடர்கள் இருக்கின்றன. சோழ நாடு மிகுந்த வளப்பம் நிறைந்த நாடானதால், வயல்களும், சோலைகளு மல்லாமல் வேறு நிலமே இந்நாட்டில் இல்லை. ஆகையால் நான் சொன்ன குறிப்புக்களை மனதில் வைத்துக் கொண்டு, வழியிலுள்ள எவ்வுயிர்களுக்கும் தீங்கு நேராமல் நீ உன் அருமை மனையாளுடன் நடக்கவேண்டும்.''

''கோவலன்! காணாய்; கொண்ட இந்நெறிக்கு,
ஏதம் தருவன யாங்கும் பல கேண்மோ;
வெயில் நிறம் பொறாஅ மெல்லியல் கொண்டு
பயில்பூந் தண்டலைப் படர்குவம் எனினே,
மண்பக வீழ்ந்த கிழங்கு அகழ் குழியைச்
சண்பகம் நிறைத்த தாது சோர் பொங்கர்
பொய் அறைப் படுத்துப் போற்றா மாக்கட்குக்
கையறு துன்பம் காட்டினும் காட்டும்;
உதிர் பூஞ் செம்மலின் ஒதுங்கினர் கழிவோர்,
முதிர் தேம் பழம் பகை முட்டினும் முட்டும்;
மஞ்சளும், இஞ்சியும் மயங்கு அரில் வலயத்துச்
செஞ்சுளைப் பலவின் பரல் பகை உறுக்கும்;
கயல் நெடும் கண்ணி காதற் கேள்வ!
வயல் உழைப் படர்குவம் எனினே, ஆங்குப்
பூநாறு இலஞ்சிப் பொருகயல் ஓட்டி
நீர்நாய் கௌவிய நெடும்புற வாளை,
மலங்கு மிளிர் செறுவின் விலங்கப் பாயின்,
கலங்கலும் உண்டு இக் காரிகை; ஆங்கண்,
கரும்பில் தொடுத்த பெருந்தேன் சிதைந்து
சுரும்பு சூழ் பொய்கைத் தூநீர் கலக்கும்;
அடங்கா வேட்கையின் அறிவு அஞர் எய்திக்
குடங்கையின் நொண்டு கொள்ளவும் கூடும்;
குறுநர் இட்ட குவளைஅம் போதொடு
பொறிவரி வண்டு இனம் பொருந்திய கிடக்கை
நெறி செல் வருத்தத்து நீர் அஞர் எய்தி,
அறியாது அடி ஆங்கு இடுதலும் கூடும்;

எறி நீர் அடைகரை இயக்கம் தன்னில்,
பொறி மாண் அலவனும், நந்தும் போற்றாது;
ஊழ் அடி ஒதுக்கத்து உறு நோய் காணின்,
தாழ்தரு துன்பம் தாங்கவும் ஒண்ணு;
வயலும் சோலையும் அல்லது, யாங்கணும்
அயல் படக் கிடந்த நெறி ஆங்கு இல்லை;
நெறி இரும் குஞ்சி நீ வெய்யோளொடு,
குறி அறிந்து அவை அவை குறுகாது ஓம்பு'' என;

[கோவலன் – கோவலனே ; கொண்ட இந்நெறிக்கு–போகின்ற இவ்வழியில்; ஏதம் தருவன – துன்பம் தரும் காரணங்கள்; யாங்கும் – எவ்விடத்திலும்; பல – பலவாக உள்ளன; காணாய் – நீ அவற்றை அறியாய்; (ஆதலால்) கேண்மோ – நான் சொல்லக் கேட்பாயாக; வெயில் நிறம் பொறாஅ – வெயிலின் ஒளியைக் கண்ணால் பார்க்கவும் பொறாத; மெல்லியல் கொண்டு – இம் மெல்லிய தன்மை வாய்ந்த இவளைக் கூட்டிக்கொண்டு; பயில் பூந் தண்டலை – பூக்கள் நிறைந்த சோலை வழியே; படர்குவம் எனினே – செல்வோமானால்; மண்பக வீழ்ந்த–நிலம் பிளக்கும்படி உள்ளே ஓடிய; கிழங்கு அகழ் குழியை – வள்ளிக் கிழங்குகள் தோண்டி எடுக்கப்பட்ட குழியை; சண்பகம் நிறைத்த – சண்பக மரங்கள் தமது உதிர்ந்த மலர்களால் மூடிய; தாது சோர் பொங்கர் – பூந்தாதுக்கள் வீழ்ந்த சோலையில்; பொய் அறைப் படுத்து – பொய்யான குழிகளில் வீழ்த்தி; போற்றா மாக்கட்கு – அவற்றை யறியாது அங்குச்சென்ற மக்களுக்கு; கையறு துன்பம் – செயலற்றுப் போகும்படியான துன்பத்தை; காட்டினும் காட்டும் – (இவ்வழி) கொடுப்பினும் கொடுக்கும்.

உதிர் பூஞ்செம்மலின் – அங்ஙனம் உதிர்ந்து வாடிய பூவுள்ள வழிகளை; ஒதுங்கினர் கழிவோர் - விட்டு விலகிச்செல்வோரை; மூதிர் தேம்பழம் - தேன் முதிர்ந்த பலாப்பழங்கள்; பகை – பகையாக நின்று; முட்டினும் முட்டும் - முட்டுதலைச் செய்தாலும் செய்யும்.

மஞ்சளும் இஞ்சியும் – மஞ்சள், இஞ்சி ஆகிய இரண்டும்; மயங்கு அரில் - தம்முள் அடர்ந்து பின்னிக் கொண்டிருக்கும்; வலயத்து – பாத்திகளில்; செம்சுளைப் பலவின் – செஞ்சுளையுள்ள பழங்களையுடைய பலாவின்; பரல் - கொட்டைகள்; பகை உறுக்கும் - கால்களைப் பகையாக நின்று வருத்தும்; கயல் நெடும் கண்ணி – கயல் மீன் போன்ற அழகிய நீண்ட கண்களையுடைய இவளின்; காதற் கேள்வ – காதலனாகிய கணவ; வயல் உழைப் படர்குவம் எனினே - வயல் வழியாகப் போவோமானால்; ஆங்கு –; பூநாறு

இலஞ்சிப் பொருகயல் ஓட்டி – பூக்களின் மணம் வீசுகின்ற குளங்களில் ஒன்ருேடொன்று மாறுபடுகின்ற கயல் மீன்களை ஓடச்செய்து; நீர் நாய் கௌவிய – நீர் நாயால் கௌவப்பட்ட; நெடும்புற வாளை – நீண்ட – முதுகினையுடைய வாளை மீன்; மலங்கு மிளிர் செறுவின் – மலங்கு மீன் புரளுகின்ற பக்கத்து வயலில்; விலங்கப் பாயின் – குறுக்காகத் தாவிப் பாயுமானுல்; இக்காரிகை – இப்பெண் மகள்; கலங்கலும் உண்டு - (அது கண்டு) நடுங்கினும் நடுங்குவாள்; ஆங்கண் – அவ்விடத்தில்.

கரும்பில் தொடுத்த – கரும்பிலே வைக்கப்பட்ட; பெருந்தேன் சிதைந்து - மிக்க தேனடை அழிந்து; சுரும்பு சூழ் பொய்கை - வண்டுகள் சூழ்ந்த பொய்கைகளில் உள்ள; தூ நீர் கலக்கும் – தூய நீரைக் கலக்கிவிடும்; (அது கண்ட இவள்) அடங்கா வேட்கையின்– தணியாத நீர் விருப்பத்திஞல்; அறிவு அஞர் எய்தி – அறிவு, துன்பப்பட்டு (என்றது, அறிவு கலங்கி); குடங்கையின் நொண்டு– உள்ளங்கையால் மொண்டு; கொள்ளவும் கூடும் – அதனைப் பருகவும் கூடும்.

குறுநர் - பறித்தவர்கள்; இட்ட குவளை அம் போதொடு - கீழே போட்ட அழகிய குவளைப்பூவில்; பொறி வரி வண்டு இனம் – புள்ளிகளையும், கோடுகளையும் உடைய வண்டின் கூட்டம்; பொருந்திய கிடக்கை – படிந்து கிடக்கின்ற இடத்தில்; நெறி செல் வருத்தத்து - வழிப் போகும் வருத்தத்தால்; நீர் அஞர் எய்தி – நீங்கள் துன்பம் அடைந்து; ஆங்கு – அப்பூவிலுள்ள வண்டுகளின்மேல்; அறியாது அடி இடுதலும் கூடும் – உம்மையறியாமல் அடிவைக்கவும் கூடும்.

எறி நீர் அடை கரை – எறிகின்ற அலை நீரையுடைய வாய்க்காலின் கரையில்; இயக்கம் தன்னில் - அங்ஙனம் போகின்ற போக்கில்; போற்ருது - அறியாமல்; பொறி மாண் அலவனும் - புள்ளிகளால் அழகுடைய நண்டுகளும்; நந்தும் – நத்தைகளும்; ஊழ் அடி ஒதுக்கத்து – முறையாக அடிவைத்து நடக்கும் நடையில்; உறு நோய் காணின் – (நமது காலால் நசுங்கி) மிக்க துன்பத்தினைப் பெற்ருல்; தாழ் தரு துன்பம் – அதனுல் வரும் ஆழ்ந்த வருத்தம்; தாங்கவும் ஒண்ணு-நம்மால் பொறுக்கவும் முடியாது; வயலும் சோலையும் அல்லது - வயல்களையும் சோலைகளையு மல்லாமல்; யாங்கணும்– எங்கும்; அயல் படக் கிடந்த - வேருகத் தனித்துக் கிடந்த; நெறி ஆங்கு இல்லை – வழிகள் அவ்விடத்தில் இல்லை; (எனவே) நெறி இரும் குஞ்சி – சுரிகளையுடைய கரிய கூந்தலையுடைய; நீ வெய்யோளொடு–உன்ஞல் விரும்பப்பட்டவளாகிய இவளுடன்; குறி அறிந்து- குறிப்பால் அறிந்து; அவை அவை குறுகாது – அவ்வுயிர்கள் அத்துன்பங்களை அடையாத வகையில்; ஓம்புஎன – பாதுகாத்துப் போவாயாக என்று கூற;

பொய் அறை - பொய்யான குழி; (அதாவது மேலே சருகு களால் மூடப்பட்டுப் பார்வைக்குக் குழிபோல் தெரியாமலிருக்கும் குழி) பொங்கர் – வாடிப் போன பழம் பூ; வலயம் – பாத்தி; பலா மரத்தின் அடியில், பாத்திகளில் மஞ்சள் இஞ்சி முதலியவைகளைப் பயிர் செய்வது வழக்கம்; குஞ்சி – கூந்தல்.]

## மூவரும் புறப்படுதல்
## (98–101)

இவ்வாறு வழியில் உள்ள இடர்களைப்பற்றிச் சொல்லி விட்டுக், கவுந்தியடிகள் பிச்சைப் பாத்திரத்தையும், தோள் மேல் இடும் உறியையும், மயிற்பீலியையும் எடுத்துக்கொண்டு, "தெய்வ மந்திரங்களே நமக்கு வழித்துணையாகுக" என்று பிரார்த்தனை செய்து, கோவலன் கண்ணகியுடன் மதுரையை நோக்கிப் புறப்பட்டார்.

**தோம் அறு கடிஞையும், சுவல் மேல் அறுவையும்**
**காவுந்தி ஐயை கைப் பீலியும் கொண்டு,**
**'மொழிப் பொருள் தெய்வம் வழித்துணை ஆக' எனப்,**
**பழிப்பு அருஞ் சிறப்பின் வழிப்படர் புரிந்தோர்;**

[தோம் அறு கடிஞையும்–குற்றமற்ற பிச்சைப்பாத்திரத்தையும்; சுவல் மேல் அறுவையும் - தோள்மீது இடும் உறியையும்: கைப்பீலி யும் - கையில் கொள்ளும் மயிற்பீலியையும்; காவுந்தி ஐயை கொண்டு - காவுந்தியாகிய அத் தவமகள் கையில் எடுத்துக்கொண்டு; மொழிப் பொருள் தெய்வம் – மிக்க பொருளையுடைய மொழியாகிய தெய்வம் (என்றது தெய்வத்தன்மையுடைய சில மந்திரங்களை); வழித்துணை ஆக என - நமக்கு வழியில் துணை செய்வனவாக என்று கூறிக்கொண்டு செல்ல; பழிப்பு அருஞ் சிறப்பின் - குறை கூறுவ தற்கு அரிய சிறப்பினையுடைய; வழிப்படர் புரிந்தோர் – வழியில் போகுதலைச் செய்த அவர்கள் (என்றது, அங்ஙனம் போன அவர் கள்).

நடக்கும்போது, வழியிலுள்ள உயிர்கள், காலிற்பட்டு அழியாம லிருக்க, நிலத்தைக் கூட்டுவதற்காக, மயிலின் தோகையைக் கையிற் கொண்டு போவது, சமணத் துறவிகளின் வழக்கம்.]

## வழிக்காட்சிகள் - காவிரி ஆற்றின் ஒலி
## (102–111)

சோழநாட்டில் காணும் காட்சிகளில் காவேரியாற்றின் காட்சியே மிகச் சிறந்தது. எக்காலத்திலும் வற்றாத நீரை யுடைய ஆறு. இது உற்பத்தியாகும் இடம் குடகுமலை.

இயற்கை நிகழ்ச்சிகள் மாறுபட்டாலும், இம்மலையில் மழை பெய்வது தவறாது. இம்மலையின் உச்சியில் பெருங் காற்று மோதிக்கொண்டிருக்கும். கடுமையான இடி முழக்கத்தோடு கரு முதிர்ந்த மேகம் பெய்யும் மழையின் வளத்தினால் காவேரியில் வெள்ளம் பெருகும். குடகு மலையிலிருந்து கீழே இறங்கும் போது, அவ்வெள்ளம் அம்மலையிலுள்ள சந்தன மரம், அகில் முதலிய பண்டங்களை அடித்துக்கொண்டு வரும். இப் பண்டங்களோடு புகார் நகரத்திற்குள் நுழையும் போது, கடலின் அலைகள் முத்து, பவளம், சங்கு முதலிய பண்டங்களோடு எதிர்த்துவந்து மோதும். ஆற்றின் புது வெள்ளமும், கடலின் அலைகளும் மதகு நீர் தாங்கும் பலகைகளின் மீது மோதி, ஓவென்று ஒலி எழுப்பிக் கொண்டேயிருக்கும். கால்வாய்களின் இருபுறத்திலும் விவசாயிகள் பல கருவிகளைக்கொண்டு வயல்களுக்கு நீர் இறைத்துக் கொண்டிருக்கிறார்கள். காவேரியின் ஒலி முன் இந்தக் கருவிகளின் ஓசை கேட்கவும் கேட்காது. இத்தகைய காவேரி வெள்ளத்தின் ஓசை கேட்டது ஒருபுறம்.

**கரியவன் புகையினும், புகைக் கொடி தோன்றினும்,**
**விரி கதிர் வெள்ளி தென் புலம் படரினும்,**
**கால் பொரு நிவப்பின் கடும் குரல் ஏற்றொடும்**
**சூல் முதிர் கொண்மூப் பெயல் வளம் சுரப்பக்**
**குடமலைப் பிறந்த கொழும்பல் தாரமொடு**
**கடல் வளன் எதிரக் கயவாய் நெரிக்கும்**
**காவிரிப் புதுநீர்க் கடு வரல் வாய்த்தலை**
**ஓ இறந்து ஒலிக்கும் ஒலியே அல்லது,**
**ஆம்பியும், கிழாரும், வீங்கு இசை ஏத்தமும்,**
**ஓங்கு நீர்ப் பிழாவும் ஒலித்தல் செல்லா;**

[கரியவன் புகையினும்-சனி என்னும் கோள் மாறு பட்டாலும்; (என்றது, அவனோடு கூடிய மீனம், சிம்மம் முதலான ராசிகளோடு மாறுபட்டாலும்) புகைக் கொடி தோன்றினும் – தூம கேது என்னும் வால் மீன் தோன்றினாலும்; விரிகதிர் வெள்ளி – விரிந்த ஒளியினையுடைய சுக்கிரன்; தென்புலம் படரினும் – கீழ்த் திசையில் தோன்றாது தெற்குத் திசையில் தோன்றினாலும்; கால் பொரு நிவப்பின் – பெருங் காற்று மோதுகின்ற உயர்ந்த மலையில்; கடும் குரல் ஏற்றொடும் - கடிய குரலையுடைய இடியினோடும்; சூல் முதிர் கொண்மூ - கரு முதிர்ந்த மேகம் (நீர் நிறைந்து நன்கு கருத்த மேகம்); பெயல் வளம் சுரப்ப – தான் மழையைப் பெய்து நல்ல

வளங்களைச் செழிக்கச் செய்வதால்; குடமலைப் பிறந்த – மேற்கே குடகுமலையில் விளைந்த; கொழும்பல் தாரமொடு – கொழுமையான பல பண்டங்களோடு; கடல் வளன் எதிர – கடலில் உண்டாகும் வளங்களும் எதிர்த்து வர; கயவாய் நெரிக்கும் - இதனால் காவிரிப் பூம் பட்டினத்தை நீர் வந்து மோதுகின்ற சிறப்பினையுடைய; காவிரிப் புதுநீர் – காவிரி யாற்றின் புதிய நீர்; கடு வரல் வாய்த்தலை – மிக விரைவாக ஓடி வருகின்ற கால்வாயிடத்தில்; ஓ இறந்து ஒலிக்கும் – மதகு நீர் தாங்கும் பலகையை எதிர்த்துத் துள்ளி, அதனால் ஒலி விளைக்கின்ற; ஒலியே அல்லது – அவ்வொலியே யல்லாமல்; ஆம்பி யும் – பன்றிப் பத்தர் என்னும் தண்ணீர் இறைக்கும் கருவியும்; கிழாஅரும் – பூட்டைப் பொறி என்னும் இறைக்கும் கருவியும்; வீங்கு இசை ஏத்தமும் – மிக்க ஓசையுடைய ஏத்தம் என்னும் கருவி யும்; ஓங்கு நீர்ப் பிழாவும் – மிக்க நீரை இறைக்கின்ற இடா என் னும் கருவியும்; ஒலித்தல் செல்லா – (ஆகிய இற்றின் ஒலிகள்) மேலோங்கி ஒலிக்கா;

குடகு மலையில் தோன்றிப் பரந்த கடலை எதிர்த்து ஓடி வருகின்ற காவிரி யாற்றின் நீர் அதன் கால்வாய்களில் மிக விரைவாகக் கடுகி வந்து மதகு நீர் தாங்கும் பலகையை மோதி எழுந்து துள்ள, அத னால் உண்டாகும் ஒலியே பெரிதாக எழுந்து ஒலிப்பதல்லாமல், மிக்க ஓசையோடு நீர் இறைக்கும் ஆம்பி, கிழார் முதலான கருவிகளின் ஓசை, மேலெழுந்து ஒலிக்க மாட்டா.

வெள்ளி தெற்கே முளைத்தாலும், வால் மீனம் தோன்றினும் காவிரியாறு வற்றாது வளஞ் சுரக்கும். அதாவது இயற்கை நிகழ்ச்சி கள் மாறுபடினும், இது மாறாது என்பது. ஆம்பி, கிழார் முதலியன நீர் இறைக்கும் கருவிகள்.

தாரம் - பண்டம். ஓ – மதகுநீர் தாங்கும் பலகை. கடலின் வளமாவது, முத்து, பவளம், சங்கு முதலியன. இதனால் காவிரி யாற்றின் சிறப்புக் கூறினர்.]

## பறவைகளின் ஓசை

## (112–119)

வயல்களில் செந்நெல்லும் கரும்பும் செழித்து வளர்ந் திருக்கின்றன. அவ்வயல்களைச் சுற்றிலுமுள்ள குளங்களில் தாமரை நிறைந்திருப்பதைப் பார்த்தால், பசுமையான காட் டைப் போல் காண்கின்றது. இத்தகைய தாமரைக் காட்டி லுள்ள சம்பங்கோழி, நாரை, அன்னம், கொக்கு, காட்டுக் கோழி, நீர்க்காக்கை, உள்ளான், குளுவை, கணந்துள், பெரு

நாரை முதலிய பறவைகள் பலவேறுபட்ட ஓசையை எழுப்பு வது வெற்றி வேந்தர் போர்க்களத்தில் எழுப்பும் ஓசையைப் போல் கேட்டது.

**கழனிச் செந்நெல் கரும்பு சூழ் மருங்கின்**
**பழனத் தாமரைப் பைம் பூம் கானத்துக்**
**கம்புள் கோழியும், கனை குரல் நாரையும்,**
**செம் கால் அன்னமும், பைங்கால் கொக்கும்,**
**கானக் கோழியும், நீர் நிறக் காக்கையும்,**
**உள்ளும், ஊரலும், புள்ளும், புதாவும்**
**வெல் போர் வேந்தர் முனை இடம் போலப்**
**பல் வேறு குழூஉக்குரல் பரந்த ஓதையும்;**

[கழனி – வயல்களில் விளைந்த; செந்நெல் கரும்பு – செந்நெல் லும் கரும்பும் ஆகிய இவை; சூழ் மருங்கின் – சூழ்ந்திருக்கும் இடத் தினையுடைய; பழனத் தாமரை - நீர் நிலைத்து நிற்கும் வயலில் வளர்ந்த தாமரையாகிய; பைம் பூம் கானத்து–பசுமையான அழகிய காட்டில்; (என்றது தாமரைகள் அடர்ந்த நீர் நிலையில்); கம்புள் கோழியும் - சம்பங் கோழியும்; கனை குரல் நாரையும் – மிக்க குரலை எழுப்பும் நாரையும்; செம்கால் அன்னமும் – சிவந்த காலையுடைய அன்னமும்; பைங்கால் கொக்கும் – பசிய கால்களை உடைய கொக்கும்; கானக் கோழியும்–காட்டுக் கோழியும்; நீர் நிறக் காக்கை யும்–; உள்ளும் – உள்ளான் என்னும் பறவையும்; புள்ளும் - கணந் துட்புள் என்னும் பறவையும்; புதாவும் – பெரு நாரையும்; (ஆகிய இவற்றின் ஓசை எல்லாம்) வெல் போர் வேந்தர் – போரில் வெல் லும் வேந்தரின்; முனை இடம் போல – போர்க்களம் போல; பல் வேறு குழூஉ குரல் பரந்த ஓதையும் – பலவேறுபட்டனவாய் ஒன் ருய் இசைக்கின்ற ஓசைகளின் மிக்க ஓசையும்;]

## உழவரின் ஒலி

## (120–126)

வயலோரத்திலுள்ள களங்களில் நெற்கூடுகள் குவிந் திருக்கின்றன. கூடுகள் கலையாமலிருக்கும் பொருட்டுஅவற்றை வைக்கோல் கயிற்ருல் கட்டியிருக்கிருர்கள். சேறு படிந்த உடலும், சிவந்த கண்ணும் உடைய எருமைகள் தினவெடுத்த முதுகை நெற்கூட்டின் மேல் தேய்க்கின்றன. அதனுல் கயிறு அறுந்து, கூடுகளிலுள்ள நெல், வயலில் விளைந்திருக்கும் நெற் பயிரின் மேல் சரிந்து வீழ்கின்றது. அதைக் கண்டு பள்ளர் முதலிய உழவர்கள் எருமைகளை அதட்டும் ஒலி ஒருபுறம் கேட்டது.

உழாஅ நுண் தொளி உள்புக்கு அழுந்திய,
கழாஅ மயிர் யாக்கைச் செங்கண் காரான்
சொரி புறம் உரிஞ்சப் புரி ஞெகிழ்பு உற்ற,
குமரிக் கூட்டின் கொழும் பல் உணவு,
கவரிச் செந்நெல் காய்த்தலைச் சொரியக்,
கரும் கை வினைஞரும் களமரும் கூடி,
ஒருங்கு நின்றார்க்கும் ஒலியே அன்றியும்;

[உழாஅ நுண் தொளி - உழவர்களால் உழப்படாத நுண்ணிய சேற்றில்; உள்புக்கு அழுந்திய - உள்ளே பதிந்து அழுந்திய; கழாஅ மயிர் யாக்கை - கழுவாத மயிர் பொருந்திய உடலையும்; (என்றது நல்ல நீரில் குளிக்காமையால், அழுக்குப் படிந்த மயிர் நிறைந்த உடலையும்;) செங்கண் காரான் - சிவந்த கண்ணையும் உடைய எருமை; சொரி புறம் உரிஞ்ச - தினவு பொருந்திய தன் முதுகை வைத்துத் தேய்த்தலால்; புரி ஞெகிழ்பு உற்ற - வைக்கோற் கயிறு அறுந்து போன; குமரிக் கூட்டின் - அழிவில்லாத நெற் கூடுகளின்; கொழும்பல் உணவு - கொழுமையான பலவகையான நெற் பயிர்; கவரிச் செந்நெல் - கவரி மான் மயிர்க் கொத்துப் போல விளைந்து கிடக்கும் செந்நெல்லின்; காய்த் தலைச் சொரிய - மற்ற காய் முதிர்ந்த கதிர்களில் சரிய; (என்றது, எருமை தேய்த்தலால், நெற் கூடு பிரிந்து, அதிலிருந்து வீழ்கின்ற நெல், கவரி மயிர் போல, விளைந்து முற்றிய காயையுடைய மற்ற நெற் கதிர்களின் மேல் சரிந்து விழ அது கண்டு); கரும் கை வினைஞரும் - வலிய கையை யுடைய பறையர், பள்ளர் முதலியோரும்; களமரும் கூடி - உழவர் களும் கூடி; ஒருங்கு நின்று ஆர்க்கும் - ஒன்றாகச் சேர்ந்து நின்று ஆரவாரிக்கும்; ஒலியே அன்றியும் - ஒலியல்லாமலும் (என்றது, இவ்வொலியும் இன்னும் பின் கூறப் போகும் ஒலிகளும்;)

தொளி - சேறு: உழாஅ நுண் தொளி - உழப்படாத சேறு; அதாவது எங்கும் மகிழி மண் நிறைந்திருப்பதால், உழவு செய்யப் படாத நிலத்திலும் கூட சேறு நிறைந்திருக்கிறது. இதனால் சோழ நாட்டின் நீர் நில வளம் இன்னதென்று தெரிகிறது.]

## விவசாயிகளின் பாட்டு

### (127-139)

எங்கு பார்த்தாலும், விவசாயிகள் களிப்போடு இசை பாடிக்கொண்டு அவரவர் வேலைகளைச் சுறுசுறுப்பாகச் செய்து கொண்டிருக்கிறார்கள்.

கடைசி வகுப்பைச் சேர்ந்த பெண்கள் தங்கள் கூந்தலி லுள்ள மலர்களைப் பிடுங்கி எறிந்து விட்டு, நெல் நாற்றின் முடியிலுள்ள நாற்றை நறுக்கிச் சூட்டிக் கொள்ளுகிறார்கள். அவர்கள் தோளிலும் மார்பிலும் சேறு படிந்திருந்த போதி லும் அழகு வீசுகின்றது. கள்ளைக் குடித்ததால் அவர்களுடைய கயல் மீன் போன்ற கண்கள் சிவந்திருக்கின்றன. இழிமொழி களைப் பேசிக்கொண்டு, வாய்க்கு வந்தபடி பாட்டுக்களைப் பாடுகிறார்கள்.

அறுகம் புல்லும், குவளை மலரும், நெற்கதிரும் சேர்ந்து தொடுக்கப்பட்ட மாலையைக் கலப்பையில் சூட்டி, எல்லோரும் கடவுளைக் கைதொழுது நிற்க, உலகத்தைப் பிளப்பவர் போல ஏரைப் பிடித்து நின்று ஏர்மங்கலப் பாட்டுப் பாடுகின்றனர் உழவர்கள்.

நெற் குவியல்களில் கடாக்களை ஓட்டிச் சூடடிப்பவர்கள் முகவைப் பாட்டு ஒரு புறம் பாடிக் கொண்டிருக்கிறார்கள்.

பறை கொட்டுபவர்கள் களிப்போடு எழுப்பிய முழவின் ஓசை இனிமையாய் ஒலிக்கின்றது ஒருபுறம்.

**கடி மலர் களைந்து, முடி நாறு அழுத்தித்,**
**தொடி வளைத் தோளும், ஆகமும் தோய்ந்து**
**சேறு ஆடு கோலமொடு வீறு பெறத் தோன்றிச்,**
**செம் கயல் நெடும் கண் சின் மொழிக் கடைசியர்**
**வெம் கள் தொலைச்சிய விருந்திற் பாணியும்;**
**கொழும் கொடி அறுகையும், குவளையும் கலந்து**
**விளங்கு கதிர்த் தொடுத்த விரியல் சூட்டிப்,**
**பார் உடைப்பனர் போல் பழிச்சினர் கைதொழ**
**ஏரொடு நின்றோர் ஏர் மங்கலமும்;**
**அரிந்து கால் குவித்தோர் அரிகடா உறுத்த,**
**பெருஞ் செய்ந் நெல்லின் முகவைப் பாட்டும்;**
**தெண் கிணைப் பொருநர் செருக்குடன் எடுத்த,**
**மண்கணை முழவின் மகிழ் இசை ஓதையும்;**

[கடி மலர் களைந்து—(முன்னர்ச் சூட்டிய) மணமுள்ள மலர்களை நீக்கி; முடி நாறு அழுத்தி - நாற்றின் முடிகளிலுள்ள நாற்றை நறுக் கிச் சூடி; தொடி வளைத் தோளும் - வளைந்த வளையலையுடைய தோளும்; ஆகமும் — மார்பும்; தோய்ந்து — ; சேறு ஆடு கோல மொடு — சேறு படிந்த கோலத்தோடே; வீறு பெறத் தோன்றி —

அழகு பெறத் தோன்றி; செம் கயல் நெடும் கண் – சிவந்த கயல் மீன் போலும் அழகிய நீண்ட கண்களையும்; சின் மொழி – இழி மொழிகளையும் (உடைய); கடைசியர் – கடைசி வகுப்பு மகளிர்; வெம் கள் தொலைச்சிய – தாம் விரும்பிய கள்ளைக் குடித்து ஒழித்த தனால் (வந்த); விருந்தின் பாணியும் – புதுமையான பாட்டும் (என்றது, இசையோடு பொருந்தாது, பழக்கமின்றிக் களிப்பால் பிறந்த பாட்டும்;)

கொழும் கொடி அறுகையும் – கொழுமையான கொடிகளையுடைய அறுகம் புல்லும்; குவளையும் கலந்து – குவளை மலரும் கலந்து; விளங்கு கதிர்த் தொடுத்த – விளங்குகின்ற நெற் கதிர்களோடு சேர்த்துத் தொடுத்த; விரியல் – மாலையினை; சூட்டி – ஏரிலே சூட்டி; பார் உடைப்பனர்போல் – நிலத்தினை உடைப்போர் போல; பழிச்சினர் கை தொழ – அந்த ஏரைப் போற்றுவோர் கை தொழுது நிற்க; ஏரொடு நின்றோர் ஏர் மங்கலமும் – (பூட்டிய தமது) ஏர்களோடு தாங்களும் நின்ற உழவர்களின் ஏர் மங்கலப் பாட்டும்;

அரிந்து கால் குவித்தோர் – நெல்லை அரிந்து போராகக் குவித்தவர்கள்; அரிகடா உறுத்த – அப்போர்களின் மேல் கடாக்களை விட்டு மிகுந்த; பெரும் செய் நெல்லின் – பெரிய வயலில் விளைந்த நெல்லை; (சேர்த்தற்குப் பாடிய); முகவைப் பாட்டும் –;

தெண் கிணைப் பொருநர் – தெளிந்த ஓசை தருகின்ற கிணை என்னும் பறையைக் கொட்டுவோர்; செருக்குடன் எடுத்த – களிப்போடு எடுத்து எழுப்பிய; மண்கணை முழவின் – மார்ச்சனையுடைய திரண்ட முழவில் உண்டான; மகிழ் இசை ஓதையும் – மகிழ்ச்சி தரும் இசையால் விளைந்த ஓசையும்;]

## மறையோர் இருப்பிடங்கள்

## (140–147)

இவ்விதமாகக் காவிரியாற்றின் கரையில் முழங்கும் ஓசையும் இசையும் கேட்டு மகிழ்ச்சியடைந்து, சலிப்பில்லாமல் மூவரும் வழி நடந்து, அந்தணர் வசிக்கும் இருப்பிடத்தைச் சேர்ந்தார்கள். அந்தணர் ஓமம் செய்கின்றனர். வேள்விச் சாலையில் அவர்கள் எழுப்பும் புகை மேகத்திற்குக் கருப்பத்தைத் தருவது போல் வானத்தில் ஏறுகின்றது. மறையோர் செய்யும் வேள்வியின் சக்தியினால்தான் சோழ நாட்டில் மழை வளம் குன்றாமலிருப்பதும், புலிக்கொடியை யுடைய மன்னனுக்கு வெற்றி உண்டாவதும், நல்லோர் நிறைந்து நாட்டில் செல்வமும் வெற்றியும் நிலைத்து நிற்பதும். வேள்விச்

சாலையின் மணம் வீசும் புகை சுற்றிலுமுள்ள மாளிகையின் மேல் படிந்திருப்பதைப் பார்த்தால், மேகம்சூழ்ந்த மலைபோலத் தோற்றம் அளிக்கின்றது. அவ்வளவு உயர்ந்த மாட மாளிகைகள்.

**பேர் யாற்று அடை கரை நீரில் கேட்டு, ஆங்கு
ஆர்வ நெஞ்சமோடு அவலம் கொள்ளார்;
உழைப் புலிக் கொடித்தேர் உரவோன் கொற்றமொடு,
மழைக் கரு உயிர்க்கும் அழல் திகழ் அட்டில்
மறையோர் ஆக்கிய ஆவுதி நறும் புகை,
இறை உயர் மாடம் எங்கணும் போர்த்து
மஞ்சு சூழ் மலையின் மாணத் தோன்றும்
மங்கல மறையோர் இருக்கை அன்றியும்;**

[பேர் யாற்று அடைகரை நீரில் கேட்டு – பெரிய அக்காவிரி யாற்றின் கரையில் (மேற்கண்ட ஓசைகளை யெல்லாம்) முறையாகக் கேட்டு; ஆங்கு – அதனால்; ஆர்வ நெஞ்சமோடு – ஆவல் மிக்க நெஞ்சத்தோடு; அவலம் கொள்ளார் – வழி நடையால் வருத்தத்தை யடையாராகி;

உழைப் புலிக் கொடித்தேர் – இடமெல்லாம் புலி வடிவு எழுதப் பட்ட கொடியணிந்த தேரையுடைய; உரவோன் – வலிமை நிறைந்த மன்னனின்; கொற்றமொடு – ஆணையோடு; மழைக்கரு உயிர்க்கும் – மழைக்குக் கருப்பத்தைத் தோற்றுகின்ற; அழல் திகழ் அட்டில் – நெருப்பு எக்காலமும் விளங்குகின்ற வேள்விச் சாலையில்; மறை யோர் – அந்தணர்கள்; ஆக்கிய ஆவுதி நறும் புகை – உண்டாக்கிய வேள்வியின் மணம் வீசும் புகை; இறை உயர் மாடம் எங்கணும் போர்த்து – இறப்பு உயர்ந்த மாளிகைகள் எங்கும் நிரம்பி; மஞ்சு சூழ் மலையின் – மேகம் சூழ்ந்த மலைபோல; மாணத் தோன்றும் – அழகுடன் தோன்றுகின்ற; மங்கல மறையோர் இருக்கை அன்றியும் – மங்கலத் தன்மையுடையவரான அந்தணர்களின் இருப் பிடங்கள் அல்லாமலும்.]

## வேளாளர் இருப்பிடங்கள்

## (148–155)

காவிரியின் மக்களாகிய வேளாளர் தமது உழவினால் சோழ நாட்டிலுள்ள எளிய மக்களைக் காப்பதல்லாமல், நாட்டைக் காப்பவரையும் வளர்க்கிறார்கள். நாட்டின் வறுமையைப் போக்குவதற்கும், அரசாங்கம் நிலைப்பதற்கும் வேளாண்மையே அடிப்படையாகும். சோழ நாட்டில் எந்தக் காலத்திலும் குறைவு படாத செல்வத்தை வேளாளர் உற்பத்தி செய்கின்றார்கள். தூற்றாத நெல், குவியல் குவியலாகக்

கிடக்கின்றது. கரும்புப் பால் காய்ச்சும் ஆலையில் கிளம்பும் புகை இந்த நெற் குவியல்களின் மேல் படிந்திருப்பதைப் பார்த்தால், வானளாவிய மலைபோல் தோன்றுகின்றது. அவ்வளவு பெரிய நெற் குவியல்கள். வேள்விச் சாலையில் கிளம்பும் புகை மாளிகைகளின் மேல் படிந்திருப்பதும் மேகம் சூழ்ந்த மலைபோல் தோற்றமளிக்கின்றது. அவ்வளவு உயர்ந்த மாட மாளிகைகள். இவ்விதமான மாளிகைகள் நிறைந்த ஊர்களும், நெற் குவியல்கள் நிறைந்த ஊர்களும் இடையிடையே இருக்கின்றன சோழ நாட்டில். அழகு நிறைந்த பட்டினங்களையும் வளம் நிறைந்த கிராமங்களையும் பார்த்துக் கொண்டு, ஆங்காங்குத் தங்கிச் சலிப்பில்லாமல், கவுந்தியடிகள், கோவலன் கண்ணகியுடன் வழி நடக்கின்றார். இவர்கள் நாள் ஒன்றுக்கு ஒரு காதவழிக்குமேல் நடக்கவில்லை.

**பரப்பு நீர்க் காவிரிப் பாவை தன் புதல்வர்**
**இரப்போர் சுற்றமும், புரப்போர் கொற்றமும்,**
**உழவு இடை விளைப்போர் பழ விறல் ஊர்களும்,**
**பொங்கழி, ஆலைப் புகையொடும் பரந்து**
**மங்குல் வானத்து மலையின் தோன்றும்**
**ஊர் இடையிட்ட நாடு உடன் கண்டு,**
**காவதம் அல்லது கடவார் ஆகிப்**
**பல் நாள் தங்கிச் செல் நாள் ஒரு நாள்;**

[பரப்பு நீர்க் காவிரி – பரப்பி வருகின்ற நீரையுடைய காவிரி யாறாகிய; பாவை தன் புதல்வர் – பெண்ணின் மக்களாகிய; இரப்போர் சுற்றமும் – வறியவர் சுற்றத்தினையும்; புரப்போர் கொற்றமும் – நாட்டைக்காப்பவரின் ஆணையையும்; உழவு இடை விளைப்போர் – தமது உழவினால் வளர்கின்ற வேளாளர்கள் (வாழும்); பழ விறல் ஊர்களும் – பழமையாகத் தலைமையுடைய ஊர்களும்; (என்றது, நெடுங்காலமாகச் சிறந்த ஊர்கள்); பொங்கழி – நெல்லைத் தூற்றாமல் இட்டு வைத்திருக்கும் பொலி; ஆலைப் புகையொடும் பரந்து – கரும்பு ஆலை யாட்டுவார் புகையால் மூடப்பட்டு; மங்குல் வானத்து மலையின் தோன்றும் – மேகம் சூழ்ந்த வானளாவிய மலை போலத் தோன்றுகின்ற; ஊர் இடையிட்ட – ஊர்கள் இடையிடையே இருக்கின்ற; நாடு உடன் கண்டு – நாட்டை முழுமையும் கண்டு; காவதம் அல்லது கடவார் ஆகி – (நாளொன்றுக்கு) ஒரு காதத் தொலைவு அல்லாமல் மேற்படப் போகாதவராகி; பல் நாள் தங்கி – அங்ஙனம் பல நாட்கள் இடையிடையே தங்கி; செல் நாள் ஒரு நாள் – செல்லும் நாட்களில் ஒரு நாளில்.]

## சீரங்கத்தில் சாரணர் தரிசனம்

## (156–169)

கவுந்தியடிகளும், கோவலனும், கண்ணகியும் ஊருக்கு ஊர் தங்கி, ஒரு நாள் ஆறு சூழ்ந்த சீரங்கத்திற்கு வந்து சேர்ந்தனர். அங்கே மூங்கில் முள்ளால் வளைக்கப்பெற்ற மரங்களடர்ந்த சோலையில் பூக்கள் மணம் வீசும் ஒரு பக்கத்தில் சில

சாரணர் தோன்றினர். இவர்கள்தான் பட்டினப் பாக்கத்தில் அருகன் கோயிலிலுள்ள பலிபீடத்தின் மேலிருந்து, அருக தேவனின் உண்மை மொழிகளை மக்களுக்கு எடுத்து உரைக்கின்ற ஆகாய சாரிகள்.

சாரணரைக் கண்டவுடன் கவுந்தியடிகள், "தொல்வினை ஒழிக" என்று சொல்லிக் கோவலன் கண்ணகியுடன் அவர்கள் திருவடியில் வீழ்ந்து வணங்கினர். கோவலனும் கண்ணகியும் புகார் நகரை விட்டு வந்த காரணத்தையும், அவர்களுக்கு நிகழப்போகும் துன்பத்தையும் முக்கால உணர்ச்சியினால் சமண முனிவர் அறிந்துகொண்டார். ஆனால், விருப்பு வெறுப்பு அற்றவரானதால் அதன் பொருட்டு வருந்தவில்லை.

**ஆற்று வீ அரங்கத்து வீற்று வீற்று ஆகிக்**
**குரங்கு அமை உடுத்த மரம்பயில் அடுக்கத்து**
**வானவர் உறையும் பூநாறு ஒரு சிறைப்,**
**பட்டினப் பாக்கம் விட்டனர் நீங்காப்**
**பெரும் பெயர் ஐயர் ஒருங்கு உடன் இட்ட,**
**இலங்கு ஒளிச்சிலாதலம் மேல் இருந்தருளிப்**
**பெருமகன் அதிசயம் பிறழா வாய்மைத்**
**தருமஞ் சாற்றும் சாரணர் தோன்ற;**
**"பண்டைத் தொல்வினை பாறுக" என்றே**
**கண்டு அறி கவுந்தியொடு கால் உற வீழ்ந்தோர்,**
**வந்த காரணம் வயங்கிய கொள்கைச்**
**சிந்தை விளக்கில் தெரிந்தோன் ஆயினும்,**
**ஆர்வமும், செற்றமும் அகல நீக்கிய**
**வீரன் ஆகலின் விழுமம் கொள்ளான்;**

[ஆற்று வீ அரங்கத்து - ஆற்றை மறைக்கின்ற சீரங்கத்தில்; வீற்று வீற்று ஆகி - அணி அணியாக இருந்து; குரங்கு அமை உடுத்த - வளைந்த மூங்கில் முள் சூழ்ந்த; மரம் பயில் அடுக்கத்து - மரங்களடர்ந்த சோலையில்; வானவர் உறையும் - தேவர்கள் வாழ்கின்ற; பூ நாறு ஒரு சிறை - பூக்கள் மணம் நாறுகின்ற ஒரு பக்கத்தில்; பட்டினப் பாக்கம் விட்டனர் நீங்கா - பட்டினப் பாக்கத்தை விட்டு நீங்கி; பெரும் பெயர் ஐயர் - மிக்க புகழுடைய சமண முனிவர்; ஒருங்கு உடன் இட்ட - எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து பட்டினப் பாக்கத்தில் இட்ட; இலங்கு ஒளிச்சிலாதலம் மேல் - விளங்கும் ஒளியையுடைய பலிபீடத்தின் மேல்; இருந்தருளி-; பெருமகன் - அருக தேவனின்; அதிசயம் பிறழா - புதுமைகள் தவறாத; வாய்மை - உண்மையான; தருமம் - அறவுரைகளை; சாற்றும் - எடுத்து உரைக்கின்ற; சாரணர் தோன்ற - 'ஆகாயசாரிகள்' எனப்பட்ட சாரணர்கள் தோன்ற; பண்டைத் தொல்வினை - பழம் பிறப்பில் யாம் செய்த

அப் பழ வினைகள்; பாறுக என்று – ஒழிவனவாக என்று; கண்டு அறி கவுந்தியொடு – அவர்களைக் கண்டு இன்னாரென்று கண்டறிந்த கவுந்தியடிகளுடன்; கால் உற வீழ்ந்தோர் – அவர்கள் கால்களில் தமது முடிபட வீழ்ந்து வணங்கிய அவர்கள் (என்றது கண்ணகி, கோவலன் இருவரையும்) வந்த காரணம் – காவிரிப்பூம் பட்டினத்தைவிட்டு வந்த காரணம்; வயங்கிய கொள்கை – விளக்கமுடைய கொள்கைகள் பொருந்திய; சிந்தை விளக்கில் – தன் நெஞ்சத்தின் விளக்கினால் (என்றது முக்கால அறிவினால்); தெரிந்தோன் ஆயினும் – தான் அறிந்து கொண்டான் ஆயினும்; ஆர்வமும் செற்றமும் – விருப்பும் வெறுப்பும்; அகல நீக்கிய – விலகிப் போம்படி விட்ட; வீரன் ஆகலின் – தரும வீரன் ஆதலால்; விழுமம் கொள்ளான் – அவர்களின் துன்பத்தைக்கண்டு தான் வருந்ாதவனாகி;

வீ – அழிவு; அரங்கம் – ஆற்றின் நடுவில் உள்ள சிறு தீவு; குரங்கு – வளைவு; அமை – மூங்கில்; ஒரு சிறை – ஒரு பக்கம்; விழுமம் - துன்பம்.]

### சாரணர் உபதேசம்

### (170–191)

சாரணரில் மூத்தவனாகிய பெரியோன் கவுந்தியடிகளுக்கு உபதேசம் செய்கின்றான். "மனிதன் என்ன முயற்சி செய்தாலும், அவனுடைய வினைப்பயன் விளையுங் காலம் வந்து விட்டால், ஊழ்வினை வந்தே தீரும். கடுங் காற்று வீசும் வெட்ட வெளியில் ஏற்றி வைத்த விளக்கைப்போல் மனிதன் உடம்பிலுள்ள உயிர் மறைந்து விடும். எல்லா உயிர்களுக்கும் தலைவனும், எல்லாவற்றிற்கும் காரணமுமாயிருக்கும் இறைவன் அருளிய வேத நூலாகிய ஒளியைப் பெற்றால்தான் அறியாமையாகிய இருள் நீங்கும்; பிறவியாகிய இருளும் விலகும்."

கழி பெரும் சிறப்பின் கவுந்தி! காணாய்!
"ஒழிக என ஒழியாது ஊட்டும் வல்வினை;
இட்டவித்தின் எதிர்ந்து வந்து எய்தி
ஒட்டும் காலை ஒழிக்கவும் ஒண்ணா;
கடும்கால் நெடுவெளி இடும் சுடர் என்ன
ஒருங்கு உடன் நில்லா உடம்பு இடை உயிர்கள்;
அறிவன், அறவோன், அறிவு வரம்பு இகந்தோன்,
செறிவன், சினேந்திரன், சித்தன், பகவன்,
தரும முதல்வன், தலைவன், தருமன்,
பொருளன், புனிதன், புராணன், புலவன்,
சினவரன், தேவன், சிவகதிநாயகன்,

பரமன், குணவதன், பரத்தில் ஒளியோன்,
தத்துவன், சாதுவன், சாரணன், காரணன்,
சித்தன், பெரியவன், செம்மல், திகழ் ஒளி,
இறைவன், குரவன், இயல்குணன், எங்கோன்,
குறைவில் புகழோன், குணப்பொருள் கோமான்,
சங்கரன், ஈசன், சயம்பு, சதுமுகன்,
அங்கம் பயந்தோன், அருகன், அருள்முனி,
பண்ணவன், எண்குணன், பாத்தில் பழம்பொருள்,
விண்ணவன், வேதமுதல்வன், விளங்கு ஒளி,
ஓதிய வேதத்து ஒளி உறின் அல்லது,
போதார் பிறவிப் பொதி அறையோர்'' என;

[கழிபெரும் சிறப்பின் - மிக்க பெருந்தவச் சிறப்பினையுடைய; கவுந்தி காணாய்-கவுந்தியே நீ அறிவாயாக; ஒழிக என ஒழியாது - ஒழியட்டும் என்று முயன்றாலும் ஒழியாமல்; வல்வினை ஊட்டும் - வலிய ஊழ்வினை, தானே வந்து அதன் பயனை நாம் அடையும்படிச் செய்யும்; இட்ட வித்தின் - விளை நிலத்தில் இடப்பட்ட வித்துக்களைப் போல; எதிர்ந்து வந்து - நமக்கு எதிராக வந்து; எய்தி - பொருந்தி; ஒட்டும் காலை - நல்வினையை நுகர வெண்ணும் காலத்தில்; ஒழிக்க ஒண்ணா - அதை வேண்டாமென்று போக்கவும் முடியாது; கடும்கால் நெடுவெளி - பெருங்காற்று வீசும் நீண்ட வெட்ட வெளியில்; இடும் சுடர் என்ன - வைக்கப்பட்ட விளக்கைப் போல; உடம்பு இடை உயிர்கள் - உடம்பில் பொருந்தியிருக்கும் உயிர்கள்; ஒருங்கு உடன் நில்லா - உடம்போடு பொருந்தி நெடிது நிற்கமாட்டா;

அறிவன் - எல்லாப் பொருள்களையும் அறியும் அறிவுடையவன்; அறவோன் - தர்மம் செய்தலையே தொழிலாக உடையோன்; அறிவு வரம்பு இகந்தோன் - எல்லோர் அறிவையும் கடந்து அதற்கு அப்பாற்பட்டவன்; செறிவன் - தளர்ச்சியில்லாமல் எப்பொழுதும் உறுதியுடையவன்; சினேந்திரன் - எட்டுவகைப்பட்ட பிறவித் தொழில்களைக் கடந்தவன்; (பிறப்பு, குலம், பேர், வயது முதலியன இல்லாதவன்); சித்தன் - தன் செயல்களில் வெற்றி பெற்றவன்; பகவன் - அறிவே உருவானவன்; தரும முதல்வன் - அறங்களுக்கு அடிப்படையானவன்: தலைவன் - எல்லா உயிர்களுக்கும் தலைவன்; தருமன் - தருமத்தின் உருவானவன்; பொருளன் - உண்மைப் பொருளாய் விளங்குபவன்; புனிதன் - மாசில்லாத சிறப்புடையவன்; புராணன் - பழமையுடையவன்; புலவன் - எல்லோர்க்கும் அறிவாய் இருப்பவன்; சினவரன் - சினத்தை அடக்கினவன்; தேவன் - தேவர்களுக்கு முதல்வன்; சிவகதி நாயகன் - வீட்டுலகத்திற்குத் தலைவன்

பரமன் – மேலானவன்; குணவதன் - உயரிய பெருங் குணங்களை உடையவன்; பரத்தில் ஒளியோன் - மேல் உலகத்திற்கு ஒளியாயிருப்பவன்; தத்துவன் – தத்துவங்களை யுடையவன்; சாதுவன் - புலன்களை யெல்லாம் ஒடுக்கினவன்; சாரணன் – வானத்தில் திரிபவன்; காரணன் - எல்லாவற்றிற்கும் காரணமாயிருப்பவன்; சித்தன்– எட்டுவகைச் சித்திகளையும் பெற்றவன்; பெரியவன் – எல்லாவற்றிலும் பெரியோன்; செம்மல் – தலைவன்: திகழ் ஒளி - விளங்குகின்ற ஒளி வடிவமானவன்; இறைவன் – எப்பொருளிலும் தங்கியிருப்பவன்; குரவன் – ஆசிரியன்; இயல்குணன் – இயற்கையான குணத்தினை யுடையவன்; எம்கோன் – எமது தலைவன்; குறைவில் புகழோன் – குறைவில்லாத பெரும்புகழ் உடையோன்; குணப்பொருள் கோமான்– பெருங் குணங்களையே தனது பொருளாக உடைய மன்னன்; சங்கரன் – நலத்தைக் கொடுப்பவன்; ஈசன் – எல்லாச் செல்வமும் உடையோன்; சயம்பு - தானே தோன்றினவன்; சதுமுகன் – நான்கு திசையிலும் முகங்களை யுடையவன்; அங்கம் பயந்தோன் - ஆகம நூல்களைத் தந்தவன்; அருகன் - போற்றத்தக்கவன், அருள்முனி - அருள் நிரம்பிய முனிவன்; பண்ணவன் – கடவுள்; எண்குணன் - எட்டு குணங்களையுடையவன்; பாத்து இல் பழம்பொருள் – பகுப்பதற்கரிய மிகப் பழம் பொருளாய் உள்ளவன்; விண்ணவன் – மேல் உலகத்தான்; வேத முதல்வன் – ஆகமங்கள் மூன்றிலும் முதலாயுள்ளவன்; விளங்கு ஒளி – அறியாமையாகிய இருள் நீங்க விளங்குகின்ற ஒளி; ஓதிய வேதத்து – (இவ்வகைப் பெயர்களையுடைய பெரியோனால்) ஓதப்பட்ட வேத நூலாகிய; ஒளி உறின் அல்லது - ஒளியைப் பெற்றாலன்றி; பிறவிப்பொதி அறையோர் - பிறவியாகிய கீழ் அறையில் அகப்பட்டோர்; போதார்–பிறவிப் பயனை யடையார்; என – என்று சொல்ல.

புனிதம் – தூய்மை; பரம் – மேன்மை; பொதி அறை – மூடப்பட்ட அறை.]

## கவுந்தி இறைவனைப் போற்றுவது

சாரணரின் அறமொழிகளைக் கேட்ட கவுந்தியடிகள் தலை மேல் கை குவித்து இறைவனைப் போற்றுகிறார்.

**சாரணர் வாய்மொழி கேட்டுத் தவமுதல்**
**காவுந்தியும் தன் கை தலைமேற்கொண்டு,**
**"ஒரு மூன்று அவித்தோன் ஓதிய ஞானத்**
**திருமொழிக்கு அல்லது, என் செவி அகம் திறவா;**
**காமனை வென்றோன் ஆயிரத்தெட்டு**
**நாமம் அல்லது நவிலாது என் நா;**

ஐவரை வென்றோன் அடிஇணை அல்லது,
கைவரைக் காணினும் காணா என் கண்;
அருள் அறம் பூண்டோன் திருமெய்க்கு அல்லது, என்
பொருள் இல் யாக்கை பூமியில் பொருந்தாது;
அருகர் அறவன் அறிவோற்கு அல்லது, என்
இரு கையும் கூடி ஒருவழிக் குவியா;
மலர்மிசை நடந்தோன் மலர்அடி அல்லது, என்
தலைமிசை உச்சி தான் அணிப்பொறா அது;
இறுதிஇல் இன்பத்து இறைமொழிக்கு அல்லது,
மறுதர ஓதி, என் மனம் புடை பெயராது;''

[சாரணர் வாய்மொழி கேட்டு - அச் சாரணர்கள் கூறிய இந்த் உண்மையான மொழிகளைக் கேட்டு; தவமுதல் காவுந்தியும் - தவத்தின் முதல்வியாகிய காவுந்தி; தன் கை தலைமேற் கொண்டு - தமது கைகளைத் தலையின்மேல் வைத்துக்கொண்டு; ஒரு மூன்று அவித்தோன் - காமம், வெகுளி, மயக்கம் என்பவற்றை நீக்கியவனாகிய அருகதேவன்; ஓதிய - கூறியருளிய; ஞானத் திருமொழிக்கு அல்லது - அறிவமைந்த புண்ணிய மொழிகளுக்கல்லாமல்; என் செவி அகம் திறவா - என் காதுகள் வேறு மொழிகளுக்குத் திறக்கமாட்டா; காமனை வென்றோன் - காமதேவனை வென்றவனாகிய கடவுளின்; ஆயிரத்தெட்டு நாமம் அல்லது - ஆயிரத்தெட்டுத் திருப்பெயர்களை யல்லாமல் வேறொன்றை; என் நா நவிலாது - என்னுடைய நாக்கு சொல்லாது; ஐவரை வென்றோன் - ஐந்து புலன்களையும் வென்றவனாகிய அக்கடவுளின்; அடி இணை அல்லது - இரண்டு அடிகளையும் கண்டு மகிழ்தல் அல்லாமல்; கைவரைக் காணினும் - மற்ற தேவரின் அடிகளை என் கையின் கண் கண்டாலும்; என் கண் காணா - என் கண்கள் அவற்றைப் பார்க்கமாட்டா; அருள் அறம் பூண்டோன் - அருளோடு அறத்தையே அணிகலமாகக் கொண்ட அவனது; திருமெய்க்கு அல்லது - திருமேனியின் பொருட்டு அல்லாமல்; என் பொருள் இல் யாக்கை - எனது பயனற்ற உடல்; பூமியின் பொருந்தாது - நிலத்தில் வேறொரு காரணத்திற்காகப் படியாது; அருகர் - சமண முனிவர்களுக்கு; அறவன் - அறத்தைக் கற்பிக்கும்; அறிவோற்கு அல்லது - அந்த அறிவனாகிய கடவுளுக்கல்லாமல்; என் இருகையும் கூடி - என் இருகைகளும் சேர்ந்து; ஒரு வழிக் குவியா - (வேறு ஒரு தேவரை வணங்குதற்கு) ஒன்றாகக் குவியா; மலர்மிசை நடந்தோன் - மலரின்மேல் தங்கியவனான அந்தக் கடவுளின்; மலர் அடி அல்லது - மலர் போன்ற திருவடிகளை யல்லாமல்; என் தலைமிசை உச்சிதான் - எனது தலை உச்சி; அணிப்பொறாஅது - (பிற தேவரின் அடிகள்) அணியப் பொறுக்க மாட்டாது; இறுதி இல் இன்பத்து - முடிவில்லாத இன்பத்தையுடைய; இறை மொழிக்கு

அல்லது – இறைவணங்கிய அருகனின் அறவுரைகளுக் கல்லாமல்; மறுதர ஓதி – பிறமொழிகளை மீண்டும் மீண்டும் ஓதி; என் மனம் – என் உள்ளம்; புடை பெயராது – அசையாது.]

## காவிரித் தென்கரை

(208–218)

அருக தேவனின் பெருமையைப் போற்றிய கவுந்தியடிகளின் மொழிகளைக் கேட்ட சாரணர் மன மகிழ்ந்து, நிலத்திலிருந்து ஒருமுழம் மேலே எழுந்து "பிறவியைத் தரும் உலகப் பற்று கவுந்தியை விட்டு ஒழிக" என்று வாழ்த்தி, வானத்தின் வழியாய்ச் சென்று மறைந்தனர். அவர்களைக் கை தொழுது "தாங்கள் கூறியபடியே உலகக் கட்டு எமக்கு அறுவதாக" என்றார். பிறகு மூவரும் பள்ளியோடத்தில் ஏறித் துறையைக் கடந்து, காவிரியின் தென் கரையை அடைந்து, அங்குள்ள ஒரு அழகிய பூஞ்சோலையில் தங்கினர்.

**என்று அவன் இசைமொழி ஏத்தக் கேட்டு, அதற்கு**
**ஒன்றிய மாதவர் உயர்மிசை ஓங்கி**
**நிவந்து ஆங்கு ஒரு முழம் நீள் நிலம் நீங்கிப்,**
**'பவம்தரு பாசம் கவுந்தி கெடுக' என்று**
**அந்தரம் ஆறுப் படர்வோர்த் தொழுது,**
**'பந்தம் அறுக' எனப் பணிந்தனர் போந்து;**
**கார் அணி பூம்பொழில் காவிரிப்பேர் யாற்று**
**நீர் அணி மாடத்து நெடும் துறை போகி**
**மாதரும், கணவனும், மாதவத் தாட்டியும்**
**தீது தீர் நியமத் தென்கரை எய்தி,**
**போதுசூழ் கிடைக்கை ஓர் பூம்பொழில் இருந்துழி;**

[என்று அவன் இசைமொழி ஏத்த–என்று இவ்வாறாகக் கவுந்தி அவ்வருகதேவனின் பெருமைகளைப் போற்றிக் கூற; கேட்டு–அதனைக் கேட்டு; அதற்கு ஒன்றிய மாதவர் – அம்மொழிகளுக்கு இசைந்த அந்தச் சாரணர்கள்; உயர்மிசை ஓங்கி நிவந்து – நிலத்தை விட்டு மேலே எழுந்து உயர்ந்து; ஆங்கு ஒரு முழம் நீள் நிலம் நீங்கி – அவ்விடத்தில், ஒரு முழ உயரம் நிலத்தை விட்டு எழுந்த பின்னர்; பவம்தரு பாசம் கவுந்தி கெடுக என்று – பிறப்பைத் தரக்கூடிய உலக இன்பங்கள் கவுந்தியை விட்டு ஒழிவனவாக எனக்கூறி; அந்தரம் ஆறுப்படர்வோர் – வானத்தினை வழியாகக் கொண்டு செல்லுகின்ற அவரை; தொழுது – வணங்கி; பந்தம் அறுக என – அவர் கூறியபடியே உலகக்

கட்டு எமக்கு அறுவதாக என்று; பணிந்தனர் போந்து—போற்றிப் போய்; கார் அணி பூம்பொழில்—மேகங்களை அணிந்த பூக்களை யுடைய சோலைகள்; காவிரிப் பேர் யாற்று—பெரிய காவிரி யாற்றின்; நீர் அணி மாடத்து—நீரணி மாடம் என்னும் பள்ளியோடத் திணல்; நெடும் துறை போகி—அவ்வாற்றின் பெறிய துறையினைக் கடந்து; மாதரும் கணவனும் மாதவத் தாட்டியும்—கண்ணகி, கோவலன், கவுந்தி என்ற மூவரும்; தீது தீர் நியமத் தென்கரை எய்தி—குற்றமில்லாத ஊர்களையுடைய அதன் தென்கரையை அடைந்து; போது சூழ் கிடக்கை—பூக்கள் சூழ்ந்த இடத்தினை யுடைய; ஓர் பூம்பொழில் இருந்துழி—ஒரு அழகிய சோலையில் இருந்தபொழுது,

பவம்—பிறப்பு; அந்தரம்—வானம்; நீரணி மாடம்—பள்ளி யோடம்; போது—பூ]

## கவுந்தி சாபம்

## (219-234)

பூஞ்சோலையின் வழியாய் வந்த ஒரு விலைமகளும், ஒரு சோம்பேறியும் கண்ணகி கோவலன் இருவரையும் பார்த்தார் கள். காமனும் ரதியும் போல் அழகுடைய இவர்கள் யார் என்று தெரிந்து கொள்ள வேண்டுமென்று நினைத்து, கவுந்தி யடிகளிடம் போய், "அருந் தவத்தையுடைய அடிகளே! தங்க ளோடிருக்கும் இவர்கள் யார்?" எனக் கேட்க, கவுந்தியடிகள் "இவர்கள் என் மக்கள்; அவர்கள் தேவரல்ல; மனிதர்கள் தான். வழிநடையால் சலிப்படைந் திருக்கிறார்கள். அவர்கள் பக்கத்தில் போகவேண்டாம்" என்றார். இதைக் கேட்ட இருவரும் கொஞ்சம் வம்பு பேசலாமென்று கருதி "ஒரு தாய் வயிற்றில் பிறந்தவர்கள் கணவனும் மனைவியுமாய்க் கூடி வாழ்வதும் உண்டோ? நீர் படித்த நூல்கள் இது முறை யென்று சொல்லுகின்றனவோ?" என்று அக்கிரமமான வார்த்தைகளைப் பேசினார்கள். இதைக் கேட்டுக்கொண்டிருந்த கண்ணகி நடுங்கி விட்டாள்; காதைப் புதைத்துக்கொண்டாள். கவுந்தி யடிகளுக்குக் கோபம் வந்து விட்டது. "என் பூங்கோதையை இவர்கள் இகழ்வதா? இவர்கள் கிழ நரிகளாக மாறி முள் நிறைந்தகாட்டில் அலைவார்களாக" என்று மனதிலே சாபம் கொடுத்தார். சாபம் உடனே பலித்து விட்டது.

**வம்பப் பரத்தை வறுமொழி யாளனொடு**
**கொங்கு அலர் பூம்பொழில் குறுகினர் சென்றோர்,**
**"காமனும், தேவியும் போலும் ஈங்கு இவர்**
**ஆர்? எனக் கேட்டு ஈங்கு அறிகுவம்" என்றே;**
**"நோற்று உணல் யாக்கை நொசிதவத்தீர்! உடன்**
**ஆற்று வழிப்பட்டோர் ஆர்?" என வினவ," என்**
**மக்கள் காணீர்! மானிட யாக்கையர்;**
**பக்கம் நீங்குமின்! பரி புலம்பினர்" என;**
**"உடன் வயிற்றோர்கள், ஒருங்கு உடன் வாழ்க்கை**
**கடவதும் உண்டோ? கற்றறிந்தீர்! என;**
**தீமொழி கேட்டுச் செவி அகம் புதைத்துக்**
**காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க,**
**" எள்ளுநர் போலும் இவர் என் பூங்கோதையை;**
**முள் உடைக் காட்டின் முதுநரி ஆக" எனக்**
**கவுந்தி இட்ட தவம் தரு சாபம்**
**கட்டியது ஆதலின்;**

[வம்பப் பரத்தை - பரத்தைத் தொழிலைப் புதிதாகப் பழகுகின்ற ஒருத்தி; வறு மொழியாளனொடு - பயனில்லாத வெறும் மொழிகளைக் கூறும் ஒருவனோடு கூடி; கொங்கு அலர் பூம்பொழில் - தேன் நிறைந்த பூக்களையுடைய அழகிய சோலையினை; குறுகினர் சென்றோர் - நெருங்கிப் போன அவர்கள்; காமனும் தேவியும் போலும் - காமனையும் அவன் மனைவியான இரதியையும் போன்றவராய்; ஈங்கு இவர் ஆர் என - இங்கு வந்திருக்கும் இவர்கள் யார் என்று; கேட்டு ஈங்கு அறிகுவம் என்றே - இவர்களிடத்தில் கேட்டு அறிவோம் என்று கருதி; நோற்று - நோன்புகளை நோற்று; உணல் - பிறகு உண்ணுகின்ற; யாக்கை - உடலையுடைய; நொசி தவத்தீர் - நுண்ணிய தவத்தினையுடைய அடிகளே! உடன் ஆற்று வழிப்பட்டோர் - தங்களுடன் வழியில் வந்து சேர்ந்தவர்களாகிய இவர்கள்; ஆர் என வினவ - யார் என்று கேட்க; (அதற்கு அவர்) என் மக்கள் காணீர் - என்னுடைய மக்கள் என அறியக் கடவீர்; மானிட யாக்கையர் - மக்கள் உடம்புடையவர்கள்; பரிபுலம்பினர் - வழி நடையால் வருந்தியுள்ளனர்; பக்கம் நீங்குமின் என - அவர் பக்கத்தை விட்டு அப்பாற் செல்லுங்கள் என்று கூற; உடன் வயிற்றோர்கள் - ஒரு வயிற்றில் பிறந்த இருவர்; ஒருங்கு உடன் வாழ்க்கை - ஒன்றாகக் கூடி (கணவனும் மனைவியுமாய்) வாழுதல் (உண்டென்று); கற்று அறிந்தீர் - உண்மையான நூல்களைக் கற்றறிந்த பெரியீர்! கடவதும் உண்டோ - சொல்லப்பட்டதும் உண்டோ, என - என்று அவர்கள் கேட்ட அளவிலே; தீமொழி கேட்டு - அவர் கூறிய அக்கொடு மொழிகளைக் கேட்டு; செவி அகம் புதைத்து -

தனது காதுகளைப் பொத்தி; காதலன் முன்னர்க் கண்ணகி நடுங்க — தன் கணவன் முன்பாக நின்று கண்ணகி நடுக்கமடைய; என் பூங் கோதையை — எனது, அழகிய கூந்தலையுடைய இவளை; எள்ளுநர் போலும் இவர்—இவர்கள் இகழ்ந்து கூறத்தகுமோ!; முள் உடைக் காட்டின் கண் —; முது நரி ஆக என — கிழ நரிகளாக மாறித்திரிக என்று கூற; கவுந்தி இட்ட — அங்ஙனம் கவுந்தியினால் இடப்பட்ட; தவம் தரு சாபம் — தவத்தின் ஆற்றலால் பிறந்த அச் சாபம்; கட்டியது ஆதலின் — வந்து பிடித்தது ஆதலால்.

வம்பு — புதுமை; பரத்தைத் தொழில் — விலைமகளின் தொழில்; நோற்று உணல் — பட்டினி கிடந்து பிறகு உண்ணுதல்; ஆறு - வழி, பரிதல் — வழிப்போகுதல்; புலம்பு - வருத்தம்.]

## சாப விடை
### (234–248)

வம்பர்கள் குள்ளநரிகளாக மாறி ஊளையிட்டனர். அடிகளின் சாபத்தால்தான் இப்படி நேர்ந்ததென்று கண்ணகியும், கோவலனும் உடனே அறிந்துகொண்டவராய், நெஞ்சு கலங்கி "அருந்தவம் உடையீர்! தீயோர் அடாத சொற்களைச் சொன்னாலும், அது அவர்கள் அறியாமையால் வந்த பிழை என்று கருத வேண்டும். உங்கள் முன்னிலையில் பிழை செய்த இந்த வம்பர்களுக்குச் சாபம் நீங்கும் காலம் இன்னதென்று தாங்களே அருள வேண்டும்" என்று வேண்டினர். கவுந்தியடிகளும் மனமிரங்கி "அறியாமையைக் கடைப் பிடித்ததால் இத் தாழ்ந்த பிறப்பை அடைந்த இவர், உறையூரின் மதிலின் அருகே உள்ள காட்டில் பன்னிரண்டு மாதங்கள் அலைந்து திரிந்து, துன்பப் பட்டபின் தமது பழைய உருவத்தை அடைவார்கள்" என்று சாப விடை செய்தார். பிறகு மூவரும் உறையூரை அடைந்தனர்.

**பட்டதை அறியார்,**
**குறுநரி நெடும்குரல் கூவிளி கேட்டு**
**நறுமலர்க் கோதையும், நம்பியும் நடுங்கி**
**"நெறியின் நீங்கியோர் நீர் அல கூறினும்,**
**அறியாமை என்று அறியல் வேண்டும்;**
**செய்தவத்தீர்! நும் திருமுன் பிழைத்தோர்க்கு**
**உய்திக் காலம் உரையீரோ?" என;**
**"அறியாமையின் இன்று, இழி பிறப்பு உற்றோர்**
**உறையூர் நொச்சி ஒரு புடை ஒதுங்கிப்**
**பன்னிரு மதியம் படர்நோய் உழந்தபின்,**
**"முன்னை உருவம் பெறுக ஈங்கு இவர்" எனச்**
**சாபவிடை செய்து, தவப்பெரும் சிறப்பின்**
**காவுந்தி ஐயையும், தேவியும், கணவனும்**
**முறம்செவி வாரணம் முன்சமம் முருக்கிய**
**புறஞ்சிறை வாரணம் புக்கனர் புரிந்து என்.**

[பட்டதை அறியார் – நிகழ்ந்த இச்செய்தியை அறியாதவராய்; குறுநரி நெடும் குரல் - குள்ளநரியின் நெடுங்குரலால்; கூவிளி கேட்டு – கூவுகின்ற அவ்வோசையைக் கேட்டு; நறுமலர்க் கோதையும் – நறுமணம் வீசும் மலர்களையணிந்த கூந்தலையுடைய கண்ணகியும்; நம்பியும் நடுங்கி –கோவலனும் நெஞ்சு கலங்கி: நெறியின் நீங்கியோர் – நல்ல நெறியினின்று கடந்தவர்; நீர் அல கூறினும் – தகவு இல்லாத சொற்களைக் கூறினாலும்; அறியாமை என்று அறியல் வேண்டும் – அது அவர் அறியாமையால் வந்த பிழை என்று உணரவேண்டும்; செய்தவத்தீர் – வருந்திச் செய்த பெரிய தவத்தினையுடையீர்; நும் திருமுன் பிழைத்தோர்க்கு – உமது முன்னிலையில் பிழை செய்தவர்களாகிய இவர்களுக்கு; உய்திக் காலம் – அச்சாபம் நீங்கும் காலம்; உறையீரோ என – கூற மாட்டீர்களோ என்று கேட்க; அறியாமையின் இன்று – அறியாமையைக் கடைப்பிடித்து; இழி பிறப்பு உற்றோர் – அதனால் இத்தாழ்ந்த பிறப்பை அடைந்த இவர்கள்; உறையூர் நொச்சி – உறையூரைச் சுற்றியுள்ள மதிலின்; ஒரு புடை ஒதுங்கி – ஒரு பக்கத்துக் (காட்டில்) திரிந்து; பன்னிரு மதியம் – பன்னிரண்டு மாதங்கள் வரை; படர் நோய் உழந்த பின் – வருத்தந் தரும் துன்பங்களை நுகர்ந்த பிறகு; இவர் முன்னை உருவம் – இவர் தமது பழைய உருவத்தை; ஈங்கு பெறுக என – இவ்விடத்தில் திரும்பவும் பெறுவார்களாக என்று; சாபவிடை செய்து - தாம் இட்ட சாபத்திற்குக் கழிவு கூறி; தவப்பெரும் சிறப்பின் – மிக்க தவத்தால் வந்த சிறப்பினையுடைய; காவுந்தி ஐயையும் - கவுந்தி அடிகளும்; தேவியும் கணவனும் - கண்ணகியும் கோவலனும்; முறம் செவி வாரணம் முன் – முறத்தைப் போன்ற காதினை யுடைய யானையின் முன்னர்; சமம் முருக்கிய புறம் சிறை வாரணம் – போர் செய்து வென்ற பக்கத்தில் சிறகினையுடைய கோழியின் (பெயரை யுடைய உறையூரில்); புரிந்து புக்கனர் – விருப்பத்துடனே நுழைந்தார்கள்.

விளி - குரல்; உய்திக் காலம் – தப்பும் காலம்; நொச்சி – மதில்; படர் – வருத்தம்; வாரணம் - யானை; வாரணம் என்று கோழிக்கும் பெயர் உண்டு. கோழியைக் குறிப்பதற்கு "புறத்திலே சிறகை உடைய வாரணம்" என்றார். யானையைக் குறிப்பதற்கு "முறத்தைப் போல் காதினையுடைய வாரணம்" என்றார். ஒரு காலத்தில் உறையூரில் ஒரு கோழி யானையுடன் போர் செய்து வென்றது என்று ஒரு கதை உண்டு. அதனால் உறையூருக்குக் கோழியூர் என்று ஒரு பெயரும் உண்டு.]

**நாடுகாண்காதை முற்றிற்று**

## கட்டுரை

புகார்க் காண்டத்தில் சொல்லப்பட்ட முக்கிய அம்சங்களை ஆசிரியர் இக்கட்டுரையில் சுருக்கமாக எடுத்துக் காட்டுகிறார். தமிழ் நாட்டிலுள்ள மூவேந்தருள் ஒருவராகிய சோழ மன்னரின் குடிச்சிறப்பும், அவர் தலை நகரத்தின் பெருமையும், அவர் நாட்டின் குடிகளின் மேன்மையும், பயிர், காவிரியாறு, மழை முதலிய வளங்களும், நாடகத் தமிழ், இசைத் தமிழ் முறைகளும் இவ்விதமான பல விஷயங்கள் கொண்ட புகார்க் காண்டம் முற்றிற்று என்கிறார். இப்படியே ஒவ்வொரு காண்டத்தின் இறுதியிலும் ஒரு கட்டுரையோடு முடிவு செய்கின்றார்.

முடி உடை வேந்தர் மூவருள்ளும்
தொடி விளங்கு தடக்கைச் சோழர் குலத்து உதித்தோர்
அறனும், மறனும், ஆற்றலும், அவர் தம்
பழவிறல் மூதூர்ப் பண்புமேம் படுதலும்;
விழவுமலி சிறப்பும், விண்ணவர் வரவும்,
ஒடியா இன்பத்து அவர்உறை நாட்டுக்
குடியும், கூழின் பெருக்கமும், அவர் தம்
தெய்வக் காவிரித் தீதுதீர் சிறப்பும்,
பொய்யா வானம் புதுப்புனல் பொழிதலும்;
அரங்கும், ஆடலும், தூக்கும், வரியும்;
பரந்து இசை எய்திய பாரதி விருத்தியும்;
திணை நிலை வரியும், இணை நிலை வரியும்;
அணைவு உறக் கிடந்த யாழின் தொகுதியும்;
ஈர்ஏழ் சகோடமும், இடநிலைப் பாலையும்,
தாரத்து ஆக்கமும், தான் தெரி பண்ணும்,
ஊரகத் தேரும், ஒளி உடைப் பாணியும்,
என்று இவை அனைத்தும் பிறபொருள் வைப்போடு,
ஒன்றித் தோன்றும் தனிக்கோள் நிலைமையும்;
ஒரு பரிசா நோக்கிக் கிடந்த
புகார்க் காண்டம் முற்றிற்று.

[முடி உடை வேந்தர் மூவருள்ளும் - முடி மன்னர்களாக விளங்கிய சேர, சோழ, பாண்டியர் என்ற மூவர்களுள்ளும்; தொடி விளங்கு தடக்கை - வீர வளையல் விளங்கும் பெரிய கையினையுடைய; சோழர்

குலத்து உதித்தோர் – சோழர் குடியில் தோன்றியவர்களின்; அறனும் – அறத்தைக் காக்கின்ற சிறப்பும்; மறனும் – பகைவர்களை அழிக்கின்ற திறமையும்; ஆற்றலும் – வென்ற நாடுகளை நன்கு பாதுகாக்கும் ஆற்றலும்; அவர் தம் பழவிறல் மூதூர் – அவருடைய தொன்று தொட்டுத் தலைமையான பழைய புகார் நகரம்; பண்பு மேம் படுதலும் – எல்லா வளத்தாலும் சிறந்து ஓங்குதலும்; விழவு மலி சிறப்பும் – திருவிழா நிறைந்து விளங்கும் சிறப்பும்; விண்ணவர் வரவும் – அதற்கு விண்ணவர் வருதலும்; ஓடியா இன்பத்து அவர் உறை – கெடாத இன்பத்தையுடைய அவர் வாழுகின்ற; நாட்டு – நாட்டிலுள்ள; குடியும் – குடி மக்களும்; கூழின் பெருக்கமும் – பயிர்களின் செழிப்பும்; அவர் தம் தெய்வக் காவிரி – அவர்களுடைய தெய்வத் தன்மையுடைய காவிரி யாற்றின்; தீதுதீர் சிறப்பும்–குற்றமற்ற சிறப்புக்களும்; பொய்யா வானம் புதுப்புனல் பொழிதலும் – (அவர் நாட்டில்) பொய்த்தல் அறியாது மேகம் (காலத்தில்) புது நீரை மழையாகப் பொழிதலும்; அரங்கும் – நூல் முறைப்படி அமைக்கப்பட்ட நாடக மேடையும்; ஆடலும் – அதில் ஏறி ஆட வல்லார் ஆடிக் காட்டுதலும்; தூக்கும்– தூக்கு, என்ற இசைப் பாட்டுக்கள் பாடலும்; வரியும் – கண்கூடுவரி முதலாக உள்ள எட்டுவகை வரிகளும்; பரந்து இசை எய்திய – எங்கும் புகழ் படைத்த; பாரதி விருத்தியும் – நாடக உறுப்புக்களுள் ஒன்றாகிய பாரதி விருத்தியும் (என்றது கடலாடு காதையில் கூறப்பட்ட பதினொருவகை ஆடல்களை); திணைநிலை வரியும் – அந்தந்த நிலத்திற்கேற்ற வரிப்பாடல்களைக் காட்டும் "திணை நிலைவரி" என்பதும்; இணைநிலை வரியும் – (சார்த்துவரி) என்னும் ஒருவகைப் பாட்டுக்கள் முதலாக வருகின்ற பலவரிப் பாடல்களும்; அணைவு உறக் கிடந்த – நூல் முறையோடு பொருந்திக் கிடந்த; யாழின் தொகுதியும் – யாழ்ப் பாட்டுக்களின் தொகுதியும்; ஈர்ஏழ் சகோடமும் – பதினான்கு வகையாகக் கட்டப் பெற்ற நரம்புகளையுடைய சகோட யாழும்; இடநிலைப் பாலையும்– இடநிலைப்பாலை என்னும் இசைப்பகுதியும்; தாரத்து ஆக்கமும் – தாரம் என்னும் இசை ஆக்கம் பெறப் பாடுகின்ற இசைப்பாட்டும்; தான் தெரி பண்ணும் – அகநிலை மருதம் முதலான நால்வகைப் பண்களையும் அறிகின்ற திறனும்; ஊரகத்து ஏரும் – நகரத்தின் அழகும்; ஒளி உடைப் பாணியும் – புகழ் மிக்க தாளங்களும்; என்று இவை அனைத்தும் – என்று கூறப்பட்ட இச்சிறப்புக்களோடும்; பிறபொருள் வைப்போடு – சொல்லப்படாத பிற பொருள்களின் இருப்போடு; ஒன்றித் தோன்றும் – பொருத்தமாகத் தோன்றுகின்ற; தனிக்கோள் நிலைமையும்–ஒப்பற்ற சிறப்புக்களின் நிலைமையும், ஒரு பரிசா – ஒரு தன்மையாக; நோக்கிக் கிடந்த – உட்கொண்டிருந்த; புகார்க் காண்டம் – முற்றிற்று–;]

(வெண்பா)

காலை அரும்பி மலரும் கதிரவனும்,
மாலை மதியமும் போல் வாழியரோ–வேலை
அகழால் அமைந்த அவனிக்கு, மாலைப்
புகழால் அமைந்த புகார்

[வேலை – கடலாகிய ; அகழால் அமைந்த – அகழியால் சூழப் பட்டமைந்த ; அவனிக்கு – இந்நில வுலகிற்கு ; மாலை–வரிசையான ; புகழால் அமைந்த புகார் – புகழ்ச்சியோடு பொருந்திய புகார் நகரம்; காலை அரும்பி – காலையில் தோன்றி ; மலரும் – தன் ஒளியை விரிய விடுகின்ற ; கதிரவனும் – சூரியனும் ; மாலை மதியமும் போல் – மாலைக் காலத்தில் தோன்றும் நிலாவும் போல ; வாழியரோ – நெடிது நின்று வாழ்வதாக !]

புகார்க்காண்டம் முற்றிற்று